ஸ்ரீ

சமணமுனிவர்கள் இயற்றிய

# நாலடியார் மூலமும்

## தெளிபொருள்விளக்கமும்



உரையாசிரியர்

வை. மு. சடகோபராமாநுஜாசாரியர்

சே. கிருஷ்ணமாசாரியர்

சென்னை புரசை

ஸ்ரீ கணேச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன

1914



[விலை ரூபா.—2.

ஸ்ரீ

# பதிப்புரை.

அருந்தமிழ்அறிந்த அன்பர்களே!

நீதிநூல்களுட் சிறந்த நாலடியார் என்னும் நூலைச் சென்னை யூனிவர்ஸிடியார் எப்.ஏ பரீக்ஷைக்குப் பாடமாக நியமித்துவந்ததும், காலஞ்சென்ற வை. மு. சடகோபராமாநுஜாசாரியரும் நானும் ஷை யூனிவர்ஸிடி தமிழ்ப்பாடபுத்தகங்கட்குப் பலவருஷகாலமாக உரையெழுதி வெளியிட்டுவந்ததும் யாவர்க்குந் தெரியுமே.

ஒவ்வொரு வருடத்திலும் ஐந்து அதிகாரம்வீதம் மாத்திரம் உரையெழுதி வந்ததனால் இந்நூல் பூர்ணமாகாமல் சிதறிக்கிடக்க வேண்டியதாக நேர்ந்தது.

அவ்வாறு சிதறிய பாகங்களை ஒருங்குசேர்த்து முழுப்புத்தகமாகஅச்சிடும்படி பலபெரியவர்களும் பிராணபதமான எனதுநண்பர்களும் தூண்டியபடியால், அந்த நியமநத்தைச் சிரமேற்கொண்டு, ஒருகால் வந்த விஷயங்களை மறுபடி வராதவாறு நீக்கியும், இன்றியமையாத அரிய சில விஷயங்களை உரிய இடங்களில் புதிதாக எழுதிச்சேர்த்தும், இதுவரையில் பாடமாக நியமிக்கப்படாமையால் எங்களால் உரையெழுதப்படாதிருந்த இறுதி ஐந்துஅதிகாரங்கட்கும் புதிதாக உரையெழுதிச் சேர்த்தும், இந்நூற்செய்யுள்களோடு ஒத்த கருத்தையுடைய வடமொழிமேற்கோள்கள் கிடைத்தவற்றை அவ்வச்செய்யுள்களின்கீழே அமைத்தும் எனது புத்திசக்திக்கு இயன்றவாறு அச்சிடுவித்தேன்.

சொற்செறிவு நடைச்சிறப்பு பொருள்நுணுக்கம் ஆழ்ந்த கருத்து முதலியன பொதிந்துள்ள இந்நீதிநூலுக்குத் தக்கவாறு உரையியற்றி வெளியிடுதற்கு அறிவினாற்பெரியவரன்றி அறிவினாற் சிறியனான யான் தகுதியுடையேனல்லேன்.

(இவ்வாறே திருக்குறளுக்கும் குறிப்புரை முதலியன சித்தமாகி வருகின்றன.)

இப்பதிப்பிற் காணப்படும் நற்றங்களைக் கணிசித்துக் குற்றங்களைப் பொருள்செய்யாது தமது இயற்கைநற்குணத்தாற் பொறுத் தருளுமாறு பெரியோரைப் பிரார்த்திக்கின்றேன்.

அவ்வாறு காணப்படும் குறைகளை எவராயினும் எடுத்துத் தெரிவித்தால், அவரைப் பேருதவிசெய்தவராகப் பாவிப்பதற்குச் சிறிதுதடையுமில்லை.

இப்பதிப்புவிஷயத்தில் எனதுநண்பர் ஸ்ரீ உ. வே. ச. ராஜகோபாலாசாரியர்ஸ்வாமி செய்த நன்றி எப்பொழுதும் மறக்கற் பாலதன்று.

இந்நூலை இடையூறின்றி முற்றுவித்த எம்பெருமானது திருவருளைத் திரிகரணங்களாலும் அநவரதம் வாழ்த்துங் கடப்பாடுடையேன் யான்.

இங்ஙனம்,

திருவல்லிக்கேணி
ஆனந்த ஹூ
சித்திரை மீ

சே. கிருஷ்ணமாசாரியன்.

(1914)

ஸ்ரீ

விஷயசூசிகை.

# ௧. அறத்துப்பால்.

## ௧. துறவறவியல்.



## ௨. இல்லறவியல்.



# ௨. பொருட்பால்.

## ௧. அரசியல்.



## ௨. நட்பியல்.

இவ்வாறு பாகுபாடுசெய்யாமல் சிலர் இறுதியதிகாரத்தைமாத்திரம் காமத்துப்பாலாகக் கூறுவர். இறுதியதிகாரத்தில்மாத்திரம் அகப்பொருட் கிளவித்துறைகள் பயில்வதும், அதற்குமுன்னுள்ள இரண்டுஅதிகாரங்களில் அவை முழுதும் பயிலாமையும் அவர்கட்கு ஆதாரம்; திருக்குறளில் கற்புடை மகளிரென்று பொருள்படும் வாழ்க்கைத்துணைநலமென்னும் அதிகாரத்தை அறத்துப்பாலிலும், பொதுமகளிரென்று பொருள்படும் வரைவின்மகளி ரென்னும் அதிகாரத்தைப் பொருட்பாலிலும் சேர்த்துள்ளதும் நோக்கத் தக்கது.

பொருட்பாலில் வரும் இன்பவியல் என்பதற்கும், காமத்துப்பாலில் வரும் இன்பவியல் என்பதற்கும் வேறுபாடு மாணுக்கர் அறியத்தக்கது. பொருட்பாலில் வருவதை 'தலையின்பவியல்' என்றும், காமத்துப்பாலில் வருவதை 'கடையின்பவியல்' என்றும் வழங்குவர்.

---

ஸ்ரீ

# அதிகார அடைவு.*

"அறவிய லிருவகைத் தாமவை தம்முள்
துறவே யில்லற மிருமூன் றென்ப;

பொருளியல் வகையேழ் புலப்படக் கிளப்பின்
அரசிய லேழதிகார மாகும்
நட்பியல் நான்கதிகார மின்ப
மூன்றே துன்பவிய லதிகார
நான்கே யொன்றே பொதுவியல் பகையியல்
கூறதிகார நான்கே பன்னெறி
கூறதிகார மொன்றெனக் கிளப்பர்;

கடையின்ப வகைதான் கருதி னிருவகை
யின்பதுன்ப வதிகார மொன்றே யேனை
யின்ப வதிகார மிரண்டே".

---

"செல்வநிலையாமை இளமைநிலையாமை யாக்கைநிலையாமை என்னும் அதிகாரவடைவுக்கு மலைவு உளதாம்; அஃது யாதெனின்,—முன்பு யாக்கை நிலையாமையை உணர்த்தி அதன்பின்பு இளமைநிலையாமையை உணர்த்திப் பின்பு அந்தஇளமைப்பருவத்திலே முயன்று உண்டான செல்வத்தின் நிலையாமையை உணர்த்தவேண்டாவோ? என்னின்,—யாக்கைக்குப் புருஷாயுசு நூறுவயதென்றும், இளமைப்பருவம் முப்பதிரண்டுவயதென்றும் ஒருநியமமுண்டு; இந்தச்செல்வம் இத்தனைநாள்நிற்குமென்று ஒருறுதியில்லாமையால் இப்படி ஒருறுதியில்லாத செல்வம் வந்து எய்தியபொழுதே மறுமைக்கு உறுதியான அறங்களைச் செய்யவேண்டுமென்றற்கு முன்பு செல்வநிலையாமையை வைத்து, அதன்பின்பு அப்படிநிலையாத செல்வத்தை அனுபவித்தற்கு இளமைப்பருவத்தை நிலையாகக் கருதியிராமல் முப்பத்திரண்டு வயதுக்குள்ளே துறந்து தவஞ்செய்யவேண்டுமென்றற்கு இளமைநிலையாமையினை அதிகாரவடைவு செய்து, பின்பு யாக்கைக்குக் கற்பித்த வயது நூறென்று கொண்டு அதனைநிலையென்றுகருதாமல் அறத்தினை நாடோறும் வழுவாமற் செய்யவேண்டுமென்றற்குப் பின்பு யாக்கைநிலையாமையைச் சொன்னாரென்பதாம்.

"ஆதலால், அறந்துப்பாலில் நிலையாமையின் விரைவுகூறற்பொருட்டு முந்துறச் செல்வநிலையாமையினை வைத்து, அதற்குப்பின்பு இளமை நிலையாமையினை வைத்து, அதற்குப்பின்பு யாக்கைநிலையாமையினை வைத்து, அதன்பின்பு இந்தப் பெறுதற்கரிய யாக்கையினைப் பெற்றபொழுதே அறஞ் செய்தற்பொருட்டாக அறன்வலியுறுத்தலை வைத்து, அதன்பின்பாக அறத்

---

* இது, பழைய ஏட்டுப்பிரதியிற் கண்டபடியே அச்சிடப்படுகின்றது.

தினை மறந்து விஷயங்களிலே மயங்காமல் அந்தவிஷயங்களின் தூய்மையில் லாமையை அறிவித்தற்பொருட்டுத் தூய்தன்மையினை வைத்து, அதன்பின் பாக அப்படித்தூய்தன்மையில்நின்று மயங்காமல் மறுமைக்கு உறுதியாக மனை வாழ்க்கையினைத் துறந்து தவஞ்செய்தற்பொருட்டாகத் துறவென்னும்அதி காரத்தை வைத்து, அதன்பின்பு அந்தத்துறவுக்குமறுதலையாகிய சினம் எழா மல் உயிர்களின்மீது அன்புவைத்தற்பொருட்டாகச் சினமின்மையைவைத்து, அதன்பின்பாக இப்படி ஒத்த தவத்துக்கு மறுதலையாகிய பசியைப் பொறுத் தலும் அறியாமையால் ஒருவர் தமக்கு ஒருதீங்கு செய்தால் அதனைப்பொறுத் தலும்வேண்டுமென்பதுகொண்டு பொறையுடைமையை வைத்து, அதன்பின் பாக இல்லறத்தை நடத்துவதற்குப் பிறர்மனைநயவாமை பெரும்பான்மை யாதலினாலும் இந்திரியங்கள் செய்யும் மிகைகளை மீட்டுத் தம்வசத்திலே ஒருப்படுத்திக்கொள்ளுதல் முன்சொன்ன பொறையுடைமையினும் அரிதா தலினாலும் அதன்பின் இந்தப் பிறர்மனைநயவாமையை வைத்து, இந்தத்தீய குணமில்லாதவனுக்கல்லது கொடுத்தல் கூடாதாதலின் பிறர்மனைநயவா மையின்பின் ஈகையென்னும் அதிகாரத்தைச சேர்த்து, முற்பிறப்பில் ஒரு வர்க்கு ஒன்றைக்கொடாதவன் துன்பமுற்றுப் பசிப்பிணிநலிய இரந்துதிரிவ னென்னும் இதனை அறிவித்தற்கு ஈகைக்குப்பின்பாகப் பழவினையை வை த்து, இந்தப்பழவினையைத் தீரஉணரும் இவன் உலகத்தில்நடந்தபோதும் ஒழுக்கத்தினைத் தப்பானென்பதுகொண்டு அவ்வொழுக்கத்தின் உண்மை யினை மெய்ம்மையென்று பழவினையின்பின்பே வைத்து, உலகத்தில்நடந்த போதும் தானதருமங்களைச் செய்யாமல் தீமையிலே புரிந்தொழுகுமவற்கு அறிவித்தற்பொருட்டாக இப்பிறப்பில் மிகவுந்துன்புறுவர் முற்பிறப்பில் தீங்குசெய்தவ ரென்னுமது தோன்ற அதன்பின்பு தீவினையச்சத்தினை வைத்து, இப்படி அறத்துப்பால் பதின்மூன்று அதிகாரமாகச் சேர்த்து,

“இனிப் பொருட்பாலதிகாரவடைவு செய்தற்குக் கல்வியை முதலாக எடுத்துக்கொண்டார். அரசர்க்கும் மற்றும்ஒழிந்தோர்க்கும் கல்வி யுண்டா னால் அவர்களால் உலகத்திற் பிராணிகள் க்ஷேமப்படுமாதலானும் தருமம் பரி பாலிக்கப்பட்டுவருமாதலானும் பொருட்பகுதிக்குக் கல்வி இன்றியமையா தாதலின் கல்வியை முதலில் வைத்து, அந்தக் கல்விக்குப்பின்பு அந்தக் கல்விக்குத்தக ஒழுகுதல் குடிப்பிறந்தார்க்கு மிகவும் வேண்டு மாதலின் குடிப்பிறப்பைச் சேர்த்து, அதன்பின்பு எல்லாக்குணங்களிலும்வைத்து மேம்பாட்டுத்தன்மை குடிப்பிறந்தார்க்குப்பெரும்பான்மை யாதலின் அந்தக் குடிப்பிறப்புக்குப்பின்பு மேன்மக்களை வைத்து, இப்படிக்கொத்த மேன் மக்களைப் பிழைத்தவர்களுக்கு மறுமைக்கு உறுதியுமில்லை இப்பிறப்பிலும் யாவராலும் இகழப்பட்டு அந்தப்பிராணவபிமானமென்கிறதும் இல்லை யாய்விடுமாதலின் மேன்மக்களைப் பிழைக்கலாகா தென்பது கொண்டு அதன்பின்பு பெரியாரைப்பிழையாமையை வைத்து, இப்படிக்கொத்த முறைமையினையுடையாரைச் சேர்ந்து மதிப்புண்டாகவேண்டு மென்பது தோன்ற அதன்பின்பு நல்லினஞ்சேர்தலை வைத்து, ஒருவர் தீயராகிலும் நல்லினஞ் சேரவே அவர்பெருமையடைவ ரென்பது தோன்ற அதன்பின்பு

பெருமையென்னும் அதிகாரத்தை வைத்து, அந்தப்பெருமையும் முயற்சி யுடையார்க்கல்லதில்லையென்பது தோன்றப் பெருமைக்குப்பின்பு தாளாண் மையை வைத்து, இப்படி முயன்று செல்வத்தினையுண்டாக்கினார்க்கல்லது சுற்றமுண்டாகாதென்பது தோன்றத் தாளாண்மைக்குப்பின்பு சுற்றந்தழா லைவைத்து, சுற்றந்தழுவியிருப்பாரொருவர் தமக்குச் சுற்றமாகத்தக்காரை ஆராய்ந்துகொள்ளவேண்டுமென்பது கொண்டு அதன்பின்பு நட்பாராய் தலை வைத்து, அப்படி ஆராய்ந்து உறவுகொண்டபின்பு அவர்செய்த பிழை களைப் பொறுக்கவேண்டுமாதலின் அதன்பின்பு நட்பிற்பிழைபொறுத்தலை வைத்து, அதன் பின்பு கூடாநட்பாகிய முறைகேடுடையவர் தமது காரி யங்களைக் குறைவறப் பலிப்பித்துக்கொள்ளுமளவும் வேற்றுமை சிறிதும் புலப்படாமல் கலப்புண்டாக அவர் மனங்கொளக் கலந்து ஒழுகிப் பின்பு கால்தாழ்த்துவிடுவ ராதலின் அவர் குணத்தினைப் பின்பு தாம் கண்டு அவ ருடனே கரிசங்கொள்ளாமல் இது சிலர்க்கு இயல்பென்றிருத்தல் நட்பிற் பிழைபொறுக்கும் பெரியோர்க்கே உளதாகுமென்பது கொண்டு அதன் பின்பே கூடாநட்பை வைத்து, இப்படி ஒத்தாரையும் நல்லவராக்கித் தமது சுபாவமுங் குன்றுமலிருத்தல் அறிவுடையோர்க்கல்லது கூடாதென்பது கொண்டு அறிவுடைமையினை அதன்பின்பு வைத்து, அறியாமையால் வருங் குற்றம் விரித்துரைத்தாலல்லது முன்சொன்ன அறிவுடைமை சாயாமல் நில்லாதென்பது கொண்டு அவ்வறிவுடைமையைப் பேணவேண்டி அதன் பின்பு அறிவின்மையை வைத்து, இந்தஅறிவுடைமையில்லாதார்க்கு உளதா கிய செல்வம் பிறர்க்குப்பயன்படாதென்பது தோன்ற அதன்பின்பே நன்றி யில்செல்வத்தை வைத்து, இந்தச் செல்வம் பிறர்க்குப்பயன்படாமையால் அதனால் வருங் குற்றம் தோன்ற அதன்பின்பு ஈயாமையை வைத்து, ஒருவர் க்கு ஒன்றைக்கொடாமல் மறுமைக்குஉறுதியான அறங்களையும் செய்யாமல் தன் உடம்பினைச் செறித்திருக்குமவனே மிடியனென்று காட்டுதற்கு ஈயா மையின்பின்பே இன்மையை வைத்து, வறுமையுற்றவனுக்கே மானிக் கத்தக்க செய்கை உண்டாகுமாதலால் அப்படி வறுமையிலே துன்பமுறுப வன் மானபங்கம் வந்தகாலத்து வறுமையாலும் கிடந்து நலங்காமல் தன்பிரா ணனைவிட்டாவதுமானத்தினைப்பரிகரித்தல்பெரும்பான்மையாதலால்அதன் பின்பே மானமென்னும் அதிகாரத்தை வைத்து, அப்படி மானத்தினைப் பரி கரியாமல் வறுமையினால் பிறர்பக்கல் சென்று இரந்து உயிர்வாழ்வமென்று துணிவாராயின் இவ்வுலகத்தில் இடுபவரும் இல்லையாய்க் கண்ணோட்ட மின்றி இகழ்பவரே பெருகுவராதலின் இரப்பினை அஞ்சவேண்டும் மான முடையாரொருவராதலால் இரவச்சத்தை அதன்பின்பே வைத்து, எல்லாக் கல்வியையுமுடைய பலசபையிலும் இருந்து உலகத்திலுள்ளாருடைய இயல் புகளையும் அறியுமவர் இரப்புக்குத்துணிந்து செல்லாரென்பது தோன்ற அதன்பின்பு அவையறிதலை வைத்து, சபையிலுள்ளாரியல்புகளை அறியாமல் அவைக்குள்ளே ஒன்றனைச் சொல்லி இகழப்படுமவர் புல்லறிவாள ராதலால் அவையறிவார்க்கு இவை குற்றமாதலின் அவையறியுமவர் இந்தக்குற்றந்தவிர வேண்டுமென்றற்கு அவையறிதலின்பின்பு புல்லறிவாண்மையை வைத்து, இந்தப் புல்லறிவு சில அறிந்தும் அறியாமலு முள்ள தன்மையாகு மாதலா

லும் பேதைமை நேராக அறியாமலே யிருக்கு மாதலாலும் புல்லறிவாண்மைக்குப்பின்பு பேதைமையை வைத்து; அறிவிலனென்னுமாத்திரமல்லது பிறர்செல்வங்கண்டு பொறாமையும் அவரைப்புறங்கூறுதலும் அவர்மனங்கொள்ளும்படி அவருடனே கூடி உறவுபோலேயிருந்து அவர்க்குத் தாழ்வு செய்தலு மாகிய கீழ்மைக்குணம் பேதைமையினும் மிகவும்நீக்கப்படு மாதலின் அதன்பின்பு கீழ்மையென்னும் அதிகாரத்தை வைத்து, இந்தக் கீழ்மைபோலன்றியே தனக்கு ஒருவர் பலநன்றிகளையுஞ் செய்து தானும் அவராலே பரிகாரப்பட்டிருந்தாலும் அவர்நெஞ்சறியாமல் தனக்குச் சிறிது குறையுண்டாகில் அவ்வளவுமாத்திரத்தைக்கொண்டு அவர்களுக்குக் கொலையினைச்செய்தும் தன்னைநெருங்கினவர்கள்சிலர்களுக்குப் பயன்பட்டும் ஆசாரஞ் செய்து சிறிதுபொருள்பெறின் தன்னைப் பெரியோனாகவே மதித்தும் யாவர்சிலரையுங்கண்டேகூட்டமாக அவ்வே திரின்று குடிப்பழுதான வசனங்களைச் சொல்லியும் இத்தகைய குணங்களை யுடையனாதல் காரணமாக முன் சொன்ன கீழ்மையினும் மிகவுந் தவிர்க்கப்படு மாதலின் அதன்பின்பு கயமையினை வைத்து, பின்பு அதிகாரத்தில் ஏறின பாட்டுகளை யெடுத்துப் பன்னெறியென்று ஓர் அதிகாரத்தை வைத்து, இப்படி பொருட்பால் இருபத்து நான்கு அதிகாரங்களையும் அடைவுசெய்து,

"காமத்துப்பாலில் முதற்கண்ணே இழிவான குணங்களையுடைய பொதுமகளிரை வைத்து, இந்தப் பொதுமகளிர் குணங்களொன்றுமிலராகவே நல்ல குணமுடையார் எல்லாராலும் மதிக்கப்படுவ ராதலால் அதன்பின்பு கற்புடைமகளிரை வைத்து, அதன்பின்பு காமநுதலியலை வைத்து, காமத்துப் பால் மூன்றுஅதிகாரங்களையும் அடைவுசெய்து,

"இப்படி நாற்பதுஅதிகாரங்களும் அடைவுசெய்யப்பட்டன.

"இந்த அறம்பொருள் இன்பம்என்னும்மூன்றையும் இந்நூலிற்கூறியபடி... ........கற்று ஆய்ந்து ஒழுகினவர்க்கு வீடுபேறும் சித்திக்கு மென அறிக." *

---

"அறம்பொரு ளின்பம் வீடடைதல் நூற்பயனே" என்பது நன்னூல்.

ஸ்ரீ:

# நாலடியார்

## வரலாறு.

முன்னொருகாலத்திற் சமணமுனிவர் எண்ணாயிரவர் கொடிய பஞ்சத்தால் தத்தம் நாடுவிட்டுப் பாண்டிநாடடைந்து அவ்வரசனால் ஆதரிக்கப்பெற்று அவனதவையில் அமர்ந்திருந்தனர். பன்னாள்கழித்துப் பஞ்சம்நீங்கித் தந்நாடு செழித்ததறிந்து அவர்கள் தத்தம் பிறப்பிடஞ்செல்ல விருப்பமுற்றாராய்ப் பாண்டியனை விடைவேண்ட, அவனும், பன்னூற்பயிற்சியுள்ள அந்நல்லிசைப்புலவர் இருப்பது தன் அவைக்கு ஓர் அலங்காரமாமெனக் கருதி அவரைப் பிரிந்திருக்க மனமில்லானாகி விடையளியாது தாமதித்துவந்தனன். இங்ஙனமிருக்க, அம்முனிவரனைவரும், சங்கேதமாய், அறமுதற் பொருள் நான்கும் நன்கு புலப்படுமாறு தனித்தனி ஒவ்வொரு வெண்பாவைப் பாடிச் சிற்றேட்டிலெழுதித் தத்தமதுபீடத்தின்கீழ் வைத்து, ஓரிரவில் யாரும் அறியாவண்ணம் அந்நாட்டை அகன்றனர். பொழுதுபுலர்ந்ததும் அம்மன்னன் அப்புலவரைக் காணாமலும் சென்றஇடந் தெரியாமலும் வருந்தி, ஏவலாளரைக்கூவி, அவர் இருந்த ஆசனங்களை அப்புறப்படுத்துகையில், ஒவ்வொரு பீடத்தின்கீழும் ஒவ்வொரு வெண்பாட்டுச் சீட்டிலெழுதி வைக்கப்பட்டிருந்தது. அவற்றை எடுத்துப் பார்த்து, அப்புலவரைப் பிரிந்த ஆற்றாமையான், அரசன், அவற்றை வையைப்பேராற்றில்வாரியெறிய ஏவினான். அவ்வாறு எடுத்தெறியப்பட்ட அவற்றுள் நானூறு பாடல், நீர்வழிச்சென்று நெடுங்கடல் சேராது எதிரேறிச் சென்றன. இம்மகிமை கண்டு, அரசன், மிகவும் ஆச்சரியமுற்று, அவற்றை எடுத்து ஒருநூலாக்கி, நாலடியார் என ஓர் நற்பெயரிட்டு வழங்கினன். இதனை,

"மன்னன் வழுதியர்கோன் வையைப் பேராற்றின்
எண்ணி யிருநான்கோ டாயிரவர்—உன்னி
எழுதியிடு மேட்டி லெதிரே நடந்த
பழுதிலா நாலடியைப் பார்"

என்னும் வெண்பாவினால் அறியலாம்.

பிற்காலத்திற் பதுமனார் என்னும் புலவரொருவர், இந்நூலுக்கு, பால் இயல் அதிகாரம் என்னும் பாகுபாடுசெய்தன ரென்பர்.

இதனை

"வளங்கெழு திருவொடு வையக முழுது
முளங்குளி ரின்பத் தின்ப முவப்ப
வண்பெருஞ் சிறப்பின் மாதவம் புரிந்தாஅங்
கெண்பெருங் குன்றத் திருந்தவ முனிவ
ரறம்பொரு ளின்பம் வீடெனு மிவற்றின்
திறம்பிற ரறியுந் திறத்தை நாடிப்
பண்புற வெடுத்துப் பாங்குறப் பகர்ந்த
வெண்பா வியலெண் ணாயிர மவற்றுட்
பாரெதிர் கொண்டு பரவி யேத்த
நீரெதிர் வந்து நிறையணி பெற்ற
மேனாற் றகையின் விதிமுறை பிழையாஅ
நானூ றவற்றி னயந்தெரிந் தோதிய
மதுமலர்த் தண்டார்ப் பதுமன் றெரிந்த
வையமில் பொருண்மை யதிகா ரந்தா
மெய்யா நலத்த வெண்ணைந் தவற்று
ளறவியல் பதின்மூன் றரசர்க் குரிய
பொருளிய லிருபத் தொருநான் கின்ப
மான்ற வகையை மூன்றென மொழிந்தனன்
சான்றோ ரேத்துந் தருமத் தலைவனே"

எனப் பழைய ஏட்டுப்பிரதி யொன்றிற் கிடைத்த ஆசிரியப்பா வால் அறியலாம்.

இப்பதுமனார் இந்நூலுக்கு (திருக்குறளுக்குப் பரிமேலழக ருரைபோல்) மிகச் சிறந்ததோருரையும் இயற்றின ரென்பர். இந்நூ லில் ஆங்காங்குச் சிலபாடல்கள் அவ்வவ் வதிகாரத்தோடு நன்கு பொருந்தாமல் வருந்திப்பொருத்தத்தக்கவையா யிருத்தற்குக் கார ணம், இயற்றும்பொழுதே அதிகாரப்பகுப்புடனியற்றப்பட்டதொ ருநூ லல்லாமையும், பின்பு அவ்வரையறை செய்யப்புகுந்தவர் ஒவ் வோரதிகாரத்திற்குப் பப்பத்துப் பாட லென்னும் நியமங் கொண் டமையு மென்க.

"வெள்ளாண் மரபுக்கு வேதமெனச் சான்றோ
ரெல்லாருங் கூடி யெடுத்துரைத்த—சொல்லாய்ந்த
நாலடி நானூறு நன்கினிதா வென்மனத்தே
சீலமுட னிற்க தெளிந்து"

எனப் பின்னோர் இந்நூலின்பெருமையை இனிதெடுத்து ஓதி யிருத்தலும் காண்க.

---

ஸ்ரீ:

# நாலடியார்.

குறள்வெண்பாக்களினாலாகிய நூலுக்கு 'குறள்' எனப் பெயரானாற் போல, நாலடிவெண்பாக்களினாலாகிய இந்நூலுக்கு 'நாலடி' எனப் பெயராயிற்று. 'திருக்கோவையார்,' 'திருவுந்தியார்,' 'திருக்களிற்றுப்படியார்,' 'சிவஞானசித்தியார்' என்ற நூற்பெயர்களிற் போல, சிறப்புப்பற்றிய 'ஆர்' விகுதி கூட்டப்பட்டு, நாலடியார் என்று வழங்கலாயிற்று. நாலடி என்பதற்கு - நான்காகிய அடிகளை யுடையதென்று பொருள்; பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். நீதிநூல்களுள் இந்நூல் திருக்குறளோடொப்ப மதிக்கப்பட்டு, "ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி, நாலு மிரண்டும் சொல்லுக்கு உறுதி" [ஆல் - ஆலம்விழுது. வேல் - கருவேலங்கொம்பு. நால்-நாலடியார். இரண்டு-குறள்], "பழகுதமிழ்ச், சொல்லருமை நாலிரண்டில்" என்றபடி 'திருக்குறள்' 'நாலடியார்' என்று கூட்டி வழங்கப்படுதலால், நாலடி என்பது - நான்கு அடிகளையுடைய விருத்தம் முதலிய வேறு பாடல்களின்மேற் செல்லாமல், நால்வகைப்பாக்களுள்ளும் முதன்மையையும் அந்தணர்சாதியாதலாற் சிறப்பையு முடைமைபற்றி 'முதற்பா' எனப்படுவதான வெண்பாவின்மேலேயே நின்று, அவ்வெண்பாவினுள் நான்குஅடிகளையுடையனவாய் நூல்களுட் பயின்றுவருகிற நேரிசை இன்னிசை வெண்பாக்களையே உணர்த்தி, அவற்றாலாகிய நூலுக்குக் கருவியாகுபெயராயிற்று. இந்நூற்பெயர் நாலடிநானூறு என்றும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது.

'நாலடியார்' என்றும் 'நாலடி நானூறு' என்றுஞ் சொல்லப்பட்டுச் சிறப்புப்பொருந்தி வழங்குகின்ற இந்நீதிநூல், "நாலடி நான்மணி நானாற்பதைந்திணை முப், பால் கடுகங் கோவை பழமொழி மாமூலம், இன்னிலைய காஞ்சியோடு ஏலாதி யென்பவே, கைந்நிலையோ டாங்கீழ்க் கணக்கு" எனக்கூறப்பட்டுள்ள சங்கமருவிய பதினெண்கீழ்க்கணக்குக்களுள் முதலாவது. பதினெண்கீழ்க்கணக்குக்களுள்ஒன்றெனவே, இது கடைச்சங்கத்தார்காலத்திற் செய்யப்பட்டு அச்சங்கத்தில் அரங்கேற்றப்பட்டதென்றும், ஏறக்குறைய இரண்டாயிரம்வருடங்கட்குமுன் தோன்றியதென்றும் தெளிவாக விளங்குகின்றது. இந்நூல், ஒருவராற் பாடப்பட்டதன்று; பலபுலவர்களாற் செய்யப்பட்ட செய்யுள்களால் அமைந்ததாம்: ஆதலால், இந்நூலினுள்ள 'கூறியதுகூற'லும், 'மாறுகொளக்கூற'லும் குற்றமாகா.

இனி, பதினெண் கீழ்க்கணக்காவன:—க. நாலடியார், உ. நான்மணிக்கடிகை, [நால் நாற்பது =] ௩. இனியவைநாற்பது, ௪. இன்னாநாற்பது, ௫. கார்நாற்பது, ௬. களவழிநாற்பது, [நால்ஐந்திணை =] ௭. ஐந்திணை யைம்பது, ௮. ஐந்திணை யெழுபது, ௯. திணைமொழி யைம்பது, ௧௦. திணைமாலை

நூற்றைம்பது, ௧௧. முப்பால் [=திருக்குறள்], ௧௨. திரிகடுகம், ௧௩. கோவை [=ஆசாரக்கோவை], ௧௪. பழமொழி, ௧௫. மாமூலம் [=சிறுபஞ்சமூலம்], ௧௬. காஞ்சி [=முதுமொழிக்காஞ்சி], ௧௭. ஏலாதி, ௧௮. கைந்நிலை என்பன. ['நானாற்பது' என்பதிலுள்ள 'நால்' என்பதை 'ஐந்திணை' என்பதனோடும் கூட்டுக; கூட்டவே, 'நால்ஐந்திணை' என்பது-ஐந்திணைப்பொருளுணர்த்தும் 'ஐந்திணையைம்பது' முதலிய நான்கு நூல்களின்மேல் நிற்கும். 'கைந்நிலை'-நச்சினார்க்கினியர் உரையில் மேற்கோள்காட்டிய நூல்களுள் ஒன்று.

இனி, சங்கத்தார் காலத்து நூல்கள், கீழ்க்கணக்கு மேற்கணக்கு என இருவகையாகவழங்கப்பட்டன. அவற்றில், மேற்கணக்காவது-வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என்னும் ஐந்துவகைப்பாக்களாலும் ஐம்பதுமுதல் ஐந்நூறு இறுதியாக வருவது: கீழ்க்கணக்காவது - அறம் பொரு ளின்பங்களைப்பற்றிய வெண்பாக்களினால் அத்தொகைபட வருவது: (இதனை, "மேல் கீழ்க் கணக்கென இருவகைக் கணக்கே," "மேற்கணக்கெனவுங் கீழ்க்கணக் கெனவும், பாற்படு வகையாற் பகர்ந்தனர் கொளலே," "அகவலுங் கலிப்பாவும் பரிபாடலும், பதிற்றைந்தாதி பதிற்றைம்பதீறா, மிகுத்துடன் தொகுப்பது மேற்கணக் கெனவும், வெள்ளைத்தொகையு மவ்வகை வேண்டின், எள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே," "ஐம்பது முதலா ஐந்நூ றீறா, ஐவகைப் பாவும் பொருள்நெறி மரபின், தொகுக்கப்படுவது மேற்கணக்காகும்," "அடிநிமிர் வில்லாச் செய்யுட் டொகுதி. அறம் பொரு ளின்ப மடுக்கி யவ்வகைத, திறம்பட வருவது கீழ்க் கணக் காகும்" என்ற பன்னிருபாட்டியற் சூத்திரங்களால் அறிக.) கீழ்க்கணக்கு வெண்பாவினினமும் விரவிவருதலையும், ஐம்பதினுங்குறைந்து நாற்பதாகவும் ஐந்நூற்றினும் மிக்கு ஆயிரத்துமுந்நூற்றுமுப்பதாகவும் வருதலையும் 'உரையிற்கோடல்' என்னும் உத்தியாலும் பிறவாற்றாலும் அமைத்துக்கொள்க. மிக்க அடிகளையுடைய பலவகைப்பாக்களால் வருவதுபற்றி மேற்கணக்கென்றும், குறைந்த அடிகளையுடைய ஒருவகைப்பாவால் வருவதுபற்றிக் கீழ்க்கணக்கென்றும் காரணக்குறியமைந்தனவென உணர்க. இங்ஙனங்கொள்ளுதற்கு, "அடிநிமிர்வில்லாச் செய்யுட்டொகுதி" என்றதும் ஆதாரம்.

இனி, இந்நூல் வேறொருநூலின்வழியே தோன்றியதென்று கொள்ள இடமில்லாமையாலும், சமணசமயத்து விளையினீங்கிவிளங்கிய அறிவையுடைய முனிவரால் செய்யப்பட்டதாதலாலும், முதனூல் வழிநூல் சார்பு நூல் என்ற நூல்வகை மூன்றில் இது முதனூலின்பாற்படுமென்க.

சமணசமயத்துப் பெருங்காப்பியமான சீவகசிந்தாமணியின் உரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'பிறரும் இச்சமயத்தார் "சிறகா பெருகா முறைபிறழ்ந்து வாரா" (நாலடியார், பழவினை, ௪௦)என்றதனானும் உணர்க' என உரைத்ததனால், இந்நூல் சமணசமயத்தார்செய்ததென நன்குபுலனாகின்றது. இக்கொள்கைக்கு மற்றும்பல ஆதாரங்களும் உண்டு.

இந்நூல், நச்சினார்க்கினியர் பரிமேலழகர் அடியார்க்குநல்லார் முதலிய சிறந்த உரையாசிரியர்களால் எடுத்துஆளப்படும் பிரமாணநூல்களுள் ஒன்று.

இனி, *இந்நூல் செய்கின்ற காலத்திற்கு இலக்கணநூல்கள் அகத்தியமும் தொல்காப்பியமு மாதலாலும், தொல்காப்பியச் சிறப்புப்பாயிரத்தில் "முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" என்றபடி தொல்காப்பியம் அகத்தியத்தின் வழிநூலாதலாலும், பிறர்கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையாலும், தொகுத்துச்செய்யப்பட்டு வழக்குநூலாகிய தொல்காப்பியம் இடைச்சங்கம் முதலாக இன்றளவும் உளதாதலாலும், தொல்காப்பியத்திற் கூறிய இலக்கணமே இதற்கு இலக்கண மென்றுணர்க; அந்நூலிற் செய்யுளியலில் ஆசிரியர், பாநான்கு என்றும் அவற்றை அறம்பொருளின்பத்தாற் கூறுக வென்றுங் கூறி, பின்பு, அம்மைமுதலிய எட்டும் [அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பன] தொடர்நிலைச் செய்யுட்கு இலக்கணமென்று கூறுகின்ற இடத்து, "வனப்பியல் தானே வகுக்குங் காலைச், சின்மென் மொழியால் தாயபனுவலோடு, அம்மை தானே அடிநிமிர்வின்றே" என்ற சூத்திரத்தால் 'சிலவாய மெல்லியவாய சொல்லோடும் இடையிட்டுவந்த பனுவலிலக்கணத்தோடும் அடிநிமிர்வில்லது அம்மையாம்' என்று கூறினமையின், இந்நூல் அவரவனங்கூறிய அம்மையா மென்றுணர்க. இன்னும், அச்சூத்திரவுரையில், "அடிநிமிராது' என்றது, ஐந்தடியின் ஏறாது என்றவாறு. 'தாயபனுவலோடு' என்றது, அறம்பொருளின்ப மென்னும் மூன்றற்கும் இலக்கணஞ்சொல்லுப: வேறு இடையிடை அவையன்றியுந் தாய்ச் செல்வது என்றவாறு. அஃதாவது பதினெண்கீழ்க்கணக்கு என வுணர்க. அதனுள் இரண்டடியானும் ஐந்தடியானும் ஒரோசெய்யுள் வந்தவாறும், அவை சிலவாய மெல்லிய சொற்களான் வந்தவாறும், அறம் பொருளின்பமென அவற்றிற்கு இலக்கணங்கூறிய பாட்டுப் பயின்றுவருமாறும், கார்நாற்பது களவழி நாற்பது முதலாயின வந்தவாறுங் கண்டுகொள்க'என்றதும் அறிதற்பாலது.

---

* தலைச்சங்கத்தார்க்கு அகத்தியம்மாத்திரமும், இடைச்சங்கத்தார்க்கு அகத்தியம் தொல்காப்பியம் மாபுராணம் பூதபுராணம் இசைநுணுக்கம் முதலியனவும், கடைச்சங்கத்தார்க்கு அகத்தியம் தொல்காப்பியம் என்னும் இவை மாத்திரமும் இலக்கணமென்பதை, இறையனாரகப்பொருளின் நக்கீரருரையாலும், தொல்காப்பிய நச்சினார்க்கினியத்தாலும், பிறவாற்றாலும் அறிக. தொல்காப்பியப்பொருளதிகாரவுரையில் 'அகத்தியமுந் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாதலின்' என்றது, எட்டுத்தொகைகளோடு சமகாலத்தனவாகிய பதினெண்கீழ்க்கணக்குக்களுக்கும் ஒக்கும்.

ஸ்ரீ:

# நாலடியார் மூலமும், தெளிபொருள் விளக்கமும்.

## உரைப்பாயிரம்.

### கடவுள்வாழ்த்து.

*"வானிடு வில்லின் வரவறியா வாய்மையாற்
கானிலந் தோயாக் கடவுளை—யாநிலஞ்
சென்னி யுறவணங்கிச் சேர்துமெம் முள்ளத்து
முன்னி யவைமுடிக வென்று."

இந்திரன் முதலிய தேவர்களுடைய சுவர்க்கம் முதலிய உலகங்களையும், அளவிறந்த பேரின்பத்தையுடைய அழிவில்லாத முத்தியுலகத்தையும்

---

* இஃது கடவுள்வாழ்த்து; அஃதாவது - எடுத்துக்கொண்டகாரியம் இடையூறின்றி இனிது முடிதற் பொருட்டுக் கவி தான் வழிபடுகடவுளையாவது எடுத்துக்கொண்டபொருட்கு ஏற்புடையகடவுளையாவது வாழ்த்துதல். அவற்றுள், இவ்வாழ்த்து - தமக்கு வழிபடுகடவுளாகிய அருகதேவனைப் பற்றியதென அறிக.

(இதன்பொருள்.) வான் - மேகத்தில், இடு - உண்டாகின்ற, வில்லின் - (இந்திர)தனுசைப் போன்ற, வரவு -(உடம்பின்) வருகையை, வாய்மையால் - தத்துவஞானத்தினால், அறியா - அறிந்து,—'எம் உள்ளத்து - எமது மனத்தில், முன்னியவை - செய்யநினைத்தவை, முடிக - (இடையூறில்லாமல் இனிமையாய்) நிறைவேறுக,' என்று - என்று எண்ணி,—கால நிலம் தோயா கடவுளை - (தனது) பாதங்கள் பூமியிற் படியப்பெறாத (அருக) தேவனை,—யாம் - நாம்,—நிலம் சென்னி உற - தரையிலே தலை பொருந்தும்படி, வணங்கி - நமஸ்கரித்து, சேர்தும் - சரணமடைவோம்; (என்றவாறு.)

'உள்ளத்தில் நினைத்தவை' என்றதில், பிறப்பறுத்தலும் அடங்கும்.

அறியா, என்று, கடவுளை, யாம், வணங்கிச் சேர்தும் என முடிபுகாண்க.

வானத்தில் தோன்றுகிற இந்திரவில் இப்பொழுதென்றும் இன்னபடியென்றுந் தெரியாமல் உண்டாகி உடனே உரு அழிந்துபோவதுபோல, உடம்பும் உண்டாகி நிலையில்லாமல் அழிந்துபோவதனால் அது அழிவதற்கு முன்னமே நினைத்தகாரியங்கள் கைகூடும்படி நாம் கடவுளைச் சேர்வோமென்று கருத்து. 'வானிலிடுகின்றவில்லினது தோற்றமும் அழிவும்போன்ற பிறப்பாகிய இயல்பை யறிந்து' என்ற பழையவுரையைத் தழுவி இங்ஙனம் உரைக்கப்பட்டது. இனி, சீவகசிந்தாமணியில் "மற்றவன் தேவனாகி வானிடு

அடையும்வழியறிந்து அடைவதற்கு உரிய மனிதர்கட்கு உறுதியைத் தருவ தென்று உயர்ந்தவர்களாற் குறிக்கப்பட்ட பொருள் நான்காம்; அவை-அறம் பொருள் இன்பம் வீடு என்பன: அவற்றை முறையே வடநூலார், தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என்னுஞ் சதுர்வித புருஷார்த்தம் என்பர். அவற்றுள், வீடு என்பது †மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாத நிலைமையை

நிலையிற் றோன்றி" என்றவிடத்து, 'நூல்கள், இந்திரவில் இன்னவாறு தோன்று மென்று அதுதோன்றுமுறைமைகூறா வாகலின், அங்ஙனந் தோன்றுகின்ற தேவர்க்கு அஃது உவமையாயிற்று; இக்கருத்தானன்றே, "வானிடுவில்லின் வரவறியா" என்றார் பிறரும்' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்துள்ளதனால், 'அறியா' என்பதை ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சமாகக்கொண்டு கடவுளுக்கு அடைமொழியாக்கி, ஆகாயத்தில் தோன்றுகிற இந்திரவிற்போல இன்னவாறுதோன்றுமென்று முன்புவருகையறியப்படாத கடவுளை யென்று உரைத்தல் நச்சினார்க்கினியார்கருத்தென்பது தெரிகின்றது; "திருவி லிட்டுத் திகழ்தரு மேனியன்" எனச் சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் இந்திரவில் தெய்வவடிவத்துக்கு ஒளியில் உவமைகூறப்பட்டவாறு காண்க.

வில்லின், இன் - ஐந்தனுருபு, ஒப்பு. முதலுரைக்கு 'அறியா' என்பது - உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். வாய்மை - மெய்ம்மை: மெய்யறிவுக்கு ஆகுபெயர். வாய்மையால் அறியா என மொழிமாறி இயையும். இனி, வாய்மையால் கால்நிலந்தோயா என இயைத்து, மெய்ம்மையாகிய புண்ணியத்தாற் கால்கள்தரையிற்படியாதிருக்கப்பெற்ற என்பாரும் உளர். வாய்மையால் வணங்கிச்சேர்தும் என்று இயைத்து, திரிகரணசுத்தியாக வணங்கிச்சரணமடைவோ மென்றலும் அமையும். காலடிகள் நிலத்தில் தோயாமை எல்லாத்தேவர்க்கும் உண்டாயினும், மற்றைத்தேவர்கட்கெல்லாம் புண்ணியமுடிவில் தெய்வவுடம்புநீங்கி வேறுஉடம்பு வருதலால் அவர்க்கு அது முழுதும் நிலைபெறாமைபற்றி, அவ்வாறின்றி எக்காலத்துந் தெய்வத்தன்மைமாறாத அருகக்கடவுளுக்கு அது விசேடணமாக்கப்பட்டது. சாதாரணமாகத் தேவர்க்கு அத்தன்மை நீங்குதலை "எல்லை மூவைந்து நாள்க ளுளவென விமைக்குங் கண்ணும், நல்லெழில் மாலை வாடும் நஞ்சுடையமிா துண்டாரின், பல்பகல்துய்த்த இன்பம் பழுதெனக் கவல்ப கண்டாய்" என்ற சீவகசிந்தாமணிகொண்டு உணர்க. இனி, 'கால்நிலந்தோயாக் கடவுள்' எனவே அநந்தாந்பதியால், பூவின்மேல் வந்தருளுங் கடவுளென்று கருத்துக்கொள்ளுதலும் ஒன்று; அருகக்கடவுள் தாமரைமலரை வாகனமாகக்கொண்டு அதனையூர்ந்து செல்லுகின்றன னென்று ஜைநநூல்கள் கூறும். கடவுள் - (எப்பற்றையும்) கடந்து நின்றவன்; உள் - பெயர் விகுதி. சேர்தும், தும் - தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று விகுதி; பிறரையும் உளப்படுத்தியது. கால்நிலத்தில்தோயாத கடவுளை யாம் நிலத்தில் தலை பொருந்தும்படி வணங்குவோம் எனக் கடவுளின்பெருமையும் தமது பணிவுந் தோன்றக் கூறியவாறும்; இது, முரண்தொடையின்பாற் படும். முடிக - வேண்டுகோட்பொருளில் வந்த வியங்கோள்.

இச்செய்யுள், பால் முதலிய பாகுபாடு செய்யத்தொடங்கும்பொழுது பதுமனார் செய்த தெனப்படும்; இதனால், அவரது மதம் ஆருகத மென்பது விளங்கிற்று.

† இது, திருக்குறளுரையாசிரியராகிய பரிமேலழகரது கருத்து. இனி, தொல்காப்பியச் சிறப்புப்பாயிரவுரையில் நச்சினார்க்கினியர் 'வீடு கூறாரோ

யுடையதாதலின், அறத்தின் பகுதிகளுள் ஒன்றான துறவறமாகிய காரணத்தின்வகையாற் கூறப்படுவதே யல்லாமல் இலக்கணவகையாற் கூறப்படாமையால், நூல்களாற் கூறப்படுவன அது ஒழிந்த மூன்றுமேயாம்.

அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று புருஷார்த்தங்களும் திரிவர்க்கமென்றும், வீடு அபவர்க்கமென்றும் வழங்கப்பெறும்.

இவற்றுள், அறம்-இம்மை மறுமை வீடென்னும் மூன்றையுந் தருவதும், பொருள் - இம்மை மறுமையிரண்டையுந் தருவதும், இன்பம் - இம்மையொன்றையே தருவதும் ஆகிய சிறப்பின் தகுதிபற்றி, அறம் முதலிலும், அதன்பின் பொருளும், அதன்பின் இன்பமும் நிறுத்தப்பட்டனவென்றும்: இவற்றுள் இரண்டாவதாகிய பொருள் - முதலதான அறத்துக்கும், மூன்றாவதான இன்பத்துக்கும் காரணமாதல்பற்றி, சிங்கநோக்காய் அவ்விரண்டினிடையில் வைக்கப்பட்டதென்றும் அறிக. பொருள் - தருமகாமங்களைத் தருவதாதலை, "வடுவிலா வையத்து மன்னிய மூன்றில், நடுவண தெய்த விருதலையு மெய்தும், நடுவண தெய்தாதா னெய்தும் உலைப்பெய், தடுவது போலுந் துயர்" என்னும் இந்நூற் செய்யுளினாலும், "அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து, தீதின்றி வந்த பொருள்" என்ற திருக்குறளினாலும், "அறம் பொருளின்பமென்று, ஆராரிவற்றினிடையதனை யெய்துவார், சீராரிருகலையு மெய்துவர்" என்னும் பரகாலன்வாக்கினாலும் அறிக.

அவற்றுள், அறமாவது - இம்மை மறுமை வீடு என்னும் மூன்றையுந் தருவனவாய் மனுமுதலிய நூல்களில் விதிக்கப்பட்டவற்றைச் செய்தலும், விலக்கப்பட்டவற்றைச் செய்யாதொழிதலுமாம்; அது - ஒழுக்கம், வழக்கு, தண்டம் என்று மூன்றுவகைப்படும்: இவற்றை முறையே வடநூலார், ஆசாரம், வியவகாரம், பிராயசித்தம் என்பர். அவற்றுள், ஒழுக்கமாவது - பிராமணர் முதலிய வருணத்தவர் தம்தமக்குவிதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய ஆச்சிரமங்களில் நின்று அவற்றிற்குச் சொல்லப்பட்ட அறங்களினின்று

---

வெனின்,—அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் வீடுபேற்றிற்கு நிமித்தங் கூறுதலன்றி வீட்டின்தன்மை தமிழாற்கூறாரென்று உணர்க; அஃது, "அந்நிலை மருங்கி னறமுதலாகிய, மும்முதற்பொருட்கு முரிய வென்ப" என்பதனான் உணர்க; இக்கருத்தானே, வள்ளுவநாயனாரும் முப்பாலாகக் கூறி, மெய்யுணர்தலான் வீடுபேற்றிற்கு நிமித்தங் கூறினார்' என உரைத்ததனால், நச்சினார்க்கினியர்கருத்து இவ்விஷயத்தில்வேறாதல் விளங்கும். மற்றும், மேற்காட்டிய "அந்நிலைமருங்கின்" என்ற தொல்காப்பியச் செய்யுளியற் சூத்திரத்தின் உரையில் 'உலகியற்பொருள் மூன்றனையுங் கூறுவான், அவற்றை 'மும்முதற்பொருள்' என்றான். அவையின்றி வீடுபெறுமாறு வேறு இன்மையின், வீடும் ஆண்டுக் கூறினான் என்பது. அல்லாதார், வீடு என்னும் பொருண்மை செய்யுட்கண் வாராமையின் அது கூறா னென்ப; அங்ஙனங் கருதின், அறமுதற்பொருளும் செய்யுட்கண்வாரா எனமறுக்க' என்றதும், தொல்காப்பியப் பொருளதிகார வுரைத்தொடக்கத்தில் 'இந்நிலையாமையானும் இவற்றானும் வீட்டிற்குக் காரணங்கூறினார்' என்றதுங் காண்க.

வழுவாது ஒழுகுதல். வழக்காவது - ஒருபொருளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்பவர்கள் அதுகாரணமாகத் தமக்குள் மாறுபட்டு அப்பொருளின்மேற் சொல்வது; அது - கடன்வாங்குதல், வைப்பு, உடையவனல்லாதவன்விற்றல், கூடிமேம்படுதல், கொடுத்ததை மீண்டும்கொடாமை,கூலிகொடாமை, கட்டுப்பாடுகெடுத்தல், விற்றும் வாங்கியும் உள்ளமொப்பாமை, ஒப்பிப்பணிசெய்யாமை, எல்லைவழக்கு, தண்டக்கொடுமை, சொற்கொடுமை, திருடு, வன்செய்கை, மாதரைக்கவர்தல், மாதராடவர்தருமம், தாயபாகம், சூது எனப் பதினெட்டுவகையது. தண்டமாவது - ஒழுக்கவழக்குக்களினின்று தவறினவர்களை அந்தந்த நெறியில் நிறுத்துதற் பொருட்டுப் பக்ஷபாதமில்லாமல்ஆலோசித்து அந்தந்தக் குற்றத்திற்குத்தக்கபடி சிட்சித்தல்.

இம்மூன்றனுள், வழக்கும் தண்டமும் உலகத்தை நல்வழிப்படுத்துவதற்கே பயன்படுவன வல்லது, ஒழுக்கம்போல மனிதரது உயிர்க்கு உறுதிதருஞ் சிறப்பை யுடையனவல்ல வாதலாலும், அவைதாம் நூல்களினாலேயேயன்றி அறிவுமிகுதியாலும் தேசத்து இயற்கையாலும் அறியப்படுதலாலும், அவற்றை யொழித்து, (திருக்குறளிற்போல), இந்நூலிலும் சிறப்புடைய ஒழுக்கமே அறமென எடுத்துக்கொள்ளப்பட்டது. அதுதான் நால்வகை ஆச்சிரமத்ததாய் வருணந்தோறும் வேறுபாடுடைமையால், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகளை யொழித்து, எல்லார்க்கும் ஒத்திருத்தலாற் பெரும்பான்மையாகிய பொதுவியல்புபற்றி, இல்லறம் துறவறம் என இருவகைநிலையாற் கூறப்படுகின்றது. அவற்றுள், இல்லறமாவது - இம்மைமறுமையாகிய இருமையின்பங்களையும் அனுபவித்தற்கு உரிய இல்வாழ்க்கை நிலைக்குச சொல்லுகின்ற நெறியில் நின்று அதற்குத்துணையாகிய கற்புடை மனைவியோடுஞ் செய்யப்படுந் தருமம்; துறவறமாவது - மேற்கூறிய இல்லறத்தில் வழுவாமல் நடந்து அறிவுடையராய்ப் பிறப்பையஞ்சி முத்திபெறுதற்பொருட்டு எல்லாப்பற்றுக்களையும் விட்டவர்க்கு உரியதாகிய தருமம்.

பால், இயல், அதிகாரம் என்றவற்றிற்கு - பலபொருள்கள் உள்ளனவாயினும், இங்கே, ஒருபொருளையே குறித்துவரும் பலசெய்யுட்களின் தொகுதியாகிய நூற்கூறுபா டென்று பொருள். இந்நூலில், சங்கேதத்தால், பால் என்றது - பெரும்பிரிவுக்கும், இயல் என்றது - அதற்குஉட்பட்ட சிறுபிரிவுக்கும், அதிகாரம்என்றது-அதன் உட்பிரிவுக்குமாகக்கொள்ளப்பட்டது.

இனி, ஒவ்வொருபொருளை வற்புறுத்திக்கூறும் பப்பத்துப் பாடல்களையுடைய நாற்பது அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுள்ள இந்நூலில் முதற் பதின்மூன்று அதிகாரங்கள், அறத்துப்பால்; பதினான்காம் அதிகாரம் முதல் முப்பத்தேழாம் அதிகாரம் வரையில் இருபத்து நான்கு அதிகாரங்கள், பொருட்பால்; இறுதி மூன்றுஅதிகாரங்கள், காமத்துப்பால். "மூன்றுறுப் படக்கிய தன்மைத்தாயின், தோன்றுமொழிப்புலவ ரது பிண்டமென்ப" என்னுந் தொல்காப்பியச்செய்யுளியற் சூத்திரத்தின்படி இந்நூல் பால் இயல் அதிகாரம் என்னும் மூன்று உறுப்புக்களையும் அடக்கியதொரு பிண்டமாமென்க. அவற்றுள்,—

முதலாவது

# அறத்துப்பால்.

அஃதாவது - அறத்தையுணர்த்தும் பகுதி என்பதாம். இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனு முடன்தொக்க தொகை. இவ்வறத்துப்பால் - துறவறவியல் இல்லறவியல் என இரண்டு உட்பிரிவை யுடையது.

அறஞ்செய்வதற்கு உரிய இருவகைநிலையுள் இல்லறம் முதலதும் துறவறம் இரண்டாவது மாதலால் அம்முறைபற்றித் திருக்குறளின் அறத்துப்பாலில் இல்லறவியல் முன்னும் துறவறவியல் பின்னும் நிறுத்திக் கூறப்பட்டிருந்தாலும், இந்நூலில் அங்ஙனமன்றி, துறவறம் நிதியமாகிய முத்தியை யடைதற்குக் காரணமாதலால் அச்சிறப்புப்பற்றி அது முன்னும், இல்லறம் துறவறம்போல முத்தி பெறுதற்குக் காரணமாகாததனால் அச்சிறப்பின்மை பற்றி அது பின்னுமாக வைக்கப்பட்டது. இந்நூலின் முதல் ஏழு அதிகாரங்கள் - ஜைநசமயக்கொள்கையின்படி முத்திபெறுதற்கு இன்றியமையாததான துறவறத்தைக் கூறும் இயலென்றும், அதன்பின் ஆறு அதிகாரங்கள்- அத்துறவறத்திற்கு மறுதலையாகிய இல்லறத்தைக் கூறும் இயலென்றும் அமைக்கப்பட்டன. "அறவிய லிருவகைத்தா மவைதம்முள், துறவே யில்லற மிருமூன் றென்ப" என்ற பழையவுரைசசூத்திரத்தை உணர்க. அவற்றுள்,—

முதலாவது

## துறவறவியல்.

அஃதாவது - துறவறத்தைக்கூறும் இயல் என்றவாறு. [இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.] அதனுள்,

### முதல் அதிகாரம்.—செல்வநிலையாமை.

அஃதாவது - செல்வத்தினது நிலைத்தலில்லாமை. இதனைச் சொல்வது, செல்வங்கிடைத்தபோது விரைவில் அறஞ்செய்வதிற் கருத்து உண்டாதற்பொருட்டு. நிலையில்லாதபொருளை யுணர்ந்தா லன்றி நிலையுடைய பொருளில் மனஞ்செல்லா தாதலால், முத்தியடைவதில் விருப்பமுண்டாதற்பொருட்டு நிலையில்லாதபொருள்களை மூன்றதிகாரங்களால் உணர்த்தத் தொடங்கி, அவற்றுள் இளமைக்குப் பிராயம் முப்பதென்றும், உடம்புக்குப் பிராயம் நூறென்றும் ஒரு காலநியமம் உள்ளதனால், அவற்றிற்குமுன், அந்நியமமில்லாத செல்வத்தின்நிலையாமையை வைத்திட்டார். இங்ஙனம் அதிகாரங்களை யாதாயினும் ஒருகாரணம்பற்றி ஒழுங்குபட நிறுத்துதல், 'ஓத்துமுறைவைப்பு' என்னும் உத்தியாம்.

அதிகாரம் - அதிகரித்தல்; அது இருவகைப்படும்: அவற்றுள் ஒன்று, அரசன் தான் இருந்த இடத்திலே இருந்து தன் நிலம்முழுவதும் தன்கட்டளையில் நடக்கச் செய்தல்போல, ஒருசொல் நின்றவிடத்தே நின்று பல செய்யுள்கள் தன்பொருளையே சொல்லிவரும்படி செய்வது; மற்றொன்று, ஆங்காங்குச் சென்று கட்டளை நிறைவேற்றும் அதிகாரிகள்போல, ஓரிடத்து நின்ற சொல் பலசெய்யுட்களோடுஞ் சென்று இயைந்து தன்பொருளையே பயப்பிப்பது. அவற்றுள், இங்கு 'அதிகாரம்' என்றது, முதலிற்கூறியவகை பற்றியது. இனி, அதிகாரம் என்பதற்கு-முறைமையெனப் பொருள்கூறுவர், நச்சினார்க்கினியர்.

க. அறுசுவை யுண்டி யமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கி யுண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்ப ரோரிடத்துக் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று.

(இதன்பொருள்.) அறு சுவை - ஆறுவகை ருசிகளையுடைய, உண்டி - உணவை, அமர்ந்து-அன்போடு பொருந்தி, இல்லாள்-மனைவி, ஊட்ட-(எடுத்தெடுத்து) உண்பிக்க, மறு சிகை - மற்றொரு கவளத்தை, நீக்கி - தள்ளி, உண்டாரும் - புசித்த பெருஞ்செல்வ முடையோரும், வறிஞர் ஆய் - (அச்செல்வமழிந்து) தரித்திரர்களாய், ஓர் இடத்து - வேறோரிடத்தில், சென்று-போய், கூழ் - கூழை, இரப்பர்-பிச்சையெடுப்பார்கள், எனின்-என்றால்,— செல்வம் ஒன்று - செல்வமென்கிற ஒருபொருள், உண்டுஆக - நிலையாயுள்ளதாக, வைக்கற் பாற்று அன்று - (மனத்தில்) வைத்து எண்ணத்தக்கதன்மையுடையதன்று; (என்றவாறு.)

நிலையாமையையறிந்துபொருளிற்பற்றுவிடவேண்டுமென்பது கருத்து.

அறுசுவை - தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன. உணவிடுபவரது அன்பு ஏழாவதொருசுவையென்று பாராட்டிக் கூறப்படுதலால், 'அறுசுவையுண்டி' என்றதன்பின் 'அமர்ந்து' என்றமை ஏற்கும். அமர்தல் - விரையாதிருத்தலாகவுமாம். இல்லாள் - இல்லறவாழ்க்கைக்கு உரியவள். செல்வர்கள்வீட்டிற் பரிசாரகர் பலர் இருக்கவும் மனைவியே உண்பித்தல், இன்பஞ்செய்தற்பொருட்டென்க. மறுசிகைநீக்கி உண்ணுதலாவது - ஒவ்வொருவகை யுணவிலும் முதலில் எடுத்துக்கொடுத்த கவளத்தைமாத்திரமே உண்டு இரண்டாவது கவளத்தை அடியோடு வேண்டாவென்று விலக்குதல். இவ்வாறு உண்ணுதல், உணவுவகைகளின் மிகுதியினால். ஊட்ட என்னுஞ் சொல்லின் ஆற்றலால், தாம் கையில்வாங்கி உண்ணாமல் மனையாள் தானே வாயிற்போகட உட்கொள்ளுதல் தோன்றுமாறு காண்க. சென்று என்றது, முன்னே கால்களால் நடவாமை தோன்ற நின்றது. தாம் செல்வராயிருந்தவிடத்திலேயேஇரத்தல் பேரவமானத்தைத் தருதலால்,வேறோரிடத்துச சென்று இரப்பரென்க. இனி, 'ஓரிடத்து' என்பதற்கு-ஒரே இடத்தில் [முன்பு தாம்செல்வராய் வாழ்ந்த இடத்திலேயே] என்று உரைப்பாரு முளர். கூழ் - மிகத்தாழ்ந்த உணவு; அதனை இரப்ப ரெனவே, மிக

வுந் தாழ்ந்தவரிடத்தும் போய் இரப்ப ரென்பது பெறப்படும். எனின் - ஆத லால் என்றபடி. ஒன்று உண்டாக என எடுத்து, சிறிதும் நிலையுள்ளதாக எனினுமாம்.

உண்டி - உண்ணப்படுவது; இ - செயப்படுபொருள்விகுதி, ட்-எழுத் துப்பேறு. ஊட்டு - உண்என்பதன் பிறவினை. மறுசிகை - பண்புத்தொகை. சிகை என்னும் முடிந்தகுடுமியின்பெயர், பிசைந்த அன்னத்தினின்று எடுக் கும் கவளத்துக்கு உவமவாகுபெயர். உண்டாரும், உம் - உயர்வுசிறப்பு. வறி ஞர், ஞ் - பெயரிடைநிலை; வறுமைஎன்ற பண்புப்பகுதி ஈறுபோய் இடை உகரம் இகரமாயிற்று. செல்வம் - (எவரிடத்தும் நிலைத்திராமல் நீங்கிச்) செல்லுந் தன்மையது எனப் பொருள்படுங் காரணக்குறி; செல் - பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி, வ் - எழுத்துப்பேறு. பாற்று - பான்மை என்பதன் அடியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைப் பெயர். மேல் கசஙூ-வது செய்யுளில், 'உணரற்பாற்றன்று' என்பதிலும் இது. சிகை - ஶிகா என்னும் வடமொழி திரிந்தது.

"ஆமின் சுவையவை யாறோ டடிசிலுண் டார்ந்தபின், தூமென்மொழி மடவா ரிரக்கப் பின்னுந் துற்றுவா, ரீமி னெமக்கொரு துற்றென் றிட றுவ ராதலிற், கோமின் துழாய்முடி யாதியஞ் சோதி குணங்களே" எனத் திருவாய்மொழியிலும், "முல்லைமுகை சொரிந்தாற்போன் றினியபாலடிசில் மகளிரேந்த, நல்லகருனையால் நாள்வாயும் பொற்கலத்து நயந்துண்டார் கள், அல்லலடைய அடகிடுமி னோட்டகத் தென்று அயில்வார்க் கண்டும், செல்வம் நமரங்காள் நினையன்மின் செய்தவமே நினைமின்கண்டீர்" எனச் சிந்தாமணியிலும் கூறியிருத்தல் காண்க.

இச்செய்யுளில் முன்வாக்கியத்தின்பொருளைக்கொண்டு பின்வாக்கியத் தின் பொருள் சாதிக்கப்படுதலால், செய்யுட்குறியணி; வடநூலார் காவ்ய லிங்கம் என்பர். இதில், செல்வத்தை ஊழ்வினையாற் பெற்றால் அப்பெற்ற பொழுதே அதனாற் செய்யப்படுங் கடவுட்பூசையும் தானமும் முதலான தருமங்களைச் செய்துவைத்துக்கொள்ளவேண்டு மென்பது தொனிக்கும். இவ்வெண்பாவின் பின்னிரண்டடியில் இனவெதுகை காண்க. (க)

உ. துகடீர் பெருஞ்செல்வந் தோன்றியக்காற் றொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
வகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்.

(இ - ள்) செல்வம்—, அகடு உற-நடுவுநிலைமை பொருந்த, யார்மாட் டும் - எவரிடத்தும், நில்லாது - நிலைபெறாமல், சகடம் கால் போல- வண்டி யின் சக்கரம்போல, வரும் - (மேல்கீழாகவும் கீழ்மேலாகவும்) மாறிமாறி வரும்; (ஆதலால்),— துகள் தீர் - குற்றமற்ற, பெருஞ் செல்வம் - மிக்க திர வியம், தோன்றியக்கால் - (ஒருவனுக்கு) உண்டானால்,—தொட்டு - (அவ் வுண்டானநாள்) தொடங்கி,—பகடு நடந்த கூழ்-எருமைக்கடாக்கள் உழுது

நடந்ததனால் உண்டாகிற உணவை, பல்லாரோடு-பலரோடுங் கூடி, உண்க-(அவன்) உண்ணக்கடவன்; (எ - று.)

செய்யுட்குறியணியோடு உவமையணி.

செல்வத்திற்குக் குற்றம் - தருமவழியாலன்றி வேறுவழியால் வருதல்; அதருமவழியால் வந்த செல்வம் புகழறங்கட்குக் காரணமாகா தாதலால், அதனை விலக்குதற்கு, 'தகடீர்செல்வம்' என்றார். பெருஞ்செல்வமென்றது-செலவழிக்கச்செலவழிக்கக் குறைவுபடாமல் மேன்மேல் வருவாயையுடைய பொருளென்றபடி. 'பகடுநடந்தகூழ்' என்றது-பிறதொழில்களாற் பெரும் பொருள் பெற்றவர்க்கும் உழுபவர் உழுதாலல்லாமல் உணவு கிடையாதாதலால்; அன்றியும், நன்முயற்சியாற்பெற்ற உணவென்பதற்கு ஒருதிருஷ்டாந்தங் காட்டினாரென்றுமாம். கூழ் - இங்கே, உணவுப்பொதுவாய்நின்றது. 'பல்லார்' என்றது,விருந்தினர் சுற்றத்தார் முதலியோரை உட்கொண்டு. பலவகைத்தானங்களுள்ளும் அன்னதானத்துக்கு ஒத்ததும் மிக்கதும் வேறு இல்லாததனால், 'பல்லாரோடுண்க' என்றார். பெருஞ்செல்வம் பெற்றதற்குப் பயன் பிறர்க்குத் தானஞ்செய்தலும் தான் அனுபவித்தலுமே யென்பதாம். "அற்கா வியல்பிற்றுச செல்வ மதுபெற்றா, லற்குப வாங்கே செயல்" என்றார் திருவள்ளுவனாரும்.

தீர்-தன்வினைபிறவினைகட்குப்பொதுவான முதனிலை ; இங்குத் தன்வினை இக்காலங்காந்தபெயரெச்சம், 'செல்வம்' என்னும் பெயர்கொண்டது. தீர்செல்வம்-வினைத்தொகை தோன்றியக்கால்-'கால்'விகுதிபெற்றஎதிர்காலவினையெச்சம்: வலிமிக்கதனால், இது பெயரெச்சத்தொடரன்று. தொட்டு, தொடு - முதனிலை. பகடு - ஆண்பெயர். நடந்த என்னும் பெயரெச்சம்-காரணப்பொருளது. உண்க-வியங்கோள்; விதித்தற்பொருளது. யார்மாட்டும்—யார்-யாவர்என்பதன் தொகுத்தல், மாடு - ஏழாம்வேற்றுமைச்சொல்லுருபு, உம் - முற்று. நில்லாது - வினையெச்சம், 'வரும்' என்னும் முற்றுவினை கொண்டது.

முகடம் - வடசொல்.

இனி, "பக டிபம் பெருமை யேறு பகூறி யாண்மேதி யைம்பேர்," "அகடென்ப நடுவே குக்கி" என்னும் நிகண்டுகொண்டு பகடு நடந்த என்பதற்கு - பெருமை பொருந்திய என்றும், அகடுற உண்க என்று இயைத்து - வயிறுநிரம்ப உண்க என்றும் உரைப்பாருமுளர்.

இச்செய்யுளில் 'செல்வம்' என இடையிலேநின்ற மொழி 'நில்லாது' என முதலிலும், 'வரும்' என இறுதியிலுஞ் சென்று கூடுதல், தாப்பிசைப் பொருள்கோளாம்; [நன்னூல் - பொதுவியல் - கூ௬.] (உ)

௩. யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரு—மேனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள.

(இ - ள்.) யானை எருத்தம் - யானையினது பிடரி, பொலிய - (தாம் வீற்றிருத்தலால்) விளங்கும்படி, (அதன்மேல்ஏறி), குடை நிழல் கீழ் - வெண் கொற்றக்குடையின் நிழலில். சேனை தலைவர் ஆய் - சேனைகளையுடையஅரச ராய், சென்றோரும் - (வீதிகளில்) உலாச்சென்ற பெருஞ்செல்வமுடைய வர்களும்,—ஏனை வினை - மற்றை வினை [தீவினை], உலப்ப - (அச்செல்வத் தை) அழிப்பதனால், வேறு ஆகி - (அந்நிலையினின்றும்) வேறுபட்டு [வறுமை யடைந்து], தாம் கொண்ட மனையாளை மாற்றார் கொள - தாங்கள் மணஞ் செய்துகொண்ட மனைவியையும் பகைவர்கள் கவர்ந்துகொள்ளும்படி, வீழ் வர் - நிலைகுலைந்து இழிவுறுவர்; (எ - று.)

தன்மைநவிற்சியணி; வடநூலார் ஸ்வபாவோக்தி என்பர்.

எருத்து - கழுத்தின் பேற்புறம்; அம் - சாரியை. இவர்கள் ஏறுதலால் யானையின்கழுத்துக்கு அழகு உண்டாவது எனவே, இவர்களது அழகு கூறா மலே பெறப்படும். நிழற்கீழ், கீழ் - ஏழனுருபு. "ஒருநாயகமா யோட வுல குட னுண்டவர்" என்றவாறு ஏகசக்கராதிபதியமுடையராய் யாவரையும் வென்று விளங்குகிற சக்கரவர்த்திக ளென்பது தோன்ற, 'குடைநிழற்கீழ்ச் சேனைத்தலைவராய்ச் சென்றோர்' என்றார். 'சேனைத்தலைவராய்' என்றது, ரத கஜ துரக பதாதி என்னுஞ் சதுரங்கசேனைகளும் தம்மைச்சூழ்ந்துவா என்றபடி. இவ்வாறு செல்வம் மிக்கிருத்தற்குக் காரணம் முற்பிறப்பிற் செய்த புண்ணியமே யாதலால், அதற்கு எதிராகிய பாவம் - 'ஏனைவினை' எனப்பட்டது. சேனை - 'ஸேநா' என்னும் வடமொழி; ஆவீறு ஐயாயிற்று. ஏனை - பிறிதென்னும் பொருள் தருவதோர் இடைச்சொல். தீவினையை அதன்பெயராற்கூறவும் அஞ்சி 'ஏனைவினை' என்றனர்போலும். இனி, ஏனை என்பது - அசைநிலையாய், வினை உலப்ப - அந் நல்வினை கெட என்று மாம்; [சிலப்பதிகாரத்தில் "முதிர்வினை நுங்கட்கு முடிந்த தாகலின்" என்றதற்கு 'நுங்கட்கு முற்பட்ட நல்வினை முடிந்த தாகலான்' என்று பொழிப்புரைகூறிய அடியார்க்குநல்லார் 'முதிர்தல் - முற்படுதல்; எனவே, நல்வினை முடிதலால் என்க: "ஏனைவினை யுலப்ப" என்றார் பிறரும்' என விசேடவுரைகூறியது காண்க.] செல்வமாகிய உயர்ந்தநிலையினின்று இழி ந்து வறுமையாகிய தாழ்ந்தநிலையை அடைதலால், 'வீழ்வர்' என்றார். மனை யாளை என்றவிடத்து, மற்றைச்செல்வங்களையேயன்றி என இறந்ததுதழு விய எச்சப்பொருளைத் தருகிற உயர்வுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மாற்றார் - மாறுனவர்: மாறு [=எதிர்]—பகுதி.

ஆற்றல் மிக்க அரசர்களிடத்துஞ் செல்வம் நிலைபெறா தென்றபடி. இவ்வளவு செல்வத்தவரும் வறியவராதல் கூறவே, மற்றையோர் வறியவரா தல் கூறவேண்டாதாயிற்று. பெருந்துன்பமும் பேரவமானமுந் தருதல்பற்றி, மனையாளை மாற்றார் கொள்ளுதலை எடுத்துக் கூறினார். "உம்மின் திறை கொணர்ந் தென் றுலகாண்டவ ரிம்மையே, தம்மின்சுவைமடவாரைப் பிறர் கொள்ளத் தாம்விட்டு, வெம்மினொளிவெயிற்கானகம்போய்க் குமைதின்பர்

கள், செம்மின்முடித்திருமாலை விரைந் தடிசேர்மினோ" என்ற திருவாய்மொழியையுங் காண்க. (௩)

௪. நின்றன நின்றன நில்லா வெனவுணர்ந்
தொன்றின வொன்றின வல்லே செயிற்செய்க
சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று.

(இ - ள்.) வாழ் நாள் - (உயிர் உடம்போடுகூடி) வாழ்கின்ற ஆயுள்நாள்கள், சென்றன சென்றன - கழிந்தன கழிந்தன ; கூற்று-யமன், செறுத்து-கோபித்து, உடன் - விரைவில், வந்தது வந்தது—; (ஆதலால்),--நின்றன நின்றன - வந்துநின்ற செல்வம் முதலிய பொருள்களெல்லாம், நில்லா - நிலையில்லாதனவாம், என - என்று, உணர்ந்து - (உண்மையை) அறிந்து,— ஒன்றின ஒன்றின - (செய்தற்குக்) கூடுமான தருமங்களையெல்லாம், செயின் - செய்யப்புகுந்தால், வல்லே செய்க - விரைவில் (ஒவ்வொருவரும்) செய்யக்கடவர் ; (எ - று.)

சொற்பொருட்பின்வருநிலையணி.

செய்யக்கூடிய நற்காரியங்களைச் சீக்கிரத்திலே செய்யவேண்டும்; பின் செய்வோமென்றால்,செல்வம்அழிந்துபோம்,உடம்புநிலையன்றுஎன்பதாம்.

நின்றன - செல்வமும், இளமையும். நின்றன நின்றன, ஒன்றின ஒன்றின என்னும் அடுக்குக்கள்-மிகுதிபற்றியன. சென்றன சென்றன, வந்ததுவந்ததுஎன்னும்அடுக்குக்கள்-விரைவுபற்றியன.'நின்றனநின்றனநில்லா' என்ற சொற்போக்கு, நிலைபெற்றன நிலைபெற்றன வென்று தம்மாற் கருதப்பட்ட பொருள்களெல்லாம் நிலைபெறாமல் அழியு மென்ற கருத்தையும் விளக்கும். சென்றன, வந்தது என்றவற்றில் - தெளிவுபற்றி, நிகழ்காலமும் எதிர்காலமும் இறந்தகாலமாகச் சொல்லப்பட்டன; காலவழுவமைதி; [நன்-பொது - ௩௩ ] வல்லே, உடன் - விரைவுப்பொருளைத்தரும் இடைச்சொற்கள். நாள் - பால்பகா அஃறிணைப்பெயராதலால், இங்கு, சென்றன என்னும் பன்மைவினை கொண்டது. தேவர்களை இருதிணையாகவும் சொல்வது இலக்கணமாதலால், இங்கு 'கூற்று வந்தது'என அஃறிணையாக் கூறப்பட்டது. கூற்று - உடலையும் உயிரையும் வெவ்வேறுகூறாக்குங் கடவுள்; உடலினின்று உயிரைப் பிரிப்பவனென்றபடி. 'வாழ்நாள் இடையறாது செல்லுங் காலத்தினைப் பொருள்வகையாற் கூறுபடுத்துங் கடவுள்' என்பர் நச்சினார்க்கினியர்.

"காலைச் செய்வோமென் றறத்தைக் கடைப்பிடித்துச், சாலச்செய்வாரே தலைப்படுவார்—மாலைக், கிடந்தானெழுத லரிதான் மற்றென்கொ, லறங்காலைச் செய்யாத வாறு" என்றார் அறநெறிச்சாரத்திலும்.

ஈற்றடி - இனவெதுகை. (௪)

ரு. என்னானு மொன்றுதங் கையுறப் பெற்றக்காற்
பின்னாவ தென்று பிடித்திரா—முன்னே
கொடுத்தா ருயப்போவர் கோடிறீக் கூற்றந்
தொடுத்தாறு செல்லுஞ் சுரம்.

(இ - ள்.) என் ஆனும் ஒன்று - யாதாயினும் ஒருபொருள், தம் கை உற பெற்றக்கால் - தமதுகையிற் கிடைக்கப்பெற்றால், பின் ஆவது என்று - (பிறர்க்கீதல்) பின்னே ஆகக்கடவது என்று, பிடித்து இரா - இறுகப் பிடித்து வைத்திராமல், முன்னே - அப்பொருள் கிடைத்தபொழுதே, கொடுத்தார் - தானஞ்செய்தவர்கள்,—கோடு இல் - பக்ஷபாதமில்லாத, தீ கூற்றம் - கொடுமையையுடைய யமன், தொடுத்து - (தம்மைப் பாசத்தாற்) கட்டி, செல்லும் - கொண்டுபோகின்ற, ஆறு - வழியிலுள்ள, சுரம் - வெப்பு நிலத்தினின்றும், உய போவர் - (அந்நல்வினை வந்து உதவுவதனால்) தப்பிச் செல்வார்கள்; (எ - று.)

பலதீவினைகள் செய்து நரகத்திற் செல்லுந் தன்மையராயினும், யாதாயினும் ஒருபொழுதில் ஒரு சிறிது தருமஞ் செய்திருந்தால் அதன் பயனாக அந்நரகவழியிலுந் துன்பம் நீங்கி இன்பம் பெறுவரென்றபடி. யமன்வசப்பட்டு நரகத்துன்பநுகர்தலின்றி நல்வினைப்பயனாற் சுவர்க்கம்புக்கு இன்ப நுகர்வரென்ற கருத்தும் இதில் அமையும்.

'பின்னாவதென்றுபிடித்து' என்பதற்கு - பின்காலத்தில்[முதுமையில்] (தமக்குஅப்பொருள்)பயன்படுவது என்று எண்ணி லோபஞ்செய்துஎன்றும் உரைக்கலாம். கோடு - முதனிலைத் தொழிற்பெயர். கோடுதல்-கோணுதல்: நடுவுநிலைமைதவறுதல். கோடில் கூற்றம் என்றது -நல்வினைசெய்தோர்க்குத் தீமையையும், தீவினைசெய்தோர்க்குநன்மையையும் மறந்துந்தராதவனென்றற்கு; 'நடுவன்,' 'ஸமவர்த்தீ,' 'தருமன்' என்கிற அவனது பெயர்களாலும் அறிக. பாவஞ்செய்தவர்களைத் தண்டிப்பதில் எள்ளளவும் இரக்கமில்லாமை பற்றி, 'தீக்கூற்றம்' என்றார்.

என், ஆனும் என்பன - எவன், ஆயினும் என்பவற்றின் விகாரங்கள். பெற்றக்கால் - காலீற்று வினையெச்சம். இரா-ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம். சுரம் - ஜ்வரம் என்ற வடமொழியின் திரிபு; சுரம் என்றது - அஸிபத்திரவனம் போல்வதை. உய=உய்ந்து: எச்சத்திரிபு. (இ)

சு. இழைத்தநா ளெல்லை யிகவா பிழைத்தொரீஇக்
கூற்றங் குதித்துய்ந்தா ரீங்கில்லை—யாற்றப்
பெரும்பொருள் வைத்தீர் வழங்குமி னாளைத்
தழீஇந்தழீஇந் தண்ணம் படும்.

(இ - ள்.) இழைத்த நாள் - (ஊழ்வினையால்) விதிக்கப்பட்டுள்ள ஆயுள் நாள்கள், எல்லை இகவா - (தமது) அளவைக் கடவாதனவாம்; கூற்றம் - யமனிடத்தினின்றும், பிழைத்து - தப்பி, ஒரீஇ - நீங்கி, குதித்து - (அவ

னெண்ணத்தைக்) கடந்துபோய், உய்ந்தார் - உயிர்வாழ்ந்தவர்கள், ஈங்கு இல்லை - இவ்வுலகத்தில் (எவரும்) இல்லை; (ஆதலால்), ஆற்ற பெரும் பொருள் வைத்தீர் - மிகவும் அதிகமான செல்வத்தைச் சேர்த்துவைத்திருப்பவர்களே! வழங்குமின் - (விரைவாகவே) தானஞ்செய்யுங்கள்; நாளை - நாளைக்கே, தண்ணம் - (இறந்தவர்க்கு உரிய நெய்தற்பறை, தழீஇம் தழீஇம்- தழீம்தழீம் என்னும்ஓசைஉண்டாம்படி, படும்-அடிக்கப்படுதல்கூடும்; (எ-று.)

குறுகவுங் குறுகாது வளரவும்வளராது என்றற்கு,பொதுப்பட,'எல்லை இகவா' என்றார். ஒரீஇ - ஒருவி; சொல்விகாரப்பட்டு அளபெடுத்ததனால், சொல்லிசையளபெடை. பெரும்பொருள் - பெருமையைத் தருவதாகிய பொருளெனினுமாம். 'பிழைத்துஒரீஇ' என்பதை 'இகவா' என்பதனோடு கூட்டியுரைப்பாருமுளர். 'படும்' என்பதற்கு-ஒலிக்குமென்ற பொருளும் உண்டு. "சென்றநா ளெல்லாஞ் சிறுவிரல்வைத் தெண்ணலாம், நின்றநாள் யார்க்கும் உணர்வரிது" ஆதலால், 'நாளை' என்றார். இங்கு'நாளை'என்றது- எதிர்காலத்தை யுணர்த்த வந்ததோர் குறிப்புச்சொல். தண்ணம் - தண்ணுமை யென்கிற சாக்காட்டுப்பறை. தழீஇம் தழீஇம் - அநுகரண மென்னும் ஒலிக்குறிப்பு; இரட்டைக்கிளவி: இயற்கையளபெடை.

மரணம் சம்பவிக்கு மென்பது, 'தழீஇந் தழீஇந் தண்ணம் படும்' என வேறொருவகையாற்காட்டப்பட்டது: இது, பிறிதினவிற்சியணி; வடநூலார் பர்யாயோக்தாலங்காரம் என்பர்.

இச்செய்யுள் - பலவிகற்ப இன்னிசை வெண்பா. (௬)

எ. தோற்றஞ்சான் ஞாயிறு நாழியா வைகலுங்
கூற்ற மளந்துநுந் நாளுண் ணு—மாற்ற
வறஞ்செய் தருளுடையீ ராகுமின் யாரும்
பிறந்தும் பிறவாதா ரில்.

(இ - ள்.) தோற்றம் சால் ஞாயிறு - உதித்தல்பொருந்திய சூரியனை, நாழி ஆ - அளவுகருவியாகக்கொண்டு, வைகலும் - நாள்தோறும், கூற்றம்- யமன், நும் நாள் - உங்கள் வாழ்நாள்களை, அளந்து - அளவிட்டு, உண்ணும் - உண்டுவருகின்றான்:(ஆதலால்),—ஆற்ற-மிகுதியாக, அறம் செய்து- தருமஞ்செய்து, அருள் உடையீர் ஆகுமின் - (உயிர்களிடத்துக்) கருணையுள்ளவராவீர்கள்; (அவ்வாறு ஆகாவிட்டால்), யாரும் - எப்படிப்பட்டவரும், பிறந்தும் - (இவ்வுலகத்தில் மனிதராய்ப்) பிறந்தும், பிறவாதாரில் - பிறவாதவர்போலவே (ஆவர்); (எ - று.)

'தோற்றஞ்சால்' என்பதற்கு-"தோற்றஞ்சால் தொகுபொருள்" என்னுங் கலித்தொகையிற்போல'விளக்கமமைந்த' எனவுமாம். 'இறவாதாரில்' எனவும் பாடங்கொள்வர். ஞாயிறு நாழியா என்றும், உண்ணும் என்றுங் கூறியதற்குஏற்ப, நாள்களாகிய தானியங்களை என்னுதது-ஏகதேசவுருவக வணி. தோற்றம்-தோன்றுதல்:தொழிற்பெயர்;தோன்று-பகுதி,அம்-விகுதி, ஒலித்தல்-விகாரம். சால் - உரிச்சொல். வைகலும், உம்மை-தொறுப்பொரு

ளது. உண்ணும்-கழிப்பான்என்றபடி. சூரியனது உதயஅஸ்தமனங்களினாலே நாள்உண்டாகிக்கழிவதனாலும், அது கழிய ஆயுள் குறைவதனாலும் இவ்வாறு கூறினர். மேல் உஉ-ஆஞ் செய்யுளையும், "நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும், வாள தூணர்வார்ப் பெறின்," "வாள்களாகி நாள்கள் செல்ல" என முன்னோர் கூறியிருத்தலையுங் காண்க. "ஆயுஷ்ய கண்டமாதாய ரவிர ஸ்தங் கமிஷ்யதி" என்னும் வடநூன் மேற்கோளும் இங்குக் கவனிக்கத் தக்கது. பலவகைப்பிறவிகளுள்ளும் அரியதாகப்பெற்ற மக்கட்பிறப்புக்குப் பயன் அருள்கொண்டு அறஞ்செய்து உறுதிபெறுதலே யாதலால், 'ஆற்ற அறஞ்செய்து அருளுடையீராகுமின் யாரும் பிறந்தும் பிறவாதாரில்' என்றார். "அறனும் அருளுடையான் கண்ணதே யாகும்", "அருளிலார்க்கு அவ்வுலக மில்லை" என்ப வாதலால், 'அருளுடையீராகுமின்' என, அறத்திற்குக் காரணமான அருள் எடுத்துக்கூறப்பட்டது.

'யாரும் பிறந்தும் பிறவாதாரில்' என்றது - அருளுடையராய் அறஞ் செய்யாதவர் அடைதற்கு அரிய மானிடசன்மத்தை அடைந்திருந்தும் அதன்பயன் பெறாமையால் அதனை அடையாதவராகவே எண்ணப்படுவ ரென்றபடி. அவர்கள் பகுத்தறிவின்மையால் விலங்கோடொப்ப ரென்ற கருத்தும் இதில் அமையும். பிறவாதாரில், ஐந்தனுருபு - ஒப்புப்பொருளது; இது - ஒப்பில்போலி. 'ஆவர்' என வினைமுற்று வருவிக்க. எழனுருபாகக் கொண்டு, பிறவாதாரில் (வைத்தெண்ணப்படுவர்) என்றுமாம். இனி, உண்ணும் என்பதனோடுகூட்டி, எவரும் பிறந்தும் பிறவாதவர்போலாம்படி [இறக்கும்படி] கூற்றம் நாள் உண்ணும் என்று உரைப்பாரு முளர்.

உண்ணும்-செய்யுமென்முற்று, நிகழ்கால முணர்த்திற்று; [நன் - பத - கஅ.] அறம் - செய்யத்தக்கது என நூல்களால் வரையறுக்கப்பட்டதுஎன்று பொருள்படும் காரணக்குறி; அறு - பகுதி, அம் - செயப்படுபொருள்விகுதி: [இதன்எதிர்மொழி - மறம்; அதருமம்: செய்யத்தகாதது என நூல்களால் மறுக்கப்பட்டது என அதற்குக் காரணப்பொருள் காண்க.] 'அறஞ்செய்து அருளுடையீராகுமின்' என்றதை அருளுடையீராகி அறஞ்செய்ம்மின் என விகுதி பிரித்துக்கூட்டுதலும் ஒன்று. (எ)

அ. செல்வர்யா மென்றுதாஞ் செல்வுழி யெண்ணாத
புல்லறி வாளர் பெருஞ்செல்வ—மெல்லிற்
கருங்கொண்மூ வாய்திறந்த மின்னுப்போற் றோன்றி
மருங்கறக் கெட்டு விடும்.

(இ - ள்.) செல்வர் யாம் என்று - (இப்பொழுது) செல்வமுடையோம் நாம் என்று எண்ணிக் களித்து [தம்மைத் தாமே மதித்து], தாம் செல்வுழி - தாம் போகுமிடங்களில், எண்ணாத - (பிறரை) மதியாத, புல் அறிவாளர் - அற்பபுத்தியுடையவர்களது, பெருஞ் செல்வம்-மிக்கசெல்வமும்,—எல்லில் - இராத்திரியில், கருங் கொண்மூ - கருநிறமுடைய மேகம், வாய் திறந்த - வெளிவிட்ட, மின்னு போல் - மின்னல் போல, தோன்றி - (மிகச்சிறிது

பொழுது) காணப்பட்டுநின்று, (உடனே), மருங்கு அற - இருந்த இடமும் தெரியாமல், கெட்டுவிடும் - அழிந்துபோம்; (எ - று.)

உவமையணி.

இனி, 'தாம்செல்வழியெண்ணாத' என்பதற்கு-மறுமையில் தாம்செல்லுங் கதியை ஆலோசியாத என்று உரைத்தலு மொன்று. செல்வர் யாம் - தன்மையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி. செல்+உழி=செல்வுழி: வகர மெய் - உடம்படுமெய்யல்லாதமெய்; [நன் - உயிர் - கரு உரை.] 'மெய்யீற்றுடம்படுமெய்' என்பர் நச்சினார்க்கினியர். மேல் நிக - ஆஞ் செய்யுளில் 'தேய்விடத்து' என்பதில் உள்ள வகரமும் இது. கரிய இருளையுடைய இரவிலே ஒளிமிக்கு விளங்குதலால், 'எல்லில் தோன்றுகிற மின்' என்றார். கொண்மூ - நீரைக் கொள்வ தென்னும் பொருளில் வந்த காரணப்பெயர் போலும். பார்வைக்கு வாயைத்திறந்து விடுவதுபோலக் காணப்படுதலால், 'வாய்திறந்த மின்' என்றது. மின் - செல்வத்துக்குத் தொழிலுவமை; உ - சாரியை: [நன்-மெய்-கஎ.] கெட்டுவிடும், விடு-துணிவுப்பொருளுணர்த்தும்.

> கூ. உண்ணா னொளிநிறா னோங்கு புகழ்செய்யான்
> றுன்னருங் கேளிர் துயர்களையான் — கொன்னே
> வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
> விழந்தானென் றெண்ணப் படும்.

(இ - ள்.) (ஒருவன்), உண்ணான் -(தானும்)அனுபவியான்; ஒளி நிறான் - மதிப்பையும் நிலைபெறச்செய்யான்: ஓங்கு புகழ் செய்யான் - மேம்பட்ட கீர்த்தியையும் சம்பாதியான்; தன் அருங் கேளிர் துயர் களையான் - சேர்தற்கு அரிய உறவினரது துன்பத்தையும் போக்கான்; கொன்னே வழங்கான் - கைம்மாறுகருதாமல் தானமுஞ்செய்யான்; (இவ்வாறிருந்து), பொருள் காத்து இருப்பானேல் - செல்வத்தைக் காவல்செய்து வைத்திருப்பானானால், (அவன்), அ ஆ - ஐயோ! இழந்தான் என்று எண்ணப்படும் - (அப்பொருளை)இழந்துவிட்டானென்றே(யாவராலும்)நினைக்கப்படுவான்;(எ-று.)

பாடுபட்டுத் தேடிய செல்வத்தைத் தானும் அனுபவியாமல் நல்விஷயத்திலும் உபயோகப்படுத்தாமற்போனால் அதனையிழந்ததற்குச் சமானமே என்று கருத்து; வைத்திருந்தும் பயனில்லை யென்றபடி.

பரிமேலழகர் "ஒழுகல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை" என்ற திருக்குறளின் உரையில் 'ஒளி-தாம்உளகாலத்து எல்லாராலும் நன்குமதிக்கப்படுதல்' என்றும், "ஒளி யொருவற் குள்ள வெறுக்கை" என்ற திருக்குறளின் உரையில் 'ஒளி - தான் உளனாயகாலத்து மிக்குத்தோன்றுதலுடைமை; "ஒளிநிறா னோங்குபுகழ் செய்யான்" என்றார் பிறரும்' என்றும் உரைத்தவற்றை இங்கே உணர்க; 'ஒளி யென்பது - வெள்ளைமையின்மை' என்பர் தொல்காப்பியவுரையில் நச்சினார்க்கினியர். நிறான், நில் என்பதன் பிறவினையாகிய நிறு - பகுதி. புகழ் - இம்மைப்பயனாய் இவ்வுலகத்தில் என்றும் அழியாமல் நிற்கும் கீர்த்தி; தாம் இறந்தபின்பும் தாமநிகழ்த்தியவாறு உலகம் உயர்த்துக்

கூற நிலைபெறுவது. "நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப், போற்றாது புத்தே ளுலகு"எனத்திருக்குறளிலும், "புலவர்பாடும் புகழுடையோர்விசும் பின், வலவ னேவா வானவூர்தி, யெய்துப வெனபதஞ் செய்வினை முடித்து" எனப் புறநானூற்றிலுங் கூறியபடி அது மறுமைக்குங் காரண மென்பது தோன்ற, 'ஓங்கு புகழ்' எனப்பட்டது. கேளிர்-யோகக்ஷேமங்களைக் கேட்ப வர்; இர் - பலர்பால் விகுதி: 'மகளிர்' என்பதிற் போல. கொல்லோ - பய னின்மைப்பொருள் தருவதோர் இடைச்சொல். இதனை, 'காத்திருப்பான்' என்பதனோடு கூட்டி, வீணாகச் செல்வத்தைப் பாதுகாத்துவைத்திருப்பா னென்று பொருள்கொள்ளினும் அமையும். அ ஆ - இரக்கக்குறிப்பிடைச் சொல். எண்ணப்படும் - செய்யுமென்முற்று, ஆண்பால்.

முன்னிரண்டடி - இனவெதுகை.

அ ஆ என்பது விட்டிசைத்ததனால், தனிக்குறில் முதலில் நேரசையா யிற்று; ஆகவே, தேமாச்சீராய்த் தளைக்கு இயையும். "விட்டிசைத் தல்லால் முதற்கண் தனிக்குறில் நேரசையென்று, ஒட்டப்படாது அதற்கு 'உண் ணான்' உதாரணம்" என்ற யாப்பருங்கலக்காரிகையையும், 'இதனுள் 'அஆ' என்புழி அருளின்கண் குறிப்பாய் மொழிமுதற்கண்நின்ற குற்றெழுத்து விட்டிசைத்துநேரசையாயினவாறும், அல்லாதவழிக்குறில்நெடிலோடுகூடி நிரையசையாயினவாறுங் கண்டுகொள்க' என்ற அதன் உரையையும் உணர்க.

க0. உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட
வுய்த்தீட்டுந் தேனீக் கரி.

(இ - ள்.) வான் தோய் மலை நாட - ஆகாயத்தை யளாவியுயர்ந்த மலை களையுடைய (பாண்டிய)நாட்டின் அரசனே!—உடாதும் - (நல்ல உடைப்புக் களை) உடுக்காமலும், உண்ணாதும் - (நல்ல உணவுகளை) உண்ணாமலும், தம் உடம்பு செற்றும் - தமது உடம்பை வருத்தியும், கெடாத நல் அறமும் செய்யார் - (எந்நாளும்) பயனழியாத நல்ல தருமங்களையுஞ் செய்யாம லும், கொடாது - (ஏழைகட்குக்) கொடாமலும், வைத்து - (செல்வத்தைக் காவல்செய்து) வைத்து, ஈட்டினார் - (மேன்மேலும்) சம்பாதித்தவர்கள், இழப்பர் - (அச்செல்வத்தை ஒருகாலத்தில்) இழந்தேவிடுவார்கள்; (அவ் வாறு இழப்பதற்கு),—உய்த்து ஈட்டும் தேனீ - (பலபூக்களினின்றுந் தே னைக்) கொண்டுபோய் வைத்து (மேன்மேலுஞ்) சேர்க்கிற தேனீக்கள், கரி- சாக்ஷியாம்; (எ - று.)

உவமையணி.

தேனீக்கள் பலநாளாகச் சிறிதுசிறிதாகச் சேர்த்துவைத்த தேனை ஒரு நாளிற் பிறனொருவன் கொண்டுபோவதுபோல, ஒருவன் பலகாலமாகச் சேர்த்துவைத்த செல்வத்தை ஒருகாலத்திற் கள்ளர்முதலியோர் கொண்டு போவரென்று கருத்து. "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்" என்ற

ஔவையார் அமுதமொழி, இரட்டுறமொழிதலால், கொடாத லோபிகளது செல்வத்தைக் கொடியோர் கைப்பற்றுவர் என உபமேயமாகவும், ஈக்கள் தேடிவைத்ததேனைத் தீக்கோலையுடைய வேடர் கவர்வர் என உபமானமாக வும் ஒன்றேஇருபொருள்பட்டு இப்பாட்டின்கருத்தைவிளக்குதல் காண்க.

'மலைநாட' என்றதனால், தேனீயை எடுத்துக்கூறினர். வான்றோய் மலைநாட - ஆடூஉமுன்னிலை. ஆடூஉமுன்னிலையாவது - புருஷனை முன்னி லைப்படுத்திக் கூறுவது; [இவ்வாறு மகடூஉமுன்னிலையும் உண்டு: அது - பெ ண்ணை முன்னிலைப்படுத்துவது.] இந்த நாலடியாரின் பாடல்கள் சமண முனிவர்களாற் பாண்டியநாட்டிற் பாடப்பட்டன வாதலால், இவற்றில்வரு கிற ஆடூஉமுன்னிலைகளைப்பாண்டியராசனைக்குறித்தனவென்னலாம். மருத நிலமாகிய அந்நாட்டை அடுத்துள்ள குறிஞ்சிநிலத்தின் மாட்சியைக் கூறு வார், 'வான்தோய்மலைநாட' என்றார். "இருபுனலும் வாய்ந்த மலையும் வரு புனலும்,வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு"என்ற திருக்குறளினாலும், 'இடை யதன்றி ஒருபுடையதாதலும் தன்வளந்தருதலும் மாரிக்கண் உண்டநீர்கோ டைக்கண் உமிழ்தலும் உடைமைபற்றி, வாய்ந்த மலை யென்றார்' என்ற அதன்உரையாலும்,மலை நாட்டிற்கு அவயவமாதலும்,நிலவளத்துக்கு இன்றி யமையாத நீர்வளத்துக்குக் காரணமாதலும் காண்க.

செற்று, செற - முதனிலை. வான் தோய் மலை - மேகம்படியப்பெற்ற மலை யெனினுமாம். கெடாஅத என்பதனைப் பிறவினையாகக்கொண்டு, (தன்னை விரும்பிச்செய்தவர்களைத் தான்) கெடுக்காத நன்மையையுடைய அற மென்னவுமாம்.

அளபெடைகள் மூன்றும், செய்யுளிசை நிறைக்க வந்தவை. அளபெ டைகள் அடுத்துவந்தது, அளபுத்தொடையாம். (௧௦)

# உ - ஆம் அதிகாரம்.—இளமைநிலையாமை.

அஃதாவது - இளமைப்பருவத்தினது நிலையில்லாமையை உணர்த்துவது. இங்கே, இளமை யென்றது - யௌவனம்; அது - பதினாறுபிராயத்துக்குமேல் முப்பத்திரண்டு பிராயத்துக்குள் சிற்றின்பவிஷயங்களில் மயங்குகின்ற காலப்பருவம். புல்லறிவுடையார் பெரும்பான்மையும் முறையே பற்றுச்செய்வது சிற்றின்பத்திற்கு ஏதுவாகிய செல்வத்தினிடத்தும், அதனை அனுபவித்தற்கு உரிய இளமையினிடத்தும், அப்பருவத்திற்கு இடமாகிய உடம்பினிடத்துமே யாதலால், அம்முறையே, இந்த இளமைநிலையாமை - செல்வநிலையாமையின்பின் வைக்கப்பட்டது. திருவள்ளுவனாரும்நிலையாமை யென்னும் அதிகாரத்துள் இம்முறை தோன்றக் கூறியவாறும் காண்க. இளமை - பண்புப்பெயர்.

கக. நரைவரு மென்றெண்ணி நல்லறி வாளர்
குழவி யிடத்தே துறந்தார்—புரைதீரா
மன்னா விளமை மகிழ்ந்தாரே கோலூன்றி
யின்னாங் கெழுந்திருப் பார்.

(இ - ள்.) நரை வரும் என்று - முதுமைப்பருவம் வருமென்று, எண்ணி - நினைத்து, குழவியிடத்தே - இளமைப்பருவத்திலேயே, துறந்தார் - (பற்றுக்களை) விட்டவர்கள், நல் அறிவாளர் - குற்றமற்ற விவேகமுடையவராவர்; புரை தீரா - (காமவெகுளிமயக்கங்களாகிய) குற்றங்கள் நீங்காத, மன்னா - நிலைபெறாத, இளமை - இளமைப்பருவத்தில், மகிழ்ந்தாரே - (சிற்றின்பத்தை அனுபவித்தலாற்) களித்த நல்லறிவில்லாதவர்களே, கோல் ஊன்றி - (நடத்தற்கு ஆதரவாகத்) தடியை ஊன்றிக்கொண்டு, இன்னாங்கு - துன்பத்துடன், எழுந்திருப்பார் - எழுவார்கள்; (எ - று.)

இளமையில் துறந்தவர்களே பின்பு பேரின்பமனுபவிப்பர், சிற்றின்பத்தை விரும்பித் துறவாதவர்களே பலநாள் துன்பமனுபவிப்பர் என்பதாம்.

நரை - மயிர்வெளுத்தல்; அதற்குக் காரணமான மூப்புக்கு இங்கு ஆகுபெயர். எண்ணி - துறத்தலாலுண்டாகும் பெரும்பயன்களையும், துறவாமையாலுண்டாகும் இடர்களையும் சீர்தூக்கியாலோசித்து என்னவுமாம். இளமைப்பருவத்தே துறத்தற்கு ஏதுவாயினமைபற்றி 'நல்லறிவு' என்றும், அங்ஙனம் அருமையாகப்பெற்ற நல்லறிவைத் தக்கவழியிற் பயன்படுத்துதல் பற்றி 'நல்லறிவாளர்' என்றும் கூறினர். தாமாகவே எழுந்திருக்கமாட்டாமையேயன்றிக் கோலையூன்றிக்கொண்டும் எழுந்திருக்க வருந்துவரென்பது, அவரது வலிமையின்மையை நன்குவிளக்கும். ஏகாரமிரண்டும் - பிரிநிலை. குழ - இளமைப்பொருள் தரும் உரிச்சொல்: இங்கு, இ - பகுதிப்பொருள்விகுதி; "உருளி மாமதி" என்ற சிந்தாமணியிற் போல. தீரா, மன்னா என்ற எதிர்மறைப் பெயரெச்சங்கள் - அடுக்கி 'இளமை' என்னும் பெயரோடு முடிந்தன; "மூவா முதலா வுலகம்" என்ற சிந்தாமணியிற் போல.

இன்னாங்கு - ஒருசொல்; 'பட்டாங்கு' என்பது போல. எழுந்திருப்பார் - ஒருசொல்: இரு - துணைவினை. இனி, எழுந்து இருப்பார் எனப் பதம்பிரித்து, எழுந்து (நிற்கவும்மாட்டாது மீட்டும்) இருப்பர் என்றலும் ஒன்று.

முதலிரண்டடியில் இனவெதுகை காண்க; அடுத்தசெய்யுளிலும் இது.

கஉ. நட்புநா ரற்றன நல்லாரு மஃகினா
ரற்புத் தளையு மவிழ்ந்தன—வுட்காணாய்
வாழ்தலி னூதிய மென்னுண்டாம் வந்ததே
யாழ்கலத் தன்ன கலுழ்.

(இ - ள்.) நட்பு - சினேகங்களாகிய, நார் - பாசங்கள், அற்றன - (உனது நண்பர்க்கு உன்னிடத்து) அற்றுப்போயின; நல்லாரும் - (இளமையில் உன்பக்கல் அன்புகொண்ட) மாதர்களும், அஃகினார் - அன்புகுறைந்தார்கள்; அன்பு தளையும் - அன்புகளாகிய கட்டுக்களும், அவிழ்ந்தன - (உன்சுற்றத்தார்க்கு உன்னிடத்தில்) தளர்ந்துபோயின; உள் காணாய் - மனத்தில் ஊன்றி ஆலோசித்துப்பார்; வாழ்தலின் - (இளமையைப் பொருளென மதித்து மகிழ்ந்து) வாழ்ந்ததனால், ஊதியம் என் உண்டாம் - என்ன பயன் உண்டாயிற்று? ஆழ் கலத்து அன்ன - (கடலில்) மூழ்குகின்ற மரக்கலத்தி லுள்ளவர்க்கு வந்தது போன்ற, கலுழ் - துன்பம், வந்ததே - (இப்பொழுது) வந்துவிட்டதே! (எ - று.)

இச்செய்யுள் - இளமைப்பருவத்திற் சிற்றின்பத்தையே விரும்பி அனுபவித்து வலிமைகுன்றி விரைவிலே முதுமையடைந்த ஒருவனை நோக்கி, அவ்விளமையை மகிழ்ந்ததனா லுண்டான தீமைகளை எடுத்துச்சொன்னதாகச் செய்யப்பட்டதென்க. முன்னிரண்டடியில் உருவகவணியும், ஈற்றடியில் உவமையணியுங் காண்க.

நண்பரும் உறவினரும் பலராதல்பற்றி, நட்பும் அற்புத்தளையும் பலவாயின. நட்பு, தளை என்பன - பால்பகாஅஃறிணைப்பெய ராதலால், 'அற்றன', 'அவிழ்ந்தன' என்னும்பன்மைவினையைக்கொண்டன. நட்பு-தொழிற்பெயர்; நள் - பகுதி, பு - விகுதி. உம்மைகள் - எச்சப்பொருளன. காணாய் என்ற ஏவலொருமைமுற்றில், ஆய்-விகுதி. ஏகாரம்-இரக்கம். அற்புத்தளை-பாசபந்த மெனப்படும். வாழ்தலின், இன் - ஐந்தனுருபு: ஏதுப்பொருளது. என் - எவன் என்ற வினாப்பெயரின் விகாரம்; இது, அஃறிணையிருபாற்கும் பொது. 'ஆழ்கலத்தன்ன கலி' என்று பாடமோதுவாரும் உளர்; கலி-துன்பம். "நல்லா, ளுடன்படிற் றானே பெருகும்" என்றபடி நல்லாள் என்று இலக்குமிக்குப் பெயராதலால், நல்லார் என்பது-பெரும்பாலும் மகளிரை உணர்த்தும். அற்புத்தளை = அன்பு + தளை; அல்வழியில் மென்றொடர் தன்னினவன்றொடராயிற்று: [நன் - உயிர் - ௬௪.] கலம் - அதிலுள்ளவர்க்கு இடவாகுபெயர். ஆழ்கலம் - வினைத்தொகை. கலுழ்-கலுழ்ச்சி: முதனிலைத் தொழிற்பெயர்: கலக்கம், புலம்பல். ஆம் - அசை.

"காற்றத் திடைப்பட்ட கலவர் மனம்போல, ஆற்றத் துளங்காநிற்ப ஞழிவலவா" எனப் பெரியதிருமொழியிலும், "பண்ணார் களிறேபோற் பாயோங் குயர்நாவாய், கண்ணார் கடன்மண்டிக் காற்றிற் கவிழுங்கால், மண்ணார் மணிப்பூணேய் மக்களுறுந் துன்பம், நண்ணு நரகத்தின் நான்கா மடியன்றே" எனச் சிந்தாமணியிலும், பிறநூல்களிலும், கலங்கவிழ்ந்தமக்கள்படுந் துன்பமே மிக்கபெருந்துன்பத்துக்கு எடுத்துக்காட்டப்படுதல் காண்க. (உ)

கரு. சொற்றளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப்
பற்கழன்று பண்டம் பழிகாறு—மிற்செறிந்து
காம நெறிபடருங் கண்ணினார்க் கில்லையே
யேம நெறிபடரு மாறு.

(இ - ள்.) சொல் தளர்ந்து-சொற்கள் தளர்ச்சியடையப்பெற்று, கோல் ஊன்றி - தடியை ஊன்றிக்கொண்டு, சோர்ந்த நடையினர் ஆய் - தளர்ந்த நடையையுடையவர்களாய், பல் கழன்று-பற்கள் விழுந்துபோய், பண்டம் - இவ்வுடலாகிய பொருள், பழி காறும் - (கண்டவர்யாவராலும்) பழிக்கப்படுமளவும் [மூப்பு முதிருமளவும்], இல் செறிந்து - இல்வாழ்க்கையிலேயே பொருந்தி, காமம் நெறி - ஆசையின்வழியிலே, படரும் - செல்லுகின்ற, கண்ணினார்க்கு - நோக்கத்தையுடையவர்கட்கு,—ஏமம் நெறி - பேரின்பத்தைத்தருகின்ற முத்திமார்க்கத்தில், படரும் ஆறு - செல்லும் விதம், இல்லையே - உண்டாகாதே; (எ - று.)

வாழ்நாளுள்ளமட்டும் சிற்றின்பத்தையே அனுபவித்துக்கொண்டு துறவாதவர் நற்கதிபெறுவது அரிய தென்பது கருத்து. ஏமம் நெறி - தமது உயிர்க்கு அரணாகிய நல்நெறி ; வினைகளைப்போக்கிக் கூற்றத்தினின்று தப்புவித்து முத்திபெறுவிக்குந் துறவொழுக்கம்.

இல் - இல்லறவாழ்க்கைக்கு ஆகுபெயர். பண்டமென்னுஞ் சொல், உடம்பின் இழிவு தோன்ற நின்றது. பழிகாறும் - பழிக்கப்படுமளவும்: செயப்பாட்டுவினைப்பொருளில்வந்த செய்வினை. காறு - எல்லைகுறிப்பதோர் இடைச்சொல். தளர்ந்து, கழன்று என்னுஞ் சினைவினைகள்-முதலின்மேல் நின்றன. ஏகாரம் - தேற்றத்தோடு இரக்கம். (ரு)

கசு. தாழாத் தளராத் தலைநடுங்காத் தண்டூன்றா
வீழா விறக்கு மிவண்மாட்டுங்—காழிலா
மம்மர்கொண் மாந்தர்க் கணங்காகுந் தன்கைக்கோ
லம்மனைக்கோ லாகிய ஞான்று.

(இ - ள்.) தாழா - (உடம்பு) கூனடைந்தும், தளரா-மெலிந்தும், தலை நடுங்கா - தலைநடுங்கியும், தண்டு ஊன்றா - தடியை ஊன்றியும், வீழா - கீழே விழுந்தும், இறக்கும் - மரணவேதனைப்படுகின்ற, இவள்மாட்டும் - இவளிடத்தும், காழ் இலா மம்மர் கொள் - மனவுறுதியில்லாமற் காமமயக்கத்தைக் கொண்ட, மாந்தர்க்கு - மனிதர்கட்கு,—(இவள்),—தன் கை கோல் - (இப்பொழுது) தனது கையில் (ஊன்றுதற்குப் பிடிக்கப்பட்ட)

கொம்பு, அம்மனை கோல் ஆகிய ஞான்று - தன்தாய்க்கு ஊன்றுகோலா யிருந்தகாலத்தில் [தான் இளமைப்பருவமுடையளாயிருந்தபொழுது], அணங்கு ஆகும் - மோகினியென்னுந் தெய்வப்பெண்ணாயிருந்திருப்பள்; (எ-று.)

இச்செய்யுள் - பெண்களின் இளமையைக் கண்டு விரும்புவோர்க்கு இறந்துபடும்அமயத்தையுடையமுதியளொருத்தியைச்சுட்டிக்காட்டி 'இவள், இளமைப்பருவத்திலே காமுகர்க்கு மேன்மேல் ஆசையை மூட்டத்தக்க கட்டழகுடையளா யிருந்தவள்: இப்பொழுது இவ்வாறாயினாள்' என்று இளமைநிலையாமையை உணர்த்துவதாகச் செய்யப்பட்டதென அறிக.

தண்டு - தண்டமென்னும் வடமொழியின் விகாரம். மாந்தர்-பன்மைப் பெயர். 'மாந்தர்' என்ற சொல்லின் ஆற்றலால், மந்தபுத்தியுடையா ரென்பது தோன்றும். 'அணங்கு - காமநெறியான் உயிர்கொள்ளுந் தெய்வமகள்' என்பர் பரிமேலழகர்; இச்சொல்லுக்கு - தேவமாது என்றும், திருமகள் என்றும் பொருளுண்டு. 'அணங்குஆகும்' என்பதற்கு - இவள் வருத்தஞ் செய்தவளாவள் என்றலு மொன்று. விறக்கும் எனப் பிரித்து, வெருவும் என்று பொருளுரைப்பாரு முளர்; "விறப்பே வெரூஉப் பொருட்டு மாகும்" என்பது தொல்காப்பிய வுரிசசொல்லியற் சூத்திர மாதலால். இனி, '(இவள்), அம்மனைக்கோல் தன்கைக்கோலாகிய காலத்தில் [முதுமையடைந்தபொழுது] தாழ்ந்து தளர்ந்து தலைநடுங்கித் தண்டூன்றி வீழ்ந்து இறப்பள்; இவளிடத்தும், நெஞ்சுறுதியில்லாத பேதைமைகொண்ட மனிதர்க்கு ஆசை உண்டாகின்றது; (இது என்ன உலகியற்கை!)' என்று இகழ்ந்ததாகப் பொருள்கூறுதலும் அமையும்.

தாழா, தளரா, நடுங்கா, ஊன்றா, வீழா - உடன்பாட்டெச்சங்கள்; 'ஆ' என்ற வினையெச்சவிகுதியே இறந்தகாலங்காட்டிற்று. உம் - இழிவுசிறப்பு. இலா - ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம். "சிலவிகாரமா முயர்திணை" என்பதனால், 'அம்மனைகோல்'என உயர்திணைப்பெயரின்முன் வலிமிக்கது.

'அம்மனைக்கோல் தன்கைக்கோலாகிய ஞான்று' என்றது - பிறிதினவிற்சியணி.

முதலடி - முற்றுமோனை. (௪)

**௧௫.** எனக்குத்தா யாகியா ளென்னையீங் கிட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றா—ளனக்குத்தா
யாகி யவளு மதுவானாற் றாய்தாய்க்கொண்
டேகு மளித்திவ் வுலகு.

(இ - ள்.) எனக்கு தாய் ஆகியாள்-எனக்குத் தாயாயிருந்தவள், என்னை ஈங்கு இட்டு - என்னை இவ்விடத்தில் விட்டிட்டு, தனக்கு தாய் நாடியே - தனக்கு ஒருதாயைத் தேடிக்கொண்டே, சென்றாள் - இறந்துபோனாள்; தனக்கு தாய் ஆகியவளும் - அவளுக்குத் தாயாயிருந்தவளும், அது ஆனால்- அவ்வாறேபோனா ளாதலால்,—இ உலகு - இவ்வுலகத்துப் பிராணிவர்க்க மெல்லாம், தாய் தாய்க்கொண்டு - தாயைத் தேடிக்கொண்டே, ஏகும் - செல்லுகின்ற, அளித்து - எளிமையை யுடையது; (எ - று.)

இட்டு - பெற்றுவைத்து. தனக்குத் தாய்நாடிச் சென்று ளொன்றது - இறந்து மற்றொருத்திவயிற்றிற்புகுந்திட்டா ளென்றபடி. உலகத்திற் பிறந்த மனிதர்கள் யாவரும் இளமைகழிந்து முதுமையடைந்து இறக்குந்தன்மை யையுடையவ ரென்று, இளமைநிலையாமையை ஒருதிருஷ்டாந்தங்கொண்டு விளக்கியபடி.

தாய்க்கொண்டு என்பதில், தாய் - தாவு என்பத னடியாப் பிறந்த இறந்தகாலவினையெச்சம். அளித்து-ஒன்றன்பாற் குறிப்புமுற்று; து-விகுதி.

இப்பாட்டு, யாக்கைநிலையாமைக்கு இனிதுபொருந்துவ தாயினும், அதிகாரச்செய்யுள்தொகை நிரப்புதற்கு இங்கு வைக்கப்பட்டது; இளமை யிலும் மரணம்நேரு மென்ற சம்பந்தம்பற்றியுமாம். (௯)

கக. வெறியயர் வெங்களத்து வேன்மகன் பாணி
முறியார் நறுங்கண்ணி முன்னர்த் தயங்க
மறிகுள ருண்டன்ன மன்று மகிழ்ச்சி
யறிவுடை யாளர்க ணில்.

(இ - ள்.) வெறி அயர் - ஆவேசங்கொண்டு ஆடுகின்ற, வெம் - கொடிய, களத்து - பலியிடுமிடத்திலே, வேல் மகன் - வேலையுடைய அவ்வா வேசமாடுபவனது, பாணி - கையிலுள்ள, முறி ஆர் நறுங் கண்ணி-தளிர்கள் இடையிடையே பொருந்திய வாசனைவீசுகின்ற பூமாலை, முன்னர் - (தனக்கு) எதிரில், தயங்க - விளங்க, மறி -(அங்கே பலியிடுதற்குக் கொண்டுவந்து நிறுத்தப்பட்ட) ஆடானது, குளகு உண்டன்ன - (அம்மாலையிலுள்ள தளிரை) இரையாக எண்ணி உண்டு அடைகின்ற மகிழ்ச்சி போன்ற, மன்று மகிழ்ச்சி - நிலையில்லாத மகிழ்ச்சி, அறிவுடையாளர்கண் இல் - உண்மையறி வுடையவரிடத்தில் உண்டாகாது [அவர் இளமையிலேதுறப்பர் என்றபடி]. உவமையணி.

அதிவிரைவில் அழியுந்தன்மையதான இளமையைக் கண்டு மகிழ்வது, உடனே தன்னை வெட்டுதற்பொருட்டு வாள்பிடித்துநிற்கிற வேலனது கை யிலுள்ள மாலையிற் பொருந்திய தளிரைத் தின்று பேதைமையுடைய ஆடு மகிழ்வதற்குச் சமான மென்றபடி; சிறிதுபொழுதில் துன்பமாய் முடியு மென்பதாம்.

குறிஞ்சிநிலமாக்கள் அந்நிலத்தெய்வமான முருகக்கடவுளுக்குப் பிரா ர்த்தனைசெலுத்துநிமித்தமாக மறியறுத்துப் பலியிட்டாடுதல் மரபு. முருகக் கடவுளது வேலைத் தனக்கு அடையாளமாக ஏந்திக்கொண்டு நிற்றலால், 'வேல்மகன்' என்றார்; வேலனென்றும்,வெறியாட்டாளனென்றும்பெயர்க ளுண்டு. முறியார் நறுங்கண்ணி—"புலராப்பச்சிலை யிடையிடுபுதொடுத்த, மலரா மாலை" என்றார் பிறரும். முன்னர் - இங்கே, இடமுன். குளகு - இலைமேயும்விலங்கின் உணவு;"இலைநுகர்விலங்குணுவே குளகெண வியம்ப லாகும்" என்பது நிகண்டு. உண்டன்ன - உண்டாலன்ன, உண்டதன்ன. களம், பாணி - வடசொற்கள். (க)

கஎ. பனிபடு சோலைப் பயன்மர மெல்லாங்
கனியுதிர்ந்து வீழ்ந்தற் றிளமை—நனிபெரிதும்
வேற்கண்ண ளென்றிவளை வெஃகன்மின் மற்றிவளுங்
கோற்கண்ண ளாகுங் குனிந்து.

(இ - ள்.) இளமை - இளமைப்பருவமானது,—பனி படு சோலை-குளிர்ச்சிபொருந்திய சோலையிலுள்ள, பயன் மரம் எல்லாம் - பலன்படுகிற மரங்களெல்லாம், கனி உதிர்ந்து வீழ்ந்தற்று - பழங்களுதிர்ந்து விழப்பெற்றாற்போன்ற நிலையில்லாத தன்மையை யுடையது; (ஆதலால்), வேல் கண்ணள் என்று - (இப்பொழுது) வேல்போற் கூர்மையான கண்களையுடையவளென்று எண்ணி, இவளை - இம்மங்கையை, நனி பெரிதும் - மிகவும்அதிகமாக, வெஃகன்மின் - விரும்பாதீர்கள்; இவளும்—, மற்று - பின்பு, குனிந்து - உடம்பு கூனடைந்து, கோல் கண்ணள் ஆகும் - (வழிதெரிந்து நடப்பதற்கு) ஊன்றுகோலையே கண்ணாக உடையவளாவள்; (எ - று.)

யாவரும் விரும்பும்படி சோலையிற் பழங்களோடுகூடியிருந்த மரம் அப்பழங்களுதிர்ந்தபின்பு விரும்பத்தகாததாதல்போல, யாவரும் விரும்பத்தக்க இளமை அழிந்தபின்பு உடம்பு விரும்பத்தகாதது மென்றபடி.

உவமையணி.

இச்செய்யுள் - மகளிரது இளமையழகைக் கண்டு பேரன்புகொண்டு நிற்பவரை நோக்கிச் சொல்லிய தென அறிக.

நனி பெரிதும் - ஒருபொருட்பன்மொழி. 'வேற்கண்ணள்' என, எல்லா வுறுப்புக்களுள்ளுஞ் சிறந்த கண்களின் அழகை எடுத்துக்கூறியது, மற்றை அவயவங்களின் அழகுக்கும் உபலக்ஷணம். வெஃகன்மின் - எதிர்மறை யேவற்பன்மை. 'கோற்கண்ணள் ஆகும்' என்றது, முதுமையிற் கண்கெட்டு ஊன்றுகோலையே ஆதாரமாகக்கொண்டு தட்டித்தட்டி வழிதெரிந்துநடப்பளென்றபடி. "கோற்க ணெறிகாட்டக் கொல்கூற் றுழையதா" என்றார் வளையாபதியிலும். இவளும், உம் - உயர்வுசிறப்பு. மற்று-வினைமாற்றுமாம்.

மிக்கமுதுமையடைவளென்ற பொருளில் 'கோற்கண்ணளாகும்' என்றது, பிறிதினவிற்சியணி. (எ)

கஅ. பருவ மெனைத்துள பல்லின்பா லேனை
யிருசிகையு முண்டீரோ வென்று—வரிசையா
லுண்ணாட்டங் கொள்ளப் படுதலால் யாக்கைக்கோ
ளெண்ணா ரறிவுடை யார்.

(இ - ள்.) 'பருவம் - பிராயம், எனைத்து உள - எவ்வளவு ஆகியுள்ளன? பல்லின் பால் - பல்லினுடைய குணங்கள், ஏனை - எத்தன்மையன? இரு சிகையும் - இரண்டுவேளைக் கவளங்களையும், உண்டீரோ - புசித்துவருகின்றீர்களா?' என்று—, வரிசையால் - முறையாக, உள் நாட்டம் கொள்ளப்படுதலால் - மனத்தில் ஆராய்ந்து (பலரும்) விசாரிக்கக் கூடியதாயிருப்பத

ுல், அறிவு உடையார்-நல்லறிவுடைய பெரியோர், யாக்கை கோள்-உடம்பின் குணமாகிய இளமையை, எண்ணார் - (ஒருபொருளாக)மதியார்;(எ-று.)

பல்லின் குணங்கள் - மென்றுதின்னுதலும், பேசுதற்கு உதவுதலும். எனைத்து=எத்தனைத்து: மரூஉ. வினாவடியாப் பிறந்த எவனென்கிற அஃறிணைக் குறிப்புமுற்று,இடைகுறைந்து முதல்நீண்டு ஐகாரச்சாரியைபெற்று 'ஏனை' எனநின்றது: எனைப என்பதன் விகார மெனினுமாம். 'இருசிகையு முண்டீரோ' என்பதற்கு - இரண்டுகவளமாகிலும் புசித்தீர்களோ? என்று உரைப்பாருமுளர்;உங்கள் ஜீர்ணசக்தி ஒருகவளவுணவையே கொள்ளுமோ? என்பது கருத்து. ஓ - வினா. நாட்டம் - தொழிற்பெயர்; நாடு - பகுதி, அம் - விகுதி, டகரவொற்று - விரித்தல்விகாரம். (அ)

கக. மற்றறிவா நல்வினை யாமிளைய மென்னாது
கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ்செய்ம்மின்
முற்றி யிருந்த கனியொழியத் தீவளியா
னற்கா யுதிர்தலு முண்டு.

(இ - ள்.) 'நல் வினை - தருமகாரியத்தை, மற்று அறிவாம் - பின்னால் அறிந்துசெய்வோம்: யாம் இளையம் - (இப்பொழுது) யாம் இளம்பிராயமுடையோமன்றோ,' என்னாது-என்று எண்ணாமல், கைத்து உண்டாம் போழ்தே - கையிற்பொருள்கிடைக்கும்பொழுதே, கரவாது-ஒளித்துவைக்காமல் [லோபஞ்செய்யாமல்], அறம் செய்ம்மின் - (ஈதல்முதலிய) தருமங்களைச் செய்யுங்கள்; (ஏனென்றால்),—முற்றி இருந்த கனி ஒழிய - முதிர்ந்துள்ள பழங்கள்மாத்திரமே யல்லாமல், தீ வளியால் - கடுங்காற்றினால், நல் காய் - நல்ல காய்கள், உதிர்தலும் - உதிர்ந்திடுதலும், உண்டு - உள்ளது; (எ - று.)

இளமையை நம்பவேண்டா வென்றபடி.

மற்றறிவாம் நல்வினை யென்பதில் - விரைந்து அறிவாம் என்கிற வினையை ஒழித்து,விரையாமல் அறிவாம் என்கிற வினையைத் தருதலால், மற்று-வினைமாற்றுப்பொருளது. 'விரையாமல்அறிவாம்' என்றது, பின்னர் முதுமையில் ஆராய்ந்துசெய்வோ மென்றவாறும். நல்வினையை அறிதற்குப் பயன் அதனைச்செய்தலே யாதலால், 'அறிவாம்' என்பதற்கு - அறிந்துசெய்வோ மென்ற பொருளுரைக்கப்பட்டது. போழ்தே, ஏ - தேற்றத்தோடு விரைவு. இளமைநிலையாமையோடு செல்வநிலையாமையையும் வற்புறுத்துதற்கு, 'கைத்துண்டாம்போழ்தே' எனப்பட்டது. இளையம் - தன்மைப்பன்மைக் குறிப்பு முற்று; கைத்து - கையிடத்ததான பொருள்; ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்.

பருவம் முதிர்ந்த கிழவர்கள் மாத்திரமேயன்றி உடம்புவலிய இளையவர்களும் இரக்கமில்லாத யமனால் இறத்தலு முண்டு என்னும் பொருள் தோன்ற நின்றமையின், பின்னிரண்டடி - 'பிறிதுமொழிதல்' என்னும் அலங்காரம்; வடநூலார் 'அப்ரஸ்துதப்ரசம்ஸா' என்பர்: இது - முன்னிரண்டடியின் பொருளைச் சாதித்தலால், செய்யுட்குறியணிக்கு அங்கமாம்.

இச்செய்யுள்-ஒருவிகற்பஇன்னிசைவெண்பா; இனவெதுகை கொண்டது.()

௨0. ஆட்பார்த் துழலு மருளில்கூற் றுண்மையாற்
றோட்கோப்புக் காலத்தாற் கொண்டுய்ம்மின்—பீட்பிதுக்கிப்
பிள்ளையைத் தாயலறக் கோடலான் மற்றதன்
கள்ளங் கடைப்பிடித்த னன்று.

(இ - ள்.) ஆள் பார்த்து - (ஆயுள்முடிந்த) ஆள்களைத் தவறாது பார்த்துக்கொண்டு, உழலும் - (உலகமெங்குந் தடையில்லாமல்) திரிகின்ற,அருள் இல் கூற்று - கருணையில்லாத யமன், உண்மையால்-இருத்தலினால், தோள் கோப்பு-நல்வினையாகிய கட்டுச்சோற்றுமூட்டையை,காலத்தான் - (தேடிக் கொள்ளுதற்குஉரிய) காலத்திலேயே [இளமையில்தானே], கொண்டு - தேடிக் கைக்கொண்டு, உய்ம்மின் - ஈடேறுங்கள்; பீள் பிதுக்கி - முதிராத கருப்பத்தை வெளிப்படுத்தி, பிள்ளையை - குழந்தையை, தாய் அலற - பெற்றவள் அழும்படி, கோடலான் - கொண்டுபோவதனால், அதன் - அந்த யமனது, கள்ளம் - வஞ்சனையை, கடைப்பிடித்தல் - மறவாமல் உறுதியாக அறிந்து தேர்தல், நன்று - (மிகவும்) நல்லது; (எ - று.)—மற்று - அசை.

தோட்கோப்பு - தோளிற் கோக்கப்படுவது என, வழிப்பிரயாணத்துக்குக் கொண்டுபோவதாகிய கட்டுச்சோற்று மூட்டைக்குத் தொழிலாகுபெயராகிய காரணக்குறி; அது - இங்கே, மறுமைவழிக்கு இன்றியமையாததான நல்வினையை உவமவாகுபெயராய் உணர்த்திற்று. ஆகவே, இருமடியாகு பெயர். "இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்" என மேற் புல்லறிவாண்மை யென்னும் அதிகாரத்தில் வருவதுங் காண்க. "வேற்றுவரில்லா நுமரூர்க்கே செல்லினும வெகுண்டீர்போல, வாற்றுணுக் கொள்ளா தடி புறத்துவைப்பீரே யல்லிர்போலுங், கூற்றமகொண்டோடத் தமியே கொடு நெறிக்கட் செல்லும்போழ்தி,னாற்றுணுக்கொள்ளீ ரழகலாதறிவொன்றுமிலிரேபோலும்" என்ற சீவகசிந்தாமணிச்செய்யுள், இங்கு நோக்கத்தக்கது.

தோட்கோப்பு, பொதிசோறு, கட்டுசோறு, ஆற்றுணா என்பன - ஒருபொருட் சொற்கள். தாயலறுதல், பருவம் நிரம்புதற்கு முன்னமே கருவுயிர்க்கின்ற வேதனையினாலும் பிள்ளையையிழத்தலாலும் உண்டாகியபெருந் துன்பத்தால். 'ஆட்பார்த்து உழலும்' எனவே, அவனது வருகை சிறிதுந் தவறாதென்றபடி. 'பீட்பிதுக்கிப் பிள்ளையைத் தாயலறக்கோடலால்' என்றது, அவனது அருளில்லாமைக்கு ஒருதிருஷ்டாந்தங் காட்டியபடி.

'காலத்தான்' என்பதில், ஆனுருபு - கருவி கருத்தாப்பொருள்களாகாமல், 'காலத்தில்' என இடப்பொருளாய் நிற்றலால், உருபுமயக்கம்; "காலத்தினாற் செய்த நன்றி" என்ற திருக்குறளிற் போல. கோடல் - தொழிற்பெயர்; கொள் - பகுதி. தல் - விகுதி, பகுதி முதல் நீண்டது - விகாரம், தகரம் டகரமான விடத்து ளகரம்கெட்டது - சந்தி. (௨0)

## ௩ - ஆம் அதிகாரம்.—யாக்கைநிலையாமை.

அஃதாவது - உடம்பினது நிலையில்லாமையை உணர்த்துவது. அதிகார முறைமை, முன்கூறியதனால் விளங்கும். ஆதேயமாகிய இளமையினது நிலையின்மையின்பின் ஆதாரமாகிய யாக்கையினது நிலையின்மையை நிறுத்தினரென்க; (ஆதேயம் - இடத்துநிகழ்பொருள், ஆதாரம் - இடம்.) யாக்கை - (எலும்பு தசை தோல் முதலிய எழுவகைத்தாதுக்களால்) யாக்கப்பட்டது; யாத்தல் - கட்டுதல். தொழிலாகுபெய ரென்றால், கை - விகுதி; ஐ - செயப்படுபொருள்விகுதி யென்றால், கு - சாரியை.

௨௧. மலைமிசைத் தோன்று மதியம்போல் யானைத்
தலைமிசைக் கொண்ட குடையர்—நிலமிசைத்
துஞ்சினா ரென்றெடுத்துத் தூற்றப்பட் டாரல்லா
லெஞ்சினா ரிவ்வுலகத் தில்.

(இ - ள்.) மலைமிசை - மலையின்மேல், தோன்றும் - காணப்படுகின்ற, மதியம் போல் - பூர்ணசந்திரன்போல, யானை தலைமிசை - பட்டத்துயானையினது தலையின்மேல், கொண்ட - கொள்ளப்பட்ட, குடையர் - வெண்கொற்றக்குடையையுடையராய்ச் சென்ற அரசர்களும், நிலம்மிசை - இப்பூமியிலே, துஞ்சினார் என்று - இறந்தார்களென்று, எடுத்து - (பிறர் அறிய) எடுத்துசசொல்லி, தூற்றப்பட்டார் அல்லால்-(பலராலும்) இகழப்பட்டார்களே யல்லாமல், எஞ்சினார் - அவ்விறத்தலினின்று ஒழிந்து நிலையாக நின்றவர்கள், இ உலகத்து இல்-இந்த உலகத்தில் (எவரும்) இல்லை; (எ-று.)

மலை - மதநீரருவிசொரிகிற வலிய பெரிய யானைக்கும், மதி - குளிர்ச்சி செய்து வட்டமாக விளங்குகிற ஒற்றைவெண்கொற்றக்குடைக்கும் உவமை. மதியம், அம் - சாரியை. துஞ்சுதல் - தூங்குதல்; இறத்தலைத் துஞ்சுதலென்பது - மங்கலவழக்கு: மீளவும் எழுந்திராத பெருந்தூக்கமென்க. தம் உடம்பில் நோய்முதலியன நேராதபடி தேகசௌக்கியம் சிறிதும் குறையாமற் பாதுகாத்துக்கொள்ளவல்ல அரசர்களும் இறப்ப ரென்று, மற்றையோரிறத்தலைக் கூறாமலே பெறவைத்தார். யாக்கை அழியும் இயல்பினதாதலால், அது உள்ளபொழுதே அறஞ்செய்யவேண்டு மென்றதாயிற்று.

முதலிரண்டடி - உவமையணி.

எஞ்சுதல் - சேடித்தல். இல் - இல்லை வேறு உண்டு என்பனபோல ஐம்பான்மூவிடத்துக்கும் பொதுவாகிய குறிப்பு வினைமுற்றுப்பகாப்பதம்.

"கொலையானைமே லோர்குளிர்வெண்குடைக்கீழ்ப், பலயானைமன்னர் பலர்போற்றவந்தான், மலையாகம்போழாக மற்றிவனோ சாய்ந்தான், நிலையாமை சாலநிலைபெற்றதன்றே" என்றார் சூளாமணியிலும். (௧)

௨௨. வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம்
வீழ்நாள் படாஅ தெழுதலால்—வாழ்நா
ளுலவாமு னொப்புர வாற்றுமின் யாரு
நிலவார் நிலமிசை மேல்.

(இ - ள்.) வாழ்நாட்கு - ஆயுள்நாளுக்கு, அலகு ஆ(க) - (ஓர்) அளவாக, வயங்கு ஒளி மண்டிலம் - விளங்குகின்ற கிரணங்களையுடைய சூரியமண்டலம், வீழ் நாள் படாது - உதித்தலில்லாத நாள் உண்டாகாதபடி, எழுதலால் - (நாள்தோறும்) உதயஞ்செய்து வருதலால்,—வாழ்நாள் - அவ்வாயுள் நாள், உலவா முன் - கழிவதற்குமுன்னமே, ஒப்புரவு - உபகாரத்தை, ஆற்றுமின் - (பிறர்க்குச்) செய்யுங்கள்; யாரும் - எவரும், நிலம்மிசை - பூமியில், மேல்-(அவ்வாழ்நாளெல்லையைக்)கடந்து, நிலவார் - வாழமாட்டார்;(எ-று.)

ஒருதயந் தொடங்கிப் பின்வருமுதயமளவிற் கழிந்த காலத்தை ஒரு நாள் என்றும், அப்படிப்பட்டநாள் முப்பது கொண்டதை ஒருமாதமென்றும், மாதம் பன்னிரண்டு கொண்டதை வருடமென்றும் இவ்வாறு எண்ணி நாள் கணக்கிடப்படுதலால், 'வாழ்நாட் கலகா வயங்கொளி மண்டிலம் வீழ் நாள் படாதெழுதலால்' என்றார்: கீழ் "தோற்றஞ்சால் ஞாயிறு நாழியா" என்றதுங் காண்க. படாஅது - செய்யுளோசை நிறைக்கவந்த உயிரளபெடை. மிசை மேல் என்பதை ஒருபொருட்பன்மொழியாகக் கொண்டும் உரைக்கலாம். ஒப்புரவு - உலகநடையை அறிந்து அதற்கு ஏற்பச் செய்யும் உதவி; ஒப்பு உரவு எனப் பிரிக்க: உலகத்தாரோடு ஒத்துச்செய்யுஞ் சிறந்த தொழி லென்றபடி இனி, 'ஒப்புரவு' - துறவறம் என்றுகொண்டு, 'நிலமிசைமேல் யாரும் நிலவார்' என்பதற்கு - (துறவறஞ் செய்யாதாரொருவரும்) எல்லாவுலகங்கட்கும் மேலாகிய முத்தியுலகத்தில் விளங்குதலில ரென்று உரைப்பாருமுளர்; (திருக்குறளில் "நிலமிசை நீடுவாழ்வார்" என்பதற்குப் பரிமேலழகர் 'எல்லாவுலகிற்கும்மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார்' என்று உரைத்தமை காண்க: நிலமிசைமேல்-மிசைநிலம் மேல் என மாறுக.) ஆ - விகாரம். மண்டிலம் - வடசொல்லின் திரிபு. (உ)

௨௩. மன்றங் கறங்க மணப்பறை யாயின
வன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப்—பின்றை
யொலித்தலு முண்டாமென் றுய்ந்துபோ மாறே
வலிக்குமா மாண்டார் மனம்.

(இ - ள்.) 'மன்றம் கறங்க - சபைமுழுவதும் ஒலிக்கும்படி, மணம் பறை ஆயின - கலியாணத்திற்கு அடிக்கும் வாத்தியமானவைதாமே,அன்று- அந்நாளிலேயே, அவர்க்கு - மணஞ்செய்துகொண்ட அவர்கட்கே, ஆங்கே - அவ்விடத்தில்தானே, பிணம் பறை ஆய் - பிணத்துக்குக்கொட்டும் நெய்தற்பறையாகி, பின்றை - உடனே, ஒலித்தலும்-முழங்குதலும், உண்டு ஆம் - உள்ளதாகக்கூடும்,' என்று - என்று எண்ணி [யாக்கை நிலையாமையைக் கருதி], மாண்டார் மனம்-மாட்சிமைப்பட்ட அறிவுடையாரது நெஞ்சம், உய்ந்து போம் ஆறே - நற்கதிபெற்றுப்போதற்குக் காரணமான (துறவறத்தின்) வழியிலேயே, வலிக்கும்-உறுதியாகத் துணிந்துநிற்கும்; (எ - று.)

ஆம் - அசை. மன்று - இங்கு, கலியாண காரியத்தின் பொருட்டுக் கூடின சுற்றத்தார் நண்பர் முதலியோரது கூட்டம்; அம்-சாரியை. 'வலிக்குமாம் மாண்டார்மனம்' என இவ்வாறு சான்றோர்மேல்வைத்துக் கூறிய

தனால், உடம்பை நிலையுடையதென்று மதித்துக் களிப்பவர் புல்லறிவாள ரென்பது போதரும். மாண்டார் - இறந்தகால வினையாலணையும்பெயர்; மாண்என்னும்பண்படி-பகுதி: (இறந்தவரென்றபொருளில், மாள்-பகுதி.)

௨௪. சென்றே யெறிப வொருகால் சிறுவரை
நின்றே யெறிப பறையினை—நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுண் மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து.

(இ - ள்.) சென்று - (இறந்தவிடத்திற்குப்) போய், பறையினை-பிணப் பறையை, ஒரு கால் - ஒருதரம், எறிப - (முதலிற்) கொட்டுவார்கள்; சிறு வரை நின்று - (பின்பு) சிறிதுநேரம் சும்மாஇருந்து, எறிப - (இரண்டாம் முறை) கொட்டுவார்கள்; முக் காலை கொட்டினுள் - மூன்றாந்தரங் கொட் டும்பொழுதில்,—செத்தாரை - இறந்தவர்களை, சாவார் - இனிஇறக்கநின்ற வர்கள், மூடி - (போர்வையால்) மறைத்து, சுமந்து - எடுத்துக்கொண்டு, தீ கொண்டு - (அந்த உயிர்நீத்தஉடலை எரிப்பதற்கு) நெருப்பையும் எடுத்துக் கொண்டு, எழுவர் - புறப்பட்டுப்போவார்கள்; நன்றே காண் - (இவ்வுலக வியற்கை) நன்றாயிருக்கின்றதே! (எ - று.)

எறிப - பலர்பால்முற்று; ப - விகுதி, எதிர்காலங் காட்டிற்று. உயிர் நீங்கிய உடம்பை 'செத்தார்' என உயர்திணையாக் கூறியது, இழிப்புப்பற்றி வந்த திணைவழுவமைதி. நன்றே - இகழ்ச்சிக்குறிப்பு. காண்-அசை. நன்றே காண் - நன்றாக ஆராய்ந்துபார் என்றுமாம். 'சாவார்' என அவர்களது நிலையில்லாமையையும் விளக்கியவாறு.

பின்னிரண்டடியில் இனவெதுகை காண்க. (௪)

௨௫. கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டு—மணங்கொண்டீண்
டுண்டுண்டுண் டென்னு முணர்வினாற் சாற்றுமே
டொண்டொண்டொ ணென்னும் பறை.

(இ - ள்.) சுற்றத்தார் - உறவினர்கள், கணம் கொண்டு - கூட்டமாகக் கூடி, கல் என்று அலற - கல்லென்ற ஒலி உண்டாக வாய்விட்டு அழாநிற்க, பிணம்-பிணத்தை, கொண்டு - எடுத்துக்கொண்டு, காடு-நன்காட்டில், உய்ப் பார் - சேர்ப்பவர்களை, கண்டும் - (இவ்வுலகத்தில்) பிரத்தியக்ஷமாகப் பார்த் திருந்தும், (யாக்கையின் நிலையாமையைக் கருதாமல்), மணம் கொண்டு - கலியாணஞ் செய்துகொண்டு, ஈண்டு- இவ்வுலகத்தில், உண்டு உண்டு உண்டு என்னும் - (இன்பம்) உள்ளது உள்ளது உள்ளது என்றுகருதி மயங்குகின்ற, உணர்வினான் - சிற்றறிவுடையவனைக் குறித்து, டொண் டொண் டொண் என்னும் - டொண் டொண் டொண் என்று ஒலிக்கிற, பறை-பிணப்பறை, சாற்றும் - (அவ்வுடம்பின் நிலையாமையைத்) தெரிவிக்கும்; (எ - று.)

கணம் - வடசொல். சுற்றத்தார் - உரியசமயங்களில் வந்து சுற்றிநிற்ப வர். கல்லென்று, டொண் டொண் டொண் - ஒலிக்குறிப்பு. உண்டு உண்டு

உண்டு - துணிவுபற்றி மூன்றுமுறை அடுக்கிற்று; [நன் - பொது - ௪௪]. உய்ப்பார்க் கண்டும், உணர்விஞற் சாற்றும் - உயர்திணையில் ஐயுருபுதொக்க வழி இயல்பின்விகாரமாயின. ஏகாரம் - பிரசித்தியைக் காட்டிற்று.

பறை சாற்று மென்றது - தற்குறிப்பேற்றவணி; அப்பறையொலியால் யாக்கை நிலையின்மையை அறியலாம் என்றவாறு. (௫)

௨௬. நார்த்தொடுத் தீர்க்கிலெ னன்றாய்ந் தடக்கிலென்
பார்த்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
றோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டக் கால்.

(இ - ள்.) தோல் பையுள் நின்று - தோலினலமைந்த பைபோன்ற உடம்பில் நின்று, தொழில் அற செய்து ஊட்டும் - தொழில்களை மிகுதியாகச் செய்து உண்பித்துவந்த, கூத்தன் - உயிராகிய கூத்தாடி, புறப்பட்டக்கால் - வெளிப்பட்டுச் சென்றுவிட்டால்,—(அந்த உயிர் நீங்கிய உடம்பை), நார் தொடுத்து ஈர்க்கில் என் - கயிற்றினற்கட்டி இழுத்துக்கொண்டு போனு லென்ன? நன்று ஆய்ந்து அடக்கில் என் - நன்றாகச் சுத்தஞ்செய்து அடக்கஞ்செய்தா லென்ன? பார்த்த உழி பெய்யில் என் - கண்டவிடத்திற் போகட்டுவிட்டா லென்ன? பல்லோர் பழிக்கில் என் - பலரும் கண்டு பழித்தா லென்ன? (எ - று.)

வருகிற உயர்வுதாழ்வுகள் ஒன்றுமில்லை என்றபடி. உயிர் உடம்பினுள் இருக்கும்பொழுது கண்டோர்வியக்கும்படி பலவகைத்தொழில்களைச் செய்வதனுல், அதனை 'கூத்தன்' என்றார்; உருவகம். இருவினைக்குஏற்பப் பலவேறு வடிவெடுத்து இயங்குதல் உயிரினியல்பாதல் காண்க. உழி பார்த்து என மொழிமாற்றி, இடம்பார்த்துஎனப் பொருள்கொள்ளினும் அமையும். 'பார்த்துளிப் பெய்யில்' எனப்பாடங்கொண்டு - பூமியைத் தோண்டிப் புதைத்தா லென்ன? எனப் பொருள்கொள்வாரு முளர்; துளி = தள்ளி. "உறப்புக் கள்தா மூடன்கூடி யொன்றாயிருந்த பெரும்பை" எனக் குண்டலகேசியிற் கூறினற்போல, 'தோற்பை' எனப்பட்டது. உயிரை உயர்திணைசசொல்லாற் குறித்தது, வடமொழிமுறைமைபற்றி. பார்த்துழி - தொகுத்தல்விகாரம். ஈர்க்கில், அடக்கில், பெய்யில், பழிக்கில் - எதிர்காலவினையெச்சங்கள்.

இச்செய்யுளில் முதலிரண்டடிகளில் ஆசிடையிட்டஎதுகையும், மூன்றாமடியில் இனவெதுகையுங் காண்க. (௬)

௨௭. படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றந்
தீர்ப்பேம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை
நேர்ப்பார்யார் நீணிலத்தின் மேல்.

(இ - ள்.) படு மழை - பெய்கின்ற மழைநீரில் உண்டாகின்ற, மொக்குளின் - குமிழிபோல, பல் காலும் - பலமுறையும், தோன்றி - உண்டாகி, கெடும் - (உடனே) அழிந்துபோந் தன்மையுள்ள, ஓர் யாக்கை இது என்று -

ஒருடம்பு இது வென்று, எண்ணி - நினைத்து, தமொற்றம் - (பிறவியில்) தமொறுவதை, யாம் - நாம், தீர்ப்பேம் - போக்கிவிடக்கடவோம், என்று உணரும்-என்றுஅறிகின்ற, திண் அறிவாளரை - உறுதியான அறிவை ஆளுத லுடைய பெரியோர்களை, நேர்ப்பார் - ஒப்பவர், நீள் நிலத்தின்மேல் - பெரிய பூமியில், யார் - யாவருளர்? [எவரு மில்லை]; (எ - று.)

அக் கலங்காத அறிவுடையவரே யாவரினும் மேற்பட்டவ ரென்றபடி. மொக்குள் - தோன்றி விரைவிலழிதற்கு உவமம். 'ஓர்' என்பது - யாக்கை யின் இழிவைப் புலப்படுத்தும். அவரையொப்பவரில்லை யெனவே, அவரினும் மேம்படுபவரில்லையென்பது தானே அமையும். பிறந்து இறந்தழிவது உட லுக்குஇயல்பு என்று கருதவேண்டு மென்பார், 'தோன்றிக்கெடுமிதோர்யாக் கையென்றெண்ணி' என்றார். யார் என்ற வினாவினைக்குறிப்புமுற்று, இன்மை குறித்து நின்றது. தமொற்றந் தீர்ப்பேம் - துறவுமேற்கொண்டு அந்நெறி யாற் பிறப்பற்று முத்திபெறக்கடவோம். தமொற்றம் - தொழிற்பெயர். மொக்குள் - முகுளம் என்னும் வடமொழியின் சிதைவு.

முன்னிரண்டடி - உவமையணி. (எ)

௨அ. யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற
யாக்கையா லாய பயன்கொள்க—யாக்கை
மலையாடு மஞ்சுபோற் றோன்றிமற் றாங்கே
நிலையாது நீத்து விடும்.

(இ - ள்.) யாக்கையை - உடம்பை, யாப்பு உடைத்து ஆ - உறுதியுடை யதாக, பெற்றவர் - (ஊழ்வினையாற்) பெற்றவர்கள், தாம் பெற்ற யாக்கை யால் - தாம்அடைந்த உடம்பினால், ஆய - பெறுவதற்கு உரிய, பயன் - (முத்தி யாகிய) பயனை, கொள்க - (அப்பொழுதே) தேடிக்கொள்ளக்கடவர்; (ஏ னென்றால்),—யாக்கை - உடம்பு, மலை ஆடும் மஞ்சு போல் - மலையின்மேல் அசைந்துகொண்டிருக்கிற மேகம்போல, தோன்றி - முன்னே காணப்பட்டு, ஆங்கே - அக்கண்டபொழுதிலேயே, நிலையாது - நிலைபெறாமல், நீத்து விடும் - உயிர் ஒழிந்துபோகப்பெறும்; (எ - று.)

மலையாடுமஞ்சு - உடம்பிற்குத் தொழிலால் உவமை. யாப்பு - உறுப்புக் குறையின்மை, நோயின்மை, நினைத்த காரியத்தைச் செய்துமுடிக்கவல்ல வலிமை. 'யாக்கையா லாய பயன் கொள்க' எனவே, காலதாமதஞ் செய்ய லாகாது என்றதாம். ஆய, ய் - இறந்தகாலவிடைநிலை. மற்று - வினை மாற்று. ஆங்கே - அவ்வாறே [அம்மஞ்சின் தோற்றம்போலவே] எனினு மாம். 'நீத்துவிடும்' என்றதில், விடு - துணிவுணர்த்தும்.

பின்னிரண்டடி - உவமையணி. (அ)

௨௯. புன்னுனிமே னீர்போ னிலையாமை யென்றெண்ணி
யின்னினியே செய்க வறவினை—யின்னினியே
நின்றா னிருந்தான் கிடந்தான்றன் கேளலறச்
சென்றா னெனப்படுத லால்.

(இ - ள்.) 'இன்னினியே - இப்பொழுதே இப்பொழுதே, நின்றான் - (ஒருவன்) நின்றிருந்தான், இருந்தான் - உட்கார்ந்திருந்தான், கிடந்தான் - படுத்திருந்தான், தன் கேள் அலற-தனது சுற்றத்தார் கதறிப் புலம்பும்படி, சென்றான் - இறந்துபோனான்', எனப்படுதலால் - என்று (உலகத்தவரால்) சொல்லப்படுதலால்,—புல் நுனிமேல் நீர் போல் - புல்லினது நுனியில் நிற்கின்ற பனிநீர்த்துளிபோல, நிலையாமை - (உடம்பு) நிலையில்லாமையை யுடையது, என்று—, எண்ணி - நினைத்து, இன்னினியே - இப்பொழுதே இப்பொழுதே, அறம் வினை - தருமகாரியத்தை, செய்க - (ஒவ்வொருவரும்) செய்யக்கடவர்; (எ - று.)

எடுத்தசரீரம் கணப்பொழுதிலே அழியு மியல்பின தாதலால், அதற் கிடையே தருமத்தை விரைந்துசெய்க வென்பது கருத்து.

முதலடி - உவமையணி.

'உடம்பு' என்பது, அதிகாரத்தால் வருவிக்கப்பட்டது. நிலையாமை யென, பண்பியைப் பண்பாக உபசரித்தார். இன்னினி - சிறிதுங் காலஞ் செல்லாமை குறித்துநின்ற இனி இனி என்னும் இடைச்சொல்லடுக்கின் விகாரம். ஏகாரம் - தேற்றம். கேள் - கேண்மையென்னும் பண்பின் அடி; கேளிர்க்குப் பண்பாகுபெயர். (௯)

௩௰. கேளாதே வந்து கிளைகளா யிற்றோன்றி
வாளாதே போவரான் மாந்தர்கள்—வாளாதே
சேக்கை மரனொழியச் சேணீங்கு புட்போல
யாக்கை தமர்க்கொழிய நீத்து.

(இ - ள்.) மாந்தர்கள் - மனிதர்கள்,—கேளாதே வந்து - ('வரலாமா?' என்று) கேளாமலே வந்து, கிளைகள் ஆய் - உறவினராய், இல் தோன்றி - குடும்பத்திற் பிறந்து, (சிறிதுகாலமிருந்து),—சேக்கை - (தமது) கூடுகள், மரன் ஒழிய - மரங்களில் தங்கும்படி (அவற்றைவிட்டு), வாளாதே - சும்மா [சொல்லாமலே], சேண் நீங்கு - நெடுந்தூரம் ஆகாயத்தில் நீங்கிப் பறந்து போகின்ற, புள் போல - பறவைகள் போல, யாக்கை-உடம்பை, தமர்க்கு- உறவினர்க்கு, ஒழிய நீத்து - (தம்மினின்று) நீங்கும்படி வைத்துவிட்டு, வாளாதே - சொல்லாமலே, போவர் - இறந்துபோய்விடுவார்கள்; (எ-று.)

பறவைகள் தமதுவிருப்பத்தின்படி மரங்களில் வந்து சேர்வதும் விட் டுச்செல்வதும் போல, மனிதர் முற்பிறப்பிற்செய்த ஊழ்வினைவசத்தால் ஒரு குடியிற் பிறத்தலும் இறத்தலு மடைவ ரென்றபடி. "குடம்பை தனித் தொழியப் புட்பறந் தற்றே, உடம்போ டுயிரிடை நட்பு" என்னுந் திருக் குறளோடு இதனை ஒப்பிடுக. கிளை - உவமவாகுபெயர். சேக்கை - தங்கு மிடம். மரன் - போலி. தமர் - தம்மவர். வாளா - இடைச்சொல்; து - சாரி யை: ஏ - இசைநிறை. ஆல் - அசை. உவமையணி. (௩௦)

## ச - ஆம் அதிகாரம்.—அறன்வலியுறுத்தல்.

அஃதாவது - நிலைபெறுதலில்லாத செல்வம் இளமை யாக்கை என்னும் இவைபோ லாகாமல் நிலைபெற்றச் செல்வம் முதலியவற்றால் அவசியஞ் செய்யவேண்டுவதாய் இம்மை மறுமை வீடு என்னும் மூன்றையுந் தருவதான தருமம் மற்றைப் பொருள் இன்பங்களினும் உறுதியுடையதாயிருக்குந் தன்மையை வற்புறுத்திக் கூறுவது. அதிகாரமுறைமையும், இதனுலே விளங்கும். "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமும், அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல" என்றார் புறநானூற்றிலும்.

௩௪. அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்து நோக்கிப்
புகத்தாம் பெறாஅர் புறங்கடை பற்றி
மிகத்தாம் வருந்தி யிருப்பரே மேலைத்
தவத்தாற் றவஞ்செய்யா தார்.

(இ - ள்.) மேலை தவத்தால் - முற்பிறப்பிற்செய்த தவத்தினுல், தவம் செய்யாதார் - (பிற்பிறப்பில்) தவத்தைச் செய்யாதவர்கள்,—(மறுபிறப்பில் வறுமையடைந்து),—அகத்தாரே வாழ்வார் என்று - 'இவ்வீட்டிலுள்ளவர்களே செல்வமுடையவர்கள்' என்று எண்ணி, அண்ணாந்து நோக்கி - (அவ்வீட்டின் உபரிகை முதலிய சிறப்புக்களைத்) தலையெடுத்துப்பார்த்து, (அதனுள்ளே இரத்தற்கு நுழையததொடங்கி), புக தாம் பெறார் - (வாயில்காவலாளர்களால் தடுக்கப்பட்டுத்) தாம் உள்ளே நுழையப்பெறாதவர்களாய், புறங்கடை பற்றி - வாயிற்புறததைப் பிடித்துக்கொண்டு, தாம் மிக வருந்தி இருப்பர் - தாம் மிகவும் வருத்தமுற்றிருப்பார்கள்; (எ - று.)

பிற்பிறப்பில் தவஞ்செய்து முற்பிறப்பில் தவம் இல்லையாயின் கூடாதாதலால், 'மேலைததவத்தால் தவஞ்செய்யாதார்' என்றார்; "தவமுந் தவமுடையார்க் காகும் அவம் அதனை, அஃதிலார் மேற்கொள்வது" என்றார் திருக்குறளிலும்; அக்குறளினுரையிற் பரிமேலழகர் 'பரிசயத்தால் அறிவும் ஆற்றலும் உடையராய் முடிவுபோக்கலின் தவமுடையார்க்கு ஆகுமென்றும், அஃது இல்லாதார்க்கு அவையின்மையின் முடிவுபோகாமையின் அவமாமென்றுங் கூறினார்' என உரைத்ததை இவ்விடத்திற்குங் கொள்க. இனி, மக்கட்பிறப்புக்குஎற்ற தவததோடு கூடிச் செல்வத்துக்குத் தவம்பண்ணாதவரென்றுமாம். அகத்து ஆரே வாழ்வார் எனப் பிரித்து. இவ்வீட்டினுள் வாழ்பவர் யாவரோதாம்? என உரைத்தலும் பொருந்தும். இவ்வாறு பலபிறப்புக்களெடுத்து அலையவேண்டாதபடி செல்வத்தினிடத்தும் உடம்பினிடத்துஞ் செய்யும் பற்றுக்களை ஒழித்து இளமையிலேயே துறந்து அதற்குஉரிய அறங்களில் வழுவாதொழுகிப் பேரின்பம்பெறவேண்டு மென்றவாறு. அண்ணாந்து, அண்ணா - பகுதி. கடைப்புறம் - புறங்கடைஎனப் பின்முன்னாக மாறிவந்தது, இலக்கணப்போலி. 'ஏ' இரண்டில், முன்னது - பிரிநிலை; பின்னது - இரக்கத்தோடு தேற்றம். மேலை, ஐ - சாரியை தாம் - அசை. அளபெடை, செய்யுளிசை நிறைக்கவந்தது. தவம்-தபஸ் என்னும் வடமொழியின் திரிபு.

இப்பாட்டு - இருவிகற்பஇன்னிசைவெண்பா; மேல் ௩௬ - ஆம்பாட்டும் அது.

௩௨. ஆவாநா மாக்க நசைஇ யறமறந்து
போவாநா மென்னுப் புலநெஞ்சே—யோவாது
நின்றுஞற்றி வாழ்தி யெனினுநின் வாழ்நாள்கள்
சென்றன செய்வ துரை.

(இ - ள்.) புலநெஞ்சே-அற்பத்தன்மையையுடைய மனமே! (நீ), ஆக்கம் நசைஇ - (அணுவளவும்நிலையில்லாத) செல்வத்தை விரும்பி, 'நாம் ஆவாம் - நாம் மேன்மேலும் செல்வமுடையவராவோம்: நாம் அறம் மறந்து போவாம் - நாம் (அச்செல்வஞ்செலவாதற்குக் காரணமாகிற) தருமத்தை விடக்கடவோம்,' என்னு - என்றெண்ணி, ஓவாது நின்று - (சிறிதும்) ஓய்வில்லாமல் நின்று, உஞற்றி-(அச்செல்வஞ்சம்பாதிக்கப் பலவாறு) முயன்று, வாழ்தி எனினும் - வாழ்வாயானாலும், நின் வாழ்நாள்கள் - உனது ஆயுள் நாட்கள், சென்றன - கழிந்துவிட்டன ; செய்வது உரை - (இனி நீ) செய்வதைச் சொல்; (எ - று.)

தான் உள்ள காலமெல்லாஞ் செல்வத்தையே விரும்பி ஓடியோடிச் சம்பாதித்துக் காத்துவைத்துச் சிறிதுந் தருமஞ்செய்யாமலே அந்திமநிலையடையும்பொழுது தன்மனததைநோக்கித தானே'இனி யாதுசெய்வாய்?' என்று இரக்கததோடு ஒருவன் சொன்னதாகச் செய்யப்பட்டது இச்செய்யுள் என அறிக. ஆவாஎன்பது அந்தோ எனப் பொருள்படும் இரக்கக்குறிப்பிடைச்சொல் எனக் கொண்டு உரைக்குமிடத்து, அதனையடுததுள்ள 'நாம்' என்றது நின்று வற்றும்.

"ஆதுநா மென்னு மவர்" என்ற நாலடியாரிலும், "ஆது மென்னுமவர்" என்ற திருக்குறளிலும், 'ஆதும' என்பது-மேலாகக்கடவோமென்று பொருள்படுதல் காண்க.

ஆக்கம் - தொழிற்பெயர் : ஆகுதல் ; இது - இங்கு, இம்மையில் மேன்மையாவதற்குக் காரணமான செல்வததுக்கு, காரியவாகுபெயர். விருப்பமெனப்பொருள்படுகிற'நசை'என்றபெயர்ச்சொல்,விரும்பியென வினையெச்சப்பொருள்படுதற்பொருட்டு, 'நசைஇ' என அளபெடுத்தது; இது - சொல்லிசையளபெடை. நசைத்து என்ற வினையெசசம் நசைஇ என விகாரப்பட்டு அளபெடுத்த தென்பர் ஒருசாரார். என்னு என்பதை ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெசசமாகக்கொண்டு இச்செய்யுட்கு வேறுகருத்து அமைய உரைகூறுதல் சிறவாமையை உய்த்துணர்க. புல - பண்புப்பெயர் : புல் ஐ-முறையே பகுதி விகுதிகள். மறந்துபோவாம் என்பதில், போ - துணிவுப் பொருளைக் காட்டிற்று. (௨)

௩௩. வினைப்பயன் வந்தக்கால் வெய்ய வுயிரா
மனத்தி னழியுமாம் பேதை—நினைத்ததனைத்
தொல்லைய தென்றுணர் வாரே தடுமாற்றத்
தெல்லை யிகந்தொருவு வார்.

(இ - ள்.) பேதை - அறிவில்லாதவன்,—வினை பயன் வந்தக்கால் - (தான் முற்பிறப்பிற் செய்த) தீவினையின் பயனாகிய துன்பம் வந்து நேர்ந்தால், (ஊழ்வினைப்பயனென்று எண்ணியிராமல்), வெய்ய உயிரா - கடுமையாகப் பெருமூச்சுவிட்டு, மனத்தின் - மனத்திலே, அழியும்-வருந்துவான்; அதனை - அத்துன்பத்தைப்பற்றி, நினைத்து - ஆலோசித்து, தொல்லையது என்று உணர்வாரே - முற்பிறப்பின் தீவினையால் வந்ததென்று தெரிந்து கொள்பவர்கள்தாமே, தமொற்றத்து எல்லை இகந்து ஒருவுவார் - சம்சார துக்கத்தின் எல்லையை விட்டுநீங்குவார்கள்; (எ - று.)

பழவினையால்வந்ததென்றுஅறிந்தவர், இனிவரும்பிறப்பில் அவ்வாறு துன்பம்நேரிடாமல் இன்பமேநேரிடும்படி அதருமத்தைவிட்டுத் தருமத்தையே செய்து பேறுபெறுவ ராதலால், 'உணர்வாரே தமொற்றத் தெல்லையிகந்தொருவுவார்' என்றார். வந்தக்கால் - எதிர்கால வினையெச்சம். வெய்ய - வெம்மையென்னும் பண்பினடியாகப் பிறந்த குறிப்புவினையெச்சம்; பைய மெல்ல என்பனபோல: இது - இங்கு, வினையுரியாய் நின்றது. இனி, வெம்மையுடையனவாக என, பலவின்பாற் குறிப்புமுற்றெச்சமாகவுங் கொள்ளலாம். வெய்யஉயிர்த்தல் - சூடாக மூச்சு விடுதல். மனத்தின், இன் - ஏழனுருபு. ஆம் - அசை. தொல்லை - பண்புப்பெயர். ஏ-பிரிநிலையோடு தேற்றம். பேதை என்னும் பண்புப்பெயர், அறிவிலானுக்குப் பண்பாகுபெயர்; பேதைமையாவது - யாதும் அறியாமை. (௩)

௩௪. அரும்பெறல் யாக்கையைப் பெற்ற பயத்தாற்
பெரும்பயனு மாற்றவே கொள்க—கரும்பூர்ந்த
சாறுபோற் சாலவும் பின்னுதவி மற்றதன்
கோதுபோற் போகு முடம்பு.

(இ - ள்.) அரும் பெறல் யாக்கையை - அருமையாகிய பெறுதலையுடைய மனிதசரீரத்தை, பெற்ற - அடைந்த, பயத்தால் - பயனால், பெரும் பயனும்-பெரியபயனான தருமத்தையும், ஆற்றவே-மிகுதியாகவே, கொள்க-செய்துவைத்துக்கொள்ளக்கடவர்; உடம்பு - மனிதசரீரம்,—கரும்பு ஊர்ந்த சாறு போல் - கரும்பானது (தன்னைப் பக்குவமாக ஆலையில்வைத்து ஆட்டினவர்கட்குத்) தன்னிடத்திற் பொருந்திய சாற்றை(க்கொடுப்பது)போல, சாலவும் - மிகவும், பின் - மறுமைக்குவேண்டிய அறமாகிய பயனை, உதவி-(தன்னை நல்வழியில் உபயோகப்படுத்தியவர்கட்குக்) கொடுத்து, மற்று - பின்பு, அதன் கோது போல் - அக்கரும்பினது சக்கை போல, போகும் - நீங்கிப்போம்; (எ - று.)

அரும்பெறல்யாக்கை என்பது-வடமொழிநடை; பெறலருயாக்கையென்று மாற்றி உரைப்பினும் அமையும். எல்லாப்பிறவிகளுள்ளும், அறஞ்செய்து நற்கதி பெறுதற்குக் காரணமான மனிதஜன்மத்தைப் பெறுதல், முற்பிறப்பின் மிக்க நல்வினையா லன்றிக் கூடா தாதலால், 'அரும்பெறல் யாக்கை' என்றார்; "அரிதரிது மானிடராத லரிது" என்றார் ஔவையாரும்.

"வினைபலவலியினாலேவேறுவேறியாக்கையாகி, நனிபலபிறவிதன்னுள் துன்புறூஉம்பல்லுயிர்க்கு, மனிதரினரியதாகுந்தோன்றுதல்தோன்றினும், இனியவைநுகரவெய்துஞ்செல்வமுமன்னதேயாம்," "உயர்குடிநனிஉள் தோன்றல் ஊனமில்யாக்கையாதல், மயர்வறுகல்விகேள்வித்தன்மையால் வல்லராதல், பெரிதுணரறிவேயாதல் பேறறங்கோடலென்றாங், கரிதிவை பெறுதலேடா பெற்றவர்மக்களென்பார்" என்னும் வளையாபதிச்செய்யுள்களாலும், மனிதசன்மத்தின்பெறலருமைஉணர்க. "மக்களுடம்புபெறற்கரிது பெற்றபின், மக்க ளறியு மறிவரிது—மக்க, ளறிவறிந்தாரென்பா ரறத்தின் வழுவார், நெறிதலை நின்றொழுகுவார்" என்னும் அறநெறிச்சாரத்தையுங் காண்க. அவ்வுடம்பைக்கொண்டு மறுமைக்கு உறுதி செய்துகொள்ளாதவர் அச்சரீரத்தைப் பெற்ற பயனை இழப்ப ராதலால், 'யாக்கையைப் பெற்ற பயத்தாற் பெரும்பயனு மாற்றவே கொள்க' எனப்பட்டது.

சாறு - ஸாரம்என்னும் வடமொழியின் திரிபு; ரஸம். கோது-அஸாரம். பின் - பின்னுக்கு [மறுமைக்கு] உதவும் பயனுக்கு ஆகுபெயர்; இடைச்சொல், பெயர்த்தன்மைப்பட்டது. பயன் என்று நிறுத்தாமல் 'பெரும் பயன்' என்றது, துறவறமென்று தோன்றுதற்கு.

பின்வாக்கியம் - உவமையணி.
பின்னிரண்டடியில் இனைவெதுகை காண்க. (௪)

௩௫. கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார்
வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்காற் பரிவ திலர்.

(இ - ள்.) கரும்பு - கரும்பை, சிறு காலை - (பதன் அழிதற்கு) முன் காலத்திலேயே, ஆட்டி - (ஆலையில் வைத்து) ஆட்டி, கட்டி - (அதன் இரசத்தினாலாகின்ற) வெல்லக்கட்டியை, கொண்டார் - கொண்டவர்,— துரும்பு- (அதன்) சக்கை, எழுந்து வேம் கால் - (நெருப்பிற்) பொருந்தி எரியும்பொழுது, ஆண்டு - அவ்விடத்தில் (அதனைக்கண்டு), துயர் உழவார் - துன்பப் படமாட்டார்; (அதுபோலவே), வருந்தி - (விரதம் முதலியவற்றால்) வருத்த முற்று, உடம்பின் பயன் கொண்டார் - சரீரமெடுத்ததன் பயனாகிய தருமத்தைச் செய்துவைத்துக்கொண்டவர்கள்,— கூற்றம் வரும் கால் - யமன் (உயிரைக்கொண்டுபோதற்கு) வரும்பொழுது, பரிவது இலர் - (அவ்வுடம்பின் அழிவைப்பற்றி) வருந்துதலிலராவர்; (எ - று.)

உடம்பினாலாகிய அறப்பயனாவது - துறந்து தவஞ்செய்தல். சிறுகாலை என்பது - அற்பகால மென்னும் பொருளுள்ளதாய், முற்காலத்தைக் குறித்தது; "சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச சேவித்து" எனப் பெரியார் பாசுரத்திலுங் காண்க. கரும்பை ஆட்டிச சாற்றைக்கொண்ட பின்பு அதன் கோதுகளின் கூட்டத்தை எரித்தல் இயல்பு. கரும்பு - உடம்புக்கும், அதனை ஆட்டுதல் - விரதங்களால் உடம்பைவருத்துதற்கும், கருப்பஞ்சாற்றுக்கட்டி உட

ம்பின் பயனுக்கும், சிறுகாலே - இளமைப்பருவத்துக்கும், கருப்பங்கட்டிகொண்டார் - யாக்கைப்பயன்கொண்டவர்க்கும், துரும்பெழுந்துவேதல்-யமன் வலியினால் உடம்பு அழிதற்கும், கருப்பங்கட்டிகொண்டார் துயருழவாமை-யாக்கைப்பயன்கொண்டவர் வருந்தாமைக்கும் உவமை யெனக் காண்க. வேம்=வேகும்; செய்யுமெனெச்சவீற்றுயிர்மெய்சென்றது:[நன்-வினை-உஉ.]

உபமான உபமேயங்களை (ப் பிம்பப்பிரதிபிம்பபாவந் தோன்றத்) தனித்தனிவாக்கியமாக நிறுத்தி, அவற்றின் இடையில் உவமவுருபுகொடாமற் கூறியதனால், இப்பாட்டு - எடுத்துக்காட்டுவமையணி; வடநூலார் த்ருஷ்டாந்தாலங்கார மென்பர். (௫)

௩௬. இன்றுகொ லன்றுகொ லென்றுகொ லென்னாது
பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி
யொருவுமின் றீயவை யொல்லும் வகையான்
மருவுமின் மாண்டா ரறம்.

(இ - ள்.) (யமன்வருவது), இன்றுகொல் - இன்றைக்கேயோ? அன்றுகொல் - அன்றைக்கோ? என்றுகொல் - என்றைக்கோ? என்னாது - என்று சந்தேகப்படாமல், கூற்றம் - யமன், பின்றையே நின்றது - (உயிரைக்கொண்டுபோதற்பொருட்டுப்) பின்னேயே வந்து மறைந்து நிற்கின்றது, என்று எண்ணி - என்றுநினைத்து, தீயவை - பாவச்செய்கைகளை, ஒருவுமின் -(செய்யாமல்) நீக்குங்கள்; மாண்டார் - மாட்சிமைப்பட்ட முனிவர் முதலியோர் (நூல்களிற் கூறிய), அறம் - தருமத்தை, ஒல்லும் வகையால் - (உங்களாற்) கூடியமட்டில், மருவுமின் - செய்யுங்கள்; (எ - று.)

இன்று, அன்று என்றது - இளமை முதுமைகளை. கொல் - ஐயம். பின்றை - இங்கே, பின்னிடத்தைக் குறித்தது. 'மாண்டாரறம்' என்றதில், தொக்குநின்ற ஆறனுருபு - செய்யுட்கிழமைப் பொருளது; "பற்றற்றான் பற்று" என்ற திருக்குறளிற் போல. திருக்குறளில் 'அறன்வலியுறுத்தல்' என்ற அதிகாரத்தில் "ஒல்லும்வகையா னறவினை யோவாதே, செல்லும்வா யெல்லாஞ் செயல்" என்றதும், அதனுரையிற் பரிமேலழகர் 'இயலுந்திறமாவது - இல்லறம் பொருளளவிற்கு ஏற்பவும், துறவறம் யாக்கைநிலைக்கு ஏற்பவும் செய்தல்' என்றதும், இங்கு அறியத்தக்கவை. தீயவை ஒருவுமின்-தீச்செயல்களினின்று நீங்குங்கள் எனினுமாம். (௬)

௩௭. மக்களா லாய பெரும்பயனு மாயுங்கா
லெத்துணையு மாற்றப் பலவாறற்—றொக்க
வுடம்பிற்கே யொப்புரவு செய்தொழுகா தும்பர்க்
கிடந்துண்ணப் பண்ணப் படும்.

(இ - ள்.) ஆயும் கால் - ஆராயுமிடத்து, மக்களால் ஆய - மனிதசரீரத்தாலாகிய, பெரும் பயனும் - சிறந்த பயன்களும், எத் துணையும் - எவ்வளவினும், ஆற்ற பல ஆனால் - மிகவும் அநேகங்களாதலினால்,—தொக்க-(முத்

பிறப்பின் புண்ணியத்தினால் அருமையாகக்) கிடைத்த, உடம்பிற்கே - சரீரத்துக்கே, ஒப்புரவு - உபயோகமாகின்ற காரியங்களை, செய்து ஒழுகாது-செய்துகொண்டிராமல், (அவ்வுடம்பைக்கொண்டு),—உம்பர் கிடந்து-மேலுலகத்தில் இருந்து, உண்ண - (பேரின்பத்தை) அனுபவிக்கும்படி, பண்ணப்படும் - (நல்ல தருமங்களையே) செய்யவேண்டும்; (எ - று)

இனி, தொக்க-பொருந்திய என்றுமாம்; பொருந்துதல் - ஏழுதாதுக்களுங்கூடி ஒன்றுதல். மக்கள் - இங்கு, அவர்களுடம்புக்கு முதலாகுபெயர். உம்மைகள் இரண்டனுள், முன்னது-உயர்வுசிறப்பு; பின்னது-முற்றுப்பொருளது. ஆனால்என்ற எதிர்காலவினையெச்சம்,இங்குத்தேற்றப்பொருள்பட்டு நின்றது; இவ்வாறு வடநூலுள்ளுஞ் சிறுபான்மை உண்டு. ஏ - பிரிநிலை. உம்பர்என்றது, முத்தியுலகத்தை. பண்ணப்படும்-ஒருவகைவியங்கோள்; செயப்பாட்டுவினைமுற்றாகவுங் கொள்ளலாம்: அப்பொழுது, 'அறம்' எனவருவிக்க. உடம்புக்குஆன ஒப்புரவுகள் - உண்ண உடுக்கப் பூச முடிக்கச் செய்பவை. முதலிரண்டடிகளில் இனவேற்றுமை காண்க. (எ)

ஙஅ. உறக்குந் துணையதோ ராலம்வித் தீண்டி
இறப்ப நிழற்பயந் தாஅங் —கறப்பயனுந்
தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும்.

(இ - ள்.) உறக்கும் துணையது - மிகச்சிறிய அளவுள்ளதாகிய, ஓர் ஆலம் வித்து - ஆலமரத்தின் ஓர் விதை, ஈண்டி-வளர்ந்து, இறப்ப-மிகவும், நிழல் - நிழலை, பயந்தாங்கு - தருதல் போல,—தான் சிறிது ஆயினும் - (தானஞ்செய்யப்பட்டபொருள்) தான் மிகச்சிறியதாயிருந்தாலும், தக்கார் கை பட்டக்கால் - தகுதியுடைய ஸத்பாத்திரங்களின் கையிற் சேர்ந்தால், வான் சிறிது ஆ - (மிகப்பெரிய)ஆகாயமும் சிறியதென்னும்படி, அறம் பயனும் - தருமத்தின் மேலான பயனை, போர்த்துவிடும் - பரப்பிவிடும்;(எ-று.)

உவமையணி.

"பார்த்தெதிர், வியந்தவர் வெருக்கொள விசும்பினோங்கினன், உயர்ந்தவர்க்குதவிய வுதவி யொப்பவே" எனக் கம்பர் கூறியிருத்தலுங் காண்க. "தெள்ளிய ஆலின் சிறுபழத்தொருவிதை, தெண்ணீர்க்கயத்துட் சிறுமீன் சினையினும், நுண்ணிதே யாயினு மண்ணல் யானை, அணிதேர் புரவி ஆட் பெரும்படையொடு, மன்னர்க் கிருக்க நிழலா கும்மே" என்னும் நறுந்தொகைச்செய்யுளும், இங்கே பார்க்கத்தக்கது. "இனைத்துணைத் தென்பதொன்றில்லை விருந்தின், துணைத்துணை வேள்விப் பயன்" என்ற திருக்குறளின் உரையிற் பரிமேலழகர் 'பொருளளவு "தான்சிறிதாயினுந் தக்கார் கைப்பட்டக்கால், வான்சிறிதாப்போர்த்துவிடும்" ஆகலின், இனைத்துணைத் தென்பதொன்றில்லை யென்றுங் கூறினார்' என்றதையும் நோக்குக. உறக்குந்துணையது - கிள்ளியெடுக்கும் அளவுள்ளது; "உகிர்ப்புரைபுக்கோர்தம்மை யுகிர்களாலுறக்குமன்றி" என்ற கம்பராமாயணமுங் காண்க. தகுதி-

ஞான ஒழுக்கங்களால் வரும் உயர்வு. அகற்சியில் தனக்கு ஒத்ததும் மிக்கதும் வேறு இல்லாத தாதலால், வானை எடுத்துக் கூறினர்.

ஆலம்வித்து, அம் - சாரியை. பயந்தாஅங்கு - செய்யுளிசை நிறைக்க வந்த அளபெடை. அறப்பயனும், உம்மை - அசைநிலை, உயர்வுசிறப்புமாம். சிறிதாயினும், உம்மை - இழிவுசிறப்பு. போர்த்துவிடும் என்றதில், 'விடு' என்றது - துணிவுணர்த்தும். (அ)

௩௯. வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்
வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்.

(இ - ள்.) வைகலும் - தினந்தோறும், வைகல் - பொழுது கழிதலை, தம் வாழ்நாள்மேல் வைகுதல் வைத்து - தமது ஆயுள்நாளிலே கழிதலாக வைத்து, வைகலை உணராதார் - நாள்கழிதலின் உண்மைநிலைமையை அறியாதவர்கள்;—வைகலும் - தினந்தோறும், வைகல்-நாள்கழிதல், வர - வந்துகொண்டேயிருக்க, கண்டும் - (அதனைப்) பிரதியக்ஷமாகப் பார்த்திருந்தும், அஃது உணரார் - அதன் உண்மையை அறிந்து (இரங்கி விரைந்து) அறஞ்செய்யாதவர்களாய், வைகலும் - தினந்தோறும், வைகலை - ஆயுள்கழிதலை, வைகும் என்று - (மேன்மேல்) இருக்கிறதென்று எண்ணி, இன்புறுவர்-மகிழ்ச்சியடைவர்; (எ - று.)

வந்த சொல்லும் பொருளும் பின்னும் பலமுறை வந்ததனால், இது - சொற்பொருட்பின்வருநிலையணி; வட நூலார் உபயாவ்ருத்திதீபக மென்பர்: "சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க, சொல்லிற் பயனிலாச் சொல்" என்ற திருக்குறளின் உரையில், பரிமேலழகர் 'சொல்லின்என்பது, இருவழியும் மிகையாயினும், சொற்பொருட்பின்வருநிலையென்னும் அணி நோக்கி வந்தது; "வைகலும்வைகல்வரக்கண்டும்"என்பதுபோல' என இப் பாட்டை எடுத்துக்காட்டினர்.

வைகல் என்றது - நாள்கழிதற்குக் காரணமான சூரியோதய அஸ்தமனங்களை. சிந்தாமணியில் "வைகல நாளும்வைகின்றே" என்றதற்கு, 'நாள்கள்தோறும் நாள் கழியாநின்றது' என நச்சினார்க்கினியர் உரைத்ததும், இங்கு உணரத்தக்கது.

முதலடியில் ஆய்தம் மெய்போல் ஒலித்தது: அலகிட்டுக்காண்க. (௯)

௪௦. மான வருங்கல நீக்கி யிரவென்னு
மீன விளிவினால் வாழ்வேன்ம—னீனத்தா
லூட்டியக் கண்ணு முறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனின்.

(இ - ள்.) ஈனத்தால் - இழிவான தொழில்களினால், ஊட்டியக்கண்ணும் - உணவு முதலியவற்றைக் கொடுத்து வளர்த்தவிடத்தும், இ உடம்பு-

இந்த உடம்பு, உறுதி சேர்ந்து - வலிமையை அடைந்து [வரவர வலிமை தளர்ந்து அழியாமல்],நீட்டித்து நிற்கும் எனின்-பலஊழிகாலம் நிலைபெற்று நிற்குமானுல்,—மானம் அருங் கலம் நீக்கி - மானமாகிய பெறுதற்கரிய ஆபரணத்தை விட்டு, இரவு என்னும்-பிச்சையெடுத்தலாகிய,ஈனம்இளிவினுல்-மிக்கஇழிவைத்தருந் தொழிலினுல்,வாழ்வேன் மன்-உயிர்வாழ்வேன்;(எ-று.)

நிலையில்லாத உடம்பைக் காத்தற்பொருட்டு இழிவான காரியங்களைச் செய்தல் வீண்,நிலையான உயிரைக்காத்தற்கு வேண்டிய தருமங்களைச் செய்வதே நலம் என்று கருத்து. எவ்வளவு காப்பாற்றினுலும் உடம்பு நீட்டித்து நிற்பதில்லை யாதலால் அதற்காக மானத்தை விட்டு யாசித்து வாழேனென்னும் பொருளைத் தருவதனுல், மன்(இடைச்சொல்) - ஒழியிசைப்பொருளில் வந்தது. மற்றை ஆபரணங்கள்போல உடம்புக்கே அழகுசெய்யாமல் உயிர்க்கு நன்மை செய்தலால், மானத்தை 'அருங்கலம்' என்றார்; அன்றியும், மற்றை அணிகளை இழந்தால் மீண்டும்பெறுதல்கூடும்,மானத்தை இழந்தால் மீண்டும் பெறலாகாது என அறிக.

'மானவருங்கலம்' என்றது, உருவகவணி. ஈன இளிவு - ஒருபொருட் பன்மொழி. "இலமென்னும் வன்மையின் வன்பாட்டதில்," "இன்னுமை வேண்டி னிரவெழுக" என்பராதலால், 'இரவென்னும் ஈன இளிவு' எனப் பட்டது. ஊட்டியக்கண் - கண்ணீற்று எதிர்கால வினையெச்சம்; ஊட்டு-உண் என்பதன் பிறவினை. (௪0)

---

## ரு - ஆம் அதிகாரம்—தூய்தன்மை.

இதற்கு - இரட்டுறமொழிதலால், தூய்து அன்மை எனப் பிரித்து - (மனிதசரீரத்தின்) சுத்தமுடையதல்லாத தன்மையைக் கூறுவதென்றும்; தூய் தன்மை எனப் பிரித்து -(அவ்வுடம்பை விரும்பாத)சுத்தமான தன்மையென்றும் பொருள் கொள்க. முறையே எழுவாய்த்தொகாநிலைத்தொடரும், பண்புத்தொகைநிலைத்தொடருமாம். 'தூயதன்மை' என்று பாடமாயினும் - தூயது அன்மை,தூய தன்மை எனப் பிரிந்து இவ்வாறே பொருள் படும், தூய தன்மை - குறிப்புப்பெயரெசசத்தொடர். மனத்தை மயக்கி நல்ல அறத்தைச் செய்யவொட்டாமற் பெரும்பாலும் கெடுப்பது மகளிருடம்பே யாதலால், அதனிடத்து விருப்பத்தை ஒழித்து அறத்தில் மனத்தைச் செலுத்துதற்பொருட்டு, அவர்களது உடம்பின் இழிவை எடுத்துக் கூறுதலால், இவ்வதிகாரம் அறன்வலியுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

௪௧. மாக்கேழ் மடநல்லா யென்றரற்றுஞ் சான்றவர்
நோக்கார்கொ னெய்யதோர் துச்சிலை—யாக்கைக்கோ
ரீச்சிற கன்னதோர் தோலறினும் வேண்டுமே
காக்கை கடிவதோர் கோல்.

(இ - ள்.) 'மா-அழகையும், கேழ் - ஒளியையும், மடம் - இளமையையும், நல்லாய் - நற்குணத்தையுமுடைய மங்கையே!' என்று அரற்றும் - என்று (மகளிரைக்கண்டு காமுற்று) வாய்விட்டு இரங்குகின்ற, சான்றவர் - பெரியோர், நொய்யது - அற்பகுணமுள்ளதாகிய, ஓர் - ஒரு, துச்சிலை - உடம்பின் இழிவை, நோக்கார்கொல் - ஆராய்ந்து பாரார்களோ?(ஏனென்றால்),—யாக்கைக்கு-அவ்வுடம்பில், ஓர் ஈ சிறகு அன்னது - ஈயினது ஒரு பக்கத்துச் சிறகி னளவான, ஓர் தோல் - மிகவுஞ்சிறிய தோல், அறினும் - அறுபட்டுப்போனாலும், காக்கை கடிவது - (அப்புண்ணைக்குத்துதற்கு வருகின்ற) காக்கையை அடித்து ஓட்டுவதற்கு, ஓர் கோல் - ஒருகொம்பு, வேண்டுமே - வேண்டியிருக்குமே! (எ - று.)

இவ்வளவு அருவருப்புக்கு இடமான உடம்பை அழகியதாகக் கண்டு விரும்புதல் பெரியோர்கொள்கையன்று என்பது கருத்து. சான்றவர் - நற்குண நல்லொழுக்கங்களால் நிறைந்தவர்; மகளிரை விரும்பிப் புகழ்கின்ற புல்லறிவாளரை இங்கே 'சான்றவர்' என்றது - பரிகாசத்துக்குச்சொன்ன எதிர்மறையிலக்கணை ; வடநூலார் 'விபரீதலக்ஷணை' என்பர்: இது, பிறகுறிப்பில் அடங்கும். அசுத்தியைக் கண்டிருப்பாராயின் இங்ஙனங் காமுற்று அரற்றார் என்றற்கு, 'நோக்கார்கொல்' என்றார்.

துச்சில் - தங்குமிடம்; உயிர்தங்குமிடமாகிய உடம்பை இங்கே குறித்தது. 'புக்கில்' என்ற பாடத்துக்கும் பொருள் இதுவே. யாக்கைக்கு, குவ்வுருபு - கொள்ளுதற்பொருளதாகாமல் இடப்பொருளதாதலால், உருபு மயக்கம். ஈச்சிறகு - மிக்கசிறுமைக்கு எடுத்துக்காட்டியதோர் அளவை. கொல் - வினாவோடு இரக்கம். உம் - இழிவுசிறப்பு. ஏகாரம் - இகழ்ச்சி.

ஒன்று + துச்சில் = ஓர் துச்சில்; ஓரீ, ஓர்தோல், ஓர்கோல் என்பனவும் இவ்வாறே. இதனால், 'ஒன்று இரண்டு என்னும் எண்கள் ஓர் ஈர் என நிற்பது வருமொழிமுதலில் உயிர்வருமிடத்தே' எனவும், 'முதல்நீளாது உகரம் பெற்று ஒரு இரு என நிற்பது மெய்வருமிடத்தே' எனவும், 'இவை மாறுபடவரின் வழுவாம்' எனவும் சிலர் கூறுவது நியதியன்று. ஆனது பற்றியே,தொல்காப்பியத்தில் அக்காலத்துப்பெரும்பான்மைவழக்குப்பற்றி அங்ஙனங்கூறியிருந்ததை நன்னூலார் இறந்ததுவிலக்கலால்ஒழித்து இலக்கியங்கண்டு "முதலீரெண்முதல்நீளும்"என்றும், "ஒன்றன்புள்ளி ரகரமாக, இரண்டனொற்றுயிரேக உவ்வருமே" என்றும் பொதுப்படச் சூத்திரஞ்செய்தன ரென்க. இங்ஙனமிருக்க, இக்காலத்தார்சிலர் நன்னூலுரையிலும் அவ்வரையறையைப்புகுத்துதல், நூற்கருத்துக்கு ஒத்ததன்றாம். நன்னூலார்தாமே"ஆனவொன்றாதியோர்புடையொப்பினமே,""வேறவற்றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்" என மெய்ம்முதல்மொழிமுன் ஓர் என உபயோகித்திருத்தல் காண்க "ஊர்வ பதினொன்றாம்" என்ற பழம்பாட்டில் 'நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாம்' என்றதையும் நோக்குக. "அச்சாணியன்னதோர்சொல்," "ஆயிரங்காக்கைக் கோர்கல்" என இவ்வாறு வந்துள்ளவை அளவிறந்தன. இந்நாலடியாரில், உயிர்முதலோடு மெய்ம்முத

லோடு வாசியற ஓர் என நின்றது. "எவ்வுயிருங் காக்க வொருவீச னுண்டோ வில்லையோ" என்ற திருவள்ளுவர் தனிப்பாடலிலும், "உம்மையெச்ச மிருவீற்றானும்" என்ற தொல்காப்பியத்திலும், 'ஒருவாறு' என உலக வழக்குச் செய்யுள்வழக்கு இரண்டிலும் உயிர்முதல்முன் ஒரு என வந்தது. நக்கீரர் நச்சினார்க்கினியர் பரிமேலழகர் முதலிய முன்னோருரைகளிலும், பஞ்சதந்திரம் முதலிய பின்னோருரைநடைகளிலும் இப்படியே காணலாம்.

மூன்றாமடியில் இனவெதுகை காண்க.

இச்செய்யுள் - ஒருவிகற்பநேரிசைவெண்பா. (க)

சச. தோற்போர்வை மேலுந் துளைபலவாய்ப் பொய்ம்மறைக்கு
மீப்போர்வை மாட்சித் துடம்பானுன்—மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும்.

(இ - ள்.) உடம்பு - இவ்வுடம்பு,—தோல் போர்வைமேலும் - தோலாகிய போர்வையின்மேலும், துளை பல ஆய் - பல துளைகளையுமுடையதாய், பொய் மறைக்கும் - (தன்னிடத்திலுள்ள) அசுத்தங்களை மறைக்கின்ற, மீ போர்வை - மேலேபோர்க்கும் ஆடை முதலியவற்றால், மாட்சித்து - அழகையுடையது: ஆனால் - ஆதலால்,—மீ போர்வை - மேற்போர்வையினால், பொய் மறையா - (அதனிடத்திலுள்ள) அசுத்தியை மறைத்து, காமம் புகலாது - விரும்பிப் புகழ்ந்துசொல்லாமல், அதனை - அவ்வுடம்பை, பை மறி ஆ - பையைப்போல (உட்பக்கம் வெளிப்பக்கமாம்படி) மாற்றியதாக, பார்க்கப்படும் - ஆராய்ந்துபார்க்கவேண்டும்; (எ - று.)

மேலே அழகியதாயிருக்கின்ற பையை உட்புறந் திருப்பிப்பார்த்தால் அதிலுள்ள ஆபாசங்கள் விளங்குவதுபோல, நன்றாக ஆராய்ந்துபார்த்தால் உடம்பினுள்ளே பல அசுத்தங்களும் தெரியவருமென்று கருத்து.

துளை பல - கண் செவி மூக்கு வாய் முதலிய நவத்துவாரங்கள். மீப்போர்வை பொய்ம்மறையா என்றது - மேல்தோலின் அழகையும் ஆடையணிகளின் அழகையுமே கண்டு உடம்பினுள்ளேஉள்ள அசுத்தியை அடியோடே அறியாமல் விட்டு என்றபடி. இவ்வாறு அதனுண்மையை ஆராய்ந்தறிந்தவர்கள் அதனிடத்து வெறுப்பையுடையவர்களாய்த் துறந்து முத்திபெற முயல்வரென்பதாம். காமம்புகலுதல் - புனைந்துரைத்தல்; "காமஞ்செப்பாது கண்டது மொழிமோ" என்ற இறையனார்பாசுரத்திற் போல. இங்கே 'பைம்மறியாப்பார்க்கப்படும்' என்றதை, மணிமேகலையில்வருகிற "மக்கள்யாக்கையிதுவென வுணர்ந்து, மிக்கோ யிதனைப் புறமறிப்பாராய்" என்பதனோடும், இறையனாரகப்பொருளுரையில்வருகிற 'பைம்மறியா நோக்கப் பருந்தார்க்குந் தகைமைத்து' என்பதனோடும் ஒப்பிடுக. 'தொளை' என்றும் பாடம்.

போர்வை - போர்க்கப்படுவது ; ஐ - செயப்படுபொருள்விகுதி, வ் - எழுத்துப்பேறு. தன்வினை பிறவினைகட்குப் பொதுவாகிய 'மறையா' என்ற வினையெச்சம், இங்கே பிறவினைப்பொருளதாய் நின்றது. மற்று - அசை.

முதலிரண்டடியில் இனவெதுகை காண்க. (உ)

சங. தக்கோலந் தின்று தலைநிறையப் பூச்சூடிப்
பொய்க்கோலஞ் செய்ய வொழியுமே—யெக்காலு
முண்டி வினையு ளுறைக்கு மெனப்பெரியோர்
கண்டுகை விட்ட மயல்.

(இ - ள்.) 'எக்காலும் - எப்பொழுதும், உண்டி - உணவாகிய, வினையுள் - தொழிலினாலேயே, உறைக்கும் - உறுதிபெறும்', என - என்று, பெரியோர் - (அறிவாற்) பெரியவர்கள், கண்டு - உண்மையுணர்ந்து, கைவிட்ட - வெறுத்துவிட்ட, மயல் - செத்தையாகிய உடம்பின் அசுத்தங்கள்,—தக்கோலம் தின்று-வாசனைப்பண்டங்களை மென்றுதின்று. தலை நிறைய-தலைமயிர் நிரம்ப, பூ சூடி - புஷ்பங்களைச்சூட்டிக்கொண்டு, பொய் கோலம் செய்ய - பொய்யான அலங்காரங்களைச செய்துகொள்வதனால், ஒழியுமே - நீங்குமோ? (எ - று.)

தக்கோலம் - வால்மிளகு: "தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கங், கற்பூரஞ் சாதியோ டைந்து" என்கிற ஐந்துமுகவாசப்பண்டங்களுள் ஒன்று; இது, மற்றைநான்கிற்கும் உபலக்ஷணம். நிலையில்லாமையாற பொய்யாகிய உடம்பிற்குச செய்யப்படுவதனாலும்,உள்ளேபொருந்திய துர்க்கந்தத்தை ஒழித்திடாமையாலும், 'பொய்க்கோலம்'என்றார். 'சோற்று லெடுத்த சுவர்' என்றாற்போல, 'எக்காலும்உண்டிவினையுளுறைக்கும்' என்றார். மயல், தூரால், செத்தை என்பன - ஒருபொருட்சொற்கள். மயல் என்றசொல் இப்பொருளதாதலை "வம்புண் கோதையர் மாற்று மயலரோ" எனச் சிந்தாமணியிலுங் காண்க.

வினையுள், 'உள்'என்னும் ஏழனுருபு இடப்பொருளதாகாமற் காரணப் பொருள தாதலால், உருபுமயக்கம். ஏ-எதிர்மறை. உம்-முற்று. கைவிட்ட, கை - உபசர்க்கம்.

"மெய்ப்படு சாந்தும் பூவு மிகநனி கமழு மேனுங், கைப்படு சாந்தும் பூவுங் கொண்டலாற் கலக்க லாகா, ஐப்படு பித்து நெய்த்தோ ரசும்புசோ ரழுகற்புன்றோற், பொய்ப்பட வுரைத்த தண்டோ பொன்னனீர் நம்மு ணுமால்" என்னுஞ் சிந்தாமணியை இங்கே நோக்குக.

இரண்டாமடியில், யகரமெய் - ஆசெதுகை. (ங)

சச. தெண்ணீர்க் குவளை பொருகயல் வேலென்று
கண்ணில்புன் மாக்கள் கவற்ற விடுவெனோ
வுண்ணீர் களைந்தக்கா லுங்குசூன் றிட்டன்ன
கண்ணீர்மை கண்டொழுகு வேன்.

(இ - ள்.) உள் நீர் களைந்தக்கால் - (கண்களின்) உள்ளே யிருக்கின்ற நீரை எடுத்துவிட்டால், நுங்கு குன்றிட்டன்ன - நுங்கைத் தோண்டியெடுக்கப்பெற்ற பனங்காயின் ஓடுபோன்ற, கண் - கண்களின், நீர்மை - (இழிவான)தன்மையை, கண்டு ஒழுகுவேன் - பார்த்து வருகின்ற நான்,—(அக்கண்களை), 'தெள் நீர் குவளை - தெளிந்த நீரில் தோன்றிய நீலோற்பலமலர் போலும்: பொரு கயல் - போர்செய்து பிறழ்கின்ற இரட்டைக்கயல்மீன் போலும்: வேல் - வேலாயுதம் போலும்,' என்று - என்றுசொல்லிப் புகழ்ந்து, கண் இல் புல் மாக்கள் - நல்லறிவில்லாத அற்பமனிதர்கள், கவற்ற - (என்மனத்தைக்) கவலைப்படுத்துவதனால், விடுவெனோ (நான்கொண்ட துறவை) விடுவேனோ? (எ - று.)

கண்களுக்குக் குவளை - நிறத்தினாலும் மென்மையினாலும் அழகினாலும், கயல் - வடிவினாலும் பிறழ்ச்சியினாலும், வேல் - கூர்மையினாலும் ஆடவரை வருத்துதலாலும். இம்மூன்றும் - வடிவத்தினாலும் உவமைகூறப்படும். 'அன்றுமலர்ந்த வாடாமலர்'என்பார், 'தெண்ணீர்க்குவளை'என்றார்.பொரு என்னும் அடைமொழியை வேலோடு கூட்டலாம். இழிவுதோன்ற, 'மாக்கள்' என்றார். மாக்களெனப்படுவார் - மனவுணர்ச்சி யில்லாமல் ஐம்பொறியறிவுமாத்திரமே யுடைய விலங்குபோன்ற ஒருசார் மானிடங்கள். மக்களாவார் - ஐம்பொறியுணர்வோடு மனவறிவு முடையவர்; விவேகிகளான மனிதர். "மாவும் மாக்களும் ஐயறிவினவே," "மக்கள்தாமேஆறறிவுயிரே" என்னுந் தொல்காப்பியசூத்திரங்களைக் காண்க. மா என்பது விலங்கின் பெயராதலால், அதன்பன்மையான மாக்கள் என்பது - விலங்குபோன்ற அவிவேகிகளை உணர்த்துமென்க. கவற்ற விடுவெனோ என்பதற்கு - கவலைப்படுத்தி மயக்கும்படி மனத்தைப் போனவழியில் விட்டுவைப்பேனோ? என்றும் பொருள் கூறலாம்.

கவற்று என்றபிறவினைப்பகுதியில், கவல் தன்வினைப்பகுதி, று - பிறவினைவிகுதி. ஓ - எதிர்மறை. குன்றிட்டு, குல் - பகுதி குலுதல்-குடைதல்.

இது - ஒருவிகற்பஇன்னிசைவெண்பா. அடுத்தசெய்யுளும் அது. (ச)

**சரு.** முல்லை முகைமுறுவன் முத்தென் றிவைபிதற்றுங்
கல்லாப்புன் மாக்கள் கவற்ற விடுவெனோ
வெல்லாருங் காணப் புறங்காட் டுதிர்ந்துக்க
பல்லென்பு கண்டொழுகு வேன்.

(இ - ள்.) எல்லாரும் காண - யாவரும் பார்க்கும்படி, புறங்காடு - ஊருக்குப்புறத்திலே யுள்ள நன்காட்டில், உதிர்ந்து உக்க - சிந்திக்கிடக்கின்ற, பல் என்பு - பற்களாகிய எலும்புகளின் தன்மையை, கண்டு ஒழுகுவேன் - பார்த்துவருகின்ற யான்,—'முறுவல் - அப்பற்கள், முல்லை முகை - முல்லையரும்புகள்போலும், முத்து - முத்துக்கள்போலும்,' என்ற இவை - என்று இத்தன்மையனவான புகழ்ச்சிகளை, பிதற்றும் - சொல்லிக்கொண்டு திரிகிற, கல்லா புல் மாக்கள் - (மெய்ந்நூல்களைப்) படியாத அற்பமனிதர்கள், கவற்ற - கலக்க, விடுவெனோ - விடுவேனோ? (எ - று.)

பல்லுக்கு முல்லையரும்பும் முத்தும்-வெண்ணிறத்தாலும்,வடிவினாலும், அழகினாலும் உவமைகூறப்படும். உதிர்ந்து உக்க - ஒருபொருட்பன்மொழி. உக்க, உகு - பகுதி. என்றிவை - விகாரம். (ரு)

சகூ. குடருங் கொழுவுங் குருதியு மென்புந்
தொடரு நரம்பொடு தோலு—மிடையிடையே
வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்று
ளெத்திறத்தா ளீர்ங்கோதை யாள்.

(இ - ள்.) குடரும் - குடலும், கொழுவும் - கொழுப்பும், குருதியும் - இரத்தமும், என்பும் - எலும்பும், தொடரும் - ஒன்றோடொன்று தொடர்ச்சியாயிருக்கின்ற, நரம்பொடு - நரம்பும், தோலும்—, இடை இடையே வைத்த - (இவற்றின்) நடுவிலே நடுவிலே வைத்த, தடியும் - தசையும், வழும்பும் - நிணமும், ஆம் - ஆகிய, இவற்றுள் - இவைகளுக்குள், ஈர் கோதையாள் - குளிர்ந்த மாலையையுடைய இப்பெண், எ திறத்தாள் - எந்தப் பகுதியையுடையவள்? (எ - று.)

எத்திறத்தாள் - 'என்ன மேம்பாடுடையள்?' எனினுமாம்.

'இங்குச் சொல்லப்பட்ட குடல் முதலியவற்றாலாகியதே உடம்பாதலால், இவற்றுள் ஒன்றாயினுஞ் சுத்தமுடைய பொருளுண்டோ? பாரும்' என்று, பெண்ணாசைமிக்கு அறநெறியைவிட்ட ஒருவனைநோக்கிச் சொல்லியது.

குடர் = குடல்: ஈற்றுப்போலி. இடையிடை - அடுக்கு, தொறுப்பொருளது. ஏ, மற்று - அசைகள். ஈர்ங்கோதை = ஈர் + கோதை; [நன்-மெய்-உக.]

இச்செய்யுள்-அருவருப்புததோன்றக் கூறினமையால், இழிப்புச்சுவையணிக்கு உதாரணமாம்.

"என்பினை நரம்பிற் பின்னி யுதிரந்தோய்த் திறைச்சி மெத்திப், புன்புறந் தோலைப் போர்த்து மயிர்புறம் பொலிய வேய்ந்திட், டொன்பது வாயிலாக்கி யூன்பயில் குரம்பை செய்தான், மன்பெருந் தச்ச னல்லன் மயங்கினார் மருள வென்றான்" என்னுஞ் சிந்தாமணிச்செய்யுள், இங்கு உணரத்தக்கது. (சு)

சஎ. ஊறி யுவர்த்தக்க வொன்பது வாய்ப்புலனுங்
கோதிக் குழம்பலைக்குங் கும்பத்தைப்—பேதை
பெருந்தோளி பெய்வளா யென்னுமீப் போர்த்த
கருந்தோலாற் கண்விளக்கப் பட்டு

(இ - ள்.) ஊறி - (மலங்கள்) சுரந்து, உவர் தக்க - வெறுக்கத்தக்க, ஒன்பது வாய் புலனும் - நவத்துவாரங்களாகிய உறுப்புக்களெல்லாம், குழம்பு - மலத்தை, கோதி அலைக்கும் - சிதறிச்சிதறி வெளிப்படுத்தப்பெற்ற, கும்பத்தை - (மாதரது) உடம்பாகிய பாண்டத்தை (நோக்கி),—பேதை - அறிவில்லாதவன்,—மீ போர்த்த கருந் தோலால் - அதன்மேற் போர்க்கப்பட்டுள்ள பெரிய தோலினாலே, கண் விளக்கப்பட்டு - கண்களுக்கு ஒளிபெறும்படி செய்யப்பட்டு,—'பெருந் தோளி - பெரியதோள்களையுடைய

வளே! பெய் வளாய் - இடப்பட்ட வளையல்களையுடையவளே!' என்னும் - என்று புகழ்ந்து சொல்வான்; (எ - று.)

பேதை இவ்வாறு ஆவனெனவே, அறிவுடையவன் அதனிழிவை அறிந்து துறந்து முத்திபெறுவனென்றதாம். 'மீப்போர்த்த கருந்தோலாற் கண்விளக்கப்பட்டு' என்றது - மேற்போர்த்துள்ள தோலினழகையே பார்த்து மோகித்து உள்ளின் அசுத்தத்தை நோக்காமல் என்றபடி 'பெருந்தோள்' என்றார், மகளிர்தோள் பருத்திருத்தல் நல்லிலக்கணமாதலின்; "தோள்கண்ணெனை மூவழிப்பெருகி" என்றார் கலித்தொகையிலும்.

ஒன்பதுவாய்ப் புலனும், உம்-முற்று. பேதை என்னும் என இயைக்க. பெய்வளாய் - வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையாகிய 'பெய்வளை' என்பதன் ஈறுதிரிந்த விளி.

இச்செய்யுளில் இனவேதுகை காண்க. (எ)

௪௮. பண்ட மறியார் படுசாந்துங் கோதையுங்
கண்டுபா ராட்டுவார் கண்டிலர்கொன் — மண்டிப்
பெடைச்சேவல் வன்கழுகு பேர்த்திட்டுக் குத்தன்
முடைச்சாகா டச்சிற் றுழி.

(இ - ள்.) பண்டம் - (உடம்பாகிய) பண்டத்தின் இழிவை, அறியார் - அறியாமல், படு சாந்தும் - பூசப்பட்ட சந்தனத்தையும், கோதையும் - மாலையையும், கண்டு - பார்த்து (மயங்கி), பாராட்டுவார்-(அவ்வுடம்பைக்)கொண்டாடுபவர்கள்,—முடை சாகாடு-முடைநாற்றத்தையுடைய(இவ்வுடம்பாகிய) பண்டி, அச்சு இற்ற உழி - (உயிராகிய) அச்சு முறிந்து இறந்தபொழுது, (அதனை), பெடை சேவல் - பேடையும் ஆணுமாகிய, வல் கழுகு - வலிய கழுகுகள், மண்டி - நெருங்கி, பேர்த்திட்டு - இடத்தைவிட்டு இழுத்து, குததல் - குத்தித் தின்னுதலை, கண்டிலர்கொல் - பார்த்திலரோ? (எ - று.)

கண்டுள்ளாராயின் அருவருப்புக்கொண்டு உடனே வெறுத்துத் துறப்பரே யென்றபடி.

பெடை, சேவல் - முறையே பறவைகளின் பெண்பெயரும் ஆண்பெயருமாம். முடை - ஒருவகைத்துர்க்கந்தம். சாகாடு - சகடமென்னும் வடமொழியின் சிதைவு; இது-சகடு என்றும், சாடுஎன்றுஞ் சிதைந்து வழங்கும். அச்சு-சக்கரங்கோத்த மரம்; அக்ஷமென்னும் வடசொல்லின் சிதைவு. 'அச்சு' என்ற சொல்லின் நயத்தால், அச்சாணியென்றும், உயிரென்றும் பொருள் படுதல் காண்க. இற்றுழி - விகாரம்.

அச்சில்லாமல் வண்டிசெல்லாததுபோல உயிரில்லாமல் உடம்பு இயங்காதாதலால், உடலை வண்டியென்றும், உயிரை அச்சென்றும் உருவகப்படுத்தினர்.

'கொண்டுபாராட்டுவார்' என்ற பாடத்துக்கு - பூசுவன முடிப்பன முதலியவற்றால் உடம்பை அலங்கரித்து ஆதரிப்பவரென்க. 'கோத்தல்' என்றும் பாடம். (அ)

சகூ. கழிந்தா ரிடுதலை கண்டார்நெஞ் சுட்கக்
குழிந்தாழ்ந்த கண்ணவாய்த் தோன்றி—யொழிந்தாரைப்
போற்றி நெறிநின்மி னிற்றிதன் பண்பென்று
சாற்றுங்கொல் சாலச் சிரித்து.

(இ - ள்.) கழிந்தார்-இறந்தவர்களுடைய, இடு தலை-(இடுகாட்டிற்) சிந்திக்கிடக்கின்ற தலைகள்,—கண்டார் நெஞ்சு உட்க-(தம்மைக்) கண்டவர்கள் நெஞ்சம் அஞ்சும்படி, குழிந்து ஆழ்ந்த கண்ண ஆய் - மிகவும் ஆழ்ந்திருக்கின்ற கண்களையுடையவையாய், தோன்றி-காணப்பட்டு,—ஒழிந்தாரை - மற்றவர்களைக்குறித்து, 'போற்றி -(தீவினைவாராதபடி உங்களைப்)பாதுகாத்துக்கொண்டு, நெறி - (துறவறமாகிய) நல்லவழியிலே, நின்மின் - நில்லுங்கள்: இதன்-இவ்வுடம்பினது,பண்பு-குணம், இற்று-இப்படிப்பட்டது',என்று—, சால - மிகவும், சிரித்து—, சாற்றும்கொல் - சொல்வனபோலும்; (எ - று.)

குழிந்து ஆழ்ந்த - ஒருபொருட்பன்மொழி. கண்ண - சினையடியாகப் பிறந்த பலவின்பாற் பெயர். ஒழிந்தார் - இறவாமல் நின்றவர்கள். இற்று - இகரச்சுட்டடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று; று - விகுதி.

பற்கள் வெளித்தோன்றும்படி வாய்திறந்துகிடக்கின்ற இறந்தவரது வெண்டலைகள் உடம்பைவிரும்புகிற அறிவிலாரை நோக்கிச் சிரித்துச்சாற்றுமெனக் கூறுதலால், தற்குறிப்பேற்றவணி; 'கொல்' என்றது, அதன் உருபாய் நின்றது. (க)

ரு0. உயிர்போயார் வெண்டலை யுட்கச் சிரித்துச்
செயிர்தீர்க்குஞ் செம்மாப் பவரைச்—செயிர்தீர்ந்தார்
கண்டிற் றிதன்வண்ண மென்பதனாற் றம்மையோர்
பண்டத்துள் வைப்ப திலர்.

(இ - ள்.) உயிர் போயார்-உயிர்நீங்கினவர்களுடைய, வெள் தலை- (இடுகாட்டிற்கிடக்கின்ற) வெண்மையான தலைகள், உட்க - (கண்டவர்)அஞ்சும்படி, சிரித்து—, செம்மாப்பவரை - (இல்வாழ்க்கையின்பத்தால்) மிகக்களித்திருப்பவர்களை, செயிர் தீர்க்கும் - (அக்களிப்பாகிய) குற்றம் நீங்கச்செய்யும்; செயிர் தீர்ந்தார் - குற்றம் நீங்கினவர்கள், கண்டு - (அத்தலைகளைப்) பார்த்து, இதன் வண்ணம் இற்று என்பதனால்-இதன்குணம்இப்படிப்பட்டதென்று நினைப்பதனால்,தம்மை - தங்கள் உடம்பை ஓர் பண்டத்துள் வைப்பது இலர் - ஒருவகைப்பொருளில் வைத்து எண்ணுகிற தொழிலில்லாதவராவர் [ஒருபொருளாக வைத்து மதியாரென்றபடி]; (எ - று.)

உடம்பை வெறுத்துத் தவஞ்செய்து வீடுபெறுவ ரென்பதாம்.

இறுமாப்பவர், அல்லாப்பவர், சோகாப்பவர் என்பன போல, 'செம்மாப்பவர்' என்பது - ஒருசொல். வெண்டலை - மேல்தோலழிந்து எலும்பு மாத்திரமாய் நிற்குந் தலை. (க0)

## கூ - ஆம் அதிகாரம்.—துறவு.

அதாவது-புறமாகிய செல்வத்தினிடத்து உண்டாகின்ற 'எனது' என்னும் புறப்பற்றையும், அகமாகிய உடம்பினிடத்து உண்டாகின்ற 'யான்' என்னும் அகப்பற்றையும் விடுதலைக் கூறுவது. தானல்லாத உடம்பை யானென்று கருதி அதனிடத்துப் பற்றுச்செய்தல் 'அஹங்காரம்' என்றும், தன்னோடு இயைபில்லாத பொருளை எனதென்றுகருதி அதனிடத்துப் பற்றுச் செய்தல் 'மமகாரம்' என்றும் வடநூலிற் பெயர்பெறும்.

இந்நூலில் செல்வநிலையாமை, இளமைநிலையாமை, யாக்கைநிலையாமை, அறன்வலியுறுத்தல், தூய்தன்மை, துறவு என அதிகாரங்களை முறைப்பட நிறுத்தினமைக்குக் காரணம் - செல்வம் இளமை உடம்பு என்னும் இவற்றின் நிலையில்லாமையையும், இவற்றாற் செய்யத்தக்க தருமத்தினது நிலையுடைமையையும், அறத்தைச் செய்யவொட்டாமல் மனத்தை மயக்கிக் கெடுக்கின்ற மகளிருடலின் அசுத்தமான தன்மையையும் அறிந்து நிலையில்லாதபொருள்களினிடத்திற் பற்றைவிட்டு நிலையுடைய அறத்தைப் பற்றவேண்டுவதாத லென்க.

துறவு - துறத்தல்: தொழிற்பெயர்; துற - பகுதி, உ - விகுதி, வ் - உடம்படுமெய்: வு - விகுதி யென்றலும் உண்டு.

ருக. விளக்குப் புகவிருண் மாய்ந்தாங் கொருவன்
றவத்தின்முன் னில்லாதாம் பாவம்—விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாந் தீது.

(இ - ள்.) விளக்கு - தீபம், புக - (ஓரிடத்திற்) பிரவேசிக்க, இருள் - (அதற்குமுன்பு அங்கேயிருந்த) இருட்டு, மாய்ந்தாங்கு-அழிதல்போல, ஒருவன் - ஒருவன்செய்யும், தவத்தின்முன் - தவத்திற்கு முற்பட்டு, பாவம் - தீவினை, நில்லாது - அழியும்; விளக்கு நெய் - அத்தீபம் எரிவதற்குக் காரணமான நெய், தேய்விடத்து - குறைந்துபோமிடத்து, இருள்—, சென்று பாய்ந்தாங்கு - (அவ்விடத்திற்) போய்ப் பாவுதல்போல, நல்வினை - அத்தவஞ்செய்தற்குக் கருவியான துறவாகிய புண்ணியம், தீர்விடத்து - நீங்குமிடத்தில், தீது - பாவம், நிற்கும் - வந்துநிற்கும்; (எ - று.)

துறவினு லுண்டாகும நன்மையும், அஃது இல்லாதபோது உண்டாகும் தீமையும் உபமானமுகத்தால் இசசெய்யுளில் விளக்கப்பட்டன.

தன் பகையாகிய அறம் வளர்தலின் தனக்கு நிலையில்லாமல் தீவினை மெலிதலால், 'தவத்தின்முன் நில்லாதாம் பாவம்' என்றார்; "அல்லவை தேய அறம் பெருகும்" எனத் திருவள்ளுவனார் கூறியதும் இக்கருத்துப் பற்றியே. தவம், பாவம் - தபஸ், பாபம் என்னும் வடசொற்களின் திரிபுகள். தவமாவது - மனம் பொறிவழிபோகாது நிற்றற்பொருட்டு விரதங்களால் உணவு சுருக்குதல் முதலியன. பெரும்பான்மைபற்றி, தவம் துற

வறத்தின்மேல் நின்றது; "தானந் தவமிரண்டுந் தங்கா" என்ற திருக்குறளிற் போல.

விளக்கு - (பொருள்களை) விளங்கச்செய்வதாகிய தீப்பிழம்புக்கு முதனிலை திரிந்த தொழிலாகுபெயர்; வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்து கெட்ட பெய ரென்றுங் கொள்ளலாம். புக - காரணப்பொருளில் இறந்தகாலங்காட்டிய செயவெனெச்சம். ஆங்கு - உவமவுருபு. காரணமாகிய நெய்யின் தேய்தலைக் கூறி, காரியமாகிய விளக்கின் தேய்வைப் பெறவைத்தார். அதிகாரம் நோக்கி, நல்வினை - துறவு எனப்பட்டது. 'ஆம்' இரண்டும் - அசை. தேய்விடத்து - எதிர்கால வினையெச்சம்; தேய்வு இடத்து என்றும் பிரிக்கலாம்: தீர்விடத்து என்பதற்கும் இவ்வாறே. தீது - குறிப்பு வினையாலணையும் பெயர். முன் இல்லாதாம் என்றும் பதம் பிரிக்கலாம்.

துறவறத்திற்கு விளக்கும், பாவத்திற்கு இருளும் உவமை; உவமையணி.

இரண்டாமடியிலும், நான்காமடியிலும், இனவெதுகை. (௧)

௫௨. நிலையாமை நோய்மூப்புச் சாக்காடென் றெண்ணித்
தலையாயார் தங்கருமஞ் செய்வார்—தொலைவில்லாச்
சத்தமுஞ் சோதிடமு மென்றாங் கிவைபிதற்றும்
பித்தரிற் பேதையா ரில்.

(இ - ள்.) தலை ஆயார் - மேலானவர்கள்,—நிலையாமை - (செல்வம்) நிலையில்லாமலிருத்தலையும், நோய் - (உடம்புக்கு) வியாதிவருதலையும், மூப்பு - கிழத்தனம் உண்டாதலையும், சாக்காடு என்று - மரணம் நேர்தலையும், எண்ணி - ஆராய்ந்து, தம் கருமம் செய்வார் - தாம் செய்யவேண்டுந் தொழிலாகிய துறத்தலையே செய்வார்கள்; (அதனைச் செய்யாமல்), தொலைவு இல்லா - முடிவில்லாத, சத்தமும் - இலக்கண நூலும், சோதிடமும் - கணித நூலும், என்ற இவை - என்று சொல்லப்பட்ட இவற்றை, பிதற்றும் - விடாமற்சொல்லிக்கொண்டு திரிகின்ற, பித்தரின் - பைத்தியம்பிடித்தவர்போல. பேதையார் - அறிவில்லாதவர், இல் - (எங்கும்) இல்லை; (எ-று.)

செல்வங்களும் அவற்றைஅனுபவித்தற்குஉரிய உடம்பும் கெடுந்தன்மையனவாதலைக் கருதி ஞான நூல்களைக்கற்றுத் தேர்ந்து துறவுபூண்டு உய்யாமல், சத்தம் முதலிய நூல்களையே முக்கியமாகக்கொண்டு எப்பொழுதும் பயின்று வீண்காலங்கழிப்பது பேதைமை யென்பதாம்.

தொல்காப்பியவுரையிலும், கலித்தொகையுரையிலும், நச்சினார்க்கினியர் சிக்ஷை வியாகரணம் சந்தஸ் நிருக்தம் ஜ்யோதிஷம் கல்பம் என வேதத்திற்கு அங்கமாகவுள்ள ஆறுசாஸ்திரங்களையும் கூறிவருமிடத்து, சோதிடமென்பதற்கு ஈடாக 'நாராயணீயம் வாராகம் முதலிய கணிதமும்' என்று எழுதியிருத்தல் கொண்டு, சோதிடமென்பது கணித நூலாதல் துணியப்படும். "எண்ணெழுத் திகழேல்," "எண்ணு மெழுத்துங் கண்ணெனத் தகும்," "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப இவ்விரண்டும், கண்ணென்ப வாழு முயிர்க்கு," "எண்ணு மெழுத்துங் கண்" எனப் பலவிடத்தும்

சிறப்பித்துக்கூறப்படுந் தன்மையன வாதலால், மற்றைய சாஸ்திரங்களை யெடுக்காமல் இவ்விரண்டையுமே எடுத்தார். "காணுதம் பாணிநீயஞ்ச ஸர்வஶாஸ்த்ரோபகாரகம்" என வடநூலாரும் இவ்விரண்டங்கங்களையுமே எடுத்துக்கூறுதலுங் காண்க. அறம் முதலிய பொருள்களைக் காணுதற்குக் கருவியாகிய இவற்றை அங்ஙனங் கருவியாகக் கருதாது பயனாகவே எண்ணிப் பாராட்டிப் பயில்பவர், 'பிதற்றும் பித்தர்' என இகழப்பட்டனர். சத்தம் - சங்கீத சாஸ்திரமும், சோதிடம் - கிரகசஞ்சாரத்தால்வரும் பயனை யுணர்த்துஞ் சோதிடசாஸ்திரமு மென்றுங் கொள்ளலாம். 'பித்தரிற் பேதையாரில்' என்றது, இவர் கற்றறிமூட ராதலால். அதிகாரத்தால், 'தம்கருமம்' என்றது - துறவாம்; அன்றியும், அரிய மானிடப்பிறப்பு எடுத்ததன் பயன் முத்திபெறுதலே யாதலால், அதற்குக் காரணமான துறவறம் தம்கருமமேயாம்.

மூப்பு, சாக்காடு - தொழிற்பெயர்கள்; மூ, சா - பகுதிகள்: பு, காடு - விகுதிகள். 'என்று' என்னும் எண்ணிடைச்சொல்லை, 'நிலையாமை' முதலிய நான்கனோடுங் கூட்டுக; [நன் - இடையியல்-௧0.] அவ்வியலில் ஒன்பதாஞ் சூத்திரத்தினால், இது தொகைபெறாமல் வந்தது. தலையாயார் - உத்தமர். ஆயார், ய் - இறந்தகாலவிடைநிலை. தங்கருமஞ் செய்வார் தலையாயார் என மாற்றி, துறவுபூண்பவரே தலைமையானவ ரெனினுமாம். கருமம் - கர்மம்: வடசொல். இல்லா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; வினையெச்சமாகக்கொண்டு, ஒய்வில்லாமல் என்றுமாம். அவை தாம் கற்றுமுடிவதற்கு ஆயுள்போதாதபடி பரந்திருத்தலால், 'தொலைவில்லா' என்றார். சத்தம், சோதிடம் என்பவை - ஶப்தம், ஜ்யோதிஷம் என்பவற்றின் சிதைவுகள். சத்தமென்னுஞ் சொல்லின் பெயர், ஆகுபெயராய், அதனிலக்கணத்தை யுணர்த்தும் வியாகரண சாஸ்திரத்தைக் குறித்தது. 'என்ற' என்னும் பெயரெச்சத்து அகரவீறு தொகுத்தல். ஆங்கு - அசை. இல் - இல்லையென்பதன் விகாரம்; இசசொல் இருதிணையைம்பால் மூவிடங்கட்கும் பொதுவான குறிப்புமுற்றுப்பகாப்பதமாதலால், 'பேதையார்' என்ற பலர்பால் எழுவாயைக் கொண்டது. (உ)

௫௩. இல்லமிளமை யெழில்வனப்பு மீக்கூற்றஞ்
செல்வம் வலியென் றிவையெல்லா—மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு.

(இ - ள்.) தலை ஆயார் - மேலானவர்கள்,—இல்லம் - இல்லறவாழ்க்கையும், இளமை - யௌவனமும், எழில் - வளர்ச்சியும், வனப்பு - அழகும், மீக்கூற்றம் - மேம்பட்ட சொல்லும், செல்வம் - செல்வமும், வலி - வலிமையும், என்ற இவை எல்லாம்—, நிலையாமை - நிலையில்லாமல் அழிதலை, மெல்ல கண்டு - விரையாமல் ஆராய்ந்து அறிந்து, நெடியார் - காலதாமதஞ்செய்யாமல், தாம் உய்ய கொண்டு - தாங்கள் (பிறவித்துன்பம்

நீங்கி) நற்கதிபெற்றுக் கடைத்தேற எண்ணி, துறப்பர் - (இவற்றிற் பற்றை) விடுவார்கள்; (எ - று.)

ஒவ்வொருசமயத்தில் இவற்றினிடத்துஉண்டாகும்வெறுப்பினால் இவை நிலையில்லனவென்று தோன்றும் அறிவு நீடித்துநின்று துறவுக்கு ஏதுவாகா தாதலால், 'மெல்லநிலையாமைகண்டு' என்றார். இல்லம்முதலியன, மனத்தை மயக்கித் துறவறம்பூணவொட்டாமல் தடைசெய்வன. இவற்றின் நிலையா மையை உணர்ந்தா லன்றி இவற்றிற் பற்று விடா தாதலால், 'நிலையாமை கண்டு துறப்பர்' என்றார். திருக்குறளில் 'நிலையாமை' என்னும் அதிகா ரத்தின்பின்பு 'துறவு' என்னும் அதிகாரத்தை வைத்தமையுங் காண்க. இவையெல்லாம் நிலையாமை, இவையெல்லாந் துறப்பர் என இருவகை யாகவுங் கூட்டலாம். நிலையாமைகண்டவிடத்து இல்லம் முதலியவற்றை யொழித்து நிலையுள்ள உயர்கதியைப் பெறமுயலாமல் வாளாஇருக்க மனம் விரும்பா தாதலால், 'நெடியார் துறப்பர்' என்றார்.

'தலையாயார்த்தாமுய்யக் கொண்டு' எனப் பாடமாயின், 'நெடியார்' என்பதை எழுவாயாக்கி, அறிவில்மிக்கவர் தலையாய ஆசிரியரைத் துணை யாகுமாறு கொண்டு துறப்ப ரெனப் பொருள்கொள்ளலாம்.

இல்லம், அம் - சாரியை; இந்த மனையின் பெயர், மனைவாழ்க்கைக்கு இடவாகுபெயர். இல்லம் - குடிப்பிறப்புமாம். இளமையாவது - காமச் செவ்வி நிகழ்வதோர் பருவம். எழில் - எழுச்சி; தொழிற்பெயர்: எழு - பகுதி, இல் - விகுதி. 'எழிலாவது - வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்து மாறியதன்றி இன்னும் வளருமென்பது போன்று காட்டுதல்' என்றார் நச்சினார்க்கினியர். 'வனப்பு' என வருதலால்' இங்கே எழில் - அழகாகாது; இனி. எழில் வனப்பு - ஒருபொருட்பன்மொழியாக மிக்க வனப்புமாம். மீக்கூற்றம் - சொற்செலவு; செல்வாக்கு: அதிகாரத்தோடு கூடிய சொல் என்றபடி; இதற்கு - 'மேன்மையான சொல்லாகிய புகழ்' என்று உரைததால், "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற், பொன்றாதுநிற்ப தொன்றில்" எனப் பிரசித்தமாகவுள்ள புகழின் அழியாததன்மையோடு மாறுபடுமென மறுக்க. கூறப்படுவது, கூற்று; அம் - சாரியை; விகுதியு மாம். வலி - தேகபலம், மனோபலம், சினேகபலம் முதலியன. என்றி வை - பெயரெச்சத்தின் அகரவீறு தொகுத்தல்: இனி, என்று எனப் பிரி த்து, எண்ணிடைச்சொல் லெனினுமாம். நெடியார் - எதிர்மறைமுற் றெச்சம்; நெடு - பகுதி: இ - சாரியை. (௩)

௫௪. துன்பம் பலநா ளுழந்து மொருநாளை
யின்பமே காமுறுவ ரேழையா—ரின்ப
மிடைதெரிந் தின்னாமை நோக்கி மனையா
றடைவொழிந்தா ரான்றமைந் தார்.

(இ - ள்.) ஏழையார் - அறிவில்லாதவர்கள்,—பல நாள் துன்பம் உழந் தும் - பலதினங்கள் துன்பங்களை அனுபவித்தும், ஒரு நாளை இன்பமே -

(அதனாற் பெறப்படுகிற) ஒருநாளைச்சிற்றின்பத்தையே, காமுறுவர் - விரும்புவர்; ஆன்று அமைந்தார் - (அறிவால்) மிக்கு அதற்கு ஏற்ப அடங்கிநிற்பவரோ வென்றால்,—இன்பம் இடை தெரிந்து - அவ்வின்பம் மாறுபடுவதை அறிந்து, இன்னாமை நோக்கி - (அதனால் வருந்) துன்பத்தைக் கண்டு, மனை ஆறு அடைவு ஒழிந்தார் - இல்வாழ்க்கைவழியைச் சேர்தலை விட்டுத் துறந்தார்; (எ - று.)

இல்வாழ்க்கையில் அளவிறந்ததுன்பங்களை அநுபவித்திருக்கவும் அவற்றைக்கருதாமல் மறந்து ஒவ்வொருசமயத்து உண்டாகும் அற்பசுகததையே பாராட்டி விரும்புதல், அறிவிலாா செயல்; அறிவுடையார் அவ்வின்பத்தின் சிறுமையையும், துன்பங்களின் மிகுதியையும் நன்றாகவுணர்ந்து துறந்திடுவர் என்க.

"நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப்பணைத்த பெருஞ்செல்வம்" ஆதலால், அறிவிலார் 'ஏழையார்' எனப்பட்டனர். இன்பமே, ஏ - பிரிநிலையோடு இழிவுசிறப்பு உழந்தும், உம் - இழிவுசிறப்பு. நாளை, ஐ - சாரியை. காமுறு - காமமுறு என்பதன் விகாரம்; 'ஐயுறு' என்பது போல. இடை - இடைதல்: முதனிலைத்தொழிற்பெயர்; இடையூறென்பாரு முளர். இன்னாமை - எதிர்மறைப் பண்புப்பெயர்; இனிமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் இடைஇகரமுங கெட்டு, எதிர்மறை ஆகாரமும் மைவிகுதியும் பெற்று, இன்னாமையென நின்றதென்க. மனை - இடவாகுபெயர். ஆன்று என்னும் இறந்தகாலவினையெச்சததில், சால் என்பதன் மரூஉவாகிய ஆல்-பகுதி; இனி, அகன்று என்பது ஆன்று என மரூஉவாகிய ஆல் - பகுதி; இனி, அகன்று என்பது ஆன்று என மரூஉவாயிற்றென்றலும் ஒன்று. நோக்கி ஒழிந்தார் என இயையும்.

'ஆன்றவிந்தார்' என்றும் பாட முண்டு; பொருள் அதுவே.

மேல் சுO-ஆஞ் செய்யுளும் இதும்போன்ற கருத்துடையதேயாம். (ச)

ருரு. கொன்னே கழிந்தன் றிளமையு மின்னே
பிணியொடு மூப்பும் வருமாற்—றுணிவொன்றி
யென்னொடு சூழா தெழுநெஞ்சே போதியோ
நன்னெறி சேர நமக்கு.

(இ - ள்.) துணிவு ஒன்றி - துணிதலைப் பொருந்தி, என்னொடு சூழாது - என்னோடுகூடி(ச் செய்யக்கடவதை) ஆராயாமல், எழு - (புலன்களின்மேற்) செல்லுகின்ற, நெஞ்சே - மனமே! இளமையும் - யௌவனமும், கொன்னே - வீணாக [மறுமைக்கு வேண்டியதைச் செய்யாமலே], கழிந்தன்று - கழிந்து போயிற்று; இன்னே - இப்பொழுதே, பிணியொடு - வியாதியும், மூப்பும் - கிழத்தனமும், வரும்—; ஆல் - ஆதலால், (இனியாயினும்), நமக்கு—, நல்நெறி சேர - நல்லமுத்திநெறி கிடைக்க, போதியோ -(துறவுக்குச்) செல்லையோ? (எ-று.)— அவசியஞ் செல்லவேண்டுமென்று வேண்டியபடி.

மனத்தின்வழியாகவே ஆன்மா இன்பதுன்பங்களை அனுபவிப்பதனால், தனது இளமையையெல்லாம் இல்வாழ்க்கையிற்கழித்த ஒருவன் பின்னர்த் தன்மனத்திற்குக் கூறியதாக இச்செய்யுள் செய்யப்பட்டதென்று அறிக.

நமக்கு-உனக்கும், எனக்கும்; 'நீ' என்றது, மனம்: 'நான்' என்றது,ஆத்துமா. இனி, நமக்கு நல்லமுத்திநெறி யுண்டாம்படி (துறக்கும்)துணிவுகொண்டு என்னிடத்தில் ஆராயாமல் (எப்பொழுதும் புலன்களின்மேற்)செல்லுதலையே இயல்பாகக்கொண்ட மனமே! இளமையோ கழிந்துவிட்டது; இன்னே பிணியொடு மூப்பும் வரும்; (இவ்வாறானபின்பும் அவ்வாறே புலன்களின்மேற்)செல்வாயோ? என்னுங் கருத்து அமைய உரைகூறுவாருமுளர்.

இன்னே பிணியொடு மூப்பும் வரும் - பிணியோடுகூடிய மூப்பும் விரைவில் வந்துசேரும் என்றுமாம்; இளமைப்பருவத்தில் முதிராமல் அடங்கியிருந்த நோய் தனது வளர்ச்சிக்கு உரியகாலமாதலால் முதுமையில் முதிர்ந்து வெளிப்படு மென்றபடி. கொன் - பயனில்லாமையுணர்த்தும் இடைச்சொல். கழிந்தன்று - இறந்தகால இடைநிலையும், 'அன்' சாரியையும், 'று' விகுதியும், சந்திவிகாரங்களும் பெற்றுவந்த ஒன்றன்பால் வினைமுற்று. 'இன்னே' என்றது, விரைவையும் தேற்றத்தையுங் குறிக்கும்; இன் - இடைச்சொல்: இனியென்பதன் விகார மென்னலாம். இளமையும், மூப்பும்—உம்மைகள் - முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சப்பொருளன. 'துணிவொன்றி' என்பதை, 'போதியோ' என்பதனோடுஞ் சேர்க்கலாம். போதி - முன்னிலையொருமை எதிர்காலமுற்று; இ - விகுதி; "வியங்கோ ளிம் மாரெதிர்வும்" என்றதனால், இதுவே எதிர்காலங்காட்டும்; த் - எழுத்துப்பேறு. (௭)

ருகூ. மாண்ட குணத்தொடு மக்கட்பே றில்லெனினும்
பூண்டான் கழித்தற் கருமையாற்—பூண்ட
மிடியென்னுங் காரணத்தின் மேன்முறைக் கண்ணே
கடியென்றார் கற்றறிந் தார்.

(இ - ள்.) கற்று அறிந்தார் - (நூல்களைக்) கற்று (அவற்றின் பொருளை) அறிந்தவர்கள், 'மாண்ட குணத்தொடு - மாட்சிமைப்பட்ட நற்குணங்களும், மக்கள் பேறு - பிள்ளைகளைப்பெறுதலும், இல் எனினும் - (தன்மனைவிக்கு) இல்லையாயினும், பூண்டான் - மணஞ்செய்துகொண்ட கணவன், கழித்தற்கு அருமையால் - (அவளை) நீக்குதற்குக் கூடாமையாலும்,—பூண்ட - அடைகின்ற, மிடி என்னும் காரணத்தின் - வருத்தமென்கிற காரணம்பற்றியும், மேல் முறைக்கண்ணே - மேலாகிய துறவொழுக்கத்திலே (நின்று), கடி - (விவாகத்தை) நீக்கு,' என்றார் - என்று சொன்னார்கள்; (எ-று.)

நற்குணங்களும் புத்திரபாக்கியமும் இல்லாதிருந்தாலும் மனைவியை விடக்கூடாததாலாலும், மணஞ்செய்தபின் இல்வாழ்க்கையிற் பலதுன்பங்களுண்டாதலாலும், இளமையிலே அவ்வில்வாழ்க்கையை விட்டுத் துறவறம் பூண்பா யென்று பெரியோர்கள் சொன்னார்கள் என்பதாம்; இளமையிலேயே துறத்தற்குக் காரணங் கூறியவாறு.

மாண்டகுணம் - கற்பு, நாண், மடம், அச்சம், பயிர்ப்பு முதலியன. மாண்ட-மாண்பு என்னும் பண்பினடியாய்ப் பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம்; (இச்சொல் இறந்தவெனப் பொருள்படும்பொழுது, இதில் 'மாள்' என்பது - பகுதியாம்.) மக்கட்பேறு - புத்திரபாக்கியம். 'மக்கள்' என்ற சொல்லின் ஆற்றலால், அறிவுள்ள பலபிள்ளைகளைப் பெறுதல் இல்வாழ்க்கைப்பயனு மென்பது விளங்கும். மேன்முறைக்கண்ணே - (மணஞ்செய்தற்கு) முற்பொழுதிலேயே யென்றுமாம். குணம் - வடசொல். மக்கட்பேறு - இரண்டாம்வேற்றுமைத்தொகை. உம் - இழிவுசிறப்பு; இது, மாண்டகுணத்தையும் மக்கட்பேற்றையு முடையளாயின் மனைவியை விடுதல் முற்றுங் கூடாதென்பதை விளக்கும். பேறு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

இனி, 'கற்றுஅறிந்தார்', 'மேல்-முற்காலத்தில், முறைக்கண் - நூல்களில், கடிஎன்றார்-(விவாகத்துக்குக் கடியவேண்டியதென்ற காரணத்தால்) 'கடி'என்றுபெயரிட்டனர்[ஆகவே,விவாகத்தைக்கடிந்து துறக்கவேண்டும்]' என்றும் உரைகூறலாம்; இப்பொருளில், 'கடி' என்ற இடுகுறிப்பெயர்க்குக் கவி சாதுரியமாகக் கடிதற்கு உரியது என்று காரணப்பொருள் கற்பித்துக் கூறியது நிருத்தியென்னும் அலங்காரம்; இது, தமிழில் பிரிநிலைநவிற்சியணி யெனப்படும்.

இளமையிலேயே துறக்கவேண்டு மென்ற ஜைந நூற்கொள்கை இப்பாட்டில் வெளியாம். (சு)

ருஎ. ஊக்கித்தாங் கொண்ட விரதங்க ளுள்ளுடையத்
தாக்கருந் துன்பங்க டாந்தலை வந்தக்கா
னீக்கி நிறாஉ முரவோரே நல்லொழுக்கங்
காக்குந் திருவத் தவர்.

(இ - ள்.) ஊக்கி-முயன்று, தாம் கொண்ட - தாம் ஏற்றுக்கொண்ட, விரதங்கள்—, உள் உடைய - முழுவதுங் கெடும்படி, தாக்கு அருந் துன்பங்கள் - பொறுத்தற்கு அரிய தீங்குகள, தலைவந்தக்கால் - வந்து சேர்ந்தால், நீக்கி - (அத்துன்பங்களைத்) தள்ளி, நிறாஉம் - (அவ்விரதங்களை) நிலைநிறுத்துகின்ற, உரவோரே - மனவலிமையுடையவரே,—நல் ஒழுக்கம் - நல்ல துறவொழுக்கத்தை, காக்கும் - (விடாமற்) காக்கின்ற, திருவத்தவர் - மேன்மையையுடையவர்; (எ-று.)

மனத்தூய்மைக்குச் சாதனமான விரதங்களைத் தொடங்கி அனுஷ்டிக்கும்பொழுது பலவகைஇடையூறுக ளுண்டானாலும் அவ்விரதங்களை நடுவிலே விட்டிடாமல் முடித்துப் பயன்பெறுதல் துறந்தார்க்கு உரிய அறம் என்பதாம்.

விரதங்களாவன - வினைமாசுதீர்ந்து அந்தக்கரணந் தூயதாய் ஞானமுண்டாதற்பொருட்டு இன்னஅறஞ்செய்வேனெனவும், இன்னபாவம் ஒழிவேனெனவும் துறந்தவர் தம்ஆற்றலுக்குஏற்ப வரைந்துகொள்ளும் அருளு

டைமை முதலியன. துன்பங்களாவன - தன்னைப்பற்றி வருவனவும், பிற வுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாம்; இவ ற்றை வடநூலார் முறையே ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்பர்: ஆத்யாத்மிகமென்பது - சரீரத்தைப்பற்றிவருந் தலைநோய் முதலி யனவும், மனத்தைப்பற்றிய காமக்குரோதம் முதலியனவுமாம்; ஆதிபௌ திகமென்பது - மனிதர் விலங்கு பிசாசம் முதலியவற்றால் நேர்வனவாம்; ஆதிதைவிகமென்பது - காற்று மழை இடி வெயில் முதலியவற்றால் நேர்வன வாம். நீக்குதல் - அத்துன்பங்களுக்கு மனத்திற் சிறிதும் இடங்கொடாமை. நிறுத்தல் - நிறைவேறும்படி செய்தல்.

வ்ரதம் - வடசொல். ஊக்கி - ஊக்கங்கொண்டு; ஊக்கு என்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த இறந்தகால வினையெச்சம். உள், தலை - தமிழ்உபசர்க்கங்கள். உள் உடைய - இடையிலே கெட என்றும், தலை வந் தக்கால் - தம்மிடத்து வந்தால் என்றும் கொள்ளலாம். தாக்கரு - தாங் கரு என்பதன் வலித்தல். தாம் - அசை. நிறுவும் என்பது, விகாரப்பட்டு 'நிறூஉம்' என அளபெடுத்தது; சொல்லிசையளபெடை: மாத்திரை மூன்று. திருவததவர்—அத்து, அ-சாரியைகள். ஏ-பிரிநிலையோடு தேற்றம்.

இது ஒருவிகற்ப இன்னிசைவெண்பா. (எ)

௫௮. தம்மை யிகழ்ந்தமை தாம்பொறுப்ப தன்றிமற்
றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா—லும்மை
யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று
பரிவதூஉஞ் சான்றோர் கடன்.

(இ - ள்.) தம்மை இகழ்ந்தமை - (ஒருதீங்குஞ் செய்யாத) தம்மைப் (பிறர்) நிந்தித்ததை, தாம் பொறுப்பது அன்றி - தாங்கள் பொறுத்துக் கொள்வதுமாத்திரமே யல்லாமல், 'எம்மை இகழ்ந்த வினை பயத்தால் - நம் மை நிந்தித்ததனு லாகிய தீவினையின் விளைவினால், உம்மை - மறுமையில், எரி வாய் நிரயதது - தீ நிரம்பிய நரகத்தில், வீழ்வர் - (இவர்) விழுவரே!' என்று—, பரிவதூஉம் - இரங்குவதும், சான்றோர் கடன் - (துறவொழுக் கம்) மிக்கவர்க்குக் கடமையாம்; (எ - று.)

பிறர் தம்மையிகழ்ந்தால் அதனைப் பொறுத்தலோடு,யாதொருதீங்குஞ் செய்யாத தம்மை நிந்தித்ததுகாரணமாக அவர்க்கு நரகம்நேரிடுமேயென்று இரங்குவதும் துறவிகளின்கடமை யென்பதாம்.

தாம் - மாறுசெய்யவல்ல தாங்கள் என்றபடி. எரிவாய்நிரயம் - தப்த கும்பம், கும்பீபாகம் என்பவை போல்வன. நிரயம் - வடசொல். எரிவாய் - எரிகிற வாயையுடைய என்றும், அனலின் தன்மைவாய்ந்த என்றுங் கொள் ளலாம். மற்று - வினைமாற்று. எம்மை என்பது - இயற்கைபற்றிய தனித் தன்மைப்பன்மை: (ஒவ்வொருவரும் தம்மைப்பற்றித் தாம் நினைக்கும் பொழுது பன்மையாகவே நினைத்தல், பெரும்பாலும் இயல்பு; இதனை நினைத்துக் காண்க.) இனி, தம்மைப்போன்றவரையும் உளப்படுத்திய பன்

மை யெனினுமாம். இகழ்ந்த வினை - பெயரெச்சம் காரணப்பொருளது. உம்மை - இம்மை யென்பதன் எதிர்மொழி. இகழ்ந்தமை - இறந்தகாலத் தொழிற்பெயர். பொறுப்பது என்பதில் எதிரது தழுவிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. கொல் - அசை; வினவகையால் இரக்கமுணர்த்துவ தெனினுமாம்: 'இடைச்சொற்கள் வேண்டிய பல பொருள்களையும் விளைத்தற்கு உரியன' என்பது, வடநூலார்கொள்கை; தமிழ்நூலார்க்கும் இது விலக்கன்று. 'பரிவதும்' என நிற்பினுஞ் செய்யுளோசை குன்றுதாயினும், இனியவோசை தருதற்பொருட்டுக் குறில் நெடிலாகி 'பரிவதூஉம்' என அளபெடுத்தது: இன்னிசையளபெடை; மூன்று மாத்திரை. இதில் உம்மை - இறந்தது தழுவியஎச்சத்தோடு, உயர்வுசிறப்புப்பொருளது.

இச்செய்யுளால், சினமின்மையும் பொறையுடைமையும் பிறர் துன்பத்திற்குஇரங்கும்அருளுடைமையும் துறந்தவர்க்குச் சிறந்தவிரதங்க ளென்று கூறியபடி. (அ)

௫௯. மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாவினைக்—கைவாய்க்
கலங்காமற் காத்துய்க்கு மாற்ற லுடையான்
விலங்காது வீடு பெறும்.

(இ - ள்.) மெய்-உடம்பும், வாய் - வாயும், கண் - கண்ணும், மூக்கு - மூக்கும், செவி - காதும், என - என்று, பேர் பெற்ற - பெயர்கொண்ட, ஐ வாய - ஐந்துவழிகளை யுடையதாகிய, வேட்கை அவாவினை - வேட்கையாலாகிய அவாவை, கலங்காமல் காத்து-(அதனால் தனதுமனங்) கலங்காதபடி தடுத்து, கைவாய் - நறவொழுக்கத்தில், உய்க்கும் - (மனத்தைச்) செலுத்துகின்ற, ஆற்றல் உடையான் - வலிமையையுடையவன்,—விலங்காது - தவறாமல், வீடு பெறும் - முத்தியைப் பெறுவான்; (எ - று.)

தனதுமனத்தை ஐம்பொறிகளிற் செல்லவொட்டாதுதடுத்துத் நறவொழுக்கத்திற் செலுத்துகின்றவனுக்கு நிச்சயமாக முத்தி சித்திக்கும் என்பதாம்.

மெய் - ஸ்பரிசேந்திரியம். பேர் - பெயரென்பதன் மரூஉ. ஐவாய - ஐம்பொறிகளை வழியாகவுடைய; வாய-குறிப்புப்பெயரெச்சம். கை - ஒழுக்கம்; வாய் - ஏழனுருபு. வேட்கையாவது - பொருள்களின்மேல் தோன்றும் பற்றுள்ளம். அவாவாவது - அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழும் ஆசை; வேட்கையின்மிகுதி. வேட்கையா லுண்டாகின்ற அவா என மூன்றனுருபு விரிக்க; வேட்கையும் அவாவும் என அல்வழியாகக்கொள்ளுதலும் ஒன்று. அவாவினைக் காத்து - "கதங்காத்துக் கற்றடங்கல்," "செல்லிடத்துக்காப்பான் சினங்காப்பான்" என்பன போல இங்குத் தடுத்தற்பொருளில் வந்தது. வீடு - (எல்லாப் பற்றுக்களையும்) விட்டு அடையும் இட மெனக் காரணப்பெயர்; 'முத்தி' என்னும் வடசொல்

வின்பொருள் கொண்டது. பெறும் - செய்யுமென் முற்று, இங்கே ஆண் பாலுக்கு வந்தது.

இச்செய்யுள், முதலடியில் யகர ஆசெதுகை பெற்றுவந்தது. (௬)

௬0. துன்பமே மீதூரக் கண்டுந் துறவுள்ளா
ரின்பமே காமுறுவ ரேழையா—ரின்ப
மிசைதொறு மற்றத னின்னாமை நோக்கிப்
பசைதல் பரியாதா மேல்.

(இ - ள்.) ஏழையார் - அறிவில்லாதவர்,—துன்பமே மீது ஊர கண்டும் - (இல்வாழ்க்கையில்) துன்பம்மாத்திரமே மேன்மேல் அடுக்கிவரப் பார்த்தும், துறவு உள்ளார் - துறத்தலை நினைத்தலுஞ்செய்யாராய், இன்பமே - (இல்வாழ்க்கையில் உண்டாகுஞ்) சிற்றின்பத்தையே, காமுறுவர் - (பெற) விரும்புவர்; மேல் - (அறிவால்) மேம்பட்டவரோ வென்றால்,—இன்பம் இசை தொறும் - அவ்வின்பம் (தம்மிடத்துக்) கூடும்பொழுதெல்லாம், அதன் இன்னாமை நோக்கி - அவ்வின்பத்தாற் பின்வருந் துன்பத்தை நோக்கி, பசைதல் பரியாது - (அதனை) விரும்புதலைக் கொள்ளார்; (எ - று.)

இப்பாட்டின் இரண்டாம் அடியும், கீழ் ௫௪ - ஆம் பாட்டின் இரண்டாம் அடியும் ஒன்றாயிருக்குமாறு காண்க; இப்படி வெவ்வேறாசிரியர்க்கும் பொருளோடு சொல்லும் ஒற்றுமைப்படுவது, சிறுபான்மை இயல்பு: இதனை, சமகாலத்தில் வேறுவேறு புலவராற் பாடப்பட்ட சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் சிலவிடத்துக் காணலாம்.

இப்பாட்டின் கருத்து இவ்வதிகாரத்து நான்காம் பாட்டோடு ஒத்ததே.

இல்வாழ்க்கையாலுண்டாகுந் துன்பத்தின் அளவைக்காட்டிலும் அதனாலுண்டாகும இன்பம சிறியதாயிருக்க, அதனை அறியமாட்டாமையால் அவரை 'ஏழையார்' என்றார். மற்று, ஆம் - அசைகள். மற்று - வினைமாற்றுமாம். உள்ளார் - எதிர்மறைத் தெரிநிலை முற்றெச்சம். இசைதொறும் - தொறும் என்னும் இடைச்சொல் பெயர்ச்சொல்தன்மைப்பட்டதனால், இசை என்னும் வினைத்தொகை அதனை விசேடித்தது; இசையுந்தோறும் என்பதன் விகாரமாகக் கொள்வாருமுளர். பரியாது என்பதில் பரி என்பது - வடமொழி வினையடி விகாரம். மேல் மேலோர்க்கு. பண்பாகு பெயர். 'மேல்' என்னும் எழுவாய் - பொருளால் உயர்திணைப் பன்மையாயினுஞ் சொல்லால் பால்பகா அஃறிணை யாதலால், 'பரியாது' என்னும் அஃறிணை யொருமை வினைமுற்றைக் கொண்டது. (௬0)

## எ - ஆம் அதிகாரம்.—சினமின்மை.

அதாவது - கோபத்தைச்செய்தற்குக் காரணமாகிய குற்றம் ஒருவனிடத்து உண்டாகிய விடத்தும் அக்கோபத்தை உடைத்தாகாமையை உணர்த்துவது. இது, துறந்தவர்கட்கு உரிய விரதங்களுட் சிறந்ததொன்றாதலால், துறவின்பின் வைக்கப்பட்டது. "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது" என்றபடி சாப அநுக்கிரக சக்தியையுடைய நிறைமொழிமாந்தராகிய முற்றத்துறந்தமுனிவர்களது சினம் தடுக்கப்படாத பலதீமைகளுக்குக் காரணமாகிப் பலர்க்கும் வருத்தத்தை உண்டாக்கிப் பழிபாவங்களைப்பயந்து அக்கோபித்தவரையுந் தவத்தைக்கெடுத்துத் தீக்கதியிற்செலுத்து மாதலின், அத்தகைய சினம் இல்லாமை - துறந்தவர்க்கு முக்கியமான விரதமாயிற்று. திருவள்ளுவனாரும் வெகுளாமையென்னும் அதிகாரத்தைத் துறவறவியலில் வைத்தவாறு காண்க.

௬௧. மதித்திறப் பாரு மிறக்க மதியா
மிதித்திறப் பாரு மிறக்க—மிதித்தேறி
யீயுந் தலைமே லிருத்தலா லஃதறிவார்
காயுங் கதமின்மை நன்று.

(இ - ள்.) மதித்து இறப்பாரும் - (தம்மைக்) கௌரவித்துச் செல்பவரும், இறக்க - செல்க; மதியா - கௌரவியாமல், மிதித்து இறப்பாரும் - (தம்மைக்) கீழ்ப்படுத்திச் செல்பவரும், இறக்க - செல்க; ஈயும் - (அற்பபிராணியாகிய) ஈயும், மிதித்து ஏறி - (யாவரையும்) மிதித்து (அவர்மேல்) ஏறி, தலைமேல் இருத்தலால் - தலையின்மேல் இருத்தலினால், அஃது அறிவார் - அந்த இருப்பை அறிந்தவர், காயும் கதம் இன்மை (பிறரையுந்தம்மையுஞ்) சுடும்படியான கோபத்தை உடைத்தாகாமை, நன்று-நல்லது; (எ - று.)

அறிவுடையவர் பெரியவரை மதிப்பர்; அறிவில்லாதவரோ அவமதிப்பர்; அதற்கு ஈயே திருஷ்டாந்தம்; அவற்றாலுண்டாகும் புகழ்புண்ணியங்களையும் பழிபாவங்களையும் அடைபவர் அவரே யன்றிப் பிறரல்ல: ஆதலால், அவமதித்தவரைக் கோபித்தல் அவசியமன்று என்பது கருத்து.

மிதித்தல் என்றது - இங்கே, வைதல் அடித்தல் முதலியவற்றைக் குறிப்பால் உணர்த்திற்று. இறத்தல் - செல்லுதல். ஈயும், உம்மை - இழிவுசிறப்பு. அஃது அறிவார் காயுங் கதமின்மை நன்று - ஈயின் தன்மையை விவேகமில்லாததென்று அறிந்து அதன்மேற் கோபங் கொள்ளாமை போலத் தம்மையிகழும்அறிவிலார்மேலுங் கோபங்கொள்ளாமை தகுதியென்க. மதித்து இறப்பாரும், உம் - உயர்வுசிறப்போடு எதிரது தழுவிய எச்சம். மிதித்து இறப்பாரும், உம் - இழிவுசிறப்போடு இறந்தது தழுவிய எச்சம். இவற்றை எண்ணும்மைகளாகக் கொள்ளுதல் சிறப்பன்று; வெவ்வேறு வாக்கியங்களில் வந்ததனால்.

அஃதறிவார் என்பதில், ஆய்தம் மெய்போல் ஒலித்தது; வெண்டளை பொருந்த அலகிட்டுக் காண்க. (க)

கூ௨. தண்டாச் சிறப்பிற்றம் மின்னுயிரைத் தாங்காது
கண்டுழி யெல்லாந் துறப்பவோ—மண்டி
யடிபெயரா தாற்ற விளிவந்த போழ்தின்
முடிகிற்கு முள்ளத் தவர்.

(இ - ள்.) அடி பெயராது - வைத்தகாலைப் பெயர்க்கவொட்டாதபடி, ஆற்ற - மிகவும், இளி - தாழ்வு, மண்டி - இடைவிடாது நெருங்கி, வந்த போழ்தின் - வந்த காலத்திலும், முடிகிற்கும் - (அதற்குக் கலங்காமல் ஏற்றுக்கொண்ட விரதத்தை) நிறைவேற்றும்படியான, உள்ளத்தவர் - மனவலிமையையுடைய துறந்தவர்கள்,—தண்டா சிறப்பின் - நீங்காத சிறப்பினையுடைய, தம் இன் உயிரை - தமது இனிய பிராணனை, தாங்காது - தரியாமல், கண்ட உழி எல்லாம் - கண்ட விஷயங்களி லெல்லாம், துறப்பவோ - விடுவார்களோ? [விடார் என்றபடி]; (எ - று.)

இச்செய்யுள், பிறர் தம்மை அவமதித்ததற்காகச் சினந்து உயிரைவிடுஞ் சிற்றறிவினரைக் குறித்துச் சொல்லியதாகச் செய்யப்பட்டதென அறிக.

பேரிகழ்ச்சி நேர்ந்தவிடத்தும் அதைப்பாராட்டாமல் தாம் எடுத்தகாரியத்தையே முடிக்குந் தன்மையுடையோர், கண்ட கண்ட இகழ்ச்சிக்கெல்லாங் கலங்கி உயிரைத் துறவாமற் சாந்தமாகவேயிருப்பர் என்பது கருத்து. முத்தி பெறுதற்கு உரிய தாதலின் 'தண்டாச் சிறப்பி னுயிர்' என்றும், உயிரினும் இனியதொன்று இன்றாதலால் 'இன்னுயிர்' என்றுங் கூறப்பட்டது. தமது உயிரை ஒழித்தாவது மானத்தைப் பாதுகாக்கவேண்டு மென்ற தன்மை இல்லறத்தார்க்குப்போலத் துறவறத்தார்க்கு இன்றியமையாததன்றென மறுத்தவாறு. இம்மைப்பயனாகிய புகழைமாத்திரமே விளைத்தற்கு உரிய மானங்காத்தல் இல்லறத்தார்க்குச சிறத்தலும், முத்திப்பேற்றுக்குக் காரணமாகாத அந்த மானத்தைக் காக்கும்பொருட்டு அரிதிற்கிடைத்த மானிடயாக்கையை விட்டு அதுகொண்டுமுயன்றுபெறுதற்குஉரிய வீடுபேற்றை யிழத்தல் துறவறத்தார்க்குச் சிறவாமையுங் காண்க.

இப்பாட்டிற்கு வேறுவகையாகப் பொருளுங் கருத்துங் கூறலுறின், அதிகாரத்தோடும் துறவறவிலக்கணத்தோடும் பொருந்தாதாம்.

கண்டுழி - விகாரம். ஓ - எதிர்மறை. 'அடி பெயராது' என்பது இழிவின் மிகுதியை விளக்கிற்று. முடிகிற்கும் என்பதற்கு, சந்தர்ப்பத்திற்கு ஏற்ப, முடிக்கிற்கு மெனப் பிறவினையாகப் பொருள்கொள்ளப்பட்டது; இவ்வாறு தன்வினை பிறவினைப்பொருளில் வருவதை வடநூலார் 'அந்தர்ப் பாவித ணிச்' என்பர். முடிகிற்கும்—முடி - பகுதி, கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை, கு - சாரியை, உம் - எதிர்காலப் பெயரெச்ச விகுதி. (௨)

கூரு. காவா தொருவன்றன் வாய்திறந்து சொல்லுஞ்சொ
லோவாதே தன்னைச் சுடுதலா—லோவாதே
யாய்ந்தமைந்த கேள்வி யறிவுடையா ரெஞ்ஞான்றுங்
காய்ந்தமைந்த சொல்லார் கறுத்து.

(இ - ள்.) ஒருவன் - பிறனொருத்தன், தன் வாய் - தனது வாயை, காவாது - காத்துக்கொள்ளாமல், திறந்து - (அதனைத்) திறந்து, சொல்லும் - சொல்லுகின்ற, சொல் - தீச்சொல், ஓவாதே - ஒழியாமல், தன்னை - தம்மை, சுடுதலால் - வருத்துதலினால்,—ஓவாதே - ஒழிவில்லாமல், ஆய்ந்து - (நூல்களை) ஆராய்ந்து, அமைந்த - நிரம்பிய, கேள்வி - நூற்கேள்வியோடு கூடிய, அறிவு உடையார் - ஞானத்தையுடைய துறந்தவர், எஞ்ஞான்றும் - எப்பொழுதும், கறுத்து - கோபித்து, காய்ந்து அமைந்த - உக்கிரமாயுள்ள சொற்களை, சொல்லார் சொல்லமாட்டார்கள்; (எ - று.)

பிறர்கூறிய கடுஞ்சொல் தமக்குத் துன்பந்தருதலையே திருஷ்டாந்தமாகக்கொண்டு தாம் கூறுங் கடுஞ்சொல்லும் இங்ஙனமே பிறரை வருத்துமென்று உணர்ந்து, விவேகிகள், சினந்து பிறர்விஷயத்திற் கடுஞ்சொற்களைக் கூறாரென்பது கருத்து. "தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே, நாவினாற் சுட்ட வடு" என்பராதலால், 'ஓவாதே தன்னைச் சுடுதலால்' என்றார். 'தன்னை,' 'அறிவுடையார்' என வந்தது - ஒருமைப்பன்மை மயக்கம்; வழுவமைதி. [நன் - பொது - ௨௯.]

இனி, இச்செய்யுளுக்கு - துறந்தவனொருவன் தன்வாயைக் காவாமல் திறந்து சினந்து பிறரைச்சொல்லுஞ் சாபச்சொல் அவனது தவத்தைக் கெடுத்து அத்தவத்துன்பத்தோடு பழைய பிறவித்துன்பங்களையும் ஒருங்கே எய்துவித்துச் சொன்ன அவனையே வருத்துதலால், கல்வி கேள்விகளால் நிறைந்த அறிவுடையோர் எப்பொழுதும் அப்படிப்பட்ட சொற்களைக் கோபித்துச்சொல்லார் என்றும் பொருள் கொள்ளலாம்; "தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்கால், தன்னையே கொல்லுஞ் சினம்" என்றார் திருவள்ளுவனாரும்.

எஞ்ஞான்றும் - சினஞ்செய்தற்குக்காரணம் ஒருவனிடத்தில் உளதான பொழுதும் என்றபடி; தம்மை ஒருவன் சொறசெயல்களால் வருத்திய பொழுதும் என்க. ஆய்ந்தமைந்த - நூல்களை ஆராய்ந்து கற்று அடக்கங் கொண்ட என்றும் உரைக்கலாம்; "கற்றறியார் கண்டது அடக்கம்" என்பது மேற்கோளாதலின். கேள்வியாவது-கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார்கூறக்கேட்டல்; கற்றார்க்குக் கல்வியறிவை வற்புறுத்தியும், கல்லாதார்க்குக் கல்வியறிவை உண்டாக்கியும், இது மிகப்பயன்படும். கேள்வி- 'வி' விகுதி பெற்ற தொழிற்பெயர் 'அமைந்த' என்னுஞ் சொல் இரண்டனுள், முன்னது - பெயரெச்சம், பின்னது - அன்சாரியை பெறாத பலவின் பாற்பெயர். எஞ்ஞான்றும், எகரவினா எஞ்சாமைப் பொருளது; உம்மை - முற்று. கறுத்தல் - கோபமுணர்த்தும் உரிச்சொல்; "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள" என்பது தொல்காப்பியம்: இது கருமையென்னும் பண்பின் அடி விகாரப்பட்டு வினைத்தன்மை பெற்றதாம். (௩)

௬௪. நேர்த்து நிகரல்லார் நீரல்ல சொல்லியக்கால்
வேர்த்து வெகுளார் விழுமியோ—ரோர்த்ததனை
யுள்ளத்தா னுள்ளி யுரைத்துரா யூர்கேட்பத்
துள்ளித்தூண் முட்டுமாங் கீழ்.

(இ - ள்.) நிகர் அல்லார் - தமக்கு ஒப்பாகாதவர் [கீழ்மக்களென்ற படி], நேர்த்து - எதிர்த்து, நீர் அல்ல - (சொல்லத்) தகுதியல்லாத சொற்களை, சொல்லியக்கால் - சொன்னால், விழுமியோர் - சிறந்த தறவையுடைய பெரியோர், வேர்த்து - (மனம்) புழுங்கி, வெகுளார் - கோபியார்; கீழ் - கீழ்மக்களோ வென்றால்,—அதனை - அந்நிந்தைச்சொல்லை, உள்ளத்தான் உள்ளி - மனத்தாற் சிந்தித்து, ஓர்த்து - ஆராய்ந்து, ஊர் கேட்ப - ஊரிலுள்ளவரெல்லாருங் கேட்கும்படி, உரைத்து-(பலரோடுஞ்) சொல்லி, உராய்-(சுவர்முதலியவற்றில்) உராய்ந்து, தள்ளி - எழும்பிக்குதித்து, தூண் முட்டும் - தூணில் முட்டிக்கொள்வர்; (எ - று.)

இச்செய்யுள் பெரியோரது தன்மையையும் கீழோரது தன்மையையும் இனியதாகக் கூறுவதனால், தன்மைநவிற்சியணி. இயற்கையை உள்ளபடி கூறியே கற்றறிந்தவரது மனத்தை மகிழ்விப்பதனால், இவ்வணி எல்லாணிகளினுஞ் சிறந்ததெனக் கொண்டாடிக் கூறியுள்ளார், தண்டியாசிரியர்.

முதலடியைப் பின்வாக்கியத்தோடுங் கூட்டுக. வேர்த்து - உடம்பு புழுங்கி யென்றுமாம். வேர்த்தல், உராய்தல், தள்ளுதல், தூண்முட்டுதல் என்னும் இவை - கோபத்தின் மிகுதியால் நிகழ்வன. நேர்த்து, ஓர்த்து - நேர்ந்து, ஓர்ந்து என்பவற்றின் வலித்தல். விழுமியோர் - சிறப்புணர்த்தும் 'விழுமம்' என்னும் உரிச்சொல்லினடியாப் பிறந்த பெயர்; "விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்" என்பது தொல்காப்பியம். விழுமம் என்பது, அம் கெட்டு விழும் என நின்றது; இ - சாரியை. ஊர் - இடவாகு பெயர். உராய் - பகுதியே வினையெச்சமாகநின்றது; "வரிப்புனை பந்து" என்பதில் 'வரி' என்பது போல; இதில், விகுதி முதலியன புணர்ந்து கெட்டன வென்க. இனி, 'உராய்' என்பதற்கு - எங்குஞ்சென்று என்று பொருள்கொள்ளுதலும் ஒன்று. 'கீழ் முட்டும்' என்ற முடிபை, கூ0 - ஆம் பாட்டில் 'மேல் பரியாது' என்றாற்போலக் கொள்க. ஆம் - அசை. அல்ல - பெயர். தூண் - ஸ்தூணு என்னும் வடசொல்லின் திரிபு. (௪)

கூரு. இளையா னடக்க மடக்கங் கிளைபொரு
ளில்லான் கொடையே கொடைப்பய—னெல்லா
மொறுக்கு மதுகை யுரனுடை யாளன்
பொறுக்கும் பொறையே பொறை.

(இ - ள்.) இளையான் - யௌவனமுடையவனது, அடக்கம் - (சிற்றின்பவழியிற் செல்லாமல்) அடங்கியிருத்தலே, அடக்கம் - சிறந்த அடக்கமாம்; கிளை பொருள் இல்லான் - மேல் மேல் வளரும்படியான பொருள் வரும்படி யில்லாதவனது, கொடையே - ஈகையே, கொடை பயன் - சிறந்த ஈகைப்பயனும்; (அவைபோல),—எல்லாம் - எல்லாவற்றையும், ஒறுக்கும் - அழிக்கவல்ல, மதுகை உரன் - (தவ) வலிமையின் மிகுதியை, உடையாளன் - உடைய துறந்தவன், பொறுக்கும் - (சினமில்லாமற் பிறர்செய்த

பிழைகளைப்) பொறுத்துக்கொள்ளுகின்ற, பொறையே - பொறுமையே, பொறை - சிறந்தபொறுமையாம்; (எ - று)

வயதில் முதிர்ந்தவன் வலிமையில்லாமையால் அடங்கியிருத்தலும், அளவிறந்த செல்வமுடையவன் தனது செல்வத்தின் மிகச்சிறிதொருபகுதியைப் பிறர்க்குக் கொடுத்தலும், பிறர்மேற் கோபங்கொண்டு அவரை வருத்துதற்கு வேண்டும் வல்லமை யில்லாதவன் பொறுத்திருத்தலும் இயல்பேயாதலால், அவை விசேஷகுணமென்று கொண்டாடத்தக்கனவல்ல; பொறிகளை வெல்லுதற்கரிய இளமைப்பருவ முடையவன் இந்திரியநிக்கிரகஞ் செய்திருத்தலும், வறியவன் தனக்குக் கிடைத்தவற்றிற் சிறிது பிறர்க்குக் கொடுத்தலும், எவ்வளவு மேம்பட்டோரையும் அழிக்கவல்ல தபோபலமுடையவர் கோபங்கொள்ளாதொழிதலுமே அரியன வாதலாற் கொண்டாடத்தக்கன என்பதாம். இங்ஙனம் பொதுப்பட இப்பாட்டில் மூன்று பொருள்கள் சொல்லப்பட்டிருப்பினும், அதிகாரத்தால், முதலிரண்டுவாக்கியங்களை உபமானமாகவும், மூன்றாவதை உபமேயமாகவும் கொண்டு எடுத்துக்காட்டுவமையணியின்பாற் படுத்துக. 'எல்லா மொறுக்கும்' என்ற அடைமொழியாலும், அதிகாரத்தாலும். 'மதுகையுரனுடையாளன்' என்றது - ஆற்றலாற் பெரியராய அரசரினும் தவத்தாற்பெரியராய முனிவர்க்கு உரியதாம்.

இளையான் - இளமையென்னும் பண்பினடியாப் பிறந்த ஆண்பாற்பெயர்; பண்புப்பெயர் ஈறுபோய் இடை அகரம் ஐயாயிற்று; இனி, இச்சொல் - எதிர்மறைத் தெரிநிலை வினையாலணையும்பெய ராகும்பொழுது, இளைத்திடாதவன் எனப் பொருள்படுதலுங் காண்க. அடக்கம், கொடை, பொறை - தொழிற்பெயர்கள். கிளை பொருள் - வினைத்தொகை. பிரிநிலையேகாரத்தை முதல்வாக்கியத்திலுங் கூட்டுக. (௫)

௬௬. கல்லெறிந் தன்ன கயவர்வா யின்னாச்சொ
லெல்லாருங் காணப் பொறுத்துய்ப்ப—ரொல்லை
யிடுநீற்றாற் பையவிந்த நாகம்போற் றத்தங்
குடிமையான் வாதிக்கப் பட்டு.

(இ - ள்.) (துறந்தவர்),—இடு நீற்றால் - (மந்திரித்து) எறிந்த விபூதியினால், (தடைசெய்யப்பட்டு), பை அவிந்த - படமெடுக்கமாட்டாமல் ஒடுங்கிய, நாகம்போல் - நல்லபாம்புபோல, தம் தம் குடிமையான் - தந்தமது ஆச்சிரமத்துக்கு உரிய ஒழுக்கத்தால், ஒல்லை - விரைவிலே, வாதிக்கப்பட்டு - தடுக்கப்பட்டு,—கல் எறிந்தன்ன - கல்லால்எறிந்தாற்போலத் துன்பஞ் செய்கின்ற, கயவர் வாய் இன்னா சொல் - மூடர்வாயி லுண்டான இனிமையல்லாத [கடுஞ்] சொற்களை, எல்லாரும் காண - பலரும் அறிய, பொறுத்து—, உய்ப்பர் - (தமதுவிரதத்தைச்) செலுத்துவர்; (எ - று.)

மந்திரபூர்வமாக மேலே விபூதியெறியப்பட்ட சர்ப்பம் தன்னை அப்பொழுது பிறர் வருத்தினாலும் அவரைத் தான் சீறித் தீண்டி வருத்தாமல்

தடைக்கு அஞ்சிக் கட்டுப்பட்டு அடங்கிக்கிடத்தல்போல, அடக்கத்துக்கு உரிய துறவறத்தை மேற்கொண்ட பெரியோரும் தம்மைப் பிறர் நிந்தித்தாலும் அவரைத் தாம் கோபித்து வருத்தத் தொடங்காமல் தமது ஆச்சிரமத்தின் தகுதியை நோக்கி அடங்கிநடப்பர் என்பதாம். உவமையணி.

இன்னாச் சொற்களுக்கு 'கல்லெறிந்தன்ன' என உவமைகூறியது, தவறாமல் மிகவருத்தத்தக்கன என்பதற்கு. 'சொல்' எனவே அமைந்திருக்க, 'வாய்' என வேண்டாது கூறியதனால், அவர்வாய் எப்பொழுதும் நல்ல சொற்கள் பயின்றறியாததென அதன் இழிவு விளங்கும். உய்ப்பர் - சினமின்மையென்னும் விரதந் தவறாமல் ஒழுகுவர் என்றபடி. நாகம் - வடசொல்; நகத்தில் வாழ்வதென்று காரணப்பொருள்: நகம் - மரமும், மலையும்.

தத்தம் - தாம் தாம்என்பதன் விகாரமாகிய தந்தம் என்பதன் வலித்தல். குடிமை, மை - தன்மைப்பொருளுணர்த்தும் விகுதி. கயமை - கீழ்மை; 'கயமையாவது - குணங்கள் யாவும் இலாராய கீழோரது தன்மை' என்றார் பரிமேலழகரும்: அதனையுடையவர், கயவர் குடிமையென்பது, உயர்குடிப்பிறப்பிற்கேற்ற ஒழுக்கமெனப் பொருள்படுவதாயினும், இங்கே, இடத்துக்கு ஏற்ப ஆச்சிரமவொழுக்கமாயிற்று. வாதிக்க = பாதிக்க. ஒல்லை பையவிந்த என இயைப்பினுமாம். ஒல்லை - விரைவுணர்த்தும் இடைச்சொல். (கு)

கூஎ. மாற்றாராய் நின்றுதம் மாறேற்பார்க் கேலாமை
யாற்றாமை யென்னா ரறிவுடையோ—ராற்றாமை
நேர்த்தின்னா மற்றவர் செய்தக்காற் றாமவரைப்
பேர்த்தின்னா செய்யாமை நன்று.

(இ - ள்.) மாற்றார் ஆய் நின்று - பகையுள்ளவர்களாய்நின்று, தம் மாறு ஏற்பார்க்கு - தமது பகைமைக்கு உரிய காரியங்களை மேற்கொண்டவர்கள் விஷயத்தில், ஏலாமை - (தாமும் அவற்றை) மேற்கொள்ளாமலிருப்பதை, அறிவுடையோர்—, ஆற்றாமை என்னார் - (துறந்தவர்களுக்கு) வலியில்லாமையென்று இழித்துப்பேசார்; (ஆதலால்), அவர் - அப்பகைவர், ஆற்றாமை - பொறுமையில்லாமல், நேர்த்து - எதிர்த்து, இன்னா - துன்பந்தருவனவற்றை, செய்தக்கால் - (தமக்குச) செய்தால், தாம் - தாமும், அவரை - அவர்களுக்கு, பேர்த்து - மீட்டும், இன்னா செய்யாமை - அக்கொடுமைகளைச் செய்யாதிருத்தல், நன்று - நல்லது; (எ - று.)

தமக்குப் பகைவராய்த் தீங்குசெய்பவர்க்குத் தாம் எதிராய் நின்று தீங்கு செய்யாமை உத்தமக்ஷத்திரியவீரர்க்குப்போலத் துறவறத்தார்க்குத் திறமின்மையென்னும் பழிப்புக்கு இடமாகாது; பிறர் செய்த தீங்குகளைப் பொறுத்து அவர்க்குத் தீங்குசெய்யாமையே தகுதி யென்பதாம்.

மாற்றார் - மாறுதலுடையவர்; ற் - விரித்தல்: (மனத்தை)மாற்றுபவரு மாம். ஏற்பார்க்கு, அவரை என்பன - உருபுமயக்கங்கள். ஆற்றாமை என்னுஞ் சொல் இரண்டனுள், முன்னது - எதிர்மறைத் தொழிற்பெயர்; பின்னது - எதிர்மறைவினையெச்சம். இன்று - பண்படியாகப்பிறந்த எதிர் மறைப் பலவின்பாற்பெயர். மற்று - அசை; வினைமாற்றுமாம். (எ)

௬அ. நெடுங்காலமோடினு நீசர் வெகுளி
கெடுங்கால மின்றிப் பரக்கு—மடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போற் றானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம்.

(இ - ள்.) நீசர் - கீழ்மக்களது, வெகுளி - கோபம், நெடுங் காலம் ஓடி னும் - பலகாலஞ்சென்றாலும், கெடும் காலம் இன்றி - தான் அழியுங் கால மில்லாமலே, பரக்கும் - மேன்மேல் வளரும்; சீர் கொண்ட - சிறப்பைப் பெற்ற, சான்றோர் - (துறவொழுக்கம்மிக்க) மேலோரது, சினம் - கோப மோ வென்றால்,—அடும் காலை நீர் கொண்ட வெப்பம்போல் - காய்ச்சப் பட்டகாலத்தில் ஜலங்கொண்ட சூடுபோல, தானே தணியும் - (பிறர் ஆற்ற வேண்டாமல்) தானாகவே (விரைவில) தணிந்துபோம்; (எ - று.)

அநாதியாய் வருகின்றவாறுபற்றித் துறந்தவர்க்கும் ஓரோவிடத்து வெகுளி தோன்றினும் தோன்றியபொழுதே அதனை அவரது மெய்யுணர்வு அழிக்குமாதலால், இங்ஙனங்கூறினார்; இதுபற்றியே, திருவள்ளுவனாரும் "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயும்" என்றது: "கற்பிளவோ டொப்பர் கயவர் கடுஞ்சினத்துப், பொற்பிளவோ டொப்பா ரும் போல்வாரே—விற்பிடித்த, நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே, சீரொழுகு சான்றோர் சினம்" என்ற மூதுரையையுங் காண்க. சான் றோர்சினம் தானே தணியு மென்றதனால், நீசர்வெகுளி பிறர் பலர் தணிக் கும்படி எவ்வளவு முயன்றாலும் தணியாதென்பது பெறப்படும். 'அடுங் காலை நீர்கொண்டவெப்பம' என்ற உபமானத்தால், "அந்தணரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ், செந்தண்மை பூண்டொழுகலான்" என்ற படி துறவிகள் இயற்கையில் தண்மையான அருளுடையவரென்பதும், அவர் க்குச் சினம் பிறர்செய்யுந் தீங்குபற்றிச் செயற்கையிலாகுவதே யென்பதும் விளங்கும்.

உவமையணி.

ஓடினும், உம் - சிறப்பு. நீசர் - வடசொல். வெகுளி - வெகுளு தல்: 'இ'விகுதி பெற்ற தொழிற்பெயர். காலம் - காலையென விகாரம்; சாமரம் - சாமரை, சரிதம் - சரிதை, வதம் - வதை என்பன போல. நீர், சீர் என்பவற்றை - நீரம், ஸ்ரீ என்னும் வடசொல்லின் சிதைவு என்பர். வெப்பம் - 'பம்' விகுதி பெற்ற பண்புப்பெயர். தணியுமே, ஏ - தேற்றம்; வியப்புமாம். (அ)

கூகூ. உபகாரஞ் செய்ததனை யோராதே தங்க
ணபகார மாற்றச் செயினு—முபகாரந்
தாஞ்செய்வ தல்லாற் றவற்றினாற் றீங்கூக்கல்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கில்.

(இ - ள்.) உபகாரம் செய்ததனை - (தாம்) நன்றிசெய்ததை, ஓராதே - (பிறர்) நினையாமலே, தங்கண் - தம்விஷயத்தில், அபகாரம் - தீங்குகளை, ஆற்ற - மிகுதியாக, செயினும் - செய்தாலும், தாம்—, உபகாரம் செய்வது அல்லால் - (அவர்கட்கு மேன்மேலும்) நன்றிசெய்வதே யல்லாமல், தவற்றினால் - (அவரிடத்து உண்டான) குற்றங்காரணமாக (க்கோபித்து), தீங்கு ஊக்கல் - (தாமும் அவர்க்குத்) தீமைசெய்யமுயலுதல், வான் தோய் குடி பிறந்தார்க்கு - பெருமை பொருந்திய உயர்குலத்திற் பிறந்து துறந்தவர்களுக்கு, இல் - உண்டாகாது; (எ - று.)

தாம் செய்த உபகாரத்தை மறவாமலிருந்து பிரதியுபகாரஞ்செய்யாமையோடு அதனைமறந்து மேலுந் தமக்கு அபகாரத்தை மிகச்செய்தற்குந் தொடங்கிய நீசர்களுக்குத் தாம் அபகாரஞ்செய்யாமையோடு மேன்மேல் உபகாரஞ் செய்தல் துறவிகளியல் பென்பதாம்.

வான் தோய் குடி - (புகழால்) தேவலோகத்தை அளாவிய குடியென்றுமாம்; இனி, ஆகாயத்தையளாவிய குடி யென்ற பொருளால் உயர்ந்தகுடி யென்னுங் கருத்துப்பட 'வான்தோய்குடி' என்றதாகவுங் கொள்ளலாம்: திருக்குறளில் "வானுயர் தோற்றம்" என்பதற்கு - 'வான்போலுயர்ந்த தவவேடம்' என்று பொருள்கூறின பரிமேலழகர் 'வானுயர் தோற்றம் என்பது - "வான்தோய்குடி" என்றாற்போல இலக்கணைவழக்கு' என்றதுங் காண்க. 'குடிப்பிறந்தார்' என்பது - அதிகாரத்தால், துறவறத்தார் மேல் நின்றது. 'வான்தோய் குடி' என்ற தொடர், இந்நூலில் 'குடிப்பிறப்பு' எனனும் அதிகாரததின் இரண்டாஞ் செய்யுளிலும் வந்துள்ளது.

உபகாரம், அபகாரம் - தற்சமவடசொற்கள். ஓராதே, ஏ - தேற்றத்தோடு இரக்கம். செயினும், உம் - இழிவுசிறப்பு.

"இன்னாசெய்தாரை யொறுத்த லவர்நாண, நன்னயஞ் செய்து விடல்," "இன்னாசெய்தார்க்கு மினியவே செய்யாக்கா, லென்னபயத்ததோ சால்பு" என்றவற்றாலும், தீங்குசெய்தார்க்கு எதிர்த்தீங்கு செய்யாமையும், நன்குசெய்தலும் சிறப்பாதல் அறிக. (க)

௭0. கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டுந் தம்வாயாற்
பேர்த்துநாய் கௌவினா ரீங்கில்லை—நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்காற் சொல்பவோ
மேன்மக்க டம்வாயான் மீட்டு.

(இ - ள்.) நாய்—, கூர்த்து - கோபம்மிக்கு, கௌவிக்கொள - (தம் உடம்பைக்) கடித்துப்பிடிக்க, கண்டும் - பார்த்தும், தம் வாயால்—, பேர்

த்து நாய் கௌவினார் - மாறுபட்டு நாயைக் கடித்தவர்கள், ஈங்கு - இவ்வுலகத்தில், இல்லை—; (அதுபோல), கீழ் மக்கள் - அற்பர்கள், நீர்த்து அன்றி - குணமுடைய சொல் ஒன்றையுஞ் சொல்லாமல், கீழ் ஆய - தாழ்வாகிய சொற்களையே, சொல்லியக்கால் - சொன்னால், மேல் மக்கள் - மேலோர் [சிறந்தவர்], தம் வாயால்—, மீட்டு சொல்பவோ - மாறாக (அப்படிப்பட்ட சொற்களை)ச் சொல்வார்களோ? [சொல்லா ரென்றபடி]; (எ - று.)

கீழோர் தம்மை வைதால் மேலோரும் அவரைக்கோபித்து எதிர்வைதல், நாய்கடித்தால் அதனை எதிரிற் கடித்தல்போலத் தகுதியற்ற தென்பதாம். "நீர்த்தகவில்லார் நிரம்பாமைத் தம் நலியில், கூர்த்தவரைத் தாம் நலிதல் கோளன்றால் சான்றோர்க்குப், பார்த்தோடிச் சென்று கதம்பட்டு நாய் கௌவிற், பேர்த்து நாய் கௌவினா ரில்" என்ற பழமொழிச் செய்யுளோடு இதனை ஒப்பிடுக. கீழ்மக்கட்கு நாயுவமை கூறியது, அவர்களிழிவை நன்கு புலப்படுத்தற்கு.

'சொல்ப' எனவே அமைந்திருக்க, 'தம்வாயால்' என வேண்டாது கூறினார், அவர்கள்வாய் நல்ல சொற்களையே பயின்ற தெனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு; இங்ஙனம் நுட்பமாகக் கருத்துக் கொள்ளுதல், வடநூலில் தாத்பரியம் எனப்படும்: "ஒழுக்கமுடையவர்க் கொல்லாவே தீய, வழுக்கியும் வாயாற் சொலல்" என்ற திருக்குறளிலும் இங்ஙனங் காண்க.

ஈங்கு - இங்கு என்னுஞ் சுட்டிடைச்சொல் நீண்டது. நீர்த்து - நீர்மை யென்னும் பண்பினடியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். ஆய - பெயர்.

உபமான உபமேயங்களைத் தனித்தனி நிறுத்தி அவற்றின் இடையில் உவமையுருபுகொடாமற் பிம்பப்பிரதிபிம்ப பாவந் தோன்றக் கூறினமையால், இது - எடுத்துக்காட்டுவமையணி; இதனை வடநூலார் 'த்ருஷ்டாந்தாலங்காரம்' என்பர். (௭0)

துறவறவியல் முற்றிற்று.

## இரண்டாவது

# இல்லறவியல்.

செல்வநிலையாமை முதல் எழதிகாரங்களால் அறத்துப்பாலின் முதற் கூறாகிய துறவறங் கூறி, இனி அதன் இரண்டாங்கூறாகிய இல்லறம் கூறுவான் தொடங்கினார். இல்லறமாவது—'இம்மை மறுமையாகிய இருமையின்பங்களையும் அனுபவித்தற்குஉரிய இல்வாழ்க்கைநிலைக்குச் சொல்லுகின்ற நெறியில் நின்று, அதற்குத் துணையாகிய கற்புடைமனைவியோடுஞ் செய்யப்படும் தருமம்' என்றும். 'பொறையுடைமை முதல் ஆறு அதிகாரங்கள் இல்லறவியல்' என்றும், இதனை "அறவியலிருவகைத்தா மவைதம்முள், துறவே யில்லறமிருமூன் றென்ப" என்ற பழைய உரைச்சூத்திரத்தானுணர்க' என்றும் முன்னரே உரைப்பாயிரத்தில் உரைத்தவாற்றால் இதன் பொருள் முதலியன இனிது விளங்கும்.

## அ - ஆம் அதிகாரம்.—பொறையுடைமை.

அதாவது - காரணம்பற்றியாவது அறியாமையாலாவது ஒருவன் தமக்குக் குற்றஞ் செய்தவிடத்துத் தாமும் அதனை அவனிடத்துச் செய்யாமற் பொறுத்தலை யுடையவராதல். இல்வாழ்பவர்க்கு உரிய பலகுணங்களிலும் இது இன்றியமையாச சிறப்புடைய தாதலின், இல்லறவியலின் முதலில் வைக்கப்பட்டது. திருவள்ளுவனாரும் பொறையுடைமை யென்னும் அதிகாரத்தை இல்லறவியலில் வைத்தவாறு காண்க. சினமின்மையும் பொறையுடைமையும் வெவ்வேறு இயலின்பாற் பட்டன வாதலால், இது கூறியது கூற லாகாது.

எக. கோதை யருவிக் குளிர்வரை நன்னாட
பேதையோ டியாது முரையற்க—பேதை
யுரைப்பிற் சிதைந்துரைக்கு மொல்லும் வகையான்
வழுக்கிக் கழிதலே நன்று.

(இ - ள்.) கோதை - மாலைபோல விழுகின்ற, அருவி - நீரருவிகளையுடைய, குளிர் - குளிர்ச்சிபொருந்திய, வரை - மலைகளையுடைய, நல் - சிறந்த, நாட - பாண்டியநாட்டையுடைய அரசனே!—பேதையோடு - அறிவில்லாதவனோடு, யாதும் - எதையும், உரையற்க - சொல்லாதிருக்கக்கடவை; உரைப்பின் - சொன்னால், பேதை - அவ்வறிவில்லாதவன், சிதைந்து உரைக்கும் - வரம்பழிந்து பேசுவான்; (ஆதலால்), ஒல்லும் வகையான் - கூடிய விதத்தால், வழுக்கி - தப்பி, கழிதலே - (அவனது தொடர்ச்சியினின்று) நீங்குதலே, நன்று - நல்லது; (எ - று.)

தம்மோடு கலந்த அறிவில்லாதவனொருவன் தமக்கு யாதாயினும் ஒரு பிழையைச் செய்தால் அதற்காகக் கோபித்து அவனை ஒன்றுஞ் சொல்ல லாகாது; சொன்னால் அவன் மேன்மேல் எதிர்த்துப்பேசி இகழ்வான்; ஆத லால், சமயம்பார்த்து விரோதமில்லாமலே அவனது தொடர்ச்சியை விட்டு விடுதலே நல்லது என்பது கருத்து.

நாட்டின் நிலவளத்துக்கு முக்கியகாரணமாகிய நீர்வளத்துக்கு இடமா தலின், மலையின்செழிப்பைக் கூறினர். இதனால், மருதநிலமாகிய அந்நாட் டை அடுத்துள்ள குறிஞ்சிநிலமாகிய மலையின் மாட்சி விளங்கும்; "இருபுன லும் வாய்ந்த மலையும் வருபுனலும், வல்லரணும் நாட்டிற்கு உறுப்பு" என்ற திருக்குறளினாலும், 'இடையதன்றி ஒருபுடையதாதலும், தன்வளந்தருத லும், மாரிக்கண் உண்டநீர் கோடைக்கண் உமிழ்தலு முடைமைபற்றி 'வாய் ந்தமலை' என்றார்' என்ற அதன் உரையாலும், மலை நாட்டிற்கு அவயவமாத லும் நிலவளத்துக்கு இன்றியமையாத நீர்வளத்துக்குக் காரணமாதலுங் காண்க.

'கோதையருவிக்குளிர்வரைநன்னாட' என்பது, ஆறேழுன்னிலை.

குளிர்வரை - வினைத்தொகை. வரை - கணு: அதனையுடைய மூங்கில் விளையும் மலைக்கு இருமடியாகுபெயர். பேதை - அறியாமை; பேதைமை யென்னும் பண்பின் அடி: இங்கே, அறிவில்லாதவனுக்கு, பண்பாகுபெயர். பேதையோடியாதும் - குற்றியலிகரம். உரைப்பின் - எதிர்காலவினையெச் சம்; ப் - எழுத்துப்பேறு: எதிர்காலவிடைநிலையன்று; விகுதியே காலங் காட்டுதலினால். ஒல்லும்வகை, ம் - மகரக்குறுக்கம். நன்று - ஒன்றன் பாற்குறிப்புமுற்று.

"இலக்கு நீண்முடி யிந்திரன் மார்பின்மேல், விலங்கி வீழ்ந்த முத் தாரமும் போன்றவை" என்றார், சிந்தாமணியிலும். (க)

எ௨. நேரல்லார் நீரல்ல சொல்லியக்கால் மற்றது
தாரித் திருத்த றகுதிமற்—றோரும்
புகழ்மையாக் கொள்ளாது பொங்குநீர் ஞாலஞ்
சமழ்மையாக் கொண்டு விடும்.

(இ-ள்.) நேர் அல்லார் - (தமக்கு) ஒப்பாகாதவர் [கீழ்ப்பட்டவர்என்ற படி], நீர் அல்ல - நற்குணத்தையுடையனவாகாத சொற்களை, சொல்லியக் கால் - சொன்னால், அது - அவ்வாறுசொன்னதை, தாரித்திருத்தல் - பொறுத் திருத்தலே, தகுதி - (மேலோர்க்குத்) தக்கதாம்; மற்று - அதற்கு வேறாகிய பொறுமையின்மையை, பொங்கு நீர் ஞாலம் - மிக்க நீரையுடைய கடலாற் சூழப்பட்ட பூமியி லுள்ள உயர்ந்தவர், புகழ்மை ஆ கொள்ளாது - புகழுக் குக்காரணமாக எண்ணாமல், சமழ்மை ஆ கொண்டுவிடும் - பழித்தற்குக்கார ணமாக எண்ணிவிடுவர்; (எ-று.)

"சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப்பது கடனே" என்பவாதலால், கீழோர்சொன்ன தகுதியில்சொற்களைப் பொறு

த்தலே புகழாம்; பொறுது தாமும் தகுதியில்சொற் கூறினல் அது கீழ்மையின்பாற்பட்டுப் பழிப்புக்கு இடமாமென்க.

ஆ-ஆக என்பதன் விகாரம்; இது "சாவவென் மொழியீற்று உயிர்மெய் சாதலும் விதி" என்றதன் உபலக்ஷணத்தாற் கொள்ளத்தக்கது. தாரித்து-தரித்து. நேர்அல்லார்-செவ்வையான குணமில்லாதவ ரென்றுமாம். அல்ல-பெயர். முதலடியில், மற்று - அசை. இரண்டாமடியில், மற்று - அவ்வாறு பொறுத்திராமல் தாமும் அப்படிப்பட்டசொற்களை எதிரேசொன்னல் அது என்னும்பொருளைத் தந்ததனல்.பிறிது என்னும் பொருளது. 'ஒரும்'-அசை; "அஞ்சுவ தோரு மறனே" என்றவிடத்துப் போல: [நன் - இடை - உஉ.] புகழ்மை, சமழ்மை என்பவற்றில், மைவிகுதி - தன்மைகுறித்தது. பொங்கு நீர் - வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. "உலகமென் பது உயர்ந்தோர் மாட்டே" என்பதனல், ஞாலம் - இங்கே, உயர்ந்தோரை உணர்த்திற்று. ஞாலம் கொண்டுவிடும் - சொல்நிலைநோக்கிய முடிபு. (உ)

எங. காதலார் சொல்லுங் கடுஞ்சொ லுவந்துரைக்கு
மேதிலா ரின்சொலிற் றீதாமோ—போதெலா
மாதர்வண் டார்க்கு மலிகடற் றண்சேர்ப்ப
வாவ தறிவார்ப் பெறின்.

(இ - ள்.) போது எலாம் - பூக்களிலெல்லாம், மாதர் வண்டு - அழகிய வண்டுகள், ஆர்க்கும் - ஆரவாரிக்கப்பெற்ற, மலி கடல் தண் சேர்ப்ப-நிறைந்த கடலின் குளிர்ச்சியான கரையையுடைய அரசனே !—ஆவது அறிவார் பெறின்-(ஒன்றினல்) உண்டாவதாகிய பயனை (நல்லது தீயது என்று) பகுத்தறிபவரைப் பெற்றால்,—காதலார் சொல்லும் கடுஞ் சொல் - (தம்மிடம்) அன்புள்ளவர் சொல்லுகிற கொடியசொல், ஏதிலார் உவந்து உரைக்கும் இன்சொலின் - விரோதிகள் மகிழ்ந்து சொல்லுகின்ற இனிய சொல்லைப் போல,தீது ஆமோ - தீமையைத் தருவதொன்றாகுமோ? (எ-று.)—ஆகாது, நன்மையையேதரும் என்றபடி.

அன்புள்ள நண்பர் தற்காலத்தில் இனியனவாகாமல் வெறுக்கத்தக்க சொற்களைச் சொன்னலும் அவை பிற்காலத்தில் நன்மையையேதரும்; அன்பில்லாத பகைவர் செவிக்கினிய சொற்களையே சொன்னலும் அவை விரைவில் தீமையைத்தரும்; இத்தன்மை, சொல்லின்பயனை அறிவார்க்கு நன்கு விளங்கும்; ஆதலால், வேண்டியவர் கடுஞ்சொற்சொன்னலும் பயன்நோக்கிப் பொறுக்கவேண்டு மென்பது, கருத்து. "இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னர், கனியுமொழியுங்கடுவே-யனல்கொளுந்தும், வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்,சிங்கி குளிர்ந்துங் கொலும்", "மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர், பேசுற்ற வின்சொல் பிறிதென்க - ஈசற்கு, நல்லோ னெறிசிலையோ நன்னுதா லொண்கருப்பு, வில்லோன்மலரோ விருப்பு" என்றார் பின்னோர்களும்.

கடுஞ்சொல்-செவிக்குஇன்னாதசொல். போது - மலரும் பருவத்து அரு ம்பு. அறிவார்ப்பெறின் - இயல்பின் விகாரமாய்ப் பகரம் மிக்கது. 'போதெ லாம்மாதர்வண்டார்க்கும்'என்பது, நெய்தல்நிலமாகிய கடற்கரையின் வளத் தைச் சிறப்பித்தது. பெறுதலின் அருமைதோன்ற, 'பெறின்' என்றார்.(ங)

எச. அறிவ தறிந்தடங்கி யஞ்சுவ தஞ்சி
யுறுவ துலகுவப்பச் செய்து—பெறுவதனா
லின்புற்று வாழு மியல்புடையா ரெஞ்ஞான்றுந்
துன்புற்று வாழ்த லரிது.

(இ-ள்.) அறிவது - அறியவேண்டியதை யெல்லாம், அறிந்து—,அட ங்கி-பொறுமைக்குணமுடையராய், அஞ்சுவது-அஞ்சத்தக்க பழிபாவங்களு க்கு, அஞ்சி - பயந்து, உறுவது - தாம்செய்யுங் காரியத்தையெல்லாம், உலகு உவப்ப-உலகத்தவர் மகிழும்படி, செய்து—,பெறுவதனால் - அதனாற் பெறும் பயன்களால், இன்பு உற்று - இன்பமடைந்து, வாழும் - வாழ்கின்ற, இயல்பு உடையார்-தன்மையையுடையவர், எஞ்ஞான்றும் - எப்பொழுதும், துன்பு உற்று வாழ்தல் - துன்பமடைந்து வாழ்தல், அரிது - இல்லை; (எ-று.)

" அறிவுடையா ராவதறிவார்," "கற்றறிவார் கண்டதடக்கம்," "அஞ் சுவதஞ்சாமைபேதைமை யஞ்சுவ தஞ்ச லறிவார்தொழில்." "உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங் கல்லா ரறிவிலாதார்" என்பன, இங்குக் காணத்தக்கன.

இப்பாட்டில் அறிவுடைமை, தீவினையச்சம், ஒப்புரவுசெய்தல், நிரம் பியமனமுடைமை என்ற பிறபொருள்களுங்கூறப்பட்டிருந்தாலும்,'அடங்கி' என்றதைப் பிரதானமாகக்கொண்டு, இப்பாட்டு இவ்வதிகாரத்திற் சேர்க் கப்பட்டதென்க.

அறிவது, அஞ்சுவது, உறுவது, பெறுவது - சாதியொருமை. உலகு- லோகமென்னும் வடசொல்லின் திரிபு; இது, இடத்தையும் மக்களையும் உணர்த்தும். 'அரிது' என்பதில், அருமை - இன்மைகுறித்தது. (ச)

எரு. வேற்றுமை யின்றிக் கலந்திருவர் நட்டக்காற்
றேற்றா வொழுக்க மொருவன்க ணுண்டாயி
னாற்றுந் துணையும் பொறுக்க பொறானாயிற்
றூற்றாதே தூர விடல்.

(இ - ள்) இருவர் - இரண்டுபேர், வேற்றுமை இன்றி - மனவேறுபாடு இல்லாமல் [ஒற்றுமையாக], கலந்து-சேர்ந்து, நட்டக்கால் சிநேகித்தால், (பின்பு), ஒருவன்கண் - (அவ்விருவருள்) ஒருவனிடத்து, தேற்றா ஒழுக்கம்- நம்பத்தகாத தீயநடத்தை,உண்டு ஆயின் -உண்டாகுமானால், (மற்றொருவன்), ஆற்றும் துணையும்-(தன்னாற்) பொறுக்கக்கூடியமட்டும், பொறுக்க-பொறுக் கக்கடவன்; பொறான் ஆயின் - பொறுக்கமாட்டாமற்போனால், தூற்றாதே-

(அவனது தீயொழுக்கத்தைப்) பலரும்அறிய வெளிப்படுத்தாமல், தூர விடல்-(அவனது சிநேகத்தைத்) தூரத்தில் விடக்கடவன்; (எ-று.)

நட்டக்கால்—நள்-பகுதி, ளகரம் டகரமானது - சந்தி, ட்-எழுத்துப் பேறு, அ - சாரியை, க்-சந்தி, கால் - விகுதி. தேற்று என்பதில், பகுதியாகிய தேற்று என்பதைத் தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொதுவென்றாவது, பிறவினை தன்வினைப்பொருளில் வந்ததென்றாவது, தேறுஎன்ற தன்வினையினிடையில் றகரமெய் விரித்தல்விகார மென்றாவது கொள்க; "சில சொல்லல் தேற்றாதவர்," "வாளினாற் பேசினல்லால் வாயினாற்பேசல் தேற்றேன்," "தேற்றாய் பெரும பொய்யே" எனப் பிறபல இடங்களிலும் இவ்வாறு வரும். தூரவிடல் என்றது, உலகவழக்கு; இனி, தூர - (அவனது நட்புத்) தூர்ந்துபோமபடி [அழியும்படி], விடக்கடவனென்றும் பொருள்கொள்ளலாம். விடல் - அல்லீற்று உடன்பாட்டு வியங்கோள்.

இது - ஒருவிகற்பஇன்னிசைவெண்பா.　　(௬)

எசு. இன்னா செயினு மினிய வொழிகென்று
தன்னையே தானோவி னல்லது—துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ள லரிது.

(இ-ள்.) கானகம் நாட-காடுசெறிந்த நாட்டையுடையவனே!—இன்னா செயினும் - (தன்னோடு சிநேகித்தவர் தனக்கு) இனிமையல்லாத [துன்பந்தருகிற] காரியங்களைச் செய்தாலும், இனிய ஒழிக என்று-(அவை) இனியனவாய்விடக்கடவன என்று எண்ணிப்பொறுத்து, தன்னையே தான் நோவின் அல்லது-(அவர் அவ்வாறு செய்தற்குக் காரணமாய் முற்பிறப்பில் தீவினை செய்துள்ள) தன்னையே தான் வெறுத்துக்கொள்வதே யல்லாமல், துன்னி கலந்தாரை - நெருங்கி நட்புக்கொண்டவரை, கைவிடுதல் - விட்டுவிடாதே; (ஏனென்றால்),—விள்ளல்-(சினேகித்தபின்பு ஒன்றைவிட்டு ஒன்று) பிரிதல், விலங்கிற்கும் - (பகுத்தறிவில்லாத) மிருகங்களுக்கும், அரிது - அருமையையுடையது, (ஆதலால்); (எ-று.)

"கூடிப் பிரியேல்"என்றார் ஒளவையாரும். இனி, இனிய ஒழிக என்று என்பதற்கு-அவற்றை இனியனவாக எண்ணிச் சினமொழிவாயாக வென்று மனத்தைநோக்கிச் சொல்லியென்றும், தன்னையே தான் நோவின் அல்லது என்பதற்கு - (முன்னே செவ்வையாக ஆராயாமல் அவரது நட்பை ஏற்றுக்கொண்ட) தன்னையே தான் வெறுத்துக்கொள்வதல்லாமலென்றுங் கொள்ளலாம்.

'கானகநாட' என்று, நாட்டிற்கு உறுப்பாய் அதற்கும் அரசனுக்குங் காவலாகுஞ் சிறப்புடைய நால்வகையரண்களுள் ஒன்றாகிய காட்டரணின் அமைதியைக் கூறியவாறு; "அணிநிழற் காடு முடைய தரண்" என்றார் திருவள்ளுவனாரும். விலங்கு - 'திர்யக்' என்னும் வடசொல்லின் பொருள் கொண்டது: குறுக்காக உடம்பமையப்பெற்ற தென்பது பொருள்.

கைவிடுதல் = கைவிடல் - எதிர்மறை ஏவலொருமை முற்று; து - வேண்டாவழிச் சாரியை: இனி, 'து' என்னுஞ் சாரியையை இடையிற் பெற்ற 'அல்' ஈற்று எதிர்மறை வியங்கோ ளெனினுமாம்; இனி, 'அல்' விகுதிபெற்ற வியங்கோள்போல, 'தல்' விகுதிபெற்ற வியங்கோளும் உடன் பாட்டோடு எதிர்மறைக்கும் வருமெனக் கொள்ளுதலும் ஒன்று. அன்றி, 'கைவிடுதல்' என்பதைத் தொழிற்பெயராகவே கொண்டு, 'கூடாது' என் னும்முற்று வருவித்துமுடித்தல் நேராம். 'அரிது' என்பதனையே 'கைவிடுதல்' என்னுந் தொழிற்பெயர்க்கும் பயனிலையாகக்கொண்டு கூட்டிமுடித்தல் எளியவழி. இன்னு, இனிய - பெயர்கள். ஒழிகென்று - வியங்கோளின் ஈற்றுஅகரம் தொகுத்தல். சான் - சாதநம் என்னும் வடசொல்லின் திரிபு. உம் - இழிவுசிறப்பு. (சு)

எஎ. பெரியார் பெருநட்புக் கோடறுஞ் செய்த
வரிய பொறுப்பவென் றன்றோ—வரியரோ
வொல்லெ னருவி யுயர்வரை நன்னாட
நல்லசெய் வார்க்குத் தமர்.

(இ - ள்.) ஒல் என்-ஒல்லென்று ஒலிக்கிற, அருவி-நீரருவிகளையுடைய, உயர்-உயர்ந்த, வரை - மலைகளையுடைய, நல் நாட-சிறந்த நாட்டையுடைய அரசனே!—பெரியார் பெரு நட்பு-(அறிவு ஒழுக்கங்களாற்) பெரியோரது மேன்மையான சிநேகத்தை, கோடல் - (யாவரும் விரும்பிக்) கொள்ளுதல், தாம் செய்த—, அரிய - (பொறுப்பதற்கு) அரிய குற்றங்களை, பொறுப்ப - பொறுத்துக்கொள்வார்கள், என்று அன்றோ - என்று எண்ணி யல்லவோ? நல்ல செய்வார்க்கு - நல்லவைகளையே செய்பவர்களுக்கு, தமர் - நண்பராகு பவர், அரியரோ-(கிடைத்தற்கு) அரியரோ? [அல்லர், எளிதிற் பலர் கிடைப் பர் என்றபடி]; (எ - று.)

தம்மைச் சேர்ந்தவர்கள் அதிக குற்றங்களைச் செய்தாலும், தாம் அவற் றைப்பொறுத்தல் பெரியோரியல்பு; குற்றமொன்றேனுஞ் செய்யாமல் நன் மைகளையே செய்பவர்களுக்கு எவரும் நட்பாவ ராதலால், அது விசேஷ மன்று என்பதாம்.

கோடல் - தொழிற்பெயர்; கொள் - பகுதி, தல்-விகுதி, பகுதி முதல் நீண்டது - விகாரம், தகரம் டகரமானவிடத்து ளகரம்கெட்டது - சந்தி. அரிய, நல்ல - பெயர். அன்று, ஒ - தேற்றம். அரியரோ, ஒ - எதிர்மறை. ஒல்லெனல் - ஒலிக்குறிப்பு.

உயர்வரை - வினைத்தொகை; உயர்ந்த உயர்கிற உயரும் என விரியும்; உயர்வாகிய வரையென விரித்துப் பண்புத்தொகையெனக் கொள்ளுதல், பொருளமைதிக்குப் பொருந்துமாயினும் சொல்லிலக்கணத்துக்குப்பொருந் தாது: உயர் என்பது வினைப்பகுதியாதலாலும், காலந்தோன்றநிற்றலாலும் எனக் காண்க. உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் தொல்காப்பிய

வுரையில் 'உயர்திணையென்பது-உயர்ந்த ஒழுக்கமென இறந்தகால வினைத்தொகை;இதனைப் பண்புத்தொகை யென்பாரும் உளர்:அது பொருந்தாது; என்னை? இது காலந்தோன்ற நிற்றலின்' என்றவாறு அறிக. செந்தாமரை யென்பதை,செம்மையையுடைய தாமரையெனவிரித்து இரண்டாம்வேற்றுமை யுருபும்பயனுமுடன்தொக்க தொகையாகக்கொள்ளுதல் பொருளமைதிக்குப் பொருந்துமாயினும், சொல்லமைதிக்கு அது பொருந்தாமல், செம்மையாகிய தாமரையென விரித்துப் பண்புத்தொகையாகக் கொள்ளுதலே பொருந்துமாறுபோல, தொடர்கூறவேண்டுமிடத்தெல்லாம் பொருளமைதி மாத்திரத்தையே நோக்காது பொருட்பொருத்தம், சொல்லிலக்கணம் என்னும் இரண்டற்கும் மாறுபடாத வழியைத் தழுவுதலே முறைமையென்க.()

௭௮. வற்றிமற் றாற்றப் பசிப்பினும் பண்பிலார்க்
கற்ற மறிய வுரையற்க—வற்ற
மறைக்குந் துணையார்க் குரைப்பவே தம்மைத்
துறக்குந் துணிவிலா தார்.

(இ - ள்.) வற்றி - (உடம்பு) உலர்ந்து, ஆற்ற பசிப்பினும் - மிகவும் பசித்தாலும், பண்பு இலார்க்கு - குணமில்லாதவர்களுக்கு, அற்றம்-(தமது) வறுமையை, அறிய - (அவர்) அறியும்படி, உரையற்க - சொல்லாதொழிக; தம்மை துறக்கும் துணிவு இலாதார் - (விசேஷ சங்கடகாலங்களில்) தம் உயிரை மாய்த்துவிடும் மனவுறுதியில்லாதவர், அற்றம் - (தமது) வறுமையை, மறைக்கும் துணையார்க்கு - நீக்கவல்ல தன்மையையுடைய நண்பர்க்கு, உரைப்ப - சொல்லுவர்; (எ - று.)

மிக்கவறுமை நேர்ந்தவிடத்தும், உயிர்போனாலும் போகவென்று பொறுத்துக்கொண்டிருப்பதே, பொறுமை; அவ்வாறன்றிப் பிறரோடுசொல்லத் துணிந்தாலும், அதனை வெளியிடாமல் நீக்கவல்லவர்க்குச் சொல்லலாமே யல்லாமற் பிறர்க்குச் சொல்லலாகாதென்பது, கருத்து.

மற்று - அசை; வினைமாற்றுமாம். மறைத்தலென்பது - நீக்குதலென்னும் பொருளதாதலை, "தம்வயிற்குற்றம் மறையாவழி" எனத் திருக்குறளினுங் காண்க: இனி, இரட்டுறமொழிதலென்னும் உத்தியால், மறைத்தல் என்பதற்கு - வெளியிடாதொழிதல் என்ற பொருளும் இங்குப்பொருந்துமாறு காண்க. பண்பாவது - எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல்; "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்றார் கலித்தொகையிலும். அற்றம் - எல்லாப்பொருள்களும் அறுதல்: இல்லையாதல்; தொழிற்பெயர்; அறு - பகுதி, அம் - விகுதி, ற் - விரித்தல். ஏ - அசை.

இச்செய்யுள் - பொறுத்தலென்கிற சம்பந்தத்தால் இவ்வதிகாரத்திற் சேர்க்கப்பட்டது; அடுத்த இரண்டு செய்யுள்களும் இவ்வாறே.　　(௮)

எ௬. இன்பம் பயந்தாங் கிழிவு தலைவரினு
மின்பத்தின் பக்க மிருந்தைக்க—வின்ப
மொழியாமை கண்டாலு மோங்கருவி நாட
பழியாகா வாறே தலை.

(இ - ள்.) ஓங்கு அருவி நாட - உயர்ந்த அருவிகளையுடைய நாட்டையுடையவனே!—இன்பம் பயந்த ஆங்கு - இன்பத்தைத்தந்த அவ்வழியில், இழிவு தலைவரினும் - தாழ்வுநேர்ந்தாலும், இன்பத்தின் பக்கம் இருந்தைக்க - (அதனைவிடாமல்) அவ்வின்பம் வருகிற வழியிலேயே விரும்பியிருக்கிற உனக்கு;—இன்பம் ஒழியாமை கண்டாலும் - இன்பம் நீங்காமலிருப்பதைப் பார்த்தாலும். பழி ஆகா ஆறே - பழிப்பு உண்டாகாதவழியே, தலை - தலைமையானதாம்; (எ-று.)

ஒருதொழில் இன்பத்தோடு பழியையுந் தருவதானால், அதனைப் பழிதருதலைநோக்கி விடவேண்டும்: இன்பந்தருதலைநோக்கி விரும்பலாகாது என்பது கருத்து; எனவே, அப்படிப்பட்ட தொழிலைச் செய்யாமற் பொறுத்தல் தகுதி யென்பதாம்.

பயந்தாங்கு-பெயரெச்சவீறு தொகுத்தல். பக்கம் - பக்ஷம்: வடசொல். இருந்தை - முன்னிலை யொருமை யிறந்தகால வினையாலணையும் பெயர்; ஐ - விகுதி. இருந்தைக்க—கு உருபு, அகரச்சாரியை பெற்றது; "கடிநிலை யின்றே யாசிரியர்க்க" என்பதிற் போல. (௬)

௭௦. தான்கெடினுந் தக்கார்கே டெண்ணற்க தன்னுடம்பி
னூன்கெடினு முண்ணார்கைத் துண்ணற்க—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினு முரையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல்.

(இ - ள்.) தான் கெடினும் - தான் அழிய நேர்ந்தாலும், (அவ்வழிவை ஒழிக்கும்பொருட்டு), தக்கார் கேடு - மேலோரது கெடுதலை, எண்ணற்க - (பொறுமையால்) நினையாதிருக்கக்கடவன்; தன் உடம்பின் ஊன் கெடினும் - தன் உடம்பிலுள்ள தசை (பசியால் மெலிந்து) அழிவதாயினும், (அதனைப் பொறுத்திடாமைபற்றி), உண்ணார் கைத்து உண்ணற்க - உண்ணத்தகாதவரது கையினால் வரும் உணவை உண்ணாதிருக்க; வான் கவிந்த-ஆகாயத்தாற் கவியப்பட்ட, வையகம் எல்லாம் - பூமிமுழுவதையும், பெறினும் - (தான்) பெறுவதாயிருந்தாலும், (தன் வறுமையைப் பொறுக்கமாட்டாமைபற்றி), பொய்யோடு இடை மிடைந்த சொல் - பொய்யோடு இடையிலே கலந்த சொல்லை, உரையற்க - சொல்லாதிருக்க; (எ - று.)

இவையெல்லாம் பொறுமைக்குணமுடையவரது செயலென்றபடி.

முன்னிரண்டடியில், உம் - இழிவு சிறப்பு; மூன்றாமடியில், உம் - உயர்வுசிறப்பு. ஊன், ன் - சாரியை. கைத்து - ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர். வையகம் - பொருள்கள் வைக்கப்படும் இடம். (௰

## ௩ - ஆம் அதிகாரம்.—பிறர்மனை நயவாமை.

அஃதாவது - காமமயக்கத்தாற் பிறருடைய மனையாளை விரும்பாதிருத்தலை உணர்த்துவது. பொறையுடையரான இல்வாழ்வார்க்கு, பொறுத்தற்கரிய காமத்தைப் பொறுத்தல் முக்கியமாக வேண்டுமென்பது தோன்ற, இது பொறையுடைமையின்பின் வைக்கப்பட்டது. பிறர்மனைநயத்தல் பொறுத்தற்கரிய குற்றமென்பதைக் காட்டும்பொருட்டு, பொறையுடைமையின்பின் இது வைக்கப்பட்டதெனினும் அமையும். திருக்குறளில், பிறனில் விழையாமையின்பின் பொறையுடைமையை வைத்ததும், இவ்விரண்டு அதிகாரங்களுக்கு முள்ள சம்பந்தத்தை வற்புறுத்தும். மனை - ஆகுபெயர்.

௮௧. அச்சம் பெரிதா லதற்கின்பஞ் சிற்றளவா
னிச்ச நினையுங்காற் கோக்கொலையா—னிச்சலுங்
கும்பிக்கே கூர்த்த வினையாற் பிறன்றார
நம்பற்க நாணுடை யார.

(இ - ள்.) அச்சம் பெரிது - (பிறர்மனைவியை விரும்பி எழுங்காலத்துத் தமக்குள்ளே தோன்றுகின்ற) அச்சம் பேரளவுடையது; அதற்கு இன்பம் சிறு அளவு - அவ்வச்சத்திற்கு (த் தம்மால் அனுபவிக்கப்படுஞ்) சிற்றின்பம் சிறிய அளவுடையது; நிச்சம் நினையுங்கால் - (தமது களவொழுக்கத்தின்) உண்மையை ஆராயுமிடத்து, கோ கொலை - (அரசனாற்) கொல்லுதல் தண்டனை (இம்மையில் நேரும்); (அதுமாத்திரமேயன்றி மறுமையில்), நிச்சலும் - எந்நாளும், கும்பிக்கே கூர்த்த வினை - நரகத்திற்கே ஏதுவாகிய மிக்க பாவமாம்; (ஆதலால்), நாண் உடையார் - நாணத்தையுடையவர், பிறன் தாரம் - அயலானது மனைவியை, நம்பற்க - விரும்பாதிருக்கக்கடவர்; (எ-று.)

பிறன்தாரம் நம்பினவர் மறுமையிலடையும் நரககதியை "வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து பிறர்பொருள் தார மென்றிவற்றை, நம்பினா ரிறந்தால் நமன்தமர் பற்றி யெற்றிவைத்தெரியெழுகின்ற, செம்பினாலியன்ற பாவையைப் பாவீதழுவென மொழிவதற்கஞ்சி, நம்பனே வந்துன் திருவடியடைந்தேன் நைமிசாரணியத்து ளெந்தாய்" என்னும் பெரியதிருமொழியாலும், "காதலாள் கரிந்துநையக் கடியவே கனிந்துகன்றி, ஏதிலான் தாரம் நம்பி யெளிதென விறந்தபாவத், தூதுலை யுருகவெந்த வொள்ளழற் செப்புப்பாவை, ஆதகாதென்னப் புல்லியலறுமால் யானைவேந்தே" என்னுஞ் சிந்தாமணியாலும், "தங்கிருட்போதில் தலைச்சென் றயல்மனை, யுகுகுமகிழ்ந் தாளவளிவள் காமெனச, செங்கனலேயென வெம்பிய செம்பினிற், பொங்கனற்பாவைகள் புல்லப் புணர்ப்பார்" என்னுஞ் சூளாமணியாலும் அறிக.

அச்சம்-அவளுக்கு உடையவர் தம்மை அடித்தல் முதலியவற்றால் நேர்வன. 'ஆல்' நான்கும - அசை; புறப்பொருள்வெண்பாமாலையில் "வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமால்" என்றவிடத்து [illegible] 'ஆல் - அசை:

சொல்விழுக்காடாயினுமாம்' என உரைத்ததுகொண்டு, 'ஆல்' - வாக்கியாலங்கார மென்றலுமாம். அதற்கு,'கு' உருபு-எல்லைப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். நிச்சம்-நிஶ்சயமென்னும் வடசொல்லின் விகாரம். நிச்சல் - நித்யமென்னும் வடசொல்லின் சிதைவு தப்தகும்பம், கும்பீபாகம் முதலிய நரகவிசேஷங்களை 'கும்பி'என்றார்;வடசொல்திரிபு. நம்பற்க - நசையுணர்த்தும் நம்பு என்னும் உரிச்சொல்லினடியாப் பிறந்த எதிர்மறைவியங்கோள்; "நம்பும் மேவும் நசையா கும்மே." நாணுவது - செய்யத் தகாதனவற்றில் உள்ளமொடுங்குதல். நாண்-நாணுதல்: முதனிலைத்தொழிற்பெயர். 'நாணுடையார் பிறன்தாரநம்பற்க' என்றதனால், பிறன்தாரம் நம்புபவர் நாணில ரென்றது தானே விளங்கும். தாரம்-தாராः என்னும் வடசொல்லின் திரிபு. நினையுங்கால் - எதிர்காலப் பெயரெச்சத்தொடர்; 'நினைத்தக்கால்' என்பதுபோல இதனை ஒருசொல்லாகக்கொண்டு காலீற்று எதிர்கால வினையெச்சமென்றல் மரபன்மையை உய்த்துணர்க. கால் - காலமென்னும் வடசொல்லின் விகாரம். (க)

அஉ. அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றார நச்சுவார்ச் சேரா—பிறன்றார
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்.

(இ - ள்.) பிறன் தாரம் நசசுவார் - அயலானது மனையாளை விரும்புபவரை, அறம் - தருமமும், புகழ் - கீர்த்தியும, கேண்மை - சிநேகமும், பெருமை-கௌரவமும் ஆகிய, இ நான்கும்-இந்த நான்கு பொருள்களும், சேரா - (ஒருகாலுஞ்) சேராவாம்; பிறன் தாரம் நச்சுவார் - அயலானது மனைவியை விரும்புபவரை, பகை - பகையும், பழி - பழியும், பாவம் என்று-பாவமும், அச்சத்தோடு - அச்சமும் ஆகிய, இ நால் பொருள்-இந்த நான்கு பொருள்களும், சேரும்—; (எ - று.)

எனவே, அவர் இம்மை மறுமை என்னும் இருமை யின்பங்களையும் இழத்தல் பெறப்பட்டது. அறம் முதலிய நான்கும் சேவ்வேண்ணுதலின், ஈற்றில் தொகைபெற்றன; பகைமுதலிய நான்கும் இவ்வாறே. அறம்புகழ் கேண்மைபெருமை என்றதற்கு ஏற்ப, பாவம்பழிபகைஅச்சம் என்பதே முறையாயினும், செய்யுள்நோக்கிப் பிறழவைத்தார். வைசேடிகர் பொருள் பண்பு தொழில் சாதி விசேடம் இயைபு என்பனவற்றை அறுவகைப் பொருளென்றாற்போல, இங்கு - பாவமாகிய பண்பும், பகைபழிஅச்சங்களாகிய தொழில்களும், 'பொருள்' எனப்பட்டன.

நான்குபோய் நான்கு வரு மென்றதனால், இப்பாட்டில் பரிவர்த்தநாலங்காரம் என்னும் மாற்றுநிலையணி தொனிக்கின்றது.

"பகை பாவ மச்சம் பழியென நான்கும், இகவாவா மில்லிறப்பான் கண்" என்றார் திருவள்ளுவனாரும். (உ)

அங. புக்கவிடத் தச்சம் போதரும்போ தச்சந்
துய்க்குமிடத் தச்சந் தோன்றாமற் காப்பச்ச
மெக்காலு மச்சந் தருமா லெவன்கொலோ
வுட்கான் பிறனில் புகல்.

(இ - ள்.) புக்க இடத்து - (பிறன்மனையாளிடம்) போகும்பொழுதும், அச்சம்-பயம் உண்டாகின்றது; போதரும் போது - மீண்டுவரும்பொழுதும், அச்சம்—; துய்க்கும் இடத்து - அனுபவிக்கும்போதும், அச்சம்—; தோன்றாமல் காப்பு - (அதனைப்) பிறரறியாமற் காக்கும்போதும், அச்சம்—; எ காலும் அச்சம் தரும்-(இவ்வாறு) எப்போதும் பயத்தையே தருகின்றது; (இப்படியிருக்க), உட்கான் - (ஒருவன்) அஞ்சாதவனாய், பிறன் இல் புகல் - பிறன்மனையாளிடஞ் செல்லுதல், எவன்கொலோ - எவ்வாறோ? (எ-று.)

முந்தினசெய்யுளிற் பிறர்மனைநயப்பவனுக்கு நேர்வனவென்று பொதுப் படக்கூறப்பட்ட நான்கு குற்றங்களுள், அச்சத்தின் தன்மை, இச்செய்யுளில் சிறப்புவகையாற் கூறப்பட்டது. காமங்காரணமாகப் பாவவழியில் நிற்பவர் களாகிய பெண்வழிச்செல்பவரும், விலைமகளிரோடும் இழிகுலமகளிரோடுங் கூடி இன்பமனுபவிப்பவரும் போல, அறத்தையும் பொருளையும்இழத்தலே யன்றி, பிறர்மனைநயப்பவர் அச்சத்தால் தாம் கருதிய இன்பத்தையு மிழக் கின்றாராதலால், அச்சத்தின்கொடுமை தனியே கூறவேண்டுவதாயிற்று.

'எக்காலு மசசந்தரும்' என்பதற்கு, 'பிறர்மனை நயத்தல்' என்ற எழு வாய் அதிகாரத்தால் வருவிக்க. போதரும்போது, தா-துணைவினை. போது- பொழுது என்பதன் மரூஉ; போழ்து என்றும் மருவிவழங்கும். ஆல் - அசை; ஆதலால் என்பதன் விகாரமாகவுங் கொள்ளலாம். எவன் - வினா வடியாப் பிறந்த அஃறிணைப்பொதுக்குறிப்புமுற்று; [நன் - வினை - நக.] கொல் ஓ என்ற இரண்டனுள், ஒன்று இழிவையும், மற்றொன்று இரக்கத் தையும் உணர்த்துவதென்னலாம். உட்கான் - எதிர்மறைத் தெரிநிலை முற் றெச்சம்; உட்கு - பகுதி. புகல் என்பதை இடக்கரடக்கல் என்னலாம்; "தினைத்துணையுந், தேரான் பிறனில்புகல்" எனத் திருக்குறளிலும் காண்க.

இது -ஒருவிகற்பஇன்னிசைவெண்பா. மேல் அஅ - ஆம் செய்யுளும் இது.

அச. காணிற் குடிபபழியாங் கையுறிற காலகுறையு
மாணின்மை செய்யுங்கா லச்சமா—நீணிரயத்
துன்பம் பயக்குமாற் றுச்சாரி நீகண்ட
வின்ப மெனக்கெனைத்தாற் கூறு.

(இ - ள்.) காணின் - (பிறர்) கண்டால், குடி பழி ஆம் - தன்குலத்துக்கு நிந்தை உண்டாம்; கைஉறின் - அகப்பட்டுக்கொண்டால், கால் குறையும் - கால் வெட்டப்படும்; மாண் இன்மை செய்யும் கால் - மாட்சிமையில்லாத அத்தீச்செயலைச் செய்யும்பொழுது, அச்சம் ஆம் - பயம்தோன்றும்; (இவை யேயன்றி), நீள் நிரயம் துன்பம் பயக்கும் - (அவ்வொழுக்கம்) நெடுங்காலம்

அனுபவிக்கும்படியான நரகவேதனையை உண்டாக்கும்; (ஆகவே), துச்சாரீ- தீச்செய்கை செய்பவனே! நீ கண்ட இன்பம் - நீ (அதில்) அனுபவித்த சுகம், எனைத்து - எவ்வளவினது? எனக்கு—, கூறு - சொல்லு; (எ-று.)

பிறர்மனைநயந்து செல்லும் ஒருவனை நோக்கி அவனை அங்ஙனஞ் செல்லவொட்டாது நற்புத்திகூறி விலக்கத்தொடங்கின நண்பனொருவன் கூறியதாக இப்பாட்டுச் செய்யப்பட்டதென்க.

அதிகாரத்தால், 'மாணின்மை' என்றது - பிறர்மனைநயத்தலாம்; அன்றி, இடக்கரடக்க லென்னலாம். பாவமென்றபொருளில் 'மாணின்மை' எனப்பட்டது; 'தெளிந்தாரிற், றீமைபுரிந்தொழுகுவார்" என்ற திருக்குறளில், 'தீமை' என்றது போல. ஆண் இன்மை எனப் பிரித்து - உத்தமபுருஷனுக்கு உரிய குணமாகாத அத்தீயொழுக்கத்தை யென்று பொருள் கொள்ளலுமாம்; பொருட் பொருத்தத்தோடு மோனைப்பொருத்தத்துக்கும் இதுவே தகுதி: இந்திரியங்களை அடக்குதலே ஆண்மையாதலால், அதனையடக்காமல் தீவழிச்செல்லுதலை ஆணின்மை யென்றல் பொருத்தம்; "பிறன்மனை நோக்காத பேராண்மை" என்ற திருக்குறளில், பிறர்மனைநயவாமையை 'பேராண்மை' என்றதனாலும், பிறர்மனைநயத்தல் ஆண்மையின்மை யென்பது அமையும்: அக்குறளினுரையிற் பரிமேலழகர் 'புறப்பகைகளையடக்கும் ஆண்மை யுடையார்க்கும் உட்பகையாகிய காமம் அடக்குதற்கு அருமையின், அதனையடக்கிய ஆண்மையைப் பேராண்மை யென்றார்' என உரைத்தது உணரத்தக்கது. துச்சாரி - வடமொழி. 'ஆல்' இரண்டும் - அசை; முதலதை ஏதுப்பொருளாகக் கொள்ளலுமாம். 'இன்ப மெனக் கெனைத்தாற்கூறு' என்பது, இன்பஞ்சிறிதுமில்லையென்பதை விளக்கும். எனைத்து - எத்தனைத்து என்பதன் மரூஉ. (௪)

அரு. செம்மையொன் றின்றிச் சிறியா ரினத்தராய்க்
கொம்மை வரிமுலையா டோண்மரீஇ—யும்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்றாரே யிம்மை
யலியாகி யாடியுண் பார்.

(இ - ள்.) உம்மை - முற்பிறப்பில், செம்மை ஒன்று இன்றி - நடுவுநிலைமை சிறிதும் இல்லாமல், சிறியார் இனத்தர் ஆய் - அற்பகுணமுடைய விடரோடு சேர்ந்தவராய், கொம்மை வரி முலையாள் - திரட்சியையுஞ் சுணங்கையுமுடைய தனங்களை யுடையவளது, தோள் - தோள்களை, மரீஇ - சேர விரும்பி, வலியால் - (தமக்குஉள்ள) வலிமையினால், பிறர் மனைமேல் சென்றாரே - பிறரது மனையாளிடஞ் சென்றவரே,—இம்மை - இப்பிறப்பில், அலி ஆகி - நபும்சகராய், ஆடி - கூத்தாடி, உண்பார் - (அதனால்) சீவிப்பவராவர்; (எ-று.) —ஆதலால், பிறர்மனை நயக்கவேண்டாவென்பது கருத்து.

செம்மை ஒன்று இன்றி - பழிபாவங்களுக்குச் சிறிதும் அஞ்சாமலென்றபடி; அன்றி, தன்மனையாளது பதிவிரதாதருமம் போலவே பிறன்மனையாளது பதிவிரதாதருமமும் பாதுகாத்தற்கு உரியதென்று பக்ஷபாதமின்றித்

தன்னைப்போலவே பிறரையுங் கருதவேண்டியிருக்க, அது செய்யாமல் எனக் கொள்கை பொருத்தம். சிறியாரினத்தராய்-"வறுமொழியாளரொடு வம்பப்பரத்தரொடு, குறுமொழிக்கோட்டி நெடுநகை புக்குப், பொச்சாப் புண்டு பொருளுரையாளர், நச்சுக்கொன்றேற்கு" எனச் சிலப்பதிகாரத்திற் கோவலன் கூறினாற் போல்வன. கொம்மை - இளமையும், அழகும், வன்மையும், பருமையுமாம். வரி - தொய்யிலிரேகையுமாம். மரீஇ = மருவி; சொல்லிசையளபெடை. உம்மைச் சென்றாரென இயையும். பிறர்மனைமேற் சென்றார்-இடக்கரடக்கல்; "பிறன் கடைநின்றாரிற் பேதையாரில்" என்ற திருக்குறளில் 'நின்றார்' என்றது போல. அலி - ஆணுறுப்பு மிகுந்து பெண்ணுறுப்புக் குறைந்த நபும்ஸகம்; (பெண்ணுறுப்புமிக்கு ஆணுறுப்புக்குறைந்த நபும்ஸகம் - பேடி யெனப் படுமென்றும், பேடு என்பது - நபும்ஸகம் என்ற வடசொற்போல இவ் விருவகைக்கும்பொதுவென்றும் அறிக.) 'கொம்மைவரு' என்ற பாடத்து க்கு - திரட்சியோடு வளர்ந்த என்க. (கூ)

அகூ. பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக்
கல்யாணஞ் செய்து கடிபுக்க—மெல்லியற்
காதன் மனையாளு மில்லாளா வென்னொருவ
னேதின் மனையாளை நோக்கு.

(இ-ள்.) நாள் கேட்டு - நல்லநாளை விசாரித்து, (அந்நாளில்), பல்லார் அறிய-பலரும் அறியும்படி, பறை அறைந்து - மங்கலவாத்தியங்களை முழங்கு வித்து, கல்யாணம் செய்து - விவாகஞ்செய்யப்பட்டு, கடி புக்க - (தம்) காவ லிற்புகுந்த, மெல் இயல் - மென்மையான குணங்களையும், காதல்-விருப்பத் தையுமுடைய, மனையாளும் - மனைவியும், இல்லாள் ஆ - தன்வீட்டில் உள் ளவளாக, ஒருவன்—, ஏதில் மனையாளை-அயலானது மனைவியை, நோக்கு- பார்ப்பது, என் - யாதுகாரணத்தினாலோ? (எ - று.)

இங்ஙனங்கூறியது, தன்மனையாளிருக்க அயலான்மனையாளிடத்திற் செல்வதன் குற்றத்தை நன்குவிளக்குதற்பொருட்டேயன்றி, தன்மனையா ளில்லாவிடின் பிறன்மனையாளிடஞ் செல்லலாமென்று கூறியதன்றெனக் கொள்க; "அறனிற்கொண்ட தன்மனையா ளமளித்தலத்தி லழுதிரங்கப், பிறனிற்றேடும்பெரும்பாவி" எனப் பாரதத்தில் வருதலுங் காண்க. இதனால், இங்கு 'இல்லாள்' என்பதற்கு - இல்லாதவளென்று பொருளுரைக்க இட மின்மையும் அறிக. நோக்கு - இடக்கரடக்கல்; "பிறன்மனை நோக்காத பேராண்மை" என்ற திருக்குறளிற் போல; அங்கு 'பிறன்மனைநோக்காத' என்பதற்கு - பரிமேலழகர் 'பிறன்மனையாளை உட்கொள்ளாத' என்று உரை கூறியவாறு அறிக. பெண்களுக்கு உரிய நற்குணங்களெல்லாம் அமைந் துள்ளவளென்பது தோன்ற, 'மெல்லியல்,' 'காதல்' என்னும் அடைமொழி கள் கொடுத்தார். மனையாளுக்கு 'காதல்' என்ற அடைமொழி கொடுத்த தனால், அவளுக்கு இவனிடம் வேட்கையுளதேயன்றி இவனுக்கு அவளிடம் வேட்கையிலதென்பது தோன்றும்.

அறைந்து = அறைவித்து; பிறவினைப்பொருளில் வந்த தன்வினை வினையெச்சம்: அன்றி, ஏவுதற்கருத்தா வென்றால், எளியவழி. கல்யாணம் - வடசொல். கடி - உரிச்சொல். உம் - உயர்வுசிறப்பு. என் - எவன் என்னும் வினு வினைக்குறிப்புமுற்றின் விகாரம். ஏதில் - ஏதிலனுக்குப் பண்பாகுபெயர்; ஏதில் - அயல். நோக்கு - முதனிலைத்தொழிற்பெயர். (௬)

அ௭. அம்ப லயலெடுப்ப வஞ்சித் தமர்பரீஇ
வம்பலன் பெண்மரீஇ மைந்துற்று—நம்பு
நிலைமையி னெஞ்சத்தான் றுப்புரவு பாம்பின்
றலைநக்கி யன்ன துடைத்து.

(இ - ள்.) அயல்-அயலார், அம்பல் எடுப்ப - (அறிந்து) பழித்தல்செய்யவும், தமர் - உறவினரும் நண்பரும், அஞ்சி - (அறிந்து இவனுக்கு என்ன நேருமோ வென்று)பயந்து, பரீஇ-வருந்தவும், வம்பலன் பெண் மரீஇ - அயலானது மனையாளைச் சேர்ந்து, மைந்து உற்று - களிப்படைந்து, நம்பும் நிலைமை இல் நெஞ்சத்தான் - நம்பத்தக்க நிலைமையில்லாத மனமுடையவனது, துப்புரவு-சிற்றின்பநுகர்ச்சியானது,—பாம்பின் தலை நக்கி அன்னது உடைத்து - பாம்பினது தலையை நக்கினாற்போன்ற தன்மையுடையது; (எ-று.)

பளபளப்பாயிருக்கிறதென்று பாம்பின்தலையை நக்கினால் அது விஷம் பட்டு உடனே மரணமடைவதற்கு ஏதுவாவதுபோல, தற்காலத்தில் இன்பந்தருகிறதென்று பிறன்மனைவியைச் சேர்ந்தால் அது விரைவிற் பெருந்துன்பத்துக்கு ஏதுவாமென்பது கருத்து. உவமையணி.

அயல்-ஆகுபெயர். பரீஇ - பரியவென்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபாகிய பரிந்து என்பதன் சொல்லிசையளபெடை. வம்பு-புதுமை; அதனையுடையவன், வம்பலன்: அல் - வேண்டாவழிச்சாரியை. அம்பலென்பது - வெளிப்படச் சொல் நிகழ்த்தாமல் முணுமுணுத்துச் சொல்லுதலென்று பொருள்படுமெனவும், இதன்இனமாகிய அலரென்பது-பலரறிய வெளிப்படையாச்சொல்லித் தூற்றுதலென்று பொருள்படுமெனவும் இறையனுரகப்பொருளுரையாலும், தொல்காப்பிய நச்சினார்க்கினியத்தாலுந் தெரிகின்றது. மணிமேகலையில் "நினக்கிவன் மகனுத் தோன்றியதூஉம், மனக்கினியாற்கு நீ மகளாயதூஉம், பண்டும் பண்டும் பலபிறப்புளவால், கண்டபிறவியே யல்ல காரிகை" என்றவிடத்து 'மகள்' என்பதுபோல, இங்கே 'பெண்' என்பது - மனைவியென்ற பொருளில் வந்தது. (௭)

அ௮. பரவா வெளிப்படாப் பல்லோர்கட் டங்கா
வுரவோர்கட் காமநோ யோஒ கொடிதே
விரவாரு ளுணுப் படலஞ்சி யாது
முரையாதுள் ளாறி விடும்.

(இ - ள்.) உரவோர்கண் - புத்திபல முடையவரிடத்து (உள்ளதாகிற), காமம் நோய்-காமவியாதியானது, பரவா-வளராமலும், வெளிப்படா-வெளி

யாகாமலும், பல்லோர்கண் தங்கா - பலரிடத்துஞ் சென்று தங்காமலும், விரவாருள் நாணுப்படல் அஞ்சி - (அந்நோய்) கலவாதவரிடத்து வெட்கப் படுவதற்குப் பயந்து, யாதும் உரையாது - ஒன்றுஞ்சொல்லாமல், உள் ஆறி விடும் - உள்ளேயே அடங்கிப்போம்; (ஆதலால்),—ஓஒ கொடிது - (அது) மிகவுங் கொடியது! (எ - று.)

அறிவுடையார்க்கும் வினைவசத்தாற் காமமுண்டாகலாம்; அது விருத்தி யாகாமலும், வெளிப்படாமலும், பல விஷயங்களிற் செல்லாமலும் உள்ளே யே ஆறிப்போம்; ஏனெனில்,—பலர்க்கும் நாணவேண்டி யிருப்பதனால். ஆனபடியால், அது மிகவுங்கொடியது என்பதாம். கொடிது என்றது, காம த்தின் தீமையை நோக்கி அதையும் பொறுக்கிறார்களேயென்று உண்டான வியப்பினாலெனஅறிக.

அறிவுடையோர் காமமிகுதியாற் பிறர்மனைநயவாரென்ற சம்பந்தம் பற்றி, இச்செய்யுள் இவ்வதிகாரத்திற் சேர்க்கப்பட்டது.

பரவா, வெளிப்படா, தங்கா - ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சங்கள். ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சங்களின்முன்னே வலியியல்பாதற்கு விதி யில்லையாதலால், 'வெளிப்படா பல்லோர்கட்டங்கா' என்ற பாடம் கொள் ளத்தக்கதன்று; எதிர்மறைப் பலவின்பால் முற்றெச்சமாக் கொண்டு, "அல் வழியாமாமியா மூற்றுமுன் மிகா" என்றபடி இயல்பானதாகக் கொள்ளலா காதோவெனின்,—ஆகாது; 'கொடிது' என்ற ஒன்றன்பால்முற்றோடு மாறு படுதலால். இனி, பரவாது, வெளிப்படாது, தங்காது என்ற எதிர்மறை யொன்றன்பால்முற்றுக்கள் ஈறுகெட்டு நின்றனவெனக் கொள்ளின், இயல் பாதற்கு இடமுண்டு. தீயொழுக்கமுடையவரது இகழ்ச்சி ஒருபொருளாகப் பாராட்டத் தக்கதன்றாதலால், 'விரவாருள் நாணுப்பட லஞ்சி' என்றார். 'யாதுமுரையாது' என்றது - சிறிதும் வெளிப்படாது என்பதை யுணர்த்த வந்த குறிப்புமொழி. இனி, பிறர் யாதுங் கூறிப் பழிக்க இடமில்லாதபடி யென்றுங் கொள்ளலாம். ஆறிவிடும் என்பதில், விடு என்பது - துணிவுப் பொருளை விளக்கிற்று. காமம் - தற்சம வடசொல். மனத்தையும் உடம் பையும் வருத்துதலினால், காமம் 'நோய்'எனப்பட்டது. ஓ - சிறப்பு; அளபெ டை - செய்யுளிசைநிறைக்கவந்தது. ஏ - தேற்றம். நாணு, உ - சாரியை.(அ)

௬௯. அம்பு மழலு மவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறஞ்சுடும்—வெம்பிக்
கவற்றி மனத்தைச் சுடுதலாற் காம
மவற்றினு மஞ்சப் படும்.

(இ - ள்.) அம்பும் - பாணமும், அழலும்-நெருப்பும், அவிர் கதிர் ஞாயி றும்-விளங்குகின்ற கிரணங்களையுடைய சூரியனும், வெம்பி சுடினும் - வெப் பங்கொண்டு சுட்டாலும், புறம் சுடும் - புறமாகிய உடம்பையே சுடவல்லன வாம்; காமம் - பெண்ணாசையோ வென்றால், வெம்பி - வெப்பங்கொண்டு, மனத்தை - அகமாகிய நெஞ்சத்தை, கவற்றி - கவலைப்படுத்தி, சுடுதலால் -

எரித்தலினால், அவற்றினும் - அந்த அம்பு முதலியவற்றினும் (அதிகமாக), அஞ்சப்படும்—; (எ - று.)

புறத்தையே சுடுவனவாகிய அம்புமுதலிய உபமானப்பொருள்களினும் அகத்தைச்சுடுங் காமமாகிய உபமேயப்பொருளுக்கு உள்ள வேறுபாடு தோன்றக் கூறினமையால், இது, வேற்றுமையணியின்பாற்படும்.

ஞாயிறு = நாயிறு; முதற்போலி. கவற்றி - வினையெச்சம்; கவல் என்பதன் பிறவினையாகிய கவற்று - பகுதி; இதில், பிறவினைவிகுதி - று.

இச்செய்யுள் முழுவதும் இயற்சீரான் அமைந்துள்ளது. (கூ)

கூ0. ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகு—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி
யொளிப்பினுங் காமஞ் சுடும்.

(இ - ள்.) ஊருள் எழுந்த - (தான் இருக்கும்) ஊர்முழுவதிலும் பற்றியெழுந்த, உரு கெழு செம் தீக்கு-உருவம் விளங்குகிற செம்மையானநெருப்புக்கு, நீருள் குளித்தும் - தண்ணீருள் மூழ்கியாயினும், உயல் ஆகும் - தப்பிப்பிழைக்கக்கூடும்; காமம் - காமமாகிய நெருப்பு, நீருள் குளிப்பினும் - நீருள் மூழ்கினாலும், சுடுமே-சுடாமல்விடாது; காமம்—, குன்று ஏறி ஒளிப்பினும்-மலைமேலேறி ஒளித்துக்கொண்டாலும், சுடும்—; (எ - று.)

ஆதலால், நெருப்பினும் அஞ்சப்படு மென்பது கருத்து.

“காலத்தால் வருவதொன்றோ காமத்தாற் கனலும்வெந்தீச், சீலத்தாலவிவதன்றிச் செய்யத்தாறுவ துண்டோ” எனக் கம்பராமாயணத்து வருவதுங் காண்க. உரு - ரூபமென்னும் வடசொல்லின் திரிபு. ‘உருகெழு’ என்பதற்கு - அஞ்சத்தக்கதன்மை மிக்க என்றுங் கொள்ளலாம்; அப்பொழுது, ‘உரு’ என்பது - உரிச்சொல்: “உரு உட்காகும்” என்ற தொல்காப்பியச் சூத்திரங் காண்க. செந்தீ-தீக்குச்செம்மை, இயற்கைபற்றிய அடைமொழி: இனம்விலக்க வந்ததன்று. காமத்தை நெருப்பென்றது, தான்சேர்ந்த இடத்தை எரித்து அழித்தலால். உயல் - உய்தல்: தொழிற்பெயர்; உய்-பகுதி.

நீருள்மூழ்கி நின்றாரையும் நெடுந்தூரஞ்சென்று அகப்படாது நின்றாரையும் சுடமாட்டாத நெருப்பாகிய உபமானத்தினும், அங்ஙனம் நின்றாரையுஞ் சுடவல்ல காமமாகிய உபமேயப்பொருளுக்கு உள்ள வேறுபாடு தோன்றக் கூறினமையால், இதுவும் - வேற்றுமையணி; வடநூலார் வ்யதிரேகாலங்காரம் என்பர்.

இனி, இப்பாட்டுக்கு - காமத்தாலாகிய பாவம் புண்ணியதீர்த்தங்களிற் சென்று நீராடுதலினாலும் பெரியமலைமேலேறி ஏகாந்தமாக இருந்து அரிய தவஞ் செய்தலாலும் தீர்தற்கரியது என்னுங் கருத்துப்பட உரைப்பாருமுளர்.

இவ்விரண்டு செய்யுட்களாலும், பிறர்மனைநயத்தலுக்குக் காரணமான காமத்தின் கொடுமையைக் கூறினார். (க0)

## ௧0 - ஆம் அதிகாரம்.—ஈகை.

*அஃதாவது - வறியவராய் இரந்தவர்க்கு இல்லையென்னுமற் கொடுத்தல் வேண்டு மென்பதை உணர்த்துவது. இல்வாழ்வானுக்குப் பிறர்மனைநய வாமைபோல ஈகைக்குணமும் இன்றியமையாதாதலின், இது அதன்பின் வைக்கப்பட்டது. இம்மைக்குப் புகழையும் மறுமைக்குப் புண்ணியத் தையுந் தவறுமல் மிகவிளைத்தலில் ஈகை பிறாமனைநயவாமையையும், இம் மையிற் பழியையும் மறுமையிற் பாவத்தையுந் தவறுமல் மிகவிளைத்தலில் ஈகையின்மை பிறர்மனைநயத்தலையும் போலுதலால், ஈகை பிறர்மனைநய வாமையை யடுத்துக் கூறத்தக்க குணமாயிற்றென்க. ஈகை - 'கை' விகுதி பெற்ற தொழிற்பெயர்.*

௬௧. இல்லா விடத்து மியைந்த வளவினு
 லுள்ள விடம்போற் பெரிதுவந்து—மெல்லக்
 கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்
 கடையாவா மாண்டைக் கதவு.

(இ - ள்.) இல்லா இடத்தும் - (தமக்குச் செல்வம்) இல்லாமற்போன காலத்தும், இயைந்த அளவினுல் - (தமக்குக்) கூடியமட்டில், உள்ள இடம் போல்-(செல்வம்) உள்ள காலத்திற்போல, பெரிது உவந்து -(இரப்பவர்வரு கைக்கு) மிகவும் மகிழ்ந்து, மெல்ல-சாந்தமாக, கொடையொடு - கொடுத்த லோடு,பட்ட-கூடின, குணன் உடை மாந்தர்க்கு-நற்குணமுள்ளமனிதர்க்கு, ஆண்டை கதவு-அவ்வுலகத்துக்கதவுகள், அடையா-மூடப்பட்டிரா; (எ-று.)

எப்பொழுதும் இரப்பவர்க்குக் கொடுப்பவரது வருகையை நோக்கி மேலுலகத்தவர் தம் உலகத்துக் கதவைத் திறந்துவைப்பர் என்பதாம்; என் றது, தானஞ்செய்பவர்க்கு மறுமைப்பயன் தவறுது சித்திக்குமென்றவாறு. 'பெரிதுவந்து', 'மெல்ல' என்றவற்றுல், இரப்பவரைக் கண்டபொழுது முகமலர்ச்சியும் அவர் நெருங்கி வந்தபொழுது இன்சொல்லு முடைமை ஈகைக்கு இலக்கணமென்பது விளங்கும்.

ஆம்-அசை. உம்மை-இழிவுசிறப்போடு எசசப்பொருளது. பெரிது-குறிப்பு முற்றெச்ச வினையுரி. குணன் - ஈற்றுப்போலி. உடை - உடைய என்னுங் குறிப்புப் பெயரெச்சத்து அகரவீறு தொகுத்தல். மாந்தர் - ஒருமையில் லாமல் எப்பொழுதும் பன்மையிலேயே வரும் பெயர்; இதனை வடநூலார் நித்யபஹுவசநம் என்பர். ஆண்டை, ஐ - சாரியை; "ஐயீற்றுடைக் குற்றுகரமு முளவே".

மேல் ஈயாமை என்னும் அதிகாரத்து "நட்டார்க்கும் நள்ளாதவர்க் கும்" என்னுஞ் செய்யுள், இதனேடு ஒப்புநோக்கத்தக்கது. (௧)

௯௨. முன்னரே சாநாண் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கு நோயுள—கொன்னே
பரவன்மின் பற்றன்மின் பாத்துண்மின் யாதுங்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து.

(இ - ள்.) முன்னரே - (உங்கள்) முன்னமே, சாம் நாள்-இறக்குங்காலமும், முனிதக்க மூப்பு - வெறுத்தற்குத்தக்க கிழத்தனமும், உள - உள்ளன; பின்னரும் - அவைமாத்திரமேயன்றி மேலும், பீடு அழிக்கும் நோய் - வலிமையைக் குலைக்கும்படியான வியாதிகளும், உள - உள்ளன; (ஆதலால்), கைத்து உண்டாம் போழ்து - கைப்பொருள் உண்டாயிருக்குங் காலத்தில், கொன்னே - வீணாக, பரவன்மின் - (மேலுஞ்சம்பாதித்தற்கு) அலையாதிருங்கள்; பற்றன்மின்- (உள்ளபொருளை உலோபத்தால்) இறுக்கிப் பிடியாதிருங்கள்; பாத்து உண்மின் - (யாவர்க்குஞ் சோறுமுதலியவற்றைப்) பகுத்துக் கொடுத்து (மிகுதியை) உண்ணுங்கள்; யாதும் கரவன்மின் - (பிறரால் இரக்கப்பட்டவற்றுள்) எதையும் ஒளியாதிருங்கள்; (எ - று.)

முன்னரே - பிரதியக்ஷமாக என்றபடி; என்றது, நீங்கள் கட்புலனாகக் காண உலகத்திற் பலர்க்கும் பிணிமூப்புச்சாக்காடுகள் உண்டாகின்றனவே; அவற்றைக்கண்டாயினும், நமக்கும் இவை உண்டென்று துணியலாகாதோ? என்றவாறு. அன்றி, பிறப்பெடுக்குமுன்னமே சாநாள்முதலியன முன்னைய வினைக்கு ஏற்ப அமைந்துள்ளன என்றவாறுமாம். பரவன்மின் - கிடைத்த மட்டில் திருப்தி யுடையரா யிருங்கள் என்றபடி. "பகுத்துண்டு பல்லுயிரோம்புதல் நூலோர், தொகுத்தவற்று ளெல்லாந் தலை" என்ப வாதலால், 'பாத்துண்மின்' என்றார். திருக்குறளில் "பழியஞ்சிப் பாத்தூணுடைத்தாயின்" என்றவிடத்து, 'பாத்தூண்' என்றதற்கு, பரிமேலழகர் 'அப்பொருளை இயல்புடைய மூவர்முதலாயினோர்க்கும், தென்புலத்தார் முதலிய நால்வர்க்கும் பகுத்துத் தானுண்டல்' என உரைத்தது உணரத்தக்கது.

'முனிதக்க' என்பதில், முனி என்பது - முதனிலைத் தொழிற்பெயர்; நான்காம்வேற்றுமைத்தொகை. பாத்து என்பதில், பகு என்பதன் மரூஉவாகிய பா - பகுதி. (உ)

௯௩. நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்
கொடுத்துத்தான் றுய்ப்பினு மீண்டுங்கா லீண்டு
மிடுக்குற்றுப் பற்றினு நில்லாது செல்வம்
விடுக்கும் வினையுலந்தக் கால்.

(இ - ள்.) செல்வம்—, ஈண்டும் கால்-(நல்வினையால்) வளருங்காலத்து, கொடுத்து தான் துய்ப்பினும்- (பிறர்க்கும்)கொடுத்துத் தானும் அனுபவித்து வந்தாலும், ஈண்டும் - வளரும்; விடுக்கும் வினை உலந்தக்கால் - (முற்பிறப்பிற்செய்து குறையாக) விட்ட அந்நல்வினை முடிந்தகாலத்து, இடுக்குற்று பற்றினும் - இறுக்கிப் பிடித்தாலும், நில்லாது - நிலைபெறாமற் போய்விடும்;

(இதனை அறியாத பலர்), நடுக்கு உற்று தன் சேர்ந்தார் - (வறுமையினால்) நடுங்குதலை அடைந்து தம்மைச் சேர்ந்தவரது, துன்பம் - துன்பத்தை, துடையார் - (அவர்வேண்டியன கொடுத்துப்) போக்கார்; (எ-று.)

அங்ஙனம் இருக்கலாகாது, தானும் அனுபவித்துப் பிறர்க்குங்கொடுத்தல்வேண்டும் என்பதாம்.

ஊற்றுநீர் இறைக்க இறைக்கச் சுரத்தல்போலப் பொருள் தானஞ்செய்யச்செய்யச் செழிக்குமென்பார், 'கொடுத்துத் தான் துய்ப்பினு மீண்டுங் கா லீண்டும்' என்றார்; பிறர்க்குக் கொடுத்தலால் கைப்பொருள் செலவழிந்துபோகப் பின்பு வறுமைப்படவேண்டிவருமே யென்று கருதி, கொடுக்கப் பின்வாங்குகிறவரை நோக்கி 'பொருளழிதற்குக் காரணம் வினைப்பயனேயன்றி ஈகையன்று' என்று பின்னிரண்டடிகளால் விளக்கியவாறு.

'தற்சேர்ந்தார்,' 'தான் துய்ப்பின்' என, பன்மைவரவேண்டியவிடத்து ஒருமை மயங்கிவந்தது - வழுவமைதி; ஒருமைப்பன்மைமயக்கம்: [நன் - பொது - ௨௧.] இடுக்கு, நடுக்கு - முதனிலைதிரிந்ததொழிற்பெயர். மிடுக்கு உற்று எனப் பிரித்து - வலிமைபொருந்தி யென்றும் பொருள் கொள்வர்.

இப்பாட்டு, இரண்டாமடி முதலிலும், நான்காமடி அதன் பின்னும், மூன்றாமடி அதன்பின்னும், முதலடி அதன் பின்னுமாக முன்பின்னாக எடுத்து மாற்றிப் பொருள் கொள்ளப்படுதலால், இது, எற்புழி யெடுத்துடன்கூட்டுறும் அடியதாகிய அடிமறிமாற்றுப்பொருள்கோளாம்; [நன்-பொது-௬அ.]

இது - ஒருவிகற்ப இன்னிசைவெண்பா; மேல் ௯௯, ௧00 - ஆம் பாட்டுக்களும் அது. (௬)

௯௪. இம்மி யரிசித் துணையானும் வைகலு
நும்மி லியைவ கொடுத்துண்மி—னும்மைக்
கொடாஅ தவரென்பர் குண்டுநீர் வையத்
தடாஅ வடுப்பி னவர்.

(இ - ள்.) வைகலும் - நாள்தோறும், இம்மி அரிசி துணை ஆனும் - இம்மியென்னும் அரிசி யவ்வளவாயினும், நும்மில் இயைவ - உங்களுக்குக் கொடுக்கக்கூடியவற்றை, கொடுத்து - (பிறர்க்குக்) கொடுத்து, உண்மின் - (மிகுதியை) உண்ணுங்கள்; (அவ்வாறு செய்யாவிட்டால்), குண்டு நீர் வையத்து - ஆழமாகிய நீரையுடைய கடலாற் சூழப்பட்ட இந்நிலவுலகத்தில், அடா அடுப்பினவர் - சமைக்காத அடுப்பையுடைய சோற்றுப் பிச்சைக்கு வரும் வறியவர், உம்மை - உங்களை, கொடாதவர் என்பர் - கொடுக்காத லோபிகளென்று இகழ்வர்; (எ - று.)

மறுமைக்கு வேண்டிய நல்வினையின்பொருட்டுக் கொடாவிட்டாலும் இம்மைக்குவேண்டிய புகழின்பொருட்டாகவாயினுங் கொடுங்களென்றபடி.

இனி, பின்னிரண்டடிக்கு - பூமியில் வறியவர் முற்பிறப்பில் தானஞ்செய்யாதவரெனப்படுவ ராதலா லென்றும் பொருள்கொள்ளலாம்;

உம்மை - முற்பிறப்பு: அப்பொழுது கருத்து, மறுபிறப்பில் நீங்கள் செல்வ முடையரா யிருக்கவேண்டி இப்பிறப்பில் தானஞ்செய்யுமக ளென்பதாம்.

சிந்தாமணியில் "இம்மியன நுண்பொருள்கள்" என்றவிடத்து, நச்சி னார்க்கினியர் 'இம்மியரிசி - மத்தங்காய்ப் புல்லரிசி' என உரைத்தது அறி யத்தக்கது. இது, 'தினை' என்பதுபோல, சிறுமைக்கு எடுத்துக்காட்டுவதோர் அளவை. இயைவ-பெயர். அளபெடைகள், செய்யுளோசை நிறைக்கவந்தன; அலகிட்டுக்காண்க. என்பர் - செயப்பாட்டுவினைப்பொருளில்வந்த செய் வினை. (௪)

௬௫. மறுமையு மிம்மையு நோக்கி யொருவர்க்
குறுமா றியைவ கொடுத்தல்—வறுமையா
லீத லிசையா தெனினு மிரவாமை
யீத லிரட்டி யுறும்.

(இ - ள்.) மறுமையும் இம்மையும் நோக்கி - மேலுலகத்துப் பயனையும் இவ்வுலகத்துப் பயனையும் நன்றாக ஆராய்ந்து, ஒருவர்க்கு - ஒருவருக்கு, இயைவ - கொடுக்கக்கூடியவற்றை, உறும் ஆறு - தக்கபடியே, கொடுத்தல்- கொடுக்கக்கடவர்; வறுமையால் - இல்லாமையால், ஈதல் இசையாது எனி னும் - கொடுத்தல் இசையாமற்போனாலும், இரவாமை - யாசியாதிருத் தல், ஈதல் இரட்டி உறும்-கொடுத்தலினும் இருமடங்கு நல்லதாகும்;(எ-று.)

மறுமையிற் சுவர்க்க இன்பமும், இம்மையிற் புகழ்ப்பெருமையும் வரு வதை நோக்கி இயைந்தவளவு பிறர்க்குக் கொடுக்கவேண்டும்; அவ்வாறு கொடுக்கக்கூடாமற் போனாலும் தான் பிறரை இரவாமலிருப்பது மிகவும் நல்லது என்பதாம்.

மறுமை, இம்மை - ஆகுபெயர்கள். உறுமாறு கொடுத்தல் - தக்ககாலத் தில் முகமலர்ந்து நல்மனததோடும் இன்சொல்லோடுங் கைம்மாறு கரு தாது கொடுத்தல். இயைவ - பெயர். கொடுததல் - தல்லீற்று உடன்பாட்டு வியங்கோள். இரட்டி - இரட்டுதலுடையது; இரட்டுதல் - இரண்டாகுதல்: இ - பெயர்விகுதி.

மூன்றுமடி - முற்றுமோனை. (௫)

௬௬. நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க
படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார்
குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணா மாக்க
ளிடுகாட்டு ளேற்றைப் பனை.

(இ - ள்.) பலர் நச்ச வாழ்வார் - பலரும் (தம்மை) விரும்பி வந்து அடுத் துப் பயன்கொள்ளும்படி வாழ்பவர்,—நடுஊருள் - ஊர்நடுவில், வேதிகை சுற்றுக்கோள் புக்க - மேடையினால் எல்லாப்புறமுஞ் சூழ்ந்துகொள்ளு தலைப் பொருந்திய, படு பனை அன்னர்-காய்த்தல் பொருந்திய பெண்பனை மரங்களை ஒப்பர்; குடி கொழுத்தக்கண்ணும் - (தமது) குடித்தனம் (செல் வத்தால்) மிக்கவிடத்தும், கொடுத்து உண்ணா மாக்கள் - (பிறர்க்குக்) கொடு

த்து (த் தாமும்) உண்ணாத மனிதர், இடுகாட்டுள் ஏற்றை பனை - சுடுகாட்டி லுள்ள காய்க்காத ஆண்பனைமரங்களை ஒப்பர்; (எ - று.)

பரிசுத்தமான ஊர்நடுவிற் பழந்தரும் பனைமரம் ஒன்று இருந்து அதைச் சுற்றிலுந் திண்ணையு மிருந்தால் வேண்டியவர்வந்து பழம்பறித்துக்கொண்டு அத்திண்ணைமேலிருந்து புசித்தல்போல, உயர்குலத்துப்பிறந்த உபகாரி களை யாவரும் வந்து அடைந்து அவரிடத்துத் தமக்குவேண்டும் பயன்களைப் பெறுவர்; அபரிசுத்தமான இடததில் தோன்றிப் பலனையுந்தராத மரத்தை எவரும் சேராதவாறுபோல, இழிகுலத்துப்பிறந்த லோபிகளாயினாரை ஒரு வரும் அடையார் என்றபடி.

"பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம், நயனுடையான்கட்படி ன்" என்ற திருக்குறளும், "உதவுமாடியர், பார்செழுபயன்மரம் பழுத்தற்று கவும்" என்ற கம்பராமாயணமும், "கற்றையஞ்சுடர்மணி கனக மேனைய, பிற்றை யென்னு தருள் பெரியர் வண்மைபோன், மற்றவனுள்ள பன்மர முந் தம்பய, னெற்றையு மூலப்புரு தீகைசான்றவே" என்ற கந்தபுராண மும் காணத்தக்கன.

'ஊர்நடு' என்பது 'நடுவூர்' என முன்பின்னாகத் தொக்குவந்த ஆறாம் வேற்றுமைத்தொகை; இலக்கணப்போலி எனவும்படும். வேதிகை - வேதி கா என்னும் வடசொல் ஈறுதிரிந்தது. சுற்றுக்கோள் - சுற்றுக்கொள் என் னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். படுபனை - வினைத்தொகை. செல்வம் மிகுதியாக இருக்கவும் கொடுத்து உண்ணாதவரது இழிவு தோன்ற,'மாக்கள்' என்றார். மாக்களெனப்படுவோர், மனவுணர்ச்சியில்லாமல் ஐம்பொறி யறிவு மாத்திரமேயுடைய விலங்குபோன்ற ஒருசார்மானிடங்கள்; மா என்பது விலங்கின் பெயராதலால், அதன் பன்மையாகிய மாக்கள் என்பது மிருக ப்ராயராகிய அவிவேகிகளைக் குறிக்குமென்க. மக்களாவார் - ஐம்பொறி யுணர்வோடு மனவறிவு முடையவர்; விவேகிகளான மனிதர்: "மாவு மாக் களு மையறிவினவே," "மக்கள்தாமே ஆறறிவுயிரே" என்ற தொல்காப்பி யச் சூத்திரங்களைக் காண்க. இடுகாடு - (உயிர்நீங்கிய உடல்களை) இடுங் காடு; இடுதல் - கொண்டுபோகடுதல்.

ஏற்றை - ஆண்பெயர்; "ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாற் கெல்லாம், ஏற்றைக்கிளவி யுரித்தென மொழிப" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்து 'எல்லாம்' என்றதனால், சிறுபான்மை ஆற்றலில்லாததற்கும் இது கொள் ளப்பட்டது. 'ஏற்றுப்பனை' என்று பாடமோதுவாரும் உளர். மேற்காட்டிய "ஆற்றலொடுபுணர்ந்த" என்ற தொல்காப்பியச சூத்திரத்தி னுரையில், நச் சினார்க்கினியர் 'எல்லாம் என்றதனால், சிறுபான்மை ஆற்றலில்லாதனவுங் கொள்க; அது "இடுகாட்டு ளேற்றைப்பனை" என்பதுபோன்று வருவன' என்று இதனையே உதாரணங்காட்டியதனால், அப்பாடங்கொள்ளப்படாது, 'ஏற்றைப்பனை' என்ற பாடமே கொள்ளப்பட்டது. தொல்காப்பியர் "ஏறும் ஏற்றையும்" என்று இரண்டு பெயர்களையும் உடன்வைத்துச் சூத்திரஞ்செய்

துள்ளதனால், 'ஏழு' என்பதுபோல 'ஏற்றை' என்பதும் தனியே ஒரு பெய ரென்றும், ஏறு என்பது ஏற்றை என ஐகாரச்சாரியை பெற்றதன்றென்றும் அறிக. (௬)

௯௭. பெயற்பான் மழைபெய்யாக் கண்ணு முலகஞ்
செயற்பால செய்யா விடினுங்—கயற்புலால்
புன்னை கடியும் பொருகடற் றண்சேர்ப்ப
வென்னை யுலகுய்யு மாறு.

(இ - ள்.) கயல் புலால் - மீன்களின் புலால்நாற்றத்தை, புன்னை -புன்னை மலர்கள், கடியும்-நீக்கப்பெற்ற, பொரு - அலைமோதுகின்ற, கடல் - கடலின், தண் - குளிர்ச்சியான, சேர்ப்ப - கரையையுடையவனே!—மழை-மேகங்கள், பெயல் பால் - பெய்யப்படுந் தன்மையுடைய நீரை, பெய்யாக்கண்ணும் - (காலத்திற்) பெய்யா விட்டாலும், உலகம் - உயர்ந்தோர், செயல் பால - செய்யத்தக்க உதவிகளை, செய்யாவிடினும் - (காலத்திற்) செய்யா விட்டாலும், உலகு - உலகத்து உயிர்கள், உய்யும் ஆறு - பிழைக்கும் வழி, என்னை -யாதோ? (எ - று.)—சேர்ப்பு - கரை.

எல்லா வுயிர்களும் உய்வதற்கு மழைபொழிவது இன்றி யமையாதவாறுபோல, இல்லாதவரெல்லாம் உயிர்வாழ்வதற்கு உள்ளவர் ஈதல் இன்றி யமையாதென்பது கருத்து.

பெயற்பால் - அன்மொழித்தொகை. இனி, பெயற்பால் - பெய்தற்கு உரிய காலத்தில், மழை பெய்யாக்கண்ணும் - மழைபெய்யாவிட்டால் என்றும் உரைக்கலாம். பெய்யாக்கண் என்பது - கண்ணீற்று எதிர்மறைவினையெச்சமாகிய ஒருமொழி யென்றாவது, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சத்தொட ரென்றாவது கொள்ளத்தக்கது "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" ஆதலால், 'உலகம்' என்ற பொதுமொழிக்கு உயர்ந்தோர் எனச் சிறப்புப்பொருள் கொள்ளப்பட்டது. செயற்பால - செய்தற்கு உரியவை யென்று நான்காம்வேற்றுமைத்தொகைநிலைத்தொடராகிய பெயர். கயல், புன்னை - இவை நெய்தனிலத்துக் கருப்பொருள்கள். 'கயற்புலால் புன்னைகடியும்' என்றதனால், புன்னைப்பூவின் பரிமளமிகுதி விளங்கும். என்னை, ஐ - சாரியை.

'பெயற்பால் மழைபெய்யாக்கண்ணும்' என்ற உபமானமும், 'உலகம் செயற்பால செய்யாவிடினும்' என்ற உபமேயமும் 'உலகுய்யுமாறு என்னை' என்ற ஒருதன்மையில் முடிக்கப்பட்டதனால், இது, தீபகாலங்காரமாம்; தமிழில் விளக்கணி எனப்படும்.

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" என்ற திருக்குறளிலும் கைம்மாறுகருதாது மழைபொழியும் மேகம் கைம்மாறு கருதாது உயர்ந்தோர் செய்யும் உதவிக்கு உவமை கூறப்பட்டவாறு உணர்க. (௭)

௯௮. ஏற்றகை மாற்றாமை யென்னானுந் தாம்வரையா
ராற்றாதார்க் கீவதா மாண்கட—னாற்றின்
மலிகடற் றண்சேர்ப்ப மாறீவார்க் கீதல்
பொலிகட னென்னும் பெயர்த்து.

(இ - ள்.) மலி கடல் தண் சேர்ப்ப - (வளங்கள்) மிகுந்த கடலின் குளிர்ந்த துறையையுடையவனே!—ஏற்ற கை - (யாசகன்) இரந்து ஏந்திய கையை, மாற்றாமை - மறுக்காமல், என் ஆனும் - (தமக்கு உள்ளது) யாதொன்றையாயினும், தாம் வரையார் - தாம் (இன்னார்க்கு இன்னதைக்கொடுக்கலாமென்றும் கொடுக்கலாகாதென்றும்) வரைந்துகொள்ளாதவராய், ஆற்றாதார்க்கு - பிரதியுபகாரஞ்செய்யமாட்டாத வறியவர்க்கு, ஈவது - கொடுப்பதுவே, ஆண் கடன் ஆம் - உத்தமபுருஷர்களுக்குக் கடமையாம்; ஆற்றின் - (தாம்) கொடுப்பதானால், மாறு ஈவார்க்கு - கைம்மாறு கொடுக்க வல்லவர்க்கு, ஈதல் - கொடுத்தல்,—பொலி கடன் என்னும் பெயர்த்து - கொழுத்த கடன்கொடுத்த லென்னும் பெயரையுடையது; (எ - று.)

இல்லையென்று மறுக்காமலும், உறவு நண்பு அயல் என்னும் வேறுபாடு நோக்காமலும் வறியோர்க்கு அவர் இரந்த பொருளைத் தமக்கு இயைந்த வளவு கொடுத்தல்வேண்டும்; அதுவே தான மென்று சிறப்புப் பெறும்: அன்றி, பிரதியுபகாரஞ்செய்யவல்லவர்க்கு [வறியரல்லாதார்க்கு]க் கொடுப்பது, கடன்கொடுத்தல்போ லாகுமேயன்றித் தானமாகமாட்டாது என்பதாம். இப்பாட்டின்கருத்தை "வறியார்க் கொன்றீவதே யீகை மற்றெல்லாங், குறியெதிர்ப்பை நீர துடைத்து" என்ற திருக்குறளிலுங் காண்க. "ஆற்றுநர்க்கு அளிப்போர் அறவிலை பகர்வோர், ஆற்றா மாக்க ளரும்பசி களைவோர், மேற்றே உலகின் மெய்ந்நெறி வாழ்க்கை" என்ற மணிமேகலையடிகளும் காணத்தக்கன. வரையார் என்பதற்கு-தமக்கென்று ஒன்றையும் வரைந்துவைத்துக்கொள்ளாதவராய் என்றும் பொருள்கொள்ளலாம்.

ஏற்ற, ஏல் - பகுதி. கை என்பது - இங்கு இரண்டாம்வேற்றுமைத் தொகை யாதலால், "குறில்வழியத் தனியைந் நொதுமுன் மெலி மிகலுமாம்" என்ற விதிப்படி அதன்முன் மெலிமிகாமல் விகாரத்து இயல்பாயிற்று. மாற்றாமை - மையீற்று எதிர்மறைவினையெச்சம். மாண்கடன் என்று எடுத்து, சிறந்தகடமை யெனினுமாம். கடலுக்கு வளங்கள் - "ஓர்க்கோலை சங்கம் ஒளிர்பவளம் வெண்முத்தம், நீர்ப்படு முப்பினோ டைந்து" என்பன.

௯௯. இறப்பச் சிறிதென்னா தில்லென்னா தென்று
மறப்பயன் யார்மாட்டுஞ் செய்க—முறைப்புதவி
னையம் புகூஉந் தவசி கடிஞைபோற்
பைய நிறைத்து விடும்.

(இ - ள்.) இறப்ப சிறிது என்னாது - (நமக்கு உள்ள பொருள்) மிகவுஞ் சிறியது என்று எண்ணாமலும், இல் என்னாது - இல்லை யென்று சொல்லா

மலும், என்றும் - எப்பொழுதும், அறம் பயன் - தானதருமமாகிய பயனை, யார்மாட்டும் - யாவரிடத்தும், செய்க - செய்யக்கடவர்; (அங்ஙனஞ்செய்தால், சிறிதுசிறிதாகச் செய்யப்பட்ட அச்செயல்), முறை - கிரமமாக, புதவின் - வாயில்தோறும், ஐயம் புகூஉம் - பிச்சைக்குச் செல்கின்ற, தவசி - சந்யாசியினது, கடிஞைபோல் - பிச்சைப்பாத்திரத்தைப்போல, பைய - மெல்லமெல்ல, நிறைத்துவிடும் - (அறப்பயனைப்) பூரணமாக்கும்; (எ-று)

சிறிது கொடுத்தலிற் பயனென்னென்று ஆலோசித்து, கொடுத்தலைத் தவிரலாகாது; இயன்றவளவும் இல்லையென்னாமல் யார்க்கும் எப்பொழுதுங் கொடுத்தல் வேண்டும்; அங்ஙனங்கொடுக்கப்பட்ட சிறுகொடைகளின் தொகுதியால் புண்ணியப்பயன் பூர்த்திபெறும்; வீடுதோறும் சிறிதுசிறிதாக இடப்பட்ட பிச்சைகளால் பிசைக்காரனது பாத்திரம் நிறைந்துவிடவில்லையா? என்பதாம். உவமையணி.

புதவின், இன் - ஏழனுருபு. தவசி - தபஸ்வீ என்னும் வடசொல்லின் திரிபு; தவஞ்செய்பவனென்று பொருள். சந்யாசிகள் அந்த பிக்ஷை வாங்கியுண்டே சீவிக்கவேண்டு மென்பது நூல்துணிபாதலால், தவசியென்பதற்கு - சந்யாசியென்று உரைக்கப்பட்டது. பைய - குறிப்புவினையெச்சம். புகும் என்பது, செய்யுளோசைநிறைக்க நெடிலாகி அளபெடுத்தது; மூன்று மாத்திரை; இது இன்னிசையளபெடை யன்று. (கூ)

க00. கடிப்பிடு கண்முரசங் காதத்தோர் கேட்ப
ரிடித்து முழங்கியதோர் யோசனையோர் கேட்ப
ரடுக்கிய மூவுலகுங் கேட்குமே சான்றோர்
கொடுத்தா ரெனப்படுஞ் சொல்.

(இ - ள்.) கடிப்பு இடு - குறுந்தடியால் அடிக்கப்படுகின்ற, கண் - கண்ணினையுடைய, முரசம் - பேரிகையின் ஒலியை, காததத்தோர் - ஒருகாததூரத்து ளிருப்பவர், கேட்பர்--; இடித்து முழங்கியது - (மேகம்) இடியிடித்துக் கர்ச்சித்த ஓசையை, ஓர் யோசனையோர் கேட்பர் - ஒருயோசனைதூரத்துளிருப்பவர் கேட்பர்; சான்றோர் கொடுத்தார் எனப்படும் சொல் - பெரியோரால் (இவர் யாசகர்க்குக்) கொடுத்தாரெனப்பட்ட சொல்லையோவென்றால், அடுக்கிய மூ உலகும் - (ஒன்றன்மேலொன்று) அடுக்கு அடுக்காக அமைந்துள்ள மூன்று உலகத்தவரும், கேட்கும் - கேட்பர்; (எ - று)

முரசொலி காததூரத்தளவும் கேட்கப்படும்; இடிமுழக்கம் யோசனைதூரத்தளவும் கேட்கப்படும்; இவர் கொடுத்தா ரென்று பெரியோர் சொல்லுஞ்சொல் எல்லாவுலகங்களிலுங் கேட்கப்படும் என இங்ஙனம் மேன்மேலுயர்ச்சியணிபடக்கூறியதனால், கொடுப்பவரது புகழ்எங்கும்பரவுமென்பதாம்.

கடிப்பு - முரசடிக்குங் குறுந்தடி; "வாய்ப்பறையாகவும், நாக்கடிப்பாகவும்" என்றார் பிறரும். கண் - வாத்தியத்தில் அடிக்கப்படும் இடம். முரஜம், யோஜநா என்ற வடசொற்கள் திரிந்தன. காதம் - ஏழரைநாழிகை

வழி. காதம் யோசனை யென்பன ஒரு பொருளன வென்பா ருளராயினும், இங்கே, காதத்தினும் யோசனை பெரிய தென்று கொள்ளுதலே பொருத்தம்: நான்குகாதத்தை யோஜனை யென்பது, ஜைநநூல்வழக்கு; சீவகசிந்தாமணியில் "ஓசனை கமழும்" என்றதற்கு - நச்சினார்க்கினியர் 'நாற்காத வெல்லை நாறும்' என உரைத்தது, இங்கு உணரத்தக்கது. மூழ்கியது - வினையாலணையும்பெயர். மூவுலகு - மேல் நடு கீழ் என்பன; சுவர்க்க மத்திய பாதாளங்கள். ஏ - தேற்றம். சான்றோர் - மூன்றாம்வேற்றுமைத் தொகை; சான்றோரால் எனப்படும் என இயையும்.

இச்செய்யுள், "யோஜநம் பேரிஶப்தஶ்ச மேகஶப்தஶ்ச த்வாதஶ, தாத்ரூணாம்தாநஶப்தஶ்ச த்ரைலோக்யம்ஸசராசரம்"என்னும் வடமொழிச் சுலோகத்தை அடியொற்றியது. (க0)

---

## கக - ஆம் அதிகாரம்.—பழவினை.

அஃதாவது - முற்பிறப்புக்களிற் செய்யப்பட்டதனாற் பழையனவாகிய நல்வினை தீவினைகள் தம்மைச்செய்த உயிர்க்குத் தம்பயன்களாகிய இன்ப துன்பங்களைப் பிற்பிறப்புக்களில் தவறாமல் தருமென்பதைப் பற்றிக் கூறுவது. பழவினை - ஜந்மாந்தரகர்மம். இது 'ஊழ்' என்றும் சொல்லப்படும். நல்வினை தீவினை - புண்ணிய பாபங்கள். இக்கருமந்தான் - ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாம்யம் என மூன்றுவகைப்படும்; அவற்றுள், ஸஞ்சிதம் - பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரால் அளவில்லாமற் செய்து சேர்க்கப்பட்ட வினைகளின் பயன்கள்: ப்ராரப்தம் - அவற்றுள் இறந்த உடம்புகளால் அனுபவித்தன வொழியப் பிறந்த உடம்புகளால் அனுபவித்தற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன: ஆகாம்யம் - அவையன்றிப் பின்னும் அனுபவிக்கக் கடவனவாய்க் கிடந்தன; இவையெல்லாம் அடங்குதற்கு, பொதுப்பட, 'பழவினை' என்றார். பழவினை - பண்புத்தொகை; பழமையாகிய வினை யென விரியும். தானம் முதலிய நல்வினைகளை முற்பிறப்புக்களிற் செய்தவர்கள் பிற்பிறப்புக்களிற் செல்வம் முதலியவற்றாற் பலநன்மைகளை அனுபவிப்ப ரென்பதையும் அவற்றைச்செய்யாதவர் பசி பிணி முதலியவற்றாற் பலதீமைகளை அனுபவிப்ப ரென்பதையும் அறிவித்தற்கு, இவ்வதிகாரம், ஈகையென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது.

க0க. பல்லாவு ளுய்த்து விடினுங் குழக்கன்று
வல்லதாந் தாய்நாடிக் கோடலைத்—தொல்லைப்
பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு.

(இ - ள்.) பல் ஆவுள் - பலபசுக்களின் நடுவில், உய்த்துவிடினும் - தான் செலுத்திவிடப்பட்டாலும், குழ கன்று - இளங்கன்றானது, தாய் நாடிக் கோடலை - (தனது) தாயைத் தானே தேடி யடைதலில், வல்லது ஆம் -

வல்லமையுடையதாம்; தொல்லை பழ வினையும் - மிகவும் பழமையாகிய கருமமும், தன் செய்த கிழவனை நாடிக் கொளற்கு - (பலஜீவகோடிகளுள்ளும்) தன்னைச்செய்த உரிமையுடையவனைத் தேடி யடைவதில், அன்ன தகைத்தே - அப்படிப்பட்ட தன்மையை [வல்லமையை] யுடையதேயாம்;(எ-று.)

மிகச் சிறியதாயிருப்பினும் கன்று தான் பசுமந்தையின்நடுவில் விடப்பட்டால் தன்தாயையே நாடி யடைவதுபோல, பழமையாகவருகிற வினையும் ஜீவகோடிகளுள் தனக்கு உரியவனையே நாடி யடையுமென்பதாம்; உவமையணி. ("யதா தேநுஸஹஸ்ரேஷு வத்ஸோ விந்ததி மாதரம் - ஏவம் பூர்வக்ருதம் கர்ம கர்த்தார மநுகச்சதி" என்ற மஹாபாரதத்து ஆநுஶாஸநிகபர்வத்துச் சுலோகத்தை அடியொற்றியது, இச்செய்யுள்.

பல்லா - பண்புத்தொகை; பல + ஆ : பலவென்பது, தன்முன் பிறவர அகரங்கெட்டது; [நன் - உயிர் - ௨௦.] 'பல்லா வொளித்து விடினும்' என்கிற பாடத்துக்கு-(தாய்ப்பசுவைப்) பலபசுக்கூட்டத்தினிடையே மறைத்து வைத்துவிட்டாலு மென்று பொருள். விடின் என்பது - இவ்வுரையிற் செய்வினைப்பொருளையும்,முன்னுரையிற் செயப்பாட்டுவினைப்பொருளையும் உணர்த்திற்று; செயப்பாட்டுவினைப்பொரு ளுணர்த்தும்போது, அகரச் சாரியையும் படுவிகுதியும் செய்யுள்விகாரத்தால் தொக்குநின்றனவென்று அறிக. உம் - சிறப்பும்மை. குழ - இளமையுணர்த்தும் உரிச்சொல். வல்லது - பண்படியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்று; அ - சாரியை, து - விகுதி. ஆம் - அசை; ஆகுமெனப் பொருள்கொண்டால், 'வல்லது' - பெயராம். தாய் - இருதிணைப்பொதுப்பெயர்.

கோடலை, கொளற்கு - இரண்டனுருபும் நான்கனுருபும் ஏழாம்வேற்றுமையிடப்பொருளில்வந்தமையால், உருபுமயக்கம். தொல்லை - பண்புப்பெயர்;தொல்-பகுதி ஐ-விகுதி: (இப்பகுதி'மை'விகுதிபெற்றுத் தொன்மையெனவும், 'று' விகுதிபெற்றுத் தொன்று எனவும் வரும்.) தொல்லை, பழ- ஒருபொருட்பன்மொழி; வினையினது அநாதியாய்வருந்தன்மையை வற்புறுத்துதற்பொருட்டு, இவ்வாறுகூறினா ரென்க: இனி, தொல்லையென்பதைப் பண்பாகுபெயராகக்கொண்டு, முற்பிறப்புக்களிற் செய்தலாற் பழமையாகிய வினை யென்னவுமாம். உம் - இறந்தது தழுவிய எச்சம். அன்ன - சுட்டடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; அ - பகுதி, அ - விகுதி, ன் - சாரியை, மற்றொரு ன் - சந்தி. தன் + செய்த=தற்செய்த; னகரம் றகரமாயிற்று. கிழவன் - உரியவ னென்னும் பொருளில், கிழமை ஈறுபோன கிழ - பகுதி; பெண்பால் - கிழத்தி; (வயதுமுதிர்ந்தவனென்னும் பொருளில், கிழம் - பகுதி; பெண்பால் - கிழவி.) (க)

க0௨. உருவு மிளமையு மொண்பொருளு முட்கு
மொருவழி நில்லாமை கண்டு—மொருவழி
யொன்றேயு மில்லாதான் வாழ்க்கை யுடம்பிட்டு
நின்றுவீழ்ந் தக்க துடைத்து.

(இ - ள்.) உருவும் - அழகும், இளமையும் - யௌவனமும், ஒள் பொருளும் - மேலான செல்வமும், உட்கும் - (பலரும்) அஞ்சத்தக்க மதிப்பும், ஒரு வழி - ஒரேதன்மையாக, நில்லாமை - (ஒருபிறப்பில்) நிலைபெற்றிராமையை, கண்டும் - பார்த்திருந்தும், ஒரு வழி - யாதாயினும் ஒருவழியால், ஒன்றேயும் - ஒருசிறிது நல்வினையையாயினும், இல்லாதான் - செய்துவைத்தலில்லாதவனது, வாழ்க்கை - உயிர்வாழ்தலானது, உடம்பு இட்டு நின்று வீழும் தக்கது உடைத்து - உடம்பை (ச் சிலகாலம்) பெற்று நின்று (அதனாலாகிய பயனைக் கொள்ளாமல்) விழுந் தன்மையையுடையது; (எ - று.)

உருவம் முதலியவற்றின் நிலையின்மையைக் கண்டும் நிலையான நல்வினையைச் செய்யாதவனது பிறப்பு வீணென்பது, கருத்து. எனவே, இங்ஙனம் நல்வினை செய்யவொட்டாது ஒருவனது வாணாளை வீணாக்குவது பழவினையின் செயலே யென்றதாயிற்று. ஒரு வழி - ஒருவனிடத்தும் எனவும், ஒரு வழி ஒன்றேயும் - ஒப்பற்ற உயர்கதியைத் தரத்தக்க ஒருநற்செய்கையையும் எனவும் உரைப்பாரு முளர்.

உட்கு - கருவிப்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயர்; முதனிலைத்தொழிலாகுபெயரென்னவுமாம்: உட்குதல் - அஞ்சுதல். நின்று - அசையுமாம். வீழும் என்னும் எதிர்காலப்பெயரெச்சம், ஈற்றுயிர்கெட்டு 'வீழ்ம்' என நின்றது: "செய்யுமெனெச்சவீற்றுயிர்மெய் சேறலும்" என்னுஞ் சூத்திரத்தின் உரையிற்கோடலால் இதனை அமைக்க. தக்கது என்பது - தகை தகுதி என்பன போல, குணத்தையுணர்த்துந் தொழிற்பெயர்.　　(உ)

கoπ. வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை
　　யளந்தன போக மவரவ ராற்றான்
　　விளங்காய் திரட்டினா ரில்லைக் களாங்கனியைக்
　　காரெனச் செய்தாரு மில்.

(இ - ள்.) வளம் பட வேண்டாதார் - (செல்வம்முதலியவற்றாற்) சிறப்பைப் பெற விரும்பாதவர், யார் - (உலகத்தில்) யாவர் உளர்? யாரும் இல்லை—; (ஆயினும்), போகம் - (அவரவரது) சுகாநுபவங்கள், அவர் அவர் ஆற்றான் அளந்தன - அவரவரது ஊழ்வினையால் (முன்னமே) அளவு செய்யப்பட்டுள்ளன; விள காய் திரட்டினார் இல்லை - விளங்காயைத் திரண்ட உருவினதாகச் செய்துவைத்தவர் இல்லை; களா கனியை கார் என செய்தாரும் இல் - களாப்பழத்தைக் கரிய உருவினதாகச் செய்து வைத்தவரும் இல்லை; (எ - று.)

விளங்காய்முதலியன தம்தம் இயற்கையால் அமைந்திருப்பதுபோல அவரவர்சுகமும் அவரவரது புண்ணியத்திற்குத் தக்கவாறாக அமைந்ததென்பதாம்; எடுத்துக்காட்டுவமையணி.

"அளந்தன போகமெல்லா மவரவர்க் கற்றைநாளே, யளந்தன வாழுநாளும்" என்ற சிந்தாமணி இங்கு ஒப்புநோக்கத்தக்கது. 'யார், யாருமில்லை' என வினவும் விடையுமாக இருமுறை கூறியது, வற்புறுத்தற்கு; "உண்டோ வுணர்ச்சி மற் றில்லாரும்" என்றாற்போல. வளம்பட - தமக்

குச் செல்வ முண்டாகுமாறு என்றுமாம். யார்யாரும் என எடுத்து - எப்ப டிப்பட்டவரும் என்றும் உரைப்பர்.

அளந்தன - செயப்பாட்டுவினைப்பொருளில்வந்தசெய்வினை. விளங் காய், களங்கனி - மரப்பெயர்முன்னர் இனமென்மை தோன்றிற்று; [நன் - உயிர் - கசு.] போகம் - வடசொல்.

இது - இருவிகற்ப இன்னிசைவெண்பா. (௲)

க0௭ உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா
பெறற்பா லனையவு மன்னவா மாரி
வறப்பிற் தருவாரு மில்லை யதனைச்
சிறப்பிற் றணிப்பாரு மில்.

(இ - ள்.) உறல் பால - (ஊழ்வினையால்) நேரிடத்தக்க துன்பங்களை, நீக் கல் - விலக்குவது, உறுவர்க்கும் - ஆற்றல் மிக்க முனிவர்கட்கும், ஆகா - கூடாததாம்; பெறல் பால் அனையவும் - பெறத்தக்க தன்மையையுடைய அவ்வின்பங்களைப் பெறுதல்களும், அன்ன ஆம் - அப்படிப்பட்டனவேயா கும் [முனிவர்களாலுந் தரமுடியாதனவாம்]; (எவைபோலவெனில்),—மாரி வறப்பின் - மழைபெய்யாதாயின், தருவாரும் - (அதனைப்) பெய்துதருவிக்க வல்லவரும், இல்லை—; சிறப்பின்-(அம்மழை)மிகுதியாகப்பெய்தால், அதனை —, தணிப்பாரும் - குறையச்செய்பவரும், இல் - இல்லை; (எ - று.)

மழை பெய்யாமல் தவிர்ந்தால் அதனைப் பெய்வித்தல் எவர்க்கும் முடி யாதவாறுபோல, புண்ணியப்பயன் வாராதவிடத்து அதனைக் கொடுப்பவ ரும் இல்லை;மழை மிகுதியாகப் பெய்யுமிடத்து அதனைத் தடுத்தல் முடியாத வாறுபோல, தீவினைப்பயன் மிகுதியாக நேருமிடத்து அதனைத் தவிர்த்த லும் முடியா தென்பதாம்; எல்லாம் பழவினையின்படியே நடக்கு மென் பது, கருத்து.

எடுத்துக்காட்டுவமையணி. மழை வேண்டியவளவாகப் பெய்வது உல கத்துக்கு நன்மைபயத்தல்பற்றி அதற்கு நல்வினையும், மிகுதியாகப்பெய்வது தீமைவிளைத்தல்பற்றி அதற்குத் தீவினையும் உவமையாதல் ஏற்கும்.

மாரிவறப்பிற்றருவாருமில்லை, பெறற்பாலனையவுமன்னவாம்; அத னைச் சிறப்பிற் றணிப்பாரு மில்லை, (அதுபோல) உறற்பால நீக்க லுறுவர் க்கு மாகா என மாறிச்சென்றியைதலால், இச்செய்யுள் - எதிர்நிரனிறைப் பொருள்கோள்.

இனி, உறற்பால - நேரிடக்கூடிய துன்பங்கள், நீக்கல் ஆகா - நீக்கு குதற்கு முடியாதனவாம் என்றும், பெறற்பால்அனையவும் - பெறக்கூடிய நல்வினைகளும், அன்ன ஆம் - அவ்வாறே நீக்கமுடியாதனவாம் என்றும் உரைப்பாருமுளர். இவ்வுரைக்கு, முறைநிரனிறையாகவே இயைக்கலாம்.

இதுவும், அடுத்தகவியும் - ஒருவிகற்ப இன்னிசைவெண்பா. இவ்வதி காரத்து க, கூ - ஆஞ் செய்யுள்களும் அது. (௭)

கூ0ரு. தினைத்துணைய ராகித்தந் தேசுள் ளடக்கிப்
பனைத்துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வர்
நினைப்பக் கிடந்த தெவனுண்டா மேலை
வினைப்பய னல்லாற் பிற.

(இ - ள்.) பனை துணையார் - பனையளவு பெரியவர்கள், வைகலும் - நாள்தோறும், பாடு அழிந்து - (தமது) பெருமை கெட்டு, தினை துணையர் ஆகி - தினையளவு சிறியவர்களாய், தம் தேசு உள் அடக்கி - தமது ஒளியை உள்ளே அடக்கிக்கொண்டு, வாழ்வர் - உயிர்வாழ்வார்கள்; (இதற்குக்காரணம்), நினைப்ப - ஆலோசித்தால், மேலை வினை பயன் அல்லால் - முற்பிறப்பிற்செய்த தீவினையின்பயனே யல்லாமல், பிற - வேறாக, கிடந்தது - பொருந்தியது, எவன் உண்டு ஆம் - யாது உள்ளதாம்? [எதுவுமில்லை யென்றபடி]; (எ - று.)

செல்வம் அதிகாரம் கல்வி முதலியவற்றால் உயர்ந்தவர்கள் பலர் விரைவிலே அவ்வுயர்ச்சியொழிந்து தாழ்வையடைந்து ஒளிகுன்றி இரத்தல் முதலியன செய்து வாழ்தற்குக் காரணம் பழவினையே யென்பது, கருத்து.

தினை, பனை என்பன - சிறுமை பெருமைகட்கும், தாழ்வு உயர்வுகட்கும் எடுத்துக்காட்டப்படும் சில அளவுகள்; "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்தெரிவார்" என்ற திருக்குறளிலுங் காண்க. பனையென்பது, மரப்பெயராய்ப் பெருமைகுறிக்கும். தேசு - தேஜஸ் என்ற வடசொல்லின் சிதைவு. தினைத்துணையர், பனைத்துணையார் என்பன - இங்குத் தாழ்வடைந்தவர்கள், கௌரவம்பெற்றவர்கள் என்ற பொருளைத் தந்தன. வைகலும் - நாளடைவிலே யென்றுமாம். (ரு)

கூ0சு. பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவுங்
கல்லாதார் வாழ்வ தறிதிரேற்—கல்லாதார்
சேதன மென்னுமச் சேறகத் தின்மையாற்
கோதென்று கொள்ளாதாங் கூற்று.

(இ - ள்.) பல் - பலவகைப்பட்ட, ஆன்ற - சிறந்த, கேள்வி நூற்கேள்விகளினால், பயன் - (உயிர்வாழ்க்கையின்) பயனை, உணர்வார் - அறிபவராகிய கற்றோர்கள், வீயவும் - (பலர் விரைவிலே) இறக்கவும், கல்லாதார் - படியாதவர்கள், வாழ்வது - (பலகாலம்) உயிர்வாழ்வதைப்பற்றி, அறிதிரேல் - (காரணமென்னவென்று) ஆலோசித்தறிவீரானால்,—கல்லாதார் - படியாதவர்கள், சேதனம் என்னும் அ சேறு அகத்து இன்மையால் - அறிவென்கிற அந்தச்சாரத்தை (த் தமது) உள்ளே உடைத்தாகாமையால், (அவர்களை), கூற்று - யமன், கோது என்று - அசாரமென்று நினைத்து, கொள்ளாது - எடுத்துக்கொள்ளான்; (எ - று)

சாரத்தை விரைவிலே கிரகித்துக்கொண்டு அசாரத்தை விட்டிடுதல் எவர்க்கும் இயல்பாதலால், யமனும் கல்வியுடையோரை இளமையிலேயே எடுத்துக்கொண்டு அஃதில்லாரை விட்டிடுகின்றா னென்பது, கருத்து.

படித்தவர் விரைவிலிறத்தலும் படியாதவர் நெடுநாளிருத்தலு மாகிய மாறுபாட்டிற்கும்,சிலர் அறிவுடையராயிருத்தலும்சிலர்அறிவிலராயிருத்தலு மாகிய வேறுபாட்டிற்கும் காரணம் சன்மார்த்தரகருமமே யென இப்பாட லுக்கு இவ்வதிகாரத்தோடு இயைபு காண்க.

"பாபீ சிராயுஸ் ஸுக்ருதீ கதாயு:" என்றபடி உலகத்திற் பாவிகள் நெடுநாளிருத்தற்கும், புண்ணியவான்கள் விரைவி லிறத்தற்கும் காரணங் கற்பித்துக் கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி; வடநூலார் ஹேதூத் ப்ரேக்ஷாலங்காரம் என்பர்.

சேறு - ஸாரம் என்னும் வடமொழியின் சிதைவு; "சேறு படுமலர் சிந்த விரைந்தே" எனச் சிந்தாமணியிலும், ஸ்ரீஸாரக்ஷேத்திரத்தைத் திருச் சேறையென வழங்குமிடத்துங் காண்க. தேவர்களை இருதிணையாகவுஞ் சொல்லலா மாதலால், 'கூற்றுக் கொள்ளாது' என அஃறிணையாக் கூறப் பட்டது. ஆம் - அசை. (௬)

௧0எ. இடும்பைகூர் நெஞ்சத்தா ரெல்லாருங் காண
நெடுங்கடை நின்றுழல்வ தெல்லா—மடம்பம்பூ
வன்னங் கிழிக்கு மலைகடற் றண்சேர்ப்ப
முன்னை வினையாய் விடும்.

(இ - ள்.) அடம்பம் பூ - அடம்பங்கொடியின் மலர்களை, அன்னம் - அன்னப்பறவைகள், கிழிக்கும் - (மூக்கினாற் கொத்திக்) கிழித்து விளையாடு தற்கிடமான, அலை கடல் தண் சேர்ப்ப - அலைகின்ற கடலினது குளிர்ந்த துறையையுடைய பாண்டியனே!—(உலகத்திற் சிலர்), எல்லாரும் காண - யாவரும் (தம்மைப்) பார்க்கும்படி, இடும்பை கூர் நெஞ்சத்தார் - வறுமைத் துன்பம் மிக்க மனமுடையவர்களாய், நெடுங் கடை நின்று - பெரிய பல வீட்டுவாயில்களிற் போய் நின்று, உழல்வது எல்லாம் - (பிச்சைக்காக) வருந் துஞ்செய்கையெல்லாம், முன்னை வினை ஆய்விடும் - முற்பிறப்பிற்செய்த தீவினையின் பயனேயாம்; (எ - று.)

கீழ் இவ்வதிகாரத்தின் ௫ - ஆங் கவியில் உயர்ந்தவர் தாழ்வு அடை தற்கு ஏது முன்னைவினையென்று கூறியதுபோல, இதுகு, இயற்கையிலே யே வறிஞராயிருத்தலும் முன்னைவினையினாலேயே யென்று கூறியவாறும். "அகத்தாரே வாழ்வாரென் றண்ணாந்துநோக்கிப், புகத்தாம்பெறாஅர் புறங் கடைபற்றி, மிகத்தாம் வருந்தியிருப்பரே மேலைத், தவத்தாற் றவஞ்செய் யாதார்" என்றது, இங்குக் காணத்தக்கது.

இனி, முதலடிக்கு - (தமது தாழ்ந்த நிலைமையை நோக்கி) யாவரும் மிக இரக்கம்பொருந்திய மனத்தையுடையவர்களாய்த் தம்மைக் காணும் படி யென்றும் உரைக்கலாம். நெடுங்கடை - வெகுகாலம் என்று உரைப்பாரு முளர். மூன்றாமடி - அந்நாட்டின் நீர்வளத்தையும், நெய்தனிலச்சிறப்பை யும் விளக்கிற்று.

கூர் - உரிச்சொல். உழல்வதெல்லாம் - ஒருமைப்பன்மை மயக்கம். அடம்பு - ஒர்கொடியின் பெயர்; அம் - சாரியை. ஆய்விடும், விடு - துணி

வுப்பொருளை உணர்த்திற்று. அன்னம் - ஹம்ஸம் என்னும் வடமொழி. தனிச்சொல்லும் மூன்றும் அடியும் - ஆறீஉ முற்றிலை. அடுத்தசெய்யு ளிலும் இப்படியே. (எ)

௩0௮. அறியாரு மல்ல ரறிவ தறிந்தும்
பழியோடு பட்டவை செய்தல்—வளியோடி
நெய்த னறவுயிர்க்கு நீள்கடற் றண்சேர்ப்ப
செய்த வினையான் வரும்.

(இ - ள்.) வளி ஓடி - காற்று வீசுதலினால், நெய்தல் - நெய்தற் பூக்கள், நறவு உயிர்க்கும் - (அசைந்து) தேனைச் சொரிகின்ற, நீள் கடல் தண் சேர்ப்ப - பெரிய கடலினது குளிர்ந்த கரையையுடைய பாண்டியனே!— (சிலர்), அறியாரும் அல்லர் - அறியாதவரு மல்லர்: அறிவது அறிந்தும் - அறிதற்கு உரியவற்றை அறிந்திருந்தும், பழியோடு பட்டவை செய்தல் - உலகநிந்தையோடு பொருந்திய தீயதொழில்களைச் செய்தல், செய்த வினையான் வரும் - (முற்பிறப்பிற்) செய்த தீவினையினால் உண்டாகும்; (எ - று.)

அறிந்தும் பழிப்பனசெய்தல் பழவினைப்பயனே யென்பது கருத்து. "தவமுந் தவமுடையார்க் காகும்" என்றபடி நல்வினைக்கு நல்வினையே காரணமாதல்போல, தீவினைக்குந் தீவினையே காரணமாம் என்றவாறு.

ஓடி=ஓட: எச்சத்திரிபு; இனி, வளி ஓடி நெய்தல் நறவுஉயிர்க்கும் - காற்றுத் தான் விரைந்துசென்று நெய்தல்மலரினது வாசனையை வீசுகின்ற எனவுமாம். நெய்தல் - நீர்ப்பூங்கொடிகளுள் ஒன்று. அறிவது - ஞாதியோ நுமை. நறவு - நறா என்பதன் விகாரம்.

'வழியோடி' என்று பாடமோதி, (காற்றின்) வழியே போய் என்று உரைப்பாரு முளர். 'நீள்கழித்தண்சேர்ப்ப' என்பதும் பாடம்.

முதலடி - முற்றுமோனை; அதாவது - ஓரடியின் சீர்களிலெல்லாம் மோனைவருவது. இச்செய்யுளின் முன்னிரண்டடிகளில் உயிரோதுகை; அதாவது - இரண்டாமெழுத்து ஒன்றாயினும் இரண்டாமெழுத்தின்மேலேறிய உயிர் ஒன்றிநிற்பது. (அ)

௩0௯. ஈண்டுநீர் வையத்து ளெல்லாரு மெத்துணையும்
வேண்டார்மற் றீய விழைபய னல்லவை
வேண்டினும் வேண்டா விடினு முறற்பால
தீண்டா விடுத லரிது.

(இ - ள்.) ஈண்டு நீர் வையத்துள் - நெருங்கிய கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தில், எல்லாரும் - யாவரும், எத்துணையும் - மிகச்சிறிதும், தீய - கொடியனவாகிய துன்பங்களை, வேண்டார் - (பெற) விரும்பார்; விழை பயன் - (யாவரும்) விரும்பும் பயன், நல்லவை - நல்லனவாகிய இன்பங்களே யாகும்; (ஒருவர்), வேண்டினும் - விரும்பினாலும், வேண்டாவிடினும் - விரும்பாவிட்டாலும், உறல் பால -(பழவினையால்)வந்து அடைதற்கு

உரியனவாகிய இன்பங்களும் துன்பங்களும், தீண்டா விடுதல் - (அவரை) அடையாமல் விடுவது, அரிது - இல்லை; (எ - று.)

நாம் எப்போதும் நன்மையொன்றனையே நாடினும் நல்வினைப்பயனும் தீவினைப்பயனும் பழவினைக்குத் தக்கவாறு அவ்வக்காலத்து வந்தேதீரு மென்பதாம்.

விழைபயன் அல்லவை எனப் பிரித்து - விரும்பப்படும்பய னல்லாதன வாகிய தீயனவற்றை யென்றும் உரைக்கலாம். நீர் - கடலுக்கு ஆகுபெயர். இனி, ஈண்டு நீர் - வினைத்தொகையன்மொழியாகவுமாம். மன் - அசை. "தனக்குவமையில்லாதான்தாள்சேர்ந்தார்க் கல்லால், மனக்கவலை மாற்ற லரிது" என்ற திருக்குறளிற்போல, இங்கு அருமை இன்மையின்மேல் நின்றது; அங்குப் பரிமேலழகர் இந்நாலடியையே மேற்கோள்காட்டினர்.

இச்செய்யுளின் பிற்பாதி, பழமொழியிலும் "சுழமலத்தில்யாத்த" என்ற செய்யுளின் பிற்பாதியாகப் பயின்றுள்ளது.

'ஈட்டுணையும்' என்றும், 'விழைப்பயனல்லது' என்றும் பாடம். (௯)

கங0. சிறுகா பெருகா முறைபிறழ்ந்து வாரா
வுறுகாலத் தூற்றாகா வாமிடத்தே யாகுஞ்
சிறுகாலைப் பட்ட பொறியு மதனா
லிறுகாலத் தென்னை பரிவு.

(இ - ள்.) சிறு காலை-உயிர்உடம்பையடையுங்காலத்தில்தானே, பட்ட-(அனுபவிக்கவேண்டுமென்று) நியமிக்கப்பட்ட, பொறியும் - ஊழ்வினைகளெல்லாம்,— சிறுகா - குறையமாட்டா; பெருகா - வளரமாட்டா; முறை பிறழ்ந்து வாரா - (முற்பிறப்பிற்செய்யப்பட்ட) முறைதவறி முன்பின்னாக வரமாட்டா; உறு காலத்து ஊற்று ஆகா - (துன்பம்) வருங்காலத்து ஊன்றுகோல்போல் உதவி அத்துன்பத்தை ஒழிக்கமாட்டா; ஆம் இடத்தே ஆகும் - வரவேண்டியகாலத்திலேயே வரும்; அதனால் - ஆதலால், இறு காலத்து - (தீவினைப்பயனாற்) கெடுதியடையுங்காலத்தில், பரிவு - இரங்குவது, என்னை - என்? (எ - று.)

அனுபவித்தேதிரவேண்டுவதாகிய விதியின்பயனைக் குறித்துத் துக்கிப்பது வீண் என்பது, கருத்து.

"வருந்தி யழைத்தாலும் வாராத வாரா, பொருந்துவன போமினென்றாற் போகா—இருந்தேங்கி, நெஞ்சம்புண்ணாக நெடுந்தூரந் தாநினைந்து, துஞ்சுவதே மாந்தர் தொழில்" என ஔவையார் கூறியதும் காண்க. "சாதலும் பிறத்தல்தானும் தம்வினைப் பயத்தி னாகும், ஆதலு மழிவு மெல்லாம் அவை பொருட் கியல்பு கண்டாய், நோதலும் பரிவு மெல்லாம் நுண்ணுணர் வின்மை யன்றே" என்ற சிந்தாமணியும் இங்கு அறியத் தக்கது. (௧0)

# கஉ - ஆம் அதிகாரம்.—மெய்ம்மை.

அஃதாவது - உண்மையை யுணர்த்துவது; இங்கே, உண்மையென்றது - அந்தந்தப்பொருள்களின் இயற்கையான தன்மை. இது, ஊழ்வினையால் அமைவதாதலின், பழவினையின்பின் வைக்கப்பட்டது.

கககக. இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை—நசைபழுங்க
நின்றோடிப் பொய்த்த னிரைதொடீஇ செய்ந்நன்றி
கொன்றாரிற் குற்ற முடைத்து.

(இ - ள்.) நிரை தொடீஇ - ஒழுங்காகிய வளையல்களை யுடையவளே!—இசையா ஒரு பொருள் இல் என்றல் - (தம்மாற்கொடுப்பதற்குக்) கூடாததொரு பொருளை (யாசகர்க்கு) இல்லையென்று (இரந்த அப்பொழுதே) சொல்லுதல், யார்க்கும் வசை அன்று - எவர்க்கும் பழிப்பாகாது: வையத்து இயற்கை - உலகத்தாரின் இயல்பாம்; நின்று - (கொடுப்பனென்பது தோன்ற) நின்று, ஓடி - நெடுங்காலங்கழித்துச்சென்று, (பின்பு), நசை அழுங்க - (இரப்பவரது) ஆசை கெடும்படி, பொய்த்தல் - (இல்லையென்று சொல்லிப்) பொய்யனாதல், செய் நன்றி கொன்றாரின் குற்றம் உடைத்து - (தமக்குப் பிறர்) செய்த உபகாரத்தை மறந்தவரது குற்றத்தினும் (அதிகமான) குற்றத்தை யுடையது; (எ - று)

உலகத்தில் யோக்கியர்கள் தம்மாற்கொடுத்தற்குஇசையாத பொருளை ஒருவர் யாசித்தால் அப்பொழுதே இல்லையென்றுசொல்லி அனுப்பிவிடுவர்; அது குற்றமன்று; அயோக்கியர்களோ, யாசகர்க்குத் தாங்கள்கொடுப்பதாக நெடுங்காலம் ஆசைகாட்டிக் கடைசியில் இல்லையென்று பொய்யராவர்; அது எல்லாக் குற்றங்களினும் பெரியதொருகுற்றமா மென்பது, கருத்து. இதனால், யோக்கிய அயோக்கியர்களது இயற்கை சொல்லப்பட்டது. "நிர்த்திருதேநாஸ்தி நிஷ்க்ருதி:" என்னும் வடநூன்மேற்கோளாலும், "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்னுந் திருக்குறளாலும், செய்ந்நன்றிமறத்தல் பிராயச்சித்தமில்லாததொரு பெரும்பாவமாதலை உணர்க.

இனி, நின்று -(யாசகன் நெடுங்காலங் காத்து)நின்று, நசை அழுங்க - (பின்) ஆசை கெடும்படி, ஓடி பொய்த்தல் - (கொடுப்பதற்குஇசைந்தபொருளைக் கொடாமல்) ஓடி ஒளித்தல் எனவும் பொருள்கொள்ளலாம். நிரைதொடி - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; ஈறு நீண்டு அளபெடுத்தது - விளியுருபு: இது, மசடூஉ முன்னிலை.

"இசைவ கொடுப்பதூஉ மில்லென்பதூஉம், வசையன்று வையத்தியற்கை யஃதன்றிப், பசைகொண்டவ னிற்பப் பாத்துண்ணா னாயின், நசைகொன்றான் செல்லுலக மில்" என்பது பழமொழிச்செய்யுள். (க)

௧௧௨. தக்காருந் தக்கவ ரல்லாருந் தந்நீர்மை
யெக்காலுங் குன்ற லிலராவ—ரக்காரம்
யாவரே தின்னினுங் கையாதாங் கைக்குமாந்
தேவரே தின்னினும் வேம்பு.

(இ - ள்.) தக்காரும் - தகுதியையுடைய யோக்கியரும், தக்கவர் அல்லாரும் - தகுதியையுடையவரல்லாத அயோக்கியரும், எக் காலும் - எப்பொழுதும் [பெரியவர்வந்தபொழுதும் சிறியவர்வந்தபொழுதும்], தம் நீர்மை குன்றல் இலர் ஆவர் - தங்களது இயல்பானகுணம் குறைதலில்லாதவராவர்; (எதுபோலவெனின்),—அக்காரம் - கருப்பஞ்சாற்றுக்கட்டி, யாவரே தின்னினும் கையாது - எவர்தின்றாலுங் கசவாது; வேம்பு - வேப்பங்காய், தேவரே தின்னினும் - தேவர்களே தின்றாலும், கைக்கும் - கசக்கும்; (எ - று.)

அக்காரம் மிகத்தாழ்ந்தவர் தின்றாலும் இன்சுவை யுடையதாவது போல, தக்கார் எப்போதும் நற்குணமுடையவராவர்; வேம்பு தேவர்கள் தின்றாலும் கைப்பையேயுடைய தாவதுபோல, தக்கவரல்லாத அயோக்கியர் எப்போதும் தூர்க்குணங்களையே யுடையவ ராவர் என்பதாம்; எடுத்துக்காட்டுவமையணி.

தக்கார் நீர்மை - உத்தமகுணம்; வாய்மை முதலியன. தக்கவரல்லார்நீர்மை - அதமகுணம்: பொய்ம்மை முதலியன. அக்காரம் - இக்ஷுஸாரம் என்னும் வடமொழியின் சிதைவுபோலும்; இது - இங்கே வெல்லம், சர்க்கரை, கற்கண்டு முதலியவற்றைக் குறித்தது. ஏகாரங்கள் - முறையே இழிவுசிறப்பும், உயர்வுசிறப்பும் உணர்த்தும். ஆம் - அசை. (உ)

௧௧௩. காலாடு போழ்திற் கழிகிளைஞர் வானத்து
மேலாடு மீனிற் பலராவ—ரேலா
விடரொருவ ருற்றக்கா லீர்ங்குன்ற நாட
தொடர்புடையே மென்பார் சிலர்.

(இ - ள்.) ஈர் குன்றம் நாட - குளிர்ந்த மலைகளையுடைய நாட்டையுடையவனே!—கால் ஆடு போழ்தில்-(ஒருவர்க்குச்) செல்வம் வந்த காலத்தில், வானத்து மேல் ஆடும் மீனின் பலர் - ஆகாயத்திலே உயரச் சஞ்சரிக்கின்ற நக்ஷத்திரங்களினும் அநேகர், கழி கிளைஞர் ஆவர் - (அவர்க்கு) மிக்க உறவினராவர்; ஒருவர் ஏலா இடர் உற்றக்கால் - அவ்வொருவரே தகாத துன்பத்தை அடைந்தால், தொடர்பு உடையேம் என்பார் - (அவரோடு யாம்) உறவை யுடையோ மென்றுசொல்லி முன்வந்துஉதவுபவர், சிலர் - சிலரே; (எ - று.)

செல்வமுள்ளகாலத்துப் பலர் வந்துசூழ்ந்து பொய்யுறவுபாராட்டி நடித்தலும், வறுமைவந்தகாலத்துச் சிலர்மாத்திரமே மெய்யுறவினராக வந்து உதவுதலுமாகிய உலகவியற்கை, இதனாற் சொல்லப்பட்டது. "பொருள் கையுண்டாய்ச்செல்லக்காணிற் போற்றியென் றேற்றெழுவர், இருள்கொள் துன்பத் தின்மை காணில் என்னே யென்பாரு மில்லை" என்ற ஆழ்வார்

பாசுரமும், "அற்ற குளத்தி லறு நீர்ப்பறவைபோ, லுற்றுழித் தீர்வா ருறவல்ல—ரக்குளத்திற், கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே, யொட்டியுறுவா ருறவு" என்ற ஔவையார்வாக்கும் காண்க.

ஈர் என்ற அடைமொழி, பலநீரருவிகளையுடைமையாகிய குன்றத்தினது வளத்தைத் தெரிவித்தது. நாட்டின் நிலவளத்துக்கு முக்கிய காரணமாகிய நீர்வளத்துக்கு இடமாகலின், மலையின் செழிப்பைக் கூறினர். சிலர் என்றது, அருமைகுறித்து நின்றது.

கால் ஆடுதல் - பாதம் நினைத்தஇடம் போதல்; இது - இலக்கணையால், செல்வம்பெறுதலை உணர்த்திற்று 'கைசாய்தல்', 'சாய்கால்', 'செல்வாக்கு' என்பனபோலக் கொள்க: சீவகசிந்தாமணியில் "கண்ணுடிவென்று" என்பதற்கு - 'கண் எல்லாரிடத்தும் உலாவிவென்று' என்று உரைகூறிய ஆசிரியர் நச்சினார்க்கினியர் '"காலாடுபோழ்தின்" என்றாற்போல' என்று அதற்கு இதனை மேற்கோள் காட்டியவாறும் உணர்க. அன்றியும், காலாடுதல் - செல்வச்செருக்குக்கு ஒருகுறியா மென்பர். போழ்து - மரூஉமொழி. சுழி - உரிச்சொல்; இனி, இழிவான உறவின ரென்றும் பொருள் கொள்ளலாம். கிளைஞர் - மரத்தைக் கிளைபோல ஒருவரைத் தழுவுபவர்; ஞ் - பெயரிடைநிலை. மீன் - விண்மீன். மின்னுவது மீன் எனக் காரணக்குறி; வானமாகிய கரிய பெரிய கடலுக்கு மீன்போலுள்ளது என உவமைபற்றிய பெயரென்றலு மொன்று. (௩)

கககச. வடுவிலா வையத்து மன்னிய மூன்றி
னடுவண தெய்த விருதலையு மெய்து
நடுவண தெய்தாதா னெய்தும் உலைப்பெய்
தடுவது போலுந் துயர்.

(இ - ள்.) வடு இலா - குற்றமில்லாத. வையத்து - இவ்வுலகத்திலே, மன்னிய - பொருந்திய, மூன்றில் - (அறம் பொருள் இன்பம் என்னும்) மூன்றனுள்ளே, நடுவணது - நடுவிற்சொல்லப்பட்ட பொருளை, எய்த - (ஒருவன்) அடைய, (அதனால்), இரு தலையும் - முன்னும் பின்னுமுள்ள அறத்தையும் இன்பத்தையும், எய்தும் - அடைவான்; நடுவணது எய்தாதான் - இடையில்நின்ற அச்செல்வத்தை அடையாதவன், உலை பெய்து அடுவது போலும் துயர் - (கொல்லனது) உலைக்களத்திலே இட்டுக் காய்ச்சப்படுவதனாலாகுந் துன்பத்தைப்போன்ற துன்பத்தை, எய்தும் - அடைவான் ;(எ-று.)

இதனால், செல்வவறுமைகளின் இயற்கை கூறப்பட்டது. செல்வத்தைப் பெற்றால் தானதருமங்களைச்செய்யவும், இம்மையின்பங்களை அனுபவிக்கவும் கூடும்; அதனைப்பெறுமற்போனால் இரத்தல் முதலியவற்றால் மிக்கதுன்பத்தை யடைவான் என்பதாம். "ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு, ளேனை யிரண்டு மொருங்கு," "பாரோர் சொலப்பட்ட மூன்றன்றே யம்மூன்று, மாராயிற் றானே யறம்பொருளின்பமென், றாரா ரிவற்றி னிடையதனை யெய்துவார், சீரா ரிருதலையு மெய்துவர்;"

"இல்லா ரிருமையு நல்ல வெய்தார்," "வறியா ரிருமை யறியார்" என்பன காண்க. உவமையணி. (ச)

கக௫. நல்லாவின் கன்றாயி னாகும் விலைபெறூஉங்
கல்லாரே யாயினுஞ் செல்வர்வாய்ச் சொற்செல்லும்
புல்லீரப் போழ்தி னுழவேபோன் மீதாடிச்
செல்லாவா நல்கூர்ந்தார் சொல்.

(இ - ள்.) நல் ஆவின் கன்று ஆயின்-உயர்ந்தசாதிப் பசுவினது கன்றாயிருக்குமானால், நாகும் - இளங்கன்றும், விலை பெறூஉம் - (மிக்க) விலையை அடையும்; (அதுபோல), கல்லாரே ஆயினும் - படியாதவர்களானாலும், செல்வர் வாய் சொல் - பொருளுடையோரது வாக்கிலிருந்து வருஞ்சொற்கள், செல்லும் - (தகாதனவாயினும் பலராலும்) அங்கீகரிக்கப்படும்; நல்கூர்ந்தார் சொல் - (படித்தவராயினும்) வறுமைப்பட்டவரது சொற்கள், (நல்லனவாயினும்), புல் ஈரம் போழ்தின் உழவே போல் - அற்பமான ஈரத்தையுடைய காலத்தில் உழவு (நிலத்திலிறங்காமல் மேலெழுந்தவாறாய்ச் செல்வது)போல, மீது ஆடி - மேலே மாத்திரந் தோன்றி, செல்லாஆம் - உள்ளே ஏற்றுக்கொள்ளப்படாதனவாம்; (எ - று.)

நல்லசாதிப்பசுவினதுகன்று மிக்க இளமையையுடையதா யிருப்பினும் மிக்கவிலை பெறுதல்போல, செல்வமுடையவர் மிக்க இளமையையுடையராய்ப் படியாதவராயிருப்பினும் அவர்க்கும் மிக்கசெல்வாக்கு உண்டாம்; மேல்தோற்றத்தில்மாத்திரம் ஈரமுடையதாய்த் தோன்றுங் கழனியில் உழுதல் பயனற்றதாவதுபோல, தரித்திரனுடைய சொல் செல்லாது பயனற்றதாகும்என்பதாம். இதனால்,செல்வத்தின்சிறப்பானஇயற்கை கூறப்பட்டது.

எடுத்துக்காட்டுவமையணியும், மற்றுவமையணியுஞ் சேர்ந்துவந்த சேர்வையணி.

"கல்லானேயானலுங் கைப்பொருளொன் றுண்டாயின், எல்லாருஞ் சென் றங்கெதிர்கொள்வர்—இல்லானை, இல்லாளும் வேண்டாள் மற் றீன்றெடுத்ததாய் வேண்டாள், செல்லா தவன்வாயிற் சொல்" என்றார் ஔவையாரும்; "ஏழை வார்த்தை யம்பல மேறாது" என்பது, பழமொழி.

நாகு - இளமையையும் பெண்மையையும் உணர்த்தும் பெயர்; "எருமையு மரையும் பெற்றமு நாகே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால், இது பசுவிற்கு உரியதாதலை உணர்க. விலைபெறூஉம் - இன்னிசைநிறைத்தற்பொருட்டுத் தறில்நெடிலாய் அளபெடுத்தது. நல்கு ஊர் என்னும் இரண்டுசொற்கள் ஒருசொல்லின்தன்மைப்பட்டு நல்கூர் என நின்றன; நல்கூர்தல் - பிறர்கொடுத்ததைப் பெற்றுக்கொள்ளச் செல்லுதல்; இது வறுமையைக் குறித்தல், காரியத்தைக் காரணமாகக் கூறிய உபசாரவழக்கு. நல்குதல் - கொடுத்தல், ஊர்தல் - செல்லுதல். 'வாய்ச்சொல்' என்றவிடத்து 'வாய்' என வேண்டாது கூறியது, அதன்சிறப்பை உணர்த்தற்கு. புல்லீரம் - நமிட்டீரம். உழவு - தொழிற்பெயர்; உழு - பகுதி. (௫)

கககூ. இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்று
மடங்காதா ரென்று மடங்கார்—தடங்கண்ணா
யுப்பொடு நெய்பா றயிர்காயம் பெய்தடினுங்
கைப்பறு பேய்ச்சுரையின் காய்.

(இ - ள்.) தட கண்ணாய் - பெரிய கண்களை யுடையவளே!—அடங்காதார் - (இயல்பாய்) அடங்குந்தன்மையில்லாதவர்கள், மெய் ஞானம் - தத்துவஞானத்தை யுணர்த்தும் நூல்களை, இடம் பட - அதிகமாக, என்றும் - எப்பொழுதும், கற்பினும் - படித்துவந்தாலும், என்றும் அடங்கார் - எப்பொழுதும் அடங்கமாட்டார்கள்: [இயற்கையறிவினால் அடங்காதவர் செயற்கையறிவினால் அடங்கமாட்டாரென்றபடி]; (எதுபோலவெனின்),—உப்பொடு - உப்பையும், நெய் - நெய்யையும், பால் - பாலையும், தயிர் - தயிரையும், காயம் - பெருங்காயத்தையும், பெய்து - தனித்தனியே சேர்த்து, அடினும் - சமைக்கப்பட்டாலும், பேய்ச்சுரையின் காய் - பேய்ச்சுரைக் காய்கள், கைப்பு அறா - (தமது இயற்கையான) கசப்பு நீங்காவாம்; (எ-று.)

இதனால், அடங்காதவரது தன்மை கூறப்பட்டது.

ஞானம் - நூலுக்குக் காரியவாகுபெயர். தட - உரிச்சொல். தடங்கண் - உரிச்சொற்புணர்ச்சி யாதலால், இனமெலி மிக்கது; [நன் - மெய்-கூசு.] கண்ணாய் - கண்ணாள் என்பதன் விளி: மகரூஉ முன்னிலை. 'உப்பொடு' என உப்பை 'ஒடு'க்கொடுத்துப் பிரித்தது, அறுசுவையுள்ளுந் தலைமைபெறுதலாகிய அதன் சிறப்புத் தோன்ற.

'பெய்தடினும்' என்றவிடத்து, உம்மை - உயர்வுசிறப்புப்பொருளது; இனி, எச்சவும்மையாகக்கொண்டு, அதனைக் கத்திகொண்டு துணிப்பதன்றி எனப் பொருள் காணலாம்: ஆகவே, இப்பின்னிரண்டடி - "யஸ்ய நிம்பம் பரஸுநா யஸ்சைநம் மதுஸர்ப்பிஷா - யஸ்சைநம் கந்தமால்யாத்யை: ஸர்வத்ர கடுரேவ ஸ:" என்ற சுலோகத்தோடு ஒத்த கருத்துடையதாய், ஒப்புமைக்கூட்டவணியின் பாற்படும்; நன்மைபுரிவாரிடத்தும், தீமைபுரிவாரிடத்தும் ஒத்த தொழிலுடைமையைக் கூறுதல், இதனிலக்கணம். முன்னிரண்டடியில் 'அடங்காதார் அடங்கார்' என ஒருவரிடத்துள்ள தன்மையையே வற்புறுத்துதற்பொருட்டு மீண்டும் விதித்தது, விதியணியாம்: முன்னிரண்டடியும் பின்னிரண்டடியும் பிம்பப்ரதிபிம்பபாவமாகத்தோன்ற நிற்பது, எடுத்துக்காட்டுவமையணி. இவ்வாறு பலஅணிகள் சேர்ந்துவருவது, சேர்வையணி யெனப்படும்.

இச்செய்யுளின் பின்னிரண்டடியை, 'ஐங்காரமிட்டு அரைத்துக்கரைத்தாலும் தன்னாற்றம்போகாதாம் பேய்ச்சுரைக்காய்' என்ற பழமொழியோடு ஒப்பிட்டுக்காண்க. காரம்-ஸம்ஸ்காரம். (க)

ககஎ. தம்மை யிகழ்வாரைத் தாமவரின் முன்னிகழ்க
வென்னை யவரொடு பட்டது—புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
வுறற்பால யார்க்கு முறும்.

(இ - ள்.) புன்னை - புன்னைமரங்களின், விறல் - பெருமையையுடைய, பூ - மலர்கள், கமழ் - வாசனைவீசுகின்ற, கானல் - சோலைகளையுடைய, வீங்கு நீர் - மிக்க நீரையுடைய கடலினது, சேர்ப்ப - துறையையுடையவனே!—தம்மை இகழ்வாரை - (காரணமின்றித்) தம்மை நிந்திப்பவர்களை, தாம் அவரின்முன் இகழ்க - அவர் நிந்திப்பதற்குமுன்னே [நிந்தித்தவுடனே யென்றபடி] தாம் நிந்திக்கக்கடவர்; அவரொடு பட்டது என்னை-(தம்மை நிந்திக்கிற) அவர்களோடு (தமக்கு) உண்டான தாக்ஷிணியம் என்ன? உறல் பால - வரத்தக்கனவாகிய இன்பதுன்பங்கள், யார்க்கும்-எவர்க்கும், உறும்-(தவறாமல்) வந்தேதீரும்; (எ - று.)

வரவேண்டிய நன்மையோ தீமையோ விதியின்படி வந்தேதீரு மாதலால், பிறர் நம்மைப் பழிக்கும்போது 'இதனால் என்ன தீங்குவிளையுமோ?' என்று அஞ்சிப் பின்வாங்காது அவரைப்பழிப்பதே அவர்வாயை யடக்கும் விதமா மென்றவாறு. இங்ஙனங்கூறியது, காரணமின்றிப் பிறரைப்பழிப்பவர்களது நிந்தையைக் குறைவுபடுத்தற்கு உபாயமா மென்னுங் கருத்தா லென்க; "கதநன்று சான்றாண்மை நீது சுழிய, மதநன்று மாண்பில்லார்முன்னர்" எனப் பிறர் கூறியதுங் காண்க.

இதனால், கீழ்மக்களின் தன்மையும், அவரையடக்கும் உபாயமுங் கூறப்பட்டன.

'உறற்பால யார்க்கு முறும்' என்ற ஈற்றடி, 'தம்மையிகழ்வாரைத் தாமவரின்முனிகழ்க' என்ற வாக்கியத்திற்கு ஏதுவாய் நின்று சாதித்து நிற்பது, தொடர்நிலைச்செய்யுட்குறியணி; இது, வடமொழியில் காவ்ய லிங்காலங்காரம் எனப்படும்.

'அவரின் முன்' என்பதற்கு - அவரது புறத்திலே யன்றி எதிரிலே யென்றும் பொருள்கொள்ளலாம். 'விறல்' என்றது, கடலுக்கு இயற்கையாயுள்ள தூர்க்கந்தத்தையும் போக்குந் திறத்தை. நெய்தல்நிலக் கருப்பொருளாதலால், புன்னை கூறப்பட்டது. பூங்கமழ் - "பூப்பெயர்முன் இனமென்மையுந் தோன்றும்" எனப் பொதுப்படக் கூறியதனால், அல்வழி எழுவாய்த்தொடரில் மெலி மிக்கது. கானல் - கடற்கரைச்சோலை. வீங்குநீர் - வினைத்தொகையன்மொழி.

இச்செய்யுளின் முன்னிரண்டடிகளில் இனவெதுகை; அதாவது-வல்லெழுத்துக்களுள் ஒன்றற்கு ஒன்றும், மெல்லெழுத்துக்களுள் ஒன்றற்கு ஒன்றும், இடையெழுத்துக்களுள் ஒன்றற்கு ஒன்றும் எதுகையாய் நிற்பது. இவை முறையே வல்லினவெதுகை, மெல்லினவெதுகை, இடையினவெதுகை எனப்படும். (எ)

கசஅ. ஆவே றுருவின வாயினு மாபயந்த
பால்வே றுருவின வல்லவாம்—பால்போ
லொருதன்மைத் தாகு மறநெறி யாபோ
லுருவு பலகொள லீங்கு.

(இ-ள்.) ஆ வேறு உருவின ஆயினும் - பசுக்கள் வெவ்வேறு நிறத்தை யுடையனவாயிருந்தாலும், ஆ பயந்த பால் - அப்பசுக்கள் தந்த பால்கள், வேறு உருவின அல்ல ஆம் - (வெண்ணிறத்தையேயன்றி) வெவ்வேறான நிறத்தை யுடையவை யாகமாட்டா; பால் போல் - அந்தப் பால்போல,— அறம் - தருமமானது, ஒரு தன்மைத்து ஆகும் - ஒரேதன்மையையுடைய தாம்; நெறி - (அத்தருமத்தின்) வழிகள், ஈங்கு - இவ்வுலகத்தில், உருவு பல கொளல் - பலரூபங்களைக்கொண்டிருத்தல், ஆ போல் - அப்பசுக்கள் போல (ஆகும்); (எ-று.)

இதனால், அறத்தினது தன்மை சொல்லப்பட்டது. பசுக்கள் பலநிறமாயிருத்தல்போலத் தருமத்தைச்சம்பாதித்தற்கு உரிய வழிகள் பலவாயிருப்பினும், பசுவின்பால் ஒரேநிறமுடைய தாதல்போல அந்நெறிகளாற்செய்யப்படுந் தருமமும் ஒரேதன்மையையுடைய தென்பதாம்; உவமையணி. என்றது - தானம் தவம் விரதம் வழிபடுகடவுள்வணக்கம் முதலாகத் தருமஞ்செய்யும் வழி பலவாதலேயும், தருமம் நன்மையொன்றையே விளைப்பதாதலேயும் நோக்கியென்க.

“உருவே அட்டையும் வடிவும் நிறமும்” என்பதனால், ‘உரு’ என்பது - நிறத்தையும் வடிவையும் உணர்த்துமாறு அறிக. தெரு - தெருவு, நடு - நடுவு என்பனபோல, உரு - உருவு என உகரச்சாரியை பெற்றது. ‘ஈங்கு’ - சுட்டுநீண்டது: இனி, ‘நெறி ஆ போல் உருவு பல கொளல்’ என்பதற்கு - தருமமார்க்கங்களைப் பசுக்களைப்போலப் பலவுருவமாகக் கொள்க என்றும் உரைக்கலாம்; இவ்வுரைக்கு, ‘கொளல்’ என்பது-அல் ஈற்று உடன்பாட்டுவியங்கோள்வினைமுற்று: தொழிற்பெயரன்று.

இச்செய்யுளின் முன்னிரண்டடிகளில் லகரவொற்று இடைவந்த ஆசெதுகை; அதாவது - முதலெழுத்துக்கும் இரண்டாமெழுத்துக்கும் இடையே யரலழ என்ற மெய்களுள் ஒன்று ஒரோவிடத்து வருவது. (அ)

௧௧௯. யாஅ ருலகத்தோர் சொல்லில்லார் தேருங்கால்
யாஅ ருபாயத்தின் வாழாதார் — யாஅ
ரிடையாக வின்னாதெய்தாதார் யாஅர்
கடைபோகச் செல்வமுய்த் தார்.

(இ-ள்.) தேரும் கால் - ஆராயுமிடத்து, உலகத்து - உலகத்தில், ஓர் சொல் இல்லார் - ஒரு நிந்தைச்சொல்லே யுடையராகாதவர், யார் - எவர்? [எவருமில ரென்றபடி]; உபாயத்தின் வாழாதார் - தந்திரத்தால் வாழாதவர், யார் - எவர்? இடை ஆக - (தமது ஆயுளின்) இடையிலே, இன்னாதது எய்தாதார் - துன்பத்தைஅடையாதவர், யார்—? கடை போக - வாழ்நாளின் முடிவுவரையில், செல்வம் உய்த்தார் - செல்வத்தை அனுபவித்தவர், யார்—? (எ-று.)

உலகத்தில் எல்லாரும் ஏதாவதொரு நிந்தையை அடைதலும், யாதாயினுமோர் உபாயத்தால் வாழ்தலும், இடையிலே துன்பத்தை அடைதலும், செல்வத்தையிழத்தலும் இயற்கை யென்பது கருத்து.

முதல்வாக்கியத்தி லுள்ள 'உலகத்து,' 'தேருங்கால்' என்ற சொற்கள் மற்றைவாக்கியங்களிலுஞ் சென்று இயைவது, முதனிலைத்தீவகம். 'யார்' என்ற சொல் ஒன்றே ஒருபொருளிற் பலமுறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணி.

சொல் என்பதற்கு - புகழ்ச்சொல் என்றும் உரைக்கலாம். அளபெடைகள் - செய்யுளோசை நிறைக்கவந்தன. 'உபாயம்' என்றது - சாமபேததான தண்டங்களை. சாமம் - இனிதாகக்கூறல்; பேதம் - மென்மையாலும் வன்மையாலும் மனத்தினைப்பேதித்தல்; தானம் - பகைவர் மனமகிழக் கொடுத்தல்; தண்டம் - பகைவரைப் போர்செய்து அழித்தேவிடுதல். இனி, உழவு வர்த்தகம் சேவகம் பிச்சை முதலியன என்னவுமாம். 'கடைபோக' என்பது இப்பொருளில்வருதலை, "ஈறு கடைபோக வெனக்கரு ளென்றலும்" என்ற மணிமேகலையிலுங் காண்க.

இச்செய்யுளில் அளபெடைகள் பல வந்தது, அளபுத்தொடையாம்.

இச்செய்யுள்: "கஸ்யதோஷ:குலேநாஸ்தி வ்யாதிநாகோநபீடித: வ்யஸநம்கோநப்ராப்தம் கஸ்யஸௌக்யம் நிரந்தரம்" என்னும் சுலோகத்தைப் பெரும்பாலும் ஒத்தது.

'வாழாதாரியார்' என்றும், 'செல்வமுற்றார்' என்றும் பாடம். (கூ)

சஉ0. தாஞ்செய் வினையல்லாற் றம்மொடு செல்வதுமற்
றியாங்கணுந் தேரிற் பிறிதில்லை—யாங்குத்தாம்
போற்றிப் புனைந்த வுடம்பும் பயமின்றே
கூற்றங்கொண் டோடும் பொழுது.

(இ - ள்.) தேரின் - ஆலோசித்துப்பார்த்தால்,—தம்மொடு செல்வது - (உடம்பைவிட்டபின்பு) தமது உயிரோடு வருவது, தாம் செய் வினை அல்லால் - அவரவர் செய்த கருமமே யல்லாமல், பிறிது - வேறொன்று, யாங்கணும் - எவ்விடத்தும், இல்லை—; கூற்றம் கொண்டு ஓடும் பொழுது - யமன் (உயிரைக்) கொண்டு விரைந்துபோகும்போது, ஆங்கு தாம் போற்றி புனைந்த உடம்பும் - அவ்வாறு தாம் பாதுகாத்து (ஆடையாபரணமுதலியவற்றால்) அலங்கரித்த சரீரமும், பயம் இன்றே - பிரயோசனமில்லாததேயாம்; (எ - று)

'இதுதான் உயிர்' என்று தேகத்தினிடத்தில் மிக்கஅபிமானங் கொண்டு உணவு முதலியவற்றாற் பலவகையாகப் பிரயாசைப்பட்டு வருந்தி வளர்த்த இவ்வுடம்பே யமன் உயிரைக்கொண்டுபோம்போது நமக்குப் பயன் படுவதில்லை யென்றால், மற்று எதுதான் நமக்குப் பயன்படப்போகின்றது? எதுவு மில்லை; ஆகவே, நம்மோடு வருவன இருவினைகளே என்பதைத் தெளிவாகவுணர்ந்து தீவினைகளை நீக்கி நல்வினைகளைச் செய்யவேண்டுமென்ற கருத்து.

இச்செய்யுளில், ஒரு பொருளைக் கூறுவதனால் மற்றொருபொருள் எளிதிற்சித்தித்தலாகிய கைமுதிகநியாயந் தோன்றி, தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணி தொனித்தல் காண்க.

நீதிநூல்களிலெங்கும், நன்மைதீமையான காரியங்களின் தன்மையை மாத்திரங் கூறுமிடங்களில், நன்மையைச் செய்யவேண்டும் தீமையைத் தவிரவேண்டும் என்று கூறியதாகக் கருத்துக்கொள்க.

'உடம்பும் பயமின்றே' என்றது, அது இவ்வுலகத்தே கழிந்துவிடுத லால். 'உடம்பும்' என்ற உயர்வுசிறப்பும்மை, மற்றைச் செல்வம் இளமை சுற்றம் கல்வி முதலியவற்றின் பயனின்மையையும் உணர்த்திற்று.

இப்பாட்டினால், வினை உடம்பு இவற்றின் தன்மை கூறப்பட்டது.

"ஈட்டிய வொண்பொருளு மில்லொழியும் சுற்றத்தார், காட்டேவாய் நேரோ கலுழ்ந்தொழிவர் - மூட்டும், எரியி னொழியு முடம்பு ஈர்ங்குன்ற நாட, தெரியி னறமே துணை," "மனையாளும் மக்களும் வாழ்வும் தனமும் தன்வாசல்மட்டே, இனமான சுற்றம் மயானமட்டே வழிக்கு ஏதுதுணை, தினையாமளவு எவ்வளவாகினும் முன்புசெய்த தவம், தனையாள என்றும் பரலோகஞ் சித்திக்கும் சத்தியமே," "அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே விழியம்புஒழுக, மெத்திய மாதரும் வீதிமட்டே விம்மிவிம்மி யிரு, கைத்தலை மேல் வைத்தழு மைந்தருஞ் சுடுகாடுமட்டே, பற்றித்தொடரும் இருவினைப் புண்ணியபாவமுமே" என்ற செய்யுள்கள் இதற்குக்காணத்தக்கன. "அர்த் தாக்ருஹேநிவர்த்தந்தே ஸ்மஶாநேமித்ரபாந்தவா: - ஸுக்ருதம் துஷ்க்ருதஞ்சைவ கச்சந்த மநுகச்சதி" என்னும் வடநூன்மேற்கோளுங் காண்க.

மற்று - அசை. யாங்கண் - யாக்கண் என்பதன் மெலித்தல். 'முடிப்ப முடித்துப் பின் பூசுவ பூசி உடுப்ப உடுத்து உண்ப உண்டு' பாதுகாக் கப்படுதலினால், 'ஆங்குத் தாம்போற்றிப்புனைந்த உடம்பு' எனப்பட்டது. இங்கே 'ஆங்கு' என்றது, உலகறிசுட்டு. மற்றியாங்கண் - குற்றியலிகரம். குற்றியலிகரம், அலகுபெறவில்லை. ஏ - தேற்றம்.

இச்செய்யுளின் முன்னிரண்டடிகளில் இனவெதுகை. (௪0)

## கூ - ஆம் அதிகாரம்—தீவினையச்சம்.

*அஃதாவது - பாவத்தைத்தருகின்ற கொடிய தொழில்களைச் செய்வதற்கு அஞ்சியொழுகவேண்டு மென்பதைப்பற்றிச் சொல்வது. பொருள்களின் உண்மையான தன்மையை உணர்ந்தா லல்லது தீவினை தருபவை இவையென அறிந்து அவற்றினின்றுஅஞ்சி அவற்றைச்செய்யாதொழுகுதல் கூடாமையால், இது மெய்ம்மை யென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது.*

**கஉக.** துக்கத்துட் டூங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்குங் காடே புலங்கெட்ட
புல்லறி வாளர் வயிறு.

(இ - ள்.) சுடுகாடு - மயானங்கள்,—துக்கத்துள் - சம்சாரத்துன்பங்களிலே, தூங்கி - தங்கியிருந்து, துறவின்கண் - துறவறத்திலே, சேர்கலா - சேராத, மக்கள் - மனிதர்களுடைய, பிணத்த - பிணங்களையுடையன; புலம்கெட்ட - நல்லறிவில்லாத [மாம்சபோஜனஞ்செய்கிற], புல் அறிவு ஆளர் - அற்ப அறிவை யுடையவர்களது, வயிறு - வயிறுகளோவென்றால்,—தொக்க விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே - தொகுதியான மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் உரிய இடுகாடுகளேயாம்; (எ - று.)

"அரிதரிது மானிடராத லரிது" என்றபடி பிறவிக்குள் உயர்ந்த மனிதரது பிணத்தையுடைய சுடுகாட்டினும், மக்களினும் பலமடங்கு இழிந்த மிருகபக்ஷிகளின் பிணங்களையுடைய அற்பர்களதுவயிறு மிகவும் இழிவானதாம் என்பது போதருதலால், குறிப்பால்வந்த வேற்றுமையணி; உபமான உபமேயங்களுள் ஒன்றற்குச் சிறப்புக்கூறுதல், இவ்வணியின் இலக்கணம்: இதனை வடநூலார் வ்யதிரேகாலங்காரம் என்பர். இங்கே உபமானத்தினும் உபமேயத்துக்கு விசேஷம் கூறினர்.

'புலங்கெட்ட' என்றது, உயிர் உய்வதற்கு உபாயமாகிய தத்துவஞானத்தை உடைத்தாகாமையால். 'புல்லறிவாளர்' என்றது, உண்ணல் உடுத்தல் உறங்கல் முதலியவற்றுக்கு உரிய சாதாரண அறிவை யுடைமையால். துறவிகளது தூயஉடல் சுடுகாட்டிற் சேர்த்துச் சுடப்படாமற் சிறந்ததோரிடத்திற் சேமஞ்செய்து புனிதமாகப் போற்றப்படுதலால், அதனை ஒழித்து 'துக்கத்துட் டூங்கித் துறவின்கட் சேர்கலா மக்கட் பிணத்த சுடுகாடு' என்றார்.

இப்பாட்டால், மாம்சபோஜனம் தீவினை யென்பது கூறப்பட்டது.

சுடுகாடு - பால்பகாஅஃறிணைப்பெயர்: (இறந்தவரைச்) சுட்டு எரிக்குங் காடுகள். பிணத்த - 'அன்' சாரியை பெறாத பலவின்பால்முற்று. (க)

**கஉஉ.** இரும்பார்க்குங் காலரா யேதிலார்க் காளாய்க்
கரும்பார் கழனியுட் சேர்வர்—சுரும்பார்க்குங்
காட்டுளாய் வாழுஞ் சிவனும் குறும்பூழுங்
கூட்டுளாய்க் கொண்டுவைப் பார்.

(இ - ள்.) சுரும்பு - வண்டுகள், ஆர்க்கும் - ஆரவாரிக்கின்ற, காட்டுள்- வனத்திலே, ஆய் - பொருந்தி, வாழும் - வாழ்கின்ற, சிவலும் குறும்பூழும் - கவுதாரி காடை முதலான பறவைகளை, கூட்டுள் - கூட்டினுள்ளே, ஆய் - ஆரும்படி, கொண்டு வைப்பார்-கொண்டுபோய் வைத்து வளர்ப்பவர்கள்,— (மறுபிறப்பில்), இரும்பு ஆர்க்கும் காலர் ஆய் - இருப்புவிலங்குகள் ஒலிக் கின்ற கால்களை யுடையவர்களாய், ஏதிலார்க்கு ஆள் ஆய் - அயலார்க்கு அடிமைகளாய், கரும் பார் - வட்டைநிலங்களிலும், கழனியுள் - விளை நிலங்களிலும், சேர்வர் - (வேலைசெய்தற்குப்) போய்ச்சேர்வர்கள்; (எ - று.)

பறவைகளைக் கொன்று தின்பதே யன்றி அவற்றைப் பிடித்துக் கூட்டி லடைத்து வருத்துவதும் தீவினை யென்பது, இதனாற் கூறப்பட்டது.

(தசகுமாரசரிதத்துள் அன்னப்பார்ப்பை நூலிட்டுக் காலைக்கட்டிய பாவத்தாற் பின்பு வெள்ளிவிலங்கு காலிற் கிடந்ததென்று ஆசிரியர் கூறிய வாறும், சீவகசிந்தாமணியுள் முற்பிறப்பில் அன்னப்பார்ப்பைச் சுற்றத்தி னின்றும் பிரித்துச் சிறைவைத்த தீவினையாற் சீவகன் சுற்றத்தினின்றும் பிரிந்து சிறைப்பட்டானென்று சாரணர் கூறியவாறும் உணர்க. "பூவை கிளி தோகைபுண ரன்னமொடு பன்மா, யாவையவை தங்கிளையி னீங்கி யழ வாங்கிக், காவல்செய்து வைத்தவர்கள் தங்கிளையி னீங்கிப், போவர் புகழ்நம்பி யிதுபொற்பிலது கண்டாய்" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளை யுங் காண்க.)

கரும் பார் - கருமையான பார்; இங்கே, கருமை - வலிமை: அதா வது - வட்டையாயிருத்தல்; பயனில்லாத நிலம். இனி, இருளுலகமாகிய தாமிஸ்ரம் என்னும் நரகவிசேடமென்று உரைப்பாரு முளர். கரும்பு ஆர் எனப் பிரித்து - கரும்புகள் விளைகிற கழனி யென்றும் உரைப்பர். சுரும்பு- வண்டுகளில் ஓர் சாதி. 'ஆய்' என்ற சொல் நான்கனுள், பின்னது - ஆக என்னும் எச்சத்தின் திரிபு. வைப்பார் - பெயர். சிவல், குறும்பூழ் - மற் றைப்பறவைகட்கும் உபலக்ஷணம். இரும்பு - விலங்குக்குக் கருவியாகு பெயர். இரும்பு ஆர்க்கும்-இரும்புவிலங்கினாற் கட்டப்பட்ட என்றலுமாம். ஏதிலார்=ஏது இலார் - யாதொருசம்பந்தமு மில்லாதவர்; பகைவருமாம்.

கஉ௩. அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித்
துக்கத் தொழுநோ யெழுபவே—யக்கா
லலவனைக் காதலித்துக் கான்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால்.

(இ - ள்.) அ கால் - முற்பிறப்பில், அலவனை - நண்டை, காதலித்து- விரும்பி, கால் முரித்து - அதன்காலை ஒடித்து, தின்ற - தின்றதனாலாகிய, பழ வினை-பழைய தீவினை, வந்து அடைந்தக்கால் - (பிற்பிறப்பில்) வந்து சே ர்ந்தால்,—(அத்தீவினைசெய்தவர்),—அக்கே போல் - சங்குமணி போல, அகம் கை ஒழிய - அகங்கைமாத்திரம் நிற்க, விரல் அழுகி - விரல்கள் அழு கிப்போய், துக்கம் தொழு நோய் எழுப - (மிக்க) துன்பத்திற்கு இடமான குஷ்டவியாதி உண்டாகப்பெறுவர்; (எ - று.)

'அலவன்' என்றது - பிறபிராணிகட்கும் உபலக்ஷணம். நண்டு முதலிய பிராணிகளை முரித்துத்தின்றவர்க்குக் குட்டநோயுண்டாமாதலால், அதுவுந் தீவினை யென்பது, கருத்து.

அகம்+கை=அங்கை எனப் புணர்ந்தது. தொழுநோய் - தொழுவாகிய நோய்; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. "உயர்திணை தொடர்ந்த பொருள்முதலாறும், அதனொடுசார்த்தி னத்திணை முடிபின" என்னுஞ் சூத்திரத்தால்,நோய் என்னும் அஃறிணையெழுவாய்'எழுப'என்னும் உயர்திணையெழுவாயின் முற்றைக் கொண்டது; திணைவழுவமைதி. தின்ற பழவினை - 'சங்குசுட்ட சுண்ணாம்பு' என்பதிற் போல, பெயரெச்சம் காரணப்பொருளதாய்க் காரியப்பெயரைக் கொண்டது. பின்னிரண்டடி - இனவேதுகை.

கஉச. நெருப்பழற் சேர்ந்தக்கா னெய்போல் வதூஉ
மெரிப்பச்சுட் டெவ்வநோ யாக்கும்—பரப்பக்
கொடுவினைய ராகுவர் கோடாருங் கோடிக்
கடுவினைய ராகியார்ச் சார்ந்து.

(இ - ள்.) நெய் போல்வதூஉம் - நெய்யும்,—நெருப்பு அழல் சேர்ந்தக்கால் - நெருப்பினது வெப்பத்தைத் தான் சேர்ந்தால், எரிப்ப சுட்டு - (உடம்பை) எரிக்கும்படி காய்ந்து, எவ்வம் நோய் ஆக்கும் - (தன்னைச்சார்ந்தவர்க்குத்) துன்பந்தரும் நோயை உண்டாக்கும்; (அதுபோலவே,) கோடாரும் - (நல்லொழுக்கத்தில்) தவறாத யோக்கியர்களும்,—கடு வினையர் ஆகியார் சார்ந்து - கடுமையான பாதகச்செயல்களையுடைய அயோக்கியரைச் சேர்ந்தால், கோடி - (அச்சேர்க்கையால் தம் ஒழுக்கத்தில்) தவறி, பரப்ப கொடு வினையர் ஆகுவர் - மிகவுங் கொடிய தொழில்களைச் செய்பவராவர்; (எ - று.)

பலவகையாலும் உடம்புக்கு உறுதிதருவதாகிய நெய்யும் நெருப்பைச் சேர்ந்தால் தான் அவ்வுடம்பையே யெரிப்பதுபோல. தீவினையுடையாரைச் சேர்ந்தால் நல்லவரும் அத்தீவினையே யுடையராவ ரென்பதாம்; த்ருஷ்டாந்தாலங்காரம் [எடுத்துக்காட்டுவமையணி.]

"தீயகந்த முள்ளதொன்றைச் சேர்ந்திருப்ப தொன்றற்குத், தீயகந்த மேறுந் திறமதுபோல்—தீய, குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்குக், குணமதுவேயாஞ் செறிவு கொண்டு" என்பது காண்க.

தீயோர்சேர்க்கையினல் வருந் தீமை, இதனாற் கூறப்பட்டது.

'நெய்யும்' என்ற உயர்வுசிறப்பும்மை - அதனது தண்மையையும், எத்தன்மையான புண்களையும்ஆற்று மியல்பையும், "ஆயுர்வை க்ருதம்" என்று வேதத்திலுங் கூறும்படி ஆயுளளிக்கவல்லதாதலையுங் காட்டிற்று. போல்வது - ஒப்பில்போலி; "ஒப்பில் போலியு மப்பொருட்டாகும்" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தின் உரையில், ஒன்றற்கொன்றுஒக்குமென்னும் பொருள் தன்கண் இன்றி வரும் 'போல்' என்னுஞ் சொல் சிறிதுபொருளுணர்த்தி உரையசையாய்நிற்பதற்கு இதனை உதாரணங்காட்டியிருத்தல் காண்க. இனி, கோடிக்கடுவினையர் எனஎடுத்து - மிகப்பலவாகிய தீவினைகளையுடையவர் என்றுமாம். (ச)

கஉரு. பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்
வரிசை வரிசையா நந்தும்—வரிசையால்
வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே
தானே சிறியார் தொடர்பு.

(இ - ள்.) பெரியவர் கேண்மை - (அறிவினாற்)பெரியோர்களது சினேகம்,—பிறை போல - இளஞ்சந்திரன் போல, நாளும் - தினந்தோறும், வரிசை வரிசை ஆ - முறையே, நந்தும் - வளரும்; சிறியார் தொடர்பு - (அறிவினாற்) சிறியவரது சினேகம்,—வான் ஊர் மதியம் போல் - ஆகாயத்திற் செல்லும் பூர்ணசந்திரன்போல, வைகலும் - நாள்தோறும், வரிசையால் - முறையாக, தானே - தனக்குத்தானே [பிறருடைய முயற்சி யில்லாமலே], தேயும் - குறைந்துவிடும்; (எ - று.)

அறிவுடையார் தமக்குட் செய்துகொண்ட நட்பு முன்சுருங்கிப் பின் பெருகுதற்கும், அறிவிலார் தமக்குட் செய்துகொண்ட நட்பு முன்பெருகிப் பின்சுருங்குதற்குங் காரணம், தமக்குள் ஒருவர் ஒருவருடைய குணத்தை முன் அறியாமலிருத்தலும் பின் அறிதலுமா மென்க. "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" என்னுந் திருக்குறளை நோக்குக. "ஆரம்ப குர்வீக்ஷயிணீக்ரமேண லக்வீபுராவ்ருத்திமதீசபஶ்சாத் - திநஸ்யபூர்வார்த்த பரார்த்தபிந்நா சாயேவமைத்ரீகல ஸஜ்ஜநாநாம்" என்னும் பத்யமும் இங்குக் கவனிக்கத்தக்கது. இவ்வாறு இருதிறத்தாரது நட்பையும் உணர்ந்து சிறியார்தொடர்பை அஞ்சி விடவேண்டுமென இவ்வதிகாரத்திற்கு ஏற்பக் கருத்துக்கொள்க.

இதனை, கரு அ - ஆங் கவியோடு ஒப்பிடுக.

"குன்றமார்பரிந்து வெள்வேற் குமிமா மஞ்ஞையூர்ந்து" என்ற சிந்தாமணியினுரையில், 'ஊர்தல் - ஏண்டுப் போதல்மேற்று: "வானூர் மதியம்-போல' என்று நச்சினார்க்கினியர் உரைத்தது இங்கு உணரத்தக்கது. (ரு)

கஉசு. சான்றோ ரெனமதித்துச் சார்ந்தாய்மற் சார்ந்தாய்க்குச்
சான்றாண்மை சார்ந்தார்க ணில்லாயிற்—சார்ந்தோய்கேள்
சாந்தகத் துண்டென்று செப்புத் திறந்தொருவன்
பாம்பகத்துக் கண்ட துடைத்து.

(இ - ள்.) (நீ), சான்றோர் என மதித்து - (இவர் எல்லாநற்குணங்களாலும்) நிறைந்தவரென்று நன்குமதித்து, சார்ந்தாய் - (சிலரைச்) சிநேகித்தாய்; சார்ந்தாய்க்கு - (அவ்வாறு) சினேகித்த உனக்கு, சான்றாண்மை - அந்நற்குணநிறைவுடைமை, சார்ந்தார்கண் - (உன்னாற்) சேரப்பட்ட அவரிடத்து, இல் ஆயின் - இல்லாமற்போமானால், (அது),—ஒருவன்—,சாந்து அகத்து உண்டு என்று - வாசனைத்திரவியம் இதனுள்ளே இருக்கிறதென்று எண்ணி, செப்பு திறந்து - ஒரு சிமிழைத் திறந்து, அகத்து - அதனுள்ளே, பாம்பு கண்டது - பாம்பைக் கண்ட தன்மையை, உடைத்து - உடையது; சார்ந்தோய் - சினேகஞ்செய்தவனே! கேள் - (இதனைக்) கேட்டறிவாயாக,

இதனாலும், மேலிரண்டு செய்யுள்களாலும், அஞ்சப்படுவதாகிய தீயோர் தொடர்பா லுண்டாகுந் தீமை கூறப்படுகின்றது.

நன்கு ஆராயாமல் ஒருவரோடு நட்புசெய்தல் பெருந்தீமைவருதற்குக் காரணமா மென்பதை உபமானமுகத்தால் விளக்கினார். சான்றோரென மதித்துச் சார்தலுக்கு - சாந்தகத்துண்டென்று செப்புத்திறத்தலும், அங்குச் சான்றாண்மையின்மையைக் காணுதற்கு - பாம்பை அதனகத்துக்காணுதலும் உபமானமெனக் காண்க.

கண்டார்போன்ற தன்மையையுடையது எனக் கூறாது 'கண்டது உடைத்து' என உபமேயத்தை உபமானமாகவே கூறியது, காட்சியணி. ஒருகாரியத்தைச் செய்யத்தொடங்கி இஷ்டத்தையடையாது அநிஷ்டத்தை யடைதலாகிய நிதர்சனமென்னுமணியையும் இச்செய்யுளிலே காண்க. இவ்வாறு இரண்டணி சேர்ந்தது - சேர்வையணி.

மன் - அசை; மிகவும் என்றும் பொருள்கொள்ளலாம்: ஒழியிசைப் பொருளதென்றலுமாம். சான்று ஆண்மை என்ற வினையெச்சத்தொடர் - (நற்குணங்களால்) நிறைந்து அவற்றை ஆளுந்தன்மைஎன்று பொருள்படும். சாந்து - சந்தனம் என்னும் வடமொழியின் விகாரம்; சிறப்புப்பெயர் பொதுப்பொருள் குறித்தது.

இச்செய்யுளின் பின்னிரண்டடி - இனவெதுகை. (சு)

கஉஎ. யாஅ ரொருவ ரொருவர்த முள்ளத்தைத்
தேருந் துணைமை யுடையவர் — சாரற்
கனமணி நின்றிமைக்கு நாடகேண் மக்கண்
மனம்வேறு செய்கையும் வேறு.

(இ - ள்.) சாரல் - மலைப்பக்கங்களிலே, கனம் மணி - பெருமைபொருந்திய இரத்தினங்கள், நின்று - நிலைபெற்று, இமைக்கும் - விளங்குகின்ற, நாட - நாட்டையுடைய அரசனே! — கேள் - கேட்பாயாக:— ஒருவர்தம் உள்ளத்தை - வேறொருவருடைய மனத்தை, தேரும் - ஆராய்ந்தறியக்கூடிய, துணைமை - வல்லமையை, உடையவர் - உடையவராகிய, ஒருவர் - ஒருத்தர், யார் - எவருளர்? [ஒருவரு மில்லை]; (ஏனென்றால்), — மக்கள் மனம் வேறு செய்கையும் வேறு - மனிதர்களது எண்ணமும் வேறு செய்யுந் தொழிலும் வேறு; (எ - று.)

உலகத்தில் மனிதர்பலர்க்கு மனமுஞ் செயலும் ஒற்றுமைப்பட்டிராமல் வேறுபட்டிருக்கு மாதலால், ஒருவரது உள்ளம் இத்தன்மையதென்று அவர்செய்கையைக்கொண்டு தெளியலாகாது என்பது கருத்து. எனவே, பலநாள் பலவழியால் ஆராய்ந்து ஒருவரை நட்புக்கொள்ளவேண்டுமேயன்றி, ஆராயாது நட்புக்கொள்ளின் தீயரோடும் நட்புநேர்ந்துவிடு மாதலால், அத்தீவினைக்கு அஞ்சி நடக்கவேண்டு மென்பதாம்.

'மக்கள்மனம்வேறு செய்கையும்வேறு' என்பது முன்னிரண்டடியைச் சாதித்து நிற்பது - தொடர்நிலைச்செய்யுட்குறியணி.

"மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்-மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம்" என்னும் வடநூன்மேற்கோள் கவனிக்கத்தக்கது.

கேள் - முன்னிலையசையுமாம். வேறு - ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவான குறிப்புவினைமுற்றுப் பகாப்பதம். (எ)

கஉ௮. உள்ளத்தா னள்ளா துறுதித் தொழிலராய்க்
கள்ளத்தா னட்டார் கழிகேண்மை—தெள்ளிப்
புனற்செதும்பு நின்றலைக்கும் பூங்குன்ற நாட
மனத்துக்கண் மாசாய் விடும்.

(இ - ள்.) புனல் - அருவிநீர், தெள்ளி - தெளிவுடையதாய், செதும்பு - சேற்றை, நின்று அலைக்கும் - இடைவிடாது ஒழித்துநிற்கின்ற, பூ குன்றம் - அழகிய மலையையுடைய, நாட - நாட்டையுடையவனே!—உள்ளத்தால் நள்ளாது - மனப்பூர்வமாகச் சினேகஞ்செய்யாமல், உறுதி தொழிலர் ஆய் - (பிறரதுநன்மையிற்சிறிதுங்கருத்துவையாது தமது) நன்மையையே தேடுந் தொழிலையுடையவராய், கள்ளத்தால் நட்டார் - வஞ்சனையாற் சினேகஞ் செய்தவரது, கழி கேண்மை - மிகுதியான நட்பு, மனத்துக்கண் மாசு ஆய் விடும் - மனத்திற் குற்றமாய் முடியும்; (எ - று.)

ஆதலால், அதற்கு அஞ்சவேண்டு மென்பதாம்.

'மனத்துக்கண் மாசாய்விடும்' என்றது, பின்பு பலதீமையைவிளைக்கு மென்றபடி. பூங்குன்றம் - பண்புத்தொகை; அழகாகிய குன்ற மென்க. 'கழிகிழமை' என்றும் பாடம். (அ)

கஉகூ. ஒக்கிய வொள்வாடன் னொன்னார்கைப் பட்டக்கா
லூக்க மழிப்பதூஉ மெய்யாகு—மாக்க
மிருமையுஞ் சென்று சுடுதலா னல்ல
கருமமே கல்லார்கட் டீர்வு.

(இ - ள்.) ஒக்கிய - (போரிற் பகைவரைக்கொல்லுதற்பொருட்டு ஒருவன்) உயரவெடுத்த, ஒள் வாள் - பிரகாசமான வாளாயுதமானது, தன் ஒன்னார் கை பட்டக்கால் - அவனது பகைவரது கையில் அகப்பட்டுவிட்டால், ஊக்கம் அழிப்பதூஉம் - (பகைவரை அழியாமையோடு தன்) வலிமையை நாசப்படுத்துவதும், மெய் ஆகும் - (இம்மையில்) உண்மையாம்; (அதுபோலவே),—ஆக்கம் - (மூடர்க்குத் தாம்செய்யும்) உபகாரம், இருமையும் சென்று சுடுதலால் - (இம்மை மறுமை யென்கிற) இரண்டிடத்துந் தொடர்ந்து (தம்மை) வருத்துவதனால், கல்லார்கண் தீர்வு - அறிவில்லாதவரிடத்தினின்றும் நீங்குதல், நல்ல கருமமே - நல்ல காரியமேயாம்; (எ - று.)

பகைவர்கையில் தவறி அகப்பட்ட தமதுவாளினால் உண்டாகுந் தீமையினும், அறிவில்லார்க்குத் தாம்செய்த உபகாரத்தா லுண்டாகுந் தீமைக்கு மிகவும் அஞ்சவேண்டுமென்பது,கருத்து; ஏனெனில், பகைவர்கையிற்பட்ட வாள் இம்மையில் தம் உயிர்வாழ்க்கையை யொழித்தாலும் மறுமையில் வீரசுவர்க்கவின்பத்துக்குக் காரணமாம்: அறிவிலார்க்குச்செய்த உபகாரமோ செய்தவர்க்கு இம்மையிற் பழியையும் மறுமையிற் பாவத்தையும் தந்து அவரை இருமையுங் கெடுக்கு மாதலி னென்க.

வேற்றுமையணியை உட்கொண்டு வந்த எடுத்துக்காட்டுவமையணி.

ஒக்கிய என்னும் இறந்தகாலப் பெயரெச்சத்தில், ஒங்கு என்பதன் பிறவினையாகிய ஒக்கு - பகுதி ; மெலி வலியானது - பிறவினைக்குறி. ஒன்னார் - ஒன்றார் என்பதன் மரூஉ ; சேராதவரென்று பொருள்.

ஆக்க மிருமையுஞ் சென்று சிதைத்தலால்' என்று பாடங்கொண்டு, தம்முடைய நன்மையை இம்மை மறுமை யென்ற இரண்டிடத்துங் கெடுத்தலால் என்று பொருளுரைத்தலு மொன்று. (௯)

கந௦. மனைப்பாசங் கைவிடாய் மக்கட்கென் றேங்கி
யெனைத்தூழி வாழ்தியோ நெஞ்சே—யெனைத்துஞ்
சிறுவரையே யாயினுஞ் செய்தநன் றல்லா
லுறுபயனோ வில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) நெஞ்சே - மனமே! —மனை பாசம் கைவிடாய் - மனையாளிடத்து உள்ள அன்பை விடாமல், மக்கட்கு என்று ஏங்கி - பிள்ளைகளுக்காகவும் இரங்கி, எனைத்து ஊழி வாழ்தியோ - எத்தனைகாலம் வாழ்வாயோ? எனைத்தும் சிறு வரையே ஆயினும் - எவ்வளவு சிறியதாயினும், செய்த - (ஒருவன்) செய்துள்ள, நன்று அல்லால் - நற்காரியமே யல்லாமல், உயிர்க்கு - (அவனது) உயிர்க்கு, உறு பயனோ - அடையும்படியான நற்பயனோ, இல்லை - வேறில்லை; (எ - று.)

உயிர்க்கு உறுதியாகிய நல்வினையைத் தேடாது ஸம்ஸார பாசபந்தத்திலகப்பட்டு உழன்று வீண்காலங்கழித்தலாலாகுந் தீவினைக்கு அஞ்சவேண்டுமென்பது, இதனாற் கூறப்பட்டது.

'எனைத்தூழிவாழ்தியோ' என்றதனால், யாக்கைநிலையாமையைக் குறிப்பித்தவாறு. முதலடியினால், பெண்டு பிள்ளைகள் மறுமைக்கு உதவாமையை உணர்த்தினார்.

இச்செய்யுளின் பின்னிரண்டடியை, கீழ் க௨௦ - ஆஞ் செய்யுளின் முன்னிரண்டடியோடு ஒருசார் ஒப்பிடுக.

இச்செய்யுளில், ஶாந்திரஸம் தோன்றுமாறு காண்க.

ஸம்ஸாரத்தினின்று அப்பாற்செல்லவொட்டாது கயிறுபோலக் கட்டுப்படுத்தலால், அன்பை 'பாசம்' என்றே கூறினார் : உவமையாகுபெயராகிய காரணக்குறி. கைவிடாய் - முற்றெச்சம்; கை - உபசர்க்கம் : தனக்கென்று ஒருபொருளில்லாமல் வினையை யடுத்துவந்தது. சிறு வரை - சிறிய அளவு. (௧௦)

இல்லறவியல் முற்றிற்று.

---

## அறத்துப்பால் முற்றுப்பெற்றது.

---

## இரண்டாவது

# பொருட்பால்.

அஃதாவது - இல்லறத்தின்வழிப்படுவனவாகிய பொருளின்பங்களுள் பொருளை உணர்த்தும் பாகம். இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனு முடன்தொக்கதொகை. பொருளின்பங்களிற் பற்றுவிடுதலே துறவாதலால், இவை - துறவறத்தின்வழிப்படுவனவல்ல. பொருளாவது - தனது அனுபவத்தால் இம்மையையும் தானம்முதலியவற்றால் மறுமையையுந் தருவதாகித் தருமவழியிற் சேர்க்கப்பட்ட பொன் மணி நெல் முதலியன. உலகத்திற்கு உயிர்போலச் சிறந்த அரசனது நீதி பொருளுக்குத் துணைக் காரண மாதலால், அவ்வரசனீதி கூறவே பொருளின்தன்மை கூறியதா மெனக் கொண்டு, இப்பொருட்பாலிருபத்துநான்கதிகாரங்களாலும் அதனைக் கூறுகின்றார்.

இப்பொருட்பால் - பதினான்காம் அதிகாரம் முதல் ஏழு அதிகாரங்கள் அரசியலென்றும், அதன்பின் நான்கு அதிகாரங்கள் நட்பியலென்றும், அதன்பின் மூன்று அதிகாரங்கள் இன்பவியலென்றும், அதன்பின் நான்கு அதிகாரங்கள் துன்பவியலென்றும், அதன்பின் ஓர் அதிகாரம் பொதுவியலென்றும், அதன்பின் நான்கு அதிகாரங்கள் பகையியலென்றும், அதன்பின் ஓர் அதிகாரம் பன்னெறியியலென்றும் ஏழு உட்பிரிவுகளையுடையதாய் அமைக்கப்பட்டது; "பொருளியல் வகையேழ் புலப்படக் கிளப்பின், அரசிய லேழதிகாரமாகு, நட்பியல் நான்கதிகார மின்ப, மூன்றே துன்பவியலதிகார, நான்கே ஒன்றே பொதுவியல் பகையியல், கூறதிகார நான்கே பன்னெறி, கூறதிகார மொன்றே" என்ற பழைய உரைச்சூத்திரத்தை உணர்க. (இதனால், ஓரியல் தானே ஓரதிகாரமாக வருதலு முண்டு என்பதும் போதரும்.) அவற்றுள்,

## முதலாவது

# அரசியல்.

அஃதாவது - அரசனது தன்மையைக் கூறும் பாகம் என்றவாறு. அரசனீதியைக் கூறும்பொழுது முதலில் அரசனது தன்மையைக் கூறியே பின்பு வேறு கூறவேண்டியிருத்தலால், அதனைத் தெரிவிக்கும் அரசியல் முதலில் வைக்கப்பட்டது. அரசு இயல் - இராசதருமம்; அதாவது - காவலோடாத்தும் முறைமை.

## கச - ஆம் அதிகாரம்.—கல்வி.

அஃதாவது - அவ்வரசன் தான் கற்பதற்கு உரிய நூல்களைக் கற்றலைப் பற்றிச் சொல்வது. அவை - அறநூலும், நீதிநூலும், தேர் யானை குதிரை படைக்கலம் என்னப்பட்ட இவற்றின் நூல்களும் முதலியன. பொருள் பெறுதற்கு முதற்காரணமாயும், பெற்ற பொருளைக் காத்தற்கும் பிறர்க்குச் செலவழித்துத் தானும் அனுபவித்தற்குந் துணைக்காரணமாயும் இருத்தல் பற்றி, கல்வி முதலில் வைக்கப்பட்டது. அரசன் அறிவுடையவனாயிருந் தால் தனது உயிர்க்கேயன்றி உலகத்து உயிர்கட்கும் பயன்படுதல் நோக்கி இஃது அரசியலுள் வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதியைத்தருஞ் சிறப்பை யுடைமையாற் பொதுப்படக் கூறப்படுகின்றது. 'கல்வியாவது-தத்தங் குலத்திற்கேற்ப ஓதுதலும், பொருள்களை விளங்கக்கேட்டறிதலும், பின்பு அவற்றைத் தான் வகுத்துக்கூற வல்லனாதலுமாம்' என்பது, பழைய வுரை. கல்வி - தொழிற்பெயர்; வி - விகுதி.

கஙக. குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு
மஞ்ச ளழகு மழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற்
கல்வி யழகே யழகு.

(இ - ள்.) குஞ்சி அழகும் - மயிர்முடியின் அழகும், கொடுந் தானை கோடு அழகும் - மடிப்புள்ள ஆடையினது கரையின் அழகும், மஞ்சள் அழகும் - கலவைப்பூச்சினது அழகும், அழகு அல்ல - அழகாகமாட்டா ; நெஞ்சத்து நல்லம் யாம் என்னும் நடுவுநிலைமையால் - மனத்தில் யாம் நற்குண முடையோமென்று காண்கின்ற கோணுதலில்லாத தன்மையால், கல்வி அழகே அழகு - படிப்பினாலுண்டாகும் அழகே அழகாம் ; (எ - று.)

குஞ்சியழகு முதலியன தம்மைப்பார்க்கும்பிறர்க்கேயன்றித் தமக்கு இன்பந்தருவன அல்ல, கல்வி யொன்றே தம்மனத்துக்கு இன்பந்தருவது என்பதாம். இனி, பின்னிரண்டடிக்கு - மனத்தில் நல்லவர்களா யிருக்கக் கடவோம் யாமென்று எண்ணுகிற பக்ஷபாதமில்லாத தன்மையோடு கூடிய கல்வியினது அழகே அழகென்று உரைப்பாருமுளர்.

ஆடவர்க்குஉரிய குஞ்சியை முதலிலும், மகளிர்க்குஉரிய மஞ்சளை இறுதியிலும், இருவர்க்கும் பொதுவாகிய தானையை இடையிலும் வைத்துக் கூறியதாகக் கொண்டு இப்பாட்டை ஆண்கல்விக்கும் பெண்கல்விக்கும் பொது வென்பர் சிலர்.

"மயிர்வனப்புங் கண்கவரு மார்பின் வனப்பும், உகிர்வனப்புங் காதின் வனப்புஞ்—செயிர்தீர்ந்த, பல்லின் வனப்பும் வனப்பல்ல நூற்கியைந்த, சொல்லின் வனப்பே வனப்பு" என்னுஞ் சிறுபஞ்சமூலச்செய்யுளையும், "இடைவனப்புந் தோள்வனப்பு மீடின் வனப்பு, நடைவனப்பு நாணின் வனப்பும்—புடைசால், கழுத்தின் வனப்பும் வனப்பல்ல வெண்ணோடெ ழுத்தின் வனப்பே வனப்பு" என்னும் ஏலாதிச் செய்யுளையும் இங்கு

ஒப்பு நோக்குக. "கேயூராணி ந பூஷயந்தி புருஷம் ஹாரா ந சந்த்ரோஜ்வலாஃ, நஸ்நாநம் நவிலேபநம் ந குஸுமம் நாலங்க்ருதா மூர்த்தஜாஃ | வாண்யேகா ஸமலங்கரோதி புருஷம் யா ஸம்ஸ்க்ருதா தார்யதே, க்ஷீயந்தே கலு பூஷணாநி ஸததம் வாக்பூஷணம்பூஷணம்;" "வித்யைவபூஷணம் பும்ஸாம்" என்னும் வடநூன் மேற்கோள்கள் இங்கு ஒப்பிடத்தக்கன.

குஞ்சி - ஆண்மயிர்; பங்கி, குடுமி, சிகை என்பனவும் இவ்வாறே: (அளகம், ஓதி, கூந்தல், ஐம்பால், கோதை என்பன - பெண்மயிரின் பெயராம்.) கொடுமை - வளைவு; கொடுங்கோல், கொடுவாள், கொடுமரம், கொடும்புறம் என்ற விடங்களிலுங் காண்க; இங்கே மடிப்புக்குக் கொள்ளப்பட்டது. மஞ்சள் - மற்றும் பலவகைப்பட்ட மேற்பூச்சுக்களுக்கும், கொடுந்தானைக்கோடு - ஆபரணங்களுக்கும், குஞ்சி - பிறவுறுப்புக்களுக்கும் உபலக்ஷணம். நல்லம் - தன்மைப்பன்மைக் குறிப்புமுற்று; அம் - விகுதி. ஏ - பிரிநிலை. (க)

கஙஉ. இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்
றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றா
லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து.

(இ - ள்.) (கல்வியானது),—இம்மை - இப்பிறப்பின்பயனாகிய தத்துவ ஞானத்தை, பயக்கும் - (தன்னையுடையானுக்குத்) தரும்; ஈய - (பிறர்க்குக்) கொடுக்க [போதித்தலால் என்றபடி], குறைவு இன்று - (செல்வம் போலக்) குறைவுபடாது [மேன்மேல் வளரும்]; தம்மை விளக்கும் - தம்மை (ப் புகழால் நெடுந்தூரமட்டும்) விளங்கச்செய்யும்; தாம் உளர் ஆ கேடு இன்று - தாங்கள் உயிருள்ளவராக வாழுமளவும் அழிதலில்லை; ஆல் - ஆதலால்,—யாம்—, கல்விபோல் மம்மர் அறுக்கும் மருந்து - கல்விபோல அறியாமையாகிய நோயை யொழிக்கின்ற தொரு மருந்தை, எம்மை உலகத்தும் - எத்தன்மையான உலகத்திலும், காணேம் - காண்கின்றோமில்லை; (எ - று.) —மம்மர் - மயக்கம்.

கல்விப்பொருளானது செல்வப்பொருள்போலவே இம்மையைப் பயந்தும் ஈயக் குறைவதில்லை: அன்றியும், தம்மை விளக்குவதாயிருந்தும் தாமுள்ளபோது கெடுவதில்லை; அதுவன்றியும், செல்வமோ அவிவேகத்தை வளர்க்கின்றது; இக்கல்வியோ அதனை அடியோடு ஒழிக்கின்றது எனச் செல்வத்திற்கும் கல்விக்கும் வேற்றுமைதோன்றக் கூறியுள்ளது காண்க.

கல்வியை மருந்தாகக் கூறியதற்கு ஏற்ப, மம்மரை நோயாகக்கூறாததனால், இஃது - ஏகதேசவுருவகவணி; 'கல்விபோல்' என உவமையணியுங் கலந்துவந்தது.

உடற்பிணிதீர்க்கும் மருந்தினும் உயிர்ப்பிணிதீர்க்குங் கல்வி பலவகையாலுஞ் சிறந்ததென்பது, இதனாற் கூறப்பட்டது.

இச்செய்யுள், தொல்காப்பியப் பொருளதிகார நச்சினார்க்கினியருரையில் ஓதற்சிறப்புக்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. "அறம் பொருளின்ப

மும் வீடும் பயக்கும், புறங்கடை நல்லிசையு நாட்டு—முறுங்கவலொன், றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை, சிற்றுயிர்க் குற்ற துணை" எனப் பின்னோர் கூறியதுங் காண்க.

இம்மை - பயனுக்கு ஆகுபெயர். மை விகுதி - இம்மை யென்பதில் இடப்பொருளையும், எம்மை யென்பதில் தன்மைப்பொருளையும் உணர்த்திற்று. தேவலோகத்து மருந்தாகிய அமிருதமும் மம்மரறுக்கா தாதலால் அதனினுஞ்சிறந்த தென்பது தோன்ற, 'எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன் மம்மரறுக்கு மருந்து' எனப்பட்டது. இம்மை - செல்வம் எனவுமாம். முதலிலுள்ள மூன்று 'ஆல்' - அசை; நான்காவது 'ஆல்' - ஆதலால் என்பதன் விகாரம். (உ)

கங௩. களர்நிலத் துப்பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர்
கடைநிலத்தோ ராயினுங் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

(இ - ள்.) களர் நிலத்து பிறந்த - (இழிவாகிய) உவர்நிலத்தில் உண்டான, உப்பினை - உப்பை, சான்றோர் - பெரியோர், விளை நிலத்து நெல்லின் விழுமிது ஆ - விளைகின்ற (நல்ல) நிலத்தில் தோன்றிய நெல்லினுஞ் சிறந்ததாக, கொள்வர்-கொள்வார்கள்; (அதுபோலவே), கடை நிலத்தோர் ஆயினும் - இழிவான சாதியிற் பிறந்தவர்களானாலும், கற்று அறிந்தோரை- (நூல்களைக்) கற்று (அவற்றின் பொருளை) அறிந்தவர்களை, தலை நிலத்து வைக்கப்படும் - மேன்மையான இடத்தில் வைத்துக்கௌரவிக்கவேண்டும்.

பிறப்புப்பற்றி உயர்வுதாழ்வு பாராட்டாமற் கல்விச்சிறப்பால் நன்கு மதிக்கவேண்டு மென்பது, கருத்து. "நாற்பாற் குலத்தின் மேற்பா லொருவன், கற்றில னாயிற் கீழிருப்பவனே," "எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும், அக்குடியிற் கற்றோரை வருக வென்பார்," "ஆக்கு மறிவா னலது பிறப்பினான், மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க," "மெய்த்த திருவள்ளுவனார் வென்றுயர்ந்தார் கல்விநலந், துய்த்த சங்கத்தார் தாழ்ந்தார் சோமேசா - வுய்த்தறியின், மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப் பிறந்துங், கற்றா ரனைத்திலர் பாடு," "வேற்றுமை தெரிந்த நாற்பாலுள்ளுங், கீழ்ப்பா லொருவன் கற்பின், மேற்பா லொருவனு மவன்கட் படுமே" என்பன காண்க. உப்பின்சுவை உணவுக்கு இன்றியமையாதது போலக் கல்வியறிவு மக்கட்கு இன்றியமையாததென்பது தோன்ற, உப்பைத் திருஷ்டாந்தமாக எடுத்துக்கூறினார். உப்பு விழுமிதாக் கொள்ளப்படுதலை, "ஷண்ணாம் ரஸாநாம் லவணம் ப்ரதாநம்" என்னும் வடநூன்மேற்கோளைக் கொண்டும், "உப்பில்லாப்பண்டம் குப்பையிலே" என்னும் பழமொழியைக் கொண்டும் உணர்க. இனி, நெல்லின்-நெல்லைப்போல எனவும் உரைப்பர்.

விழுமிது - விழும மென்னும் உரிச்சொல்லினடியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். வைக்கப்படும் - ஒருவனை வியங்

கோள் வினைமுற்று : செய்வினை : செயப்பாட்டுவினையன்று. அன்றி, வைக்க என்பதைச் செயவெனெச்சம் தொழிற்பெயர்த் தன்மைப்பட்டு வந்ததாகக் கொண்டு, வைக்க - வைத்தல், படும் - தரும் என்றும் உரைக்கலாம்.

இச்செய்யுளில் வருக்கவெதுகையோடு உயிரெதுகை; அதாவது - இரண்டாமெழுத்து ஒன்றாதாயினும் இரண்டாமெழுத்தின்மேலேறிய உயிர் ஒன்றி நிற்பது. (௩)

கக௩ச. வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பி னரசர் செறின்வவ்வா
ரெச்ச மெனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற.

(இ - ள்.) (விச்சை) - கல்விகள்,—வைப்பு உழி - வைக்கப்பட்ட இடத்தில், கோள்படா - (பிறரால்) கவரப்படமாட்டா ; வாய்த்து - (கொள்பவர் தக்கவராகக்) கிடைத்து, ஈயின்-(அவர்க்குக்) கொடுத்தால், கேடு இல்லை - குறைதலில்லை ; மிக்க சிறப்பின் - மிகுதியான சிறப்பினாலே, அரசர்-அரசர்கள், செறின் - (பொறாமைகாரணமாகக்) கோபித்தாலும், வவ்வார் - அபகரிக்கமாட்டார்கள் ; (ஆதலால்), ஒருவன்—, எச்சம் என - ஆக்கமென்று, மக்கட்கு - (தனது) பிள்ளைகளுக்கு, செய்வன - சேர்த்துவைக்கத்தக்கவை, விச்சை - கல்விப்பொருள்களேயாம்; பிற அல்ல - மற்றைச் செல்வப்பொருள்களல்ல; (எ - று.)

செல்வப்பொருள்கள் கள்ளராலும் ஞாதியர்முதலியோராலுங் கவர்ந்து கொள்ளப்படும், பிறர்க்குக்கொடுத்தாற் செலவழிந்துபோம், கொடுங்கோன் மன்னராற் கொள்ளை கொள்ளப்படும் ; கல்விப்பொருளுக்கு இத்தன்மையான அபாயங்கள் ஒன்றும் இல்லை; ஆதலால், செல்வப்பொருளினுங் கல்விப்பொருளே சிறந்த தென்பது கருத்து. வேற்றுமையணி.

"கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு, மாடல்ல மற்றையவை," "தந்தை மகற்காற்று நன்றி யவையத்து, முந்தியிருப்பச் செயல்" என்ற திருக்குறள்களையும், 'அழிவின்மையாவது - தாயத்தார் கள்வர் வலியர் அரசர் என்றிவராற் கொள்ளப்படாமையும், வழிபட்டார்க்குக் கொடுத்துழிக் குறையாமையுமாம்' என்ற பரிமேலழகருரையையும் இங்கே அறிக.

செல்வத்தினுங் கல்வி சிறந்த தென்பதற்குக் காரணங்காட்டி, அதனை மக்கட்குச் செய்யவேண்டுவது கடமையென்பது, இதனாற் கூறப்பட்டது.

வைப்பு உழி - வைத்தலையுடைய இடம். கோள் - கொள்ளுதல்; முதனிலைதிரிந்த தொழிற்பெயர். எச்சம் - (சம்பாத்தியத்தில்) மிச்சப்பட்டுநிற்பது ; ஆஸ்தி : எஞ்சு - பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி, வலித்தல் - விகாரம். விச்சை - வித்யா என்னும் வடமொழியின் சிதைவு. மற்று - அசை; வினைமாற்றுமாம். மற்று, பிற - ஒருபொருட்பன்மொழி யெனவுங் கொள்ளலாம்.

"நசோரஹார்யம் நசராஜஹார்யம் விதேஸுயாநேசபாரகாரி | ஏதத் தாம்ஸர்வதநாத்ப்ரதாநம் வித்யாதநம்யத்புருஷாவஹந்தி" என்ற சுலோகம் இங்கு ஒப்பிடத்தக்கது.

இந்நாலடிநானூற்றில் ஒவ்வொரு செய்யுளும் ஒவ்வொரு புலவரால் தனித்தனி பாடப்பட்டதாதலால், இச்செய்யுளில் 'ஈயிற்கேடில்லை' என்றது - கீழ் "ஈயக்குறைவின்று" என்றதனோடு கூறியதுகூற லென்னுங் குற்ற மாகாதெனை அறிக; மற்றும் இங்ஙனம் வருவனவற்றிற்கெல்லாம் இஃது ஒக்கும். இச்செய்யுளில் இனவேதுகை. (௪)

கங௫. கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல—தெள்ளிதி
னாராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகிற் றெரிந்து.

(இ - ள்.) கல்வி கரை இல - வித்தைகளாகிய கடல்களோ கரையை யுடையனவல்ல; கற்பவர் நாள் சில - (அவற்றைப்) படிப்பவரது வாழ்நாட்களோ சிலவாம்; மெல்ல நினைக்கின் பிணி பல - விரைவின்றி ஆலோசித்துப் பார்த்தால் (அவ்வாழ்நாள் சிலவற்றுள்ளும்) நோய்களோ பல உள்ளன; (ஆதலால்), நீர் ஒழிய பால் உண் குருகின் - நீர் ஒழியப் [பிரித்துவிட்டுப்] பாலைமாத்திரமே உண்கின்ற அன்னப்பறவைபோல, தெரிந்து-(நூல்களின் தன்மைகளைப்) பகுத்துஅறிந்து, தெள்ளிதின் ஆராய்ந்து - தெளிவாக ஆராய்ச்சிசெய்து, அமைவு உடைய - சாரமாகவுள்ள ஞானநூல்களையே, கற்ப- (விவேகிகள்) படிப்பார்கள்; (எ - று.)

கல்வி கடல்போற் பரந்தும், ஆயுள்நாள் மிகக்குறுகியும், அவ்வாழ்நாளிலும் கற்கவொட்டாது தடைசெய்யும் பலவகையாகிய பிணிகள் மிக்கும் இருத்தலால், பெறுதற்கரிய மனிதசனனமெடுத்தோர் சாரமானவற்றைப் படித்து உய்யக்கடவ ரென்பதாம். ("அநந்தபாரம் பஹு வேதிதவ்யம், அல்பஸ்சகாலோ பஹவச்ச விக்நா:- யத்ஸாரபூதம் தது பாததீத, ஹம்ஸோ யதா க்ஷீரமிவாம்புமிச்ரம்" என்ற வடநூன்மேற்கோளும் இப்பொருளுடையதே.)

'அமைவுடைய' என்றது, வேதாந்தநூல்களை. பாலையும் நீரையுங் கலந்துவைத்தால் அன்னப்பறவை நீரைப்பிரித்துவிட்டுப் பாலையே உண்ணு மென்பது நூற்றுணிபு; "பானிறக்குருகினுய்ந்து" என்றார் சிந்தாமணியாரும். இது பற்றியே, அன்னம் தலைமாணக்கர்க்கு உவமை கூறப்படும். கரை - எல்லை, முடிவு.

இச்செய்யுளின் பின்னிரண்டடிகளில் இனவேதுகையோடு வருக்க வேதுகை. (௫)

கங௬. தோணி யியக்குவான் றொல்லை வருணத்துக்
காணிற் கடைப்பட்டா னென்றிகழார்—காணு
யவன்றுணையா வாறுபோ யற்றேநூல் கற்ற
மகன்றுணையா நல்ல கொளல்.

(இ - ள்.) (கீழ்ப்பட்டசாதியிற்பிறந்தவனாயினும்), நூல் கற்ற மகன்- சாஸ்திரங்களைப்படித்த மனிதனை, துணை ஆ - (ஒருவன்) துணையாகக்கொண்டு, நல்ல - சிறந்த நூற்பொருள்களை, கொளல் - அறிந்துகொள்ளுதலானது,—தோணி இயக்குவான் - மரக்கலத்தைச் செலுத்துபவன், தொல்லை வருணத்து - பழமையான சாதிகளுள், கடைப்பட்டான் என்று-இழிவான சாதியிற் பிறந்தவனென்று, காணின்-(யாவரும்) அறிந்திருந்தும், இகழார்- (அவனை) இகழ்ச்சி செய்யாதவர்களாய், அவன் துணை ஆ - அவனைத் துணையாகக்கொண்டு, ஆறு போய் அற்றே - ஆற்றுவெள்ளத்தைக் கடந்துபோனாற்போன்றதாம்; (எ - று.)

தாழ்ந்தசாதியனாயினும் மீகாமனைக்கொண்டேவெள்ளத்தைக்கடப்பது இன்றியமையாதிருத்தல் போல, தாழ்ந்தசாதியனாயினுங் கற்றவனைக்கொண்டே அவசியமானபொழுது நூல்களைக் கற்கவேண்டுமென்பதாம். உவமையணி.

பிறப்பினாலுண்டாகும் பெருமையினும் கல்வியினாலுண்டாகும் பெருமை சிறந்ததென்றவாறு. "வேற்றுமைதெரிந்த நாற்பாலுள்ளுங், கீழ்ப்பாலொருவன்கற்பின், மேற்பாலொருவனு மவன்கட்படுமே" என்றார் பிறரும். 'கற்றவன்' என்னாது 'கற்றமகன்' என்றது, கல்லாதவன் மனிதருள் வைக்கப்படாது விலங்குகளோடு ஒப்ப மதிக்கப்படுவா னென்பது விளங்குதற்கு.

தோணி - த்ரோணீ என்னும் வடமொழியின் சிதைவு. சாதிவிகற்பஞ் சிருஷ்டிகாலத்தே ஏற்பட்டதன்றி இடையிலேவந்ததன்றென்பது தோன்ற, 'தொல்லைவருணம்' எனப்பட்டது. காணாய் - முன்னிலையசை; நீ அறி என்றுமாம். போய் - போனு வென்னும் எச்சத்தின் திரிபு; இனி, போயற்று என்பதை - போயதற்று என்பதன் விகாரமாகவுங் கொள்ளலாம்.

இச்செய்யுளின் பின்னிரண்டடிகளில் உயிரேதுகையோடு மூன்றமெழுத்தொன்றேதுகை. மூன்றாமெழுத்தொன்றெதுகையாவது - இரண்டாமெழுத்து ஒன்றாது நிற்க மூன்றாமெழுத்து ஒன்றிநிற்பது. (சு)

கஙௗ. தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையா
ரிகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ
நகலி னினிதாயிற் காண்பா மகல்வானத்
தும்ப ருறைவார் பதி.

(இ - ள்.) தவல் அரு - தவறுதலில்லாத, தொல் - பழமையான [தொன்றுதொட்டுப் பரம்பரையாக வருகின்ற], கேள்வி - நூற்கேள்விகளினது, தன்மை - தன்மையை, உடையார் - உடையவர்களும், இகல் இலர் - பகைமைக்குணமில்லாதவர்களும், எஃகு உடையார் தம்முள் - புத்திக்கூர்மையுடையவர்களும் ஆகிய கற்றவர்களுடைய குழாத்தினுள்ளே, குழீஇ - கூடியிருந்து, நகலின் - மகிழ்தலைக்காட்டிலும், இனிது ஆயின் - இன்பந்தருவதாமானால், அகல் வானத்து உம்பர் உறைவார் பதி - பரந்த விண்ணுலகத்தில் வாசஞ்செய்கின்ற தேவர்களது நகரமாகிய அமராவதியை, காண்பாம்- (யாம்) காணக்கடவோம்; (எ - று.)

கற்றோர்நேசத்தைப்போலச் சுவர்க்கானுபவம் தத்துவஞானத்துக்கும் மூத்திபெறுவதற்கும் ஏதுவாகாததனால், கற்றவர்களோடு சினேகித்து அனுபவிக்கும் ஆனந்தம் சுவர்க்கானுபவத்தா லுண்டாகும் ஆனந்தத்தினுஞ் சிறந்த தென்பது, கருத்து. அறிவுடையோருடன் கூடி மகிழ்தலினும் இனிய தன்றாதலின் தேவர்பதியை யாம் காணக்கடவேமல்லேம் எனக் கற்றறிந்தோரது கூட்டுறவின் அருமைபெருமைகளைத் தெரிவித்தபடி. தேவர்கட்கும் வித்துவான்கட்கும் வடமொழியில் 'விபுதர்' என்ற பெயரும், தென்மொழியில் 'புலவர்' என்ற பெயரும் உள்ளது, இங்குக் காணத்தக்கது.

ஒவ்வொருவனும் பெரும்பாலும் தன்னைப்பற்றித் தான் பன்மையாகவே எண்ணுதல் இயல்பாதலால், 'காண்பாம்' எனப்பட்டது; தனித்தன்மைப்பன்மை. தவல் - தொழிற்பெயர்; தபு என்பதன் மரூஉவாகிய தவு - பகுதி. கேள்வியாவது - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்; இது, கற்றவர்க்குக் கல்வியறிவை வலியுறுத்துதலாலும், கல்லாதவர்க்கும் அவ்வறிவை உண்டாக்குதலாலும் சிறந்ததாமென அறிக. கேள்வி - தொழிற்பெயர். எஃகு - ஆயுதம்: கூர்மை; இங்கே, புத்திநுட்பம். குழுமி அல்லது குழுவி என்பது, குழீஇ என விகாரப்பட்டு அளபெடுத்தது; இது, சொல்லிசையளபெடையின்பாற்படும். உம்பர் - மேலிடம்; இங்கே, சுவர்க்கம். அகல் வானம் - வினைத்தொகை.

தொல்காப்பியப் பொருளதிகார நச்சினார்க்கினியருரையில்,இப்பாட்டு அறிவுபொருளாக உவமைபிறந்ததற்கு உதாரணங் காட்டப்பட்டுள்ளது. (எ)

கஙஅ. கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே—நுனிநீக்கித்
தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா
வீர மிலாளர் தொடர்பு.

(இ - ள்.) கனை - ஒலிக்கின்ற, கடல் - கடலினது, தண் - குளிர்ச்சியான, சேர்ப்ப - துறையையுடையவனே!—கற்று - (நல்லநூல்களைப்) படித்து, அறிந்தார் - (அவற்றின் பொருள்களை) அறிந்தவர்களது, கேண்மை - சினேகமானது, நுனியின் கரும்பு தின்று அற்று - நுனியிலிருந்து (அடிவரையிற்) கரும்பைத் தின்றாற்போன்றது [வரவர இனிமைமிகும்]; பண்பு இலா - (அக் கற்றறிவாகிய) குணமில்லாத, ஈரம் இலாளர் - அன்பில்லாதவர்களுடைய, தொடர்பு - சினேகம், நுனி நீக்கி - (அக்கரும்பை) நுனியிலிருந்துதின்னுதலை ஒழித்து, தூரின் தின்று அன்ன - அடியிலிருந்து தின்றாற் போன்ற, தகைத்து - தன்மையையுடையது [வரவர இனிமை குறையும்]; (எ - று.)

பயனுவமையணி. இதனை, கஉ௫, ககூ௬ - ஆம் கவிகளோடு ஒப்பிடுக. "கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை யெஞ்ஞான்றுங், குருத்திற் கரும்புதின் றற்றே-குருத்திற், கெதிர்செலத் தின்றன்ன தகைத்தரோ வென்றும், மதுர மிலாளர் தொடர்பு" என மேல் நட்பாராய்தலில் வருவதுங் காண்க. அரோ - ஈற்றசை.

"இக்ஷூரக்ராத் க்ரமஶ: பர்வணிபர்வணி யதா ரஸவிஶேஷ: | தத்வத்ஸஜ்ஜநமைத்ரீ விபரீதாநாந்துவிபரீதா" என்னும் வடநூன்மேற்கோளை அடியொற்றியது இச்செய்யுள். (அ)

கௌகூ. கல்லாரே யாயினுங் கற்றாரைச் சேர்ந்தொழுகி
னல்லறிவு நாளுந் தலைப்படுவர்—தொல்சிறப்பி
னொண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு.

(இ - ள்.) தொல் சிறப்பின் - பழமையான [இயற்கையாகவுள்ள] சிறப்பையும், ஒள் நிறம் - பிரகாசமான நிறத்தையும் உடைய, பாதிரி பூ - பாதிரி மரத்தின் மலரை, சேர்தலால் - அடைதலினால், புது ஓடு - புதிதான பானையோடானது, தண் நீர்க்கு - (தன்னிடமுள்ள) குளிர்ந்த நீர்க்கு, தான் பயந்து ஆங்கு - தான் (வாசனையைக்) கொடுத்தாற்போல,—கல்லாரே ஆயினும் - (தாம்) படியாதவர்களே யானாலும், கற்றாரை சேர்ந்து ஒழுகின் - படித்தவர்களைச் சேர்ந்துநடந்தால், நல் அறிவு நாளும் தலைப்படுவர் - (அச்சேர்க்கையால்) நல்லஅறிவு நாள்தோறும் உண்டாகப்பெறுவர்; (எ - று.)

புத்தோடு - கல்லார்க்கும், பாதிரிப்பூ - கற்றார்க்கும், நல்ல பரிமளம் - நல்லறிவுக்கும் உவமை யெனக் காண்க. 'புத்தோடுதண்ணீர்க்குத்தான்பயந் தாங்கு' என்ற உவமையால், முன்னே கல்லாதவர் பின்பு கற்றோரதுசேர்க்கையால் தாம்அடைந்த அறிவைத் தம்மைச்சார்ந்தவர்க்குந் தருவ ரென்பது பெறப்பட்டது. புதுப்பானையிற் பாதிரிமலர்களையும் நீரையும் பெய்துவைத்தால் அந்நீர் நல்ல மணத்தைப் பெறுமென அறிக. "பூவோடுசேர்ந்த நாரும் மணம்பெறும்" என்ற பழமொழியோடு ஒத்தது இவ்வுவமை. "நல்ல மணமுள்ள தொன்றை நண்ணியிருப்பதற்கு, நல்ல மண முண்டாம் நலமதுபோல் - நல்ல,குணமுடையோர் தங்களுடன் கூடியிருப்பார்க்குக், குணமதுவேயாஞ் சேர்வுகொண்டு" என்றார் பெரியாரும்.

அறிவு தலைப்படுவர் - திணைவழுவமைதி: [நன்-பொது-உ௬.] புதுமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய்த் தன்னொற்றிரட்டி, புத்தோடு எனப் புணர்ந்தது; [நன் - பத - க.] ஆங்கு - உவமவுருபாகிய இடைச்சொல். (க)

கச0. அலகுசால் கற்பி னறிவுநூல் கல்லா
துலகநூ லோதுவ தெல்லாங்—கலகல
கூஉந் துணையல்லாற் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவா ரில்.

(இ - ள்.) அலகு சால் - அளவு மிக்க, கற்பின் - வித்தைகளுள்ளே, அறிவு நூல் - தத்துவஞானத்தைத்தருகின்ற சாஸ்திரங்களை, கல்லாது - படியாமல், உலகம் நூல் - இவ்வுலகத்துக்கேபயன்படுகின்ற வேறுநூல்களை, ஓதுவது எல்லாம் - படிப்பதுமுழுவதும், கலகல கூஉம் துணை அல்லால் - கலகல வென்று கூவுமளவே யல்லாமல், கொண்டு - (அவ்வுலகநூலோதுவதைக்) கொண்டு, தடுமாற்றம் போம் துணை அறிவார் - (பிறவித்துன்பங்களில்) தடுமாறுதல் நீங்குந் தன்மையை அறிபவர், இல் - இல்லை; (எ - று.)

அறிவுநூல் - ஞானசாஸ்திரங்கள். உலகநூல் - தருக்கம், வியாகரணம் முதலியன. 'அறிவுநூல் கல்லா துலகநூ லோதுவது' என்றதனால், தத்துவநூற்பயிற்சிக்கு வேண்டிய அளவு மற்றைய நூல்களையுங் கற்றல்வேண்டுமென்க. கீழ்த் துறவென்னும் அதிகாரத்தில் "தொலைவில்லாச், சத்தமுஞ் சோதிடமு மென்றாங் கிவைபிதற்றும், பித்தரிற் பேதையா ரில்" என்றதிலும் இச்செய்யுளின்கருத்து இருத்தல் காண்க.

இச்செய்யுளினால், இன்னது கற்கவேண்டுமென்று கூறியவாறு.

'அறிவனூலோதாது' என்ற பாடத்துக்கு - ஞானசொரூபியான கடவுளைப்பற்றிய நூல்களைப் படியாம லென்று பொருள்; அன்றி, இறைவனாற் கூறப்பட்ட ஆகமநூல்களை ஓதாமல் என்றுங் கொள்ளலாம்.

கற்பு - கல்வி; தொழிற்பெயர்: பு - விகுதி, இன் - ஏழனுருபு. கலகல - அநுகரணம்; இரட்டைக்கிளவி; இங்கே, பொருளில்லாமையைக்குறித்தது. அளபெடைகள் - செய்யுளோசை நிறைத்தன. கூம், போம் - கூவும், போகும்; செய்யுமெனெச்சத்து ஈற்றுயிர்மெய் கெட்டது. சால் - உரிச்சொல்.

பின்னிரண்டடிகளில் அளபுத்தொடை காண்க. (௧௦)

---

## கரு - ஆம் அதிகாரம்.—குடிப்பிறப்பு.

அஃதாவது - உயர்ந்த குலத்திற் பிறத்தலினது சிறப்பைக் கூறுவது. உயர்குடியிற்பிறந்தார்க்கே பெரும்பாலும் கல்விகேள்விப்பயன்கள் அமைதலால், இது கல்வியின்பின் வைக்கப்பட்டது; அன்றியும், கல்வி ஒருவன் பிறந்தகுடியை உயர்த்துதலை அதிகாரமுறைமைக்குக் காரணமென்னலாம்.

**௧௪௧.** உடுக்கை யுலறி யுடம்பழிந்தக் கண்ணுங்
குடிப்பிறப் பாளர்தங் கொள்கையிற் குன்றா
ரிடுக்கண் டலைவந்தக் கண்ணு மரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று.

(இ - ள்.) உடுக்கை உலறி - உடுக்கப்படும் ஆடையுங் கெட்டு, உடம்பு அழிந்தக்கண்ணும் - (உணவில்லாமையால்) உடம்பும் மெலிந்து அழிந்து போவதானாலும், குடி பிறப்பு ஆளர் - உயர்ந்தகுடியிற்பிறத்தலை யுடையவர்கள், தம் கொள்கையின் குன்றார் - தமது குலத்துக்கு உரிய ஒழுக்கத்திற் குறைவுபடார்; (எதுபோலவெனின்),—இடுக்கண் தலைவந்தக்கண்ணும் - (பசியினாலாகிய) துன்பம் மிகுதியாய் உண்டாம்பொழுதும், அரிமா - சிங்கமாகிய மிருகம், கொடி புல் கறிக்குமோ - கொடியாகப் படர்ந்திருக்கும் புல்லைத் தின்னுமோ? [தின்னாது]; (எ - று.)

மிருகேந்திரனாகிய சிங்கத்துக்குப் புல்லைத்தின்னாமைபோல, சிறந்தவராகிய குடிப்பிறப்பாளர்க்கு ஒழுக்கங்குன்றாமை இயல் பென்பதாம். இதனால், புல்லைத்தின்னுதல் பசுமுதலியவற்றிற்கு இயல்பாதல்போல ஒழுக்கங் குறைதல் தாழ்குடிப்பிறந்தார்க்கு இயல்பா மென்பதும் பெறப்படும்.

எடுத்துக்காட்டுவமையணி.

இரண்டுவாக்கியங்களிலுமுள்ள இழிவுசிறப்பும்மைகளால், பிறகாலங்களில் நிலைவேறுபடாமை கூறுதே குறிப்பிக்கப்பட்டது. "புலி பசித்தாலும் புல்லைத்தின்னுது","நல்லாரொழுக்கின் றலைநின்ருர் நல்கூர்ந்தும்,அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய, செங்கட் புலியே றறப்பசித்தாந் தின்னுவாம், பைங்கட்புனத்த பைங்கூழ்" என்பன காண்க. 'தலைவந்தக் கண்ணும்வரிமா' என்ற பாடத்துக்கு - கோடுகளையுடைய புலியென்று பொருள்.

உடுக்கை உலறி - பொல்லாவுடுக்கையாற் பொலிவிழந்து என்றுமாம். உடுக்கை - உடுக்கப்படுவது என ஆடைக்குக் காரணப்பெயர்; இதனைத் தொழிலாகுபெய ரென்பாருமுளர். பிறப்பாளர் - பிறப்பை ஆள்பவர். 'இடுக்கண் என்பது - மலர்ந்தநோக்கமின்றி மையல்நோக்கம் பட வரும் இரக்கம்' என ஆசிரியர் நச்சினுர்க்கினியர் கூறியிருத்தலைக் கொண்டு, இடுங்குகண் என்பது இடுக்கண் என விகாரப்பட்டதென்றும், துன்பம் நேருங்காலத்திற் கண் இடுங்குதலால் துன்பத்திற்கு இடுக்கண் எனப்பெய ரென்றும் உணர்க. அரிமா - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஒ - எதிர்மறை. மற்று - அசை. (க)

கசஉ. சான்ருண்மை சாய லொழுக்க மிவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கல்லது—வான்றோயு
மைதவழ் வெற்ப படாஅ பெருஞ்செல்வ
மெய்தியக் கண்ணும் பிறர்க்கு.

(இ - ள்.) வான் தோயும் - ஆகாயத்தை அளாவிய, மை தவழ் - மேகங்கள் தவழ்கின்ற, வெற்ப - மலையையுடைய அரசனே!—சான்ருண்மை - நற்குணங்களால் நிறைந்து (அவற்றை) ஆளுதலும், சாயல்-மென்மையும், ஒழுக்கம் - நல்லொழுக்கமும், இவை மூன்றும்—, வான் தோய் குடி பிறந்தார்க்கு அல்லது - (கீர்த்தியால்) மேலுலகத்தை அளாவிய [உயர்ந்த] குடியிற் பிறந்தவர்க்கே யல்லாமல், பிறர்க்கு - மற்றையோர்க்கு, பெருஞ் - செல்வம் எய்தியக்கண்ணும் - மிக்க செல்வம் உண்டானாலும், படா - உண்டாகாவாம்; (எ - று.)

"சாயல் மென்மை" என்னுந் தொல்காப்பியச்சூத்திரத்தால், சாயல் என்பது - ஐம்பொறிகளாலும் நுகரப்படும் பலவகைமென்மைகளையும் உணர்த்துவதோர் உரிச்சொல்லாதலை உணர்க. வான்தோய் குடி - "வானுயர் தோற்றம்" என்றாற்போல, உயர்ந்தகுடியென்னும் பொருள்பட நின்றது.

'வான்தோயுமைதவழ்வெற்ப' என்றவிடத்து,மலைக்கும் மேகத்துக்குஞ் சம்பந்த மில்லாமலிருக்கவுஞ் சம்பந்தத்தைக் கற்பித்துக் கூறியதனால், தொடர்புயர்வுநவிற்சியணி : வடநூலார் 'ஸம்பந்தாதிசயோக்தி' என்பர்: இதனால், மலையினது உயர்வு தொனிக்கின்றது.

முதலடியில், பெயர்ச்சேவ்வெண் ஈற்றில் தொகைபெற்றது. ஆண்மை - பண்புப்பெயர் ; வினைப்பகுதியடியாய்ப்பிறந்தது : தொழிற்பெயரெனினும் இழுக்காது. (உ)

கசங. இருக்கை யெழலு மெதிர்செலவு மேனை
விடுப்ப வொழிதலோ டின்ன—குடிப்பிறந்தார்
குன்றா வொழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று.

(இ - ள்.) (பெரியோரைக்கண்டால்), இருக்கை எழலும் - (உடனே தமது) ஆசனத்தை விட்டு எழுந்து நிற்றலும், எதிர் செலவும் - (அவர்களை) எதிர்கொண்டு சென்று அழைத்துவருதலும், ஏனை - இன்னமும், விடுப்ப ஒழிதலோடு - (அவர்கள் மீளும்பொழுது) விடைகொடுக்கத் தாம் (அவரைவிட்டுப்) பிரிதலும், இன்ன - இத்தன்மையான செய்கைகளை, குடிபிறந்தார் - உயர்ந்தகுடியிற் பிறந்தவர்கள், குன்றா ஒழுக்கம் ஆ - (என்றும்) குறைவுபடாத [இயற்கையான] ஒழுக்கமாக, கொண்டார் - வைத்துக் கொண்டார்கள்; (ஆதலால், அவர்களை), கயவரோடு - மூடர்களுடனே, ஒன்று ஆ - ஒருதன்மையாக, உணரல் பாற்று அன்று - மதித்தல் தக்கதன்று; (எ - று.)

நற்குடிப்பிறந்தாரும் பிறவாதாரும் மேல்நோக்கில் ஒத்திருப்பினும் இவ்விருவர்க்குமுள்ளவேறுபாடு அவ்வவருடைய ஒழுக்கத்தால் நன்குபுலனாமென்பதாம். 'இன்ன'என்றதனால், இவைபோன்ற மற்றும் பல நல்லொழுக்கங்களும் கொள்ளப்படும். இவையெல்லாம் இழிகுலத்தாரிடத்துஇயற்கையாகஅமைந்திராவாதலால்,'கயவரோடொன்றாவுணரற்பாற்றன்று'என்றார்.

இருக்கை - 'கை' விகுதி பெற்ற தொழிலாகுபெயர். ஏனை - வினைமாற்றுப்பொருளில் வந்த இடைச்சொல். முதலடி - முற்றுமோனை. ஓடு- எண்ணிடைச்சொல். கயமையாவது - நற்குணங்கள்யாவும் இல்லாத தன்மை: அதனையுடையவராகிய கீழோர், கயவர். (ங)

கசச. நல்லவை செய்யி னியல்பாகுந் தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகு—மெல்லா
முணருங் குடிப்பிறப்பி னூதிய மென்னோ
புணரு மொருவர்க் கெனின்.

(இ - ள்.) (உயர்குடியிற் பிறந்தவர்கள்), நல்லவை செய்யின் - நல்லகாரியங்களைச் செய்வராயின், இயல்பு ஆகும் - (அஃது அவர்கட்கு) இயற்கையென்று எண்ணப்படும் [சிறப்பாகக் கொள்ளப்படாது]; தீயவை (செய்யின்) - கெட்டகாரியங்களைச் செய்தாலோ, பல்லவர் தூற்றும் பழி ஆகும் - (அது) பலரும் எடுத்துச்சொல்லும் பழிப்புக்குக் காரணமாம்; (ஆதலால்), ஒருவர்க்கு—, புணரும் எனின் - (உயர்குடிப்பிறப்பு முன்னையநல்வினையாற்) கூடினால், எல்லாம் உணரும் குடி பிறப்பின் - எல்லாவற்றையும் அறியவல்ல அவ்வுயர்குடியிற் பிறத்தலினால்,ஊதியம்-பயன், என்னோ - யாதோ ?(எ-று.)

உயர்குடிப்பிறந்தார்க்கு மிக்கநல்லொழுக்கத்தாலும் பெரும்புகழுண்டாதலில்லை; சிறியதீயொழுக்கத்தாலும் பெரும்பழி உண்டாகின்றது; தாழ்குடி

யிற்பிறந்தார்க்கோ இங்ஙனமில்லை: சிறிது நல்லொழுக்கத்தாற் பெரும்புகழும், பெருந்தீயொழுக்கத்தாற் சிறுபழியும் உண்டாகின்றன; ஆதலால், உயர்குடிப்பிறந்தார்க்கு அக்குடிப்பிறப்பால் நஷ்டமேயொழிய லாபமில்லை என, வஞ்சப்புகழ்ச்சி [நிந்தாஸ்துதி]வகையாற் குடிப்பிறப்பின்மேன்மையை விளக்கியபடி. இனி, நல்லவைசெய்தலை இயல்பாகவும் தீயவைசெய்தலைப் பலருந்தூற்றும்பழியாகவுங் கொண்டு யாவராலும் அறிந்து நன்குமதிக்கப் படுகின்ற உயர்குடிப்பிறப்பு ஒருவர்க்குக் கூடுமாயின் அதனினும் இலாபம் வேறு யாதோ? [ஏதுவுமில்லை] என்று உரைப்பினும் அமையும். முந்தின பொருளுக்கு 'இன்' என்ற ஐந்தனுருபு - ஏதுப்பொருளதும், பிந்தின பொருளுக்கு, எல்லைப்பொருளதுமாம். வெள்ளாடைக்கு மாசுபடிதல் போல, உயர்ந்தோர்க்குப் பழியுண்டாவது எளிதாம்; "குடிப்பிறந்தார்கண் விளங்குங் குற்றம் விசும்பின், மதிக்கண் மறுப்போ லுயர்ந்து", "ஒன்றாய் விடினு முயர்ந்தார்ப்படுங் குற்றங், குன்றின்மே லிட்ட விளக்கு" என்பன காண்க.

முதலடியில் 'நல்லவை,' 'தீயவை' என மாறுபட்டசொற்கள் வந்தது - முரண்தொடை. (ச)

கசரு. கல்லாமை யச்சங் கயவர் தொழிலச்சஞ்
சொல்லாமை யுள்ளுமோர் சோர்வச்ச—மெல்லா
மிரப்பார்க்கொன் றீயாமை யச்ச மரத்தாரிம்
மாணாக் குடிப்பிறந் தார்.

(இ - ள்.) கல்லாமை அச்சம் - தாம் படியாமைக்கு அஞ்சுதலும், கயவர் தொழில் அச்சம் - கீழோர்செய்யும் இழிதொழில்களைச் செய்தற்கு அஞ்சுதலும், சொல்லாமையுள்ளும் ஓர் சோர்வு அச்சம் - (பொய் கோள் கடுஞ்சொல் பயனில்சொல் என்னுந் தீச்சொற்களைச்) சொல்லாமலிருப்பதிலும் (எந்த இடத்தில் தவறிப்போமோ என்று) ஒரு தளர்ச்சிக்கு அஞ்சுதலும், எல்லாம் இரப்பார்க்கு ஒன்று ஈயாமை அச்சம் - (தமக்குவேண்டுவன) பலவற்றை இரப்பவர்களுக்கு(அப்பொருள்கள் பலவற்றுள்) யாதாயினுமொன்றைக் கொடுக்கக்கூடாமற்போனால் அதற்கு அஞ்சுதலும், (இத்தன்மையான பல அச்சங்கள் உயர்குடிப்பிறந்தார்க்கே உள்ளன); (ஆதலால்), இ மாணா குடி பிறந்தார் - மாட்சிமைப்படாத இவ்வுயர்குடியிற் பிறந்தவர்கள், மரத்தார் - மரக்கலத்திலுள்ளார்போல எப்பொழுதும் அச்சமுடையார்; (எ - று.)

இதுவும் - வஞ்சப்புகழ்ச்சியணியமையக் குடிப்பிறப்பின் மேன்மையைத் தெரிவித்தது.

"ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயின், நன்றாகாதாகி விடும்" ஆதலால், 'சொல்லாமையுள்ளுமோர்சோர்வச்சம்' எனப்பட்டது. தம்மிடத்து உள்ளதை எல்லாங்கொடுத்து இல்லாததைக்குறித்து இரங்குவதென்பார், 'எல்லாமிரப்பார்க்கு ஒன்றுஈயாமை அச்சம்' என்றார். உயர்

குடியை 'மாணுக்குடி' என்றது, எப்பொழுதும் பல அச்சத்திற்கு இடமாயிருத்தல்பற்றி; இனி,மாண் ஆ குடி எனப் பிரித்து, மாட்சிமையாதலையுடைய குடி யென்று உரைத்தலும் பொருந்தும்.

மரக்கல மென்பது சில இடங்களிற் கலமென நிற்றல்போல, இங்கே மரமென நின்றது; இவ்வாறு வருவதனை, வடநூலார் 'நாமைகதேசே நாமக்ரஹணம்' என்பர். இனி, மரமென்பதை - அதனாலாகிய தோணிக்குக் கருவியாகுபெயரெனக் கொள்ளலுமாம். இனி, மாணுக்குடிப்பிறந்தார் - மாட்சிமையில்லாத தாழ்ந்தகுடியிற் பிறந்தவர்கள், மரத்தார் - (இப்படிப்பட்ட அச்சத்திற்குக் காரணமான உணர்ச்சி சிறிதும் இல்லாமையால்) மரத்தோ டொப்பர் என்றும் உரைத்தல் கூடும்; மரத்தார் - மரத்தினாற்செய்த பாவைபோன்றவ ரென்றும் உரைப்பர். (ரு)

கசகூ. இனநன்மை யின்சொலொன் றீதன்மற் றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாங்—கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப
விற்பிறந்தார் கண்ணே யுள.

(இ - ள்.) கனம் - சிறந்த, மணி - இரத்தினங்கள், முத்தோடு - முத்துக்களுடனே, இமைக்கும் - பிரகாசிக்கின்ற, முழங்கு உவரி - ஆரவாரிக்கின்ற கடலினது, தண் சேர்ப்ப - குளிர்ச்சியான கரையையுடையவனே! —இனம் நன்மை - நல்ல சினேகிதரை யுடைத்தாயிருத்தலும், இன்சொல் - இனிய சொற்களைச் சொல்லுதலும், ஒன்று ஈதல் - இரப்பதொரு பொருளை (இரந்தோர்க்கு) க் கொடுத்தலும், ஏனை மனம் நன்மை - மற்றும் மனத்தினது தூய்மையும், என்ற இவை எல்லாம் - என்றுசொல்லப்பட்ட இந்நற்குணங்களெல்லாம், இல் பிறந்தார்கண்ணே - உயர்குடியிற் பிறந்தவரிடத்தே, உள - (இயல்பாக)உள்ளன; (எ - று.)

'இற்பிறந்தார்கண்ணே' என்னும் பிரிநிலை ஏகாரத்தால், தாழ்குடிப் பிறந்தாரிடத்து இவை இல வென்பது பெறப்படும். மற்று - அசை. என்றிவை - பெயரெச்சவிகாரம்; இனி, என்று இவை எனப் பிரித்து, எண்ணிடைச்சொல்லாகக்கொண்டு, பிறவிடத்துங் கூட்டி யுரைத்தலும் ஒன்று. 'ரத்நாகரம்' என்னும் வடமொழிப்பெயரின் பொருள் விளங்க, 'கனமணி முத்தோ டிமைக்கு முவரி' எனப்பட்டது. உவரி - உவர்ப்புச்சுவையுடையது; உவர் - உப்பு, இ - பெயர்விகுதி.

"நகை யீகை யின்சொ லிகழாமை நான்கும், வகையென்ப வாய்மைக் குடிக்கு" என்பது, திருக்குறள்.

முதலடி - முற்றுமோனை. (சு)

கசஎ. செய்கை யழிந்து சிதன்மண்டிற் றாயினும்
பெய்யா வொருசிறை பேரி லுடைத்தாகு
மெவ்வ முழந்தக் கடைத்துங் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை.

(இ-ள்.) பேர் இல் - பெரிய வீடாயிருந்தால் அது, செய்கை அழிந்து கட்டுக் குலைந்து, சிதல் மண்டிற்று ஆயினும் - செல்லால் அரிக்கப்பட்டதானாலும், பெய்யா ஒரு சிறை உடைத்து ஆகும் - (மழைநீர்) உள்ளே ஒழுகாத ஒரு பக்கத்தை யுடையதாம்; (அதுபோல), குடி பிறந்தார் - உயர்குடியிற் பிறந்தவர், எவ்வம் உழந்தக்கடைத்தும் - (வறுமை நோய் முதலியவற்றால்) துன்பமனுபவிக்கும் பொழுதும், செயல் பாலவை - தாம் செய்தற்குஉரிய கடமைகளை, செய்வர் - (விடாமற்) செய்வார்கள்; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி.

*சிதல் - கறையான். சிதல்மண்டிற்று ஆயினும் - சிதல்கள் நெருங்கியதானாலும் என்றுமாம். சிதல் - சாதியொருமை. பாலவை - பான்மையென்னும் பகுதியினடியாப் பிறந்த பலவின்பாற் குறிப்பு வினையா லணையும்பெயர்; இரண்டனுருபு தொக்கது.* (எ)

கசஉ. ஒருபுடை பாம்பு கொளினு மொருபுடை
யங்கண்மா ஞாலம் விளக்குறூஉந்—திங்கள்போற்
செல்லாமை செவ்வனேர் நிற்பினு மொப்புரவிற்
கொல்கார் குடிப்பிறந் தார்.

(இ - ள்.) ஒரு புடை - (தனது) ஒருபாகம், பாம்பு கொளினும் - பாம்பினாற் பிடிக்கப்பட்டிருந்தாலும், ஒரு புடை - மற்றொருபாகத்தால், அம் கண் மா ஞாலம் - அழகிய இடத்தையுடைய பெரிய பூமியை, விளக்குறூஉம் - பிரகாசிப்பிக்கின்ற, திங்கள் போல் - பூரணசந்திரன் போல,—குடி பிறந்தார் - உயர்குடியிற் பிறந்தவர்கள், செல்லாமை - வறுமை, செவ்வன் நேர் நிற்பினும் - நன்றாக(த் தம்மிடம்) நேர்ந்துநின்றாலும், ஒப்புரவிற்கு - (பிறர்க்கு) உபகாரஞ்செய்வதற்கு, ஒல்கார் - தளரார்; (எ - று.)—உவமையணி.

*கிரகணகாலங்களிற் சந்திரனை மறைக்கின்ற பூமியின் சாயையை இராகுகேதுக்களென்னுங் கரும்பாம்பு செம்பாம்புகளாகக் கூறுகின்ற புராணநூல்வழக்குப்பற்றி, இங்ஙனங் கூறியது. இதனை கசக - ஆஞ் செய்யுளோடு ஒப்பிடுக. செல்லாமை - எண்ணமும் சொல்லும் தொழிலும் ஆகிய திரிகரணங்களின் செயல்கள் சித்தி பெறாமை; எனவே, வறுமையாம். செவ்வன் - பண்புப் பெயர்; அன் - விகுதி. நேர் - 'நேர்ந்து' என்னும் வினையெச்சத்தின் விகாரம்: "வரிப்புனை பந்து" என்பதில், 'வரி' என்பது போல. ஒப்புரவு - உலகநடையைஅறிந்து அதற்குஏற்பப் பிறர்க்குஉதவிசெய்தல்; ஒப்பு உரவு என்று பிரிக்க: உலகத்தாரோடு ஒத்துச் செய்யுஞ் சிறந்த தொழிலென்றபடி.* (அ)

கசங. செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்—புல்வாய்
பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோற்
பொருமுரா ணற்றாத லின்று.

(இ-ள்.) செல்லா இடத்தும் - (வறுமைமுதலியவற்றால்) செய்யமுடியாதகாலத்திலும், குடி பிறந்தார் - உயர்குடிப்பிறந்தவர், செய்வன - செய்யும் நற்கருமங்களை, சிறியவர் - தாழ்குடிப்பிறந்தவர், செல் இடத்தும் (செல்வம்முதலியவற்றால்) செய்யக்கூடியகாலத்திலும், செய்யார் - செய்ய மாட்டார்; புல்வாய் - மானானது, பருமம் பொறுப்பினும் - சேணம்முதலிய போர்க்கோலத்தைத் தாங்கினாலும், பாய் பரிமா போல் - (இயற்கையாகப்) பாய்ந்தோடுந்தன்மையையுடைய குதிரைபோல, பொரு முரண் ஆற்றுதல் இன்று - போர்செய்யுந் தன்மையை யுடைத்தாதலில்லை; (எ - று.)

திருஷ்டாந்தாலங்காரம்.

புல்வாய்- புல்லைத்தின்னும் வாயையுடையதுஎன மானுக்குக் காரணப் பெயர்; வேற்றுமைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. பருமம் - குதிரைமேற்றவிசு. பருமம் பொறுப்பினும் - பருத்திருத்தலை யுடைத்தாயிருந்தாலும் என்றுமாம். பிறவற்றைக்கூறாது புல்வாயையும் பரிமாவையுங் கூறியது, இரண்டுக்கும் மாவென்று ஒருபெயர் பொதுவாக உள்ளதனால்; அன்றியும், ஒருவகைமான் குதிரைபோலப் பருத்திருக்கும். பொருமுரண் - வினைத்தொகை. 'பெருமுரண்' எனவும் பாடம்.

இச்செய்யுளோடு மேல் கஅ௪, ஙடுஅ - ஆஞ் செய்யுள்களை ஒப்பிட்டுக் காண்க. (க)

கரு௦. எற்றொன்று மில்லா விடத்துங் குடிப்பிறந்தா
ரற்றுத்தற் சேர்ந்தார்க் கசைவிடத் தூற்றாவ
ரற்றக் கடைத்து மகல்யா றகழ்ந்தக்காற்
றெற்றெனத் தெண்ணீர் படும்.

(இ - ள்.) குடிப்பிறந்தார்—, எற்று ஒன்றும் இல்லா இடத்தும் - யாதொருபொருளுமில்லாதகாலத்தும், அற்று தன் சேர்ந்தார்க்கு - வேறுகதியில்லாமல் தம்மை அடைந்தவர்கட்கு, அசைவு இடத்து ஊற்று ஆவர் - தளர்ச்சிநேர்ந்தவிடத்து ஊன்றுகோல்போல உதவுவர்; (எதுபோல எனின்),— அகல் யாறு - பெரிய நதியானது, அற்றக்கடைத்தும்-நீர்வற்றியபொழுதும், அகழ்ந்தக்கால் - (தன்னைத்)தோண்டினால், (தோண்டின அவ்விடத்தில்), தெற்றென-விரைவாக, தெள் நீர் படும்-தெளிவான நீர் உண்டாகப்பெறும்.

ஆறானது வெள்ளமுள்ள காலத்துத் தன்னை எவருந் தோண்டுதல் வேண்டாமலே தானே எங்குஞ் சென்று நீரைஉதவி நீர்வறண்டகாலத்திலே தோண்டினமாத்திரத்தில் நீரைஉதவுதல்போல, குடிப்பிறந்தார் செல்வமுள்ளகாலத்தே எவருந் தம்மைச் சேர்ந்து யாசிக்க வேண்டாமலே தாமே எங்குஞ்சென்று பலஉதவிகள்செய்து செல்வமில்லாதகாலத்திலே தம்மை யடைந்தமாத்திரத்தில் உதவிசெய்வர் என்பதாம். "ஆற்றுப்பெருக்கற் றடிசுடு மந்நாளு மவ்வா, றூற்றுப் பெருக்கா லுலகூட்டும் - ஏற்றவர்க்கு, நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராலுலு, மில்லையென மாட்டா ரிசைந்து" என்பதனோடு இதனை ஒப்பிடுக.

இதுவும், த்ருஷ்டாந்தாலங்காரம்.

மேல் ௧௮௫ - ஆஞ் செய்யுளோடு இதனை ஒப்பிட்டுக்காண்க.

எற்று - வினைவடியாகப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும் பெயர். தற்சேர்ந்தார் - ஒருமைப்பன்மைமயக்கம்; 'தஞ்சேர்ந்தார்' எனின், வழாநிலையாம். தெற்றென - விரைவுக்குறிப்பு. 'தண்ணீர்படும்' என்ற பாடத்துக்கு, தெற்றென-தெளிவாக என்க. யாறு நீர்படும் - இடத்துநிகழ்பொருளின்தொழில் இடத்தின்மேலேற்றிக் கூறப்பட்ட உபசாரவழக்கு. (௧௦)

---

## ௧௬ - ஆம் அதிகாரம்.—மேன்மக்கள்.

அஃதாவது - செய்தற்கரியனசெய்தல் பிறர்குற்றங்கூறாமை செருக்கின்மை என்றஇவை முதலிய நற்குணங்களாற் பெரியார்களது தன்மையைப்பற்றிக் கூறுவது. மேன்மக்களாவதற்கு உயர்குடிப்பிறப்பு ஒருதலையான காரணமாதலின், இவ்வதிகாரம் குடிப்பிறப்பென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது.

௧௫௧. அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்
　　திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கண்
　　மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
　　தேய்வ ரொருமா சுறின்.

(இ - ள்.) அம் - அழகிய, கண் - இடத்தையுடைய, விசும்பின் - ஆகாயத்திலே இருந்து, அகல் நிலா பாரிக்கும் - பரந்த நிலாவை வீசுகின்ற, திங்களும் - சந்திரனும், சான்றோரும் - பெரியோரும், மன் ஒப்பர் - பெரும்பாலும் தம்மில் ஒத்திருப்பர்; (ஆனால்), திங்கள் - சந்திரன், மறு ஆற்றும்-களங்கத்தைத் தான்பொறுக்கும்; சான்றோர் - பெரியோர்களோ, அஃது ஆற்றார்-களங்கத்தைப் பொறுக்கமாட்டார்கள்: (பின்னை என்னாவரெனின்),— ஒரு மாசு உறின் - சிறிது களங்கம் (தம்மை) அடையுமாயின், தெருமந்து வருந்தி, தேய்வர் - அழிந்தேவிடுவர்; (எ - று.)

'திங்களுஞ் சான்றோரு மொப்பர்' என்றது - சந்திரன் புறவிருளையொழித்தலும் தண்மையுடைத்தாதலும், சான்றோர் அகவிருளையொழித்தலும் தண்ணளியுடைத்தாதலு மாகிய பொதுத்தன்மைபற்றி யென்க. 'மறு' என்பதற்கு - களங்கம் என்றும், பங்கம் என்றும் இரண்டுபொருள். திங்களும் சான்றோரும் சிலகுணங்களால் ஒப்பாராயினும் மறுவாற்றாமையால் திங்களினுஞ் சான்றோர் சிறந்தவர் என்பது போதருதலால், இது, குறிப்பால்வந்த வேற்றுமையலங்காரம்; இவ்வலங்காரத்தினது இலக்கணம் - உபமான உபமேயங்களுள் யாதாயினுமொன்றை வெளிப்படையாகவாவது குறிப்பாகவாவது விசேஷமுடையதாகச் சொல்வது: இதனை வடநூலார் வ்யதிரேகாலங்காரம் என்பர். இங்கே உபமானமாகிய சந்திரனினும் உபமேயமாகிய சான்றோர்க்கு மாசுசிறிதும்ஆற்றாமையாகிய விசேடம் சொல்லப்பட்டது காண்க.

திங்களினுஞ் சான்றோர்சிறந்தவரென்னுங்கருத்தைப் பின்னிரண்டடியினது குறிப்பினாற்பெறவைத்ததனால், 'குறிப்பால்வந்தவேற்றுமையலங்காரம்' எனப்பட்டது; இதற்கு, 'மறு' என்பதி லுள்ள சிலேடையணி அங்கமாகநின்றது.

திங்கள்மறுவாற்றுதலேயும் சான்றோர் அஃதாற்றாமையையும் முறையே: (நன்னெறி) " திங்கள், கறையிருளை நீக்கக் கருதா துலகில், நிறையிருளை நீக்கும் மேல்நின்று," (திருக்குறள்) "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர்நீப்பர் மானம் வரின்" என்றவற்றால் அறிக. திங்களுக்கு 'அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்கும்' என்ற அடைமொழியைக் கொடுத்ததற்கு ஏற்ப, சான்றோர்க்கு ' அழகிய இடத்தையுடைய நிலவுலகத்திலே இருந்து பெரிய கீர்த்தியை எங்கும் பரவச்செய்கின்ற' என்னும் விசேஷணத்தை அமைத்துக்கொள்க. திங்களை 'அங்கண்விசும்பின்' என்று உயர்ந்த இடத்தைக் கூறி விசேடித்த அதனால், மேன்மக்கள் உயர்குடியிற் பிறந்தவ ரென்பது தொனிக்குமாறு அறிக. 'சான்றோர் தேய்வர்' என்றதனால், சந்திரன் தேய்ந்தாலும் மறுபடிவளர்கிறான், சான்றோர் அங்ஙனம்பங்கப்பட்டபின் பெருமிதங்காட்டார் என்பது குறிப்பிக்கப்படுகின்றது.

அகல் நிலா - வினைத்தொகை. 'மன்' என்ற இடைச்சொல், இங்கே, மிகுதியென்ற பொருளில் வந்தது. தெருமந்து, தெருமா - பகுதி; வந்து, தந்து, அலமந்து என்பவற்றிற் போல. 'திங்கள்' என்னும் அஃறிணையும் 'சான்றோர்' என்னும் உயர்திணையுங் கலந்து சிறப்பினால் 'ஒப்பர்' என்னும் உயர்திணைமுடிபைப் பெற்றன; திணைவழுவமைதி: [நன் - பொது - உஎ.] சான்றோர் திங்கள் போல மறுத்தாங்கமாட்டாமை, இங்கே சிறப்பு; அன்றியும், உயர்திணையாயிருத்தலேயே அஃறிணையினுஞ்சிறப்பாகக் கொள்ளலாம். திங்கள்என்பது - பொருளால் இருதிணைப்பொதுவாயினும், சொல்லால் அஃறிணையெனக்கொள்க. 'தேவர்களை உயர்திணையாகவும் அஃறிணையாகவுஞ் சொல்லலாம்' என்னும் விதியையே நோக்கின், 'திங்களுஞ் சான்றோருமொப்பர்' என்னும் முடிபு வழாநிலையாம்.

எஞ்ஞான்றும் தம்நிலையில் தாழாமையும் ஊழ்வினையால் தாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையு மாகிய மேன்மக்களது மானமுடைமை, இச்செய்யுளாற் கூறப்பட்டது; "குடிப்பிறந்தார்கண் விளங்குங் குற்றம் விசும்பின், மதிக்கண் மறுப்போ லுயர்ந்து" என்ற திருக்குறளும், "வந்து தோன்றிய மலர்கதிர்மண்டிலம், சான்றோர்தங்க ணெய்திய குற்றம்,தோன்றுவழி விளங்குந் தோற்றம்போல, மாசறவிசும்பின் மறுநிறங்கிளர" என்ற மணிமேகலையும் இங்கு நினைக்கத்தக்கன.

' அஃதாற்றார்' என்றவிடத்து ஆய்தம் மெய்போல் ஒலித்தது; சான்றோரஃ தாற்றார் எனப் பிரித்து அலகிட்டு, தேமாங்காய்முன் நேர்வந்தமை காண்க: உயிர்போலொலித்ததாகக்கொண்டு அஃதாற்றார் எனப் பிரித்துப் புளிமாங்காயாக அலகிட்டால், அதற்குமுன் 'தெரு' என்னும் நிரை வருவது வெண்டளைக்கு இயையாமை அறிக.

கருஉ. இசையு மெனினு மிசையா தெனினும்
வசைதீர வெண்ணுவர் சான்றோர்—விசையி
னரிமா வுளங்கிழித்த வம்பினிற் றீதோ
வரிமாப் பிழைப்பெய்த கோல்.

(இ - ள்.) சான்றோர் - பெரியோர்கள், இசையும் எனினும் - (தமக்கு எளிதில்) முடியுமாயினும், இசையாது எனினும் - (எளிதில்) முடியாதாயினும், வசை தீர - பழிப்பில்லாதபடி, எண்ணுவர் - (பெருங்காரியங்களையே செய்ய) நினைப்பர்; (ஏனெனில்),—அரி மா- சிங்கமானது, பிழைப்ப-குறித்த இலக்குத் தவறி உய்யும்படி, எய்த - (அதன்மேல்) பிரயோகித்த, கோல் - அம்பானது,—விசையின் - வேகத்தோடு (சென்று), நரி மா - நரியினது, உளம் - மார்பை, கிழித்த-பிளந்து ஊடுருவிச்சென்ற, அம்பினில் - அம்பைக் காட்டிலும், தீதோ-தீமையுடையதோ? [அன்று, நன்றுஎன்றபடி] ; (எ-று.)

சிங்கத்தின்மேல் அம்புஎய்து அதுதவறினாலும் பெருமையுண்டு, நரியின்மேல் அம்புஎய்து அதன்மார்பைப்பிளந்தாலும் பெருமையில்லை; அது போல, செய்தற்கரிய பெரியகாரியத்தைத் தொடங்கி முயன்று அது முடிவு போகாதாயினும்பெருமையுண்டு,இழிவானதொழிலைத்தொடங்கி முடித்தாலும் பெருமையில்லை: ஆதலால், பெரியோர் தம்மிடத்தில் பழிப்புஉண்டாகாதபடி மேலானகாரியத்தையே செய்ய நினைப்பர் என்று கருத்து.

பெரியகாரியம்முடிவுபோகாமற்செய்தமுயற்சி விரைவோடுசிறியகாரியத்தைமுடித்த முயற்சியினும் நன்றென்னும் பொருள் தோன்ற நின்றதனால், பின்னிரண்டடி - பிறிதுமொழிதல் என்னும் அலங்காரம்: இச்செய்யுளில் பின்வாக்கியத்திற்கூறிய கருத்து முன்வாக்கியத்திற் கூறியபொருளுக்குக் காரணமென அறிக ; இங்ஙனம் ஒன்றைக் காரணங்காட்டிச் சாதித்தல், ஏதுவலங்காரம்.

"கான முயலெய்த வம்பினில் யானை, பிழைத்தவேலேந்த லினிது" என்னுந் திருக்குறளோடு இக்கவியின் பின்னடிகளை ஒப்பிடுக. "பெருமையுடையவ ராற்றுவா ராற்றின், அருமையுடைய செயல்" என்ற திருக்குறளையும் அறிக.

மேன்மக்களது செயற்கரியனசெய்யுந்தன்மை இதனாற் கூறப்பட்டது.

விசையின் - உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றாம்வேற்றுமைத் தொகை ; இன் - சாரியை. இனி, விசையால் என உரைத்து, ஏதுப்பொருளில்வந்த ஐந்தாம்வேற்றுமைவிரி யெனினும் ஒக்கும். நரியாகிய மா, அரியாகிய மா என இருபெயரொட்டு. உளம் - இருதயம் ; உளமென்னும் மனத்தின் பெயர், அதுஉள்ள இடமாகிய மார்புக்கு இங்கே தானியாகுபெயர்.அம்பினில் - ஐந்தனுருபு, உறழ்பொருவு ; இது எல்லைப்பொருளில் அடங்கும். பிழைப்ப என்னுஞ் செயவெனெச்சம் எதிர்காலங்குறித்து [?] ஓ-எதிர்மறை. உம்மைகள் - முறையே உயர்வுசிறப்பும், இழிவுசிறப்பும்.

முதலடி - தொடைமுரண். (உ)

கருரு. நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினுஞ் சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண் டேறா—ருரங்கவரா
வுள்ளமெனு நாரினாற் கட்டி யுளவரையாற்
செய்வர் செயற்பா லவை.

(இ - ள்.) சான்றோர் - மேன்மக்கள், நரம்பு எழுந்து - (உணவின்மை பற்றி உடம்பு மெலிதலால்) நரம்புகள் மேலேதோன்றப்பெற்று, நல்கூர்ந்தார் ஆயினும் - வறுமையடைந்தவர்களானாலும், குரம்பு எழுந்து - (தமது நல்லொழுக்கத்தின்) வரம்பினின்றும் கடந்து, குற்றம் கொண்டு-குற்றமான செய்கையை மேற்கொண்டு, ஏறார் - (அச்செய்கையில்) அதிகப்பட்டுநடவாமல், உரம் - (தமது) அறிவையே, கவறு ஆ - கருவியாகக்கொண்டு, உள்ளம் எனும் நாரினால் - முயற்சியென்கிற கயிற்றினாலே, கட்டி - (மனத்தைக்) கட்டி, உள வரையால் - (பொருள் தமக்கு) உள்ள அளவிற்கு ஏற்ப, செயற்பாலவை - செய்யத்தக்க நற்காரியங்களை, செய்வர்—; (எ - று.)

மேன்மக்களது வரம்புகடவாமையும் உதாரகுணமுங் கூறப்பட்டன.

கவறு - பிளப்புள்ள பனைமட்டை; இது - ஒன்றைப்பிடித்துக் கயிற்றாற்கட்டிவைத்தற்கு ஆதாரமாம். உரம் - வலிமை; தேகபலம் முதலியன நல்லொழுக்கத்திற்குக் கருவியாகாமையால், உரமென்பது - இங்கே, சிறப்பாய், புத்திபலத்துக்கு வந்தது. 'உரங்கவரா உள்ளமெனும் நாரினாற்கட்டி'—வறுமையால் தளராதபடி மனத்தை அறிவினாலும் முயற்சியினாலும் உறுதிப்படுத்திக்கொண்டு என்றபடி. உருவகவணி. உள = உள்ள: தொகுத்தல். செயற்பாலவை - செய்தற்குஉரிய பான்மையையுடையவை.

(நீதிநெறிவிளக்கம்) "நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்து,மல்லன செய்தற் கொருப்படார்," (திருக்குறள்) "சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற, குலம்பற்றி வாழ்து மென்பார்" என்பவற்றோடு இக்கவியை ஒப்பிடுக. இங்கே 'குரம்பெழுந்துகுற்றங்கொண்டேறார்' என்றதை "கொதித்தவுள்ளமொடு குரம்புகொண்டேறி" என்ற மணிமேகலையோடொப்பிடுக.

கருச. செல்வுழிக் கண்ணொருநாட் காணினுஞ் சான்றவர்
தொல்வழிக் கேண்மையிற் றோன்றப் புரிந்தியாப்பர்
நல்வரை நாட சிலநா ளடிப்படிற்
கல்வரையு முண்டா நெறி.

(இ - ள்.) நல் வரை நாட - நல்ல மலைகளையுடைய பாண்டியநாட்டையுடையவனே!-செல்வழிக்கண்-போகிறவிடத்திலே, ஒருநாள்—, காணினும்-(ஒருவரைப்) பார்த்தாலும், சான்றவர் - பெரியோர்கள், தொல் வழி கேண்மையின் தோன்ற - பழைய வழியால் வந்த சினேகம் போலக் காணப்படும்படி, புரிந்து - அன்புசெய்து, யாப்பர் - (சினேகிதராகத் தம்மோடு அவரைக்) கட்டுவர்; சில நாள் அடி படின் - சிலகாலம் காலடி பட்டுவருமாயின், கல் வரையும் - கல்மலையிலும், நெறி உண்டு ஆம் - வழிஉண்டாகும்; (எ - று.)

'எறும்பூரக் கல்லுந் தேயும்' என்றவாறு சிலகாலங் காலடிபட்டுவந்தாற் கல்லிலும் வழி உண்டாவதுபோல, வல்நெஞ்சர்க்கும் பழகினாற்சினேகமுண்

டாகும்; அது சிறப்பன்று: சான்றோர்களோ "ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை, யிருநிலம் பிளக்க வேர் வீழ்க்கும்மே" (நற்றிணை) என்றவாறு கண்டவுடனே சினேகித்துச் சிறுபழக்கத்தால் அச்சினேகத்தை உறுதிப்படுத்துவர் என்பது கருத்து. "புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான், நட்பாங் கிழமை தரும்" என்றார் திருவள்ளுவனாரும்.

இதனால், மேன்மக்களது நட்பின் தன்மை கூறப்பட்டது.

செல் + உழி = செல்வுழி; மெய்யீற்றின்முன் உயிர்வர உடம்படுமெய் யல்லாத வகாரமெய் பெற்றது: [நன் - உயிர் - கரு.] இதனை 'மெய்யீற்றுடம் படுமெய்' என்பர், ஆசிரியர் நச்சினார்க்கினியர். தொல்வழி - தொன்று தொட்டு வந்த; பரம்பரையாய்வந்த. வரைக்கு நன்மை - மிளகு கோட்டம் அகில் தக்கோலம் குங்குமம் முதலிய பொருள்களோடு நீரருவியையும் உடைத்தாதல். சிலநாளடிப்படின் கல்வரையு முண்டா நெறி - பிறிதுமொழிதல் என்னும் அலங்காரம். 'கல்'என வேண்டாது கூறினார், மலையினது திண்மையை உணர்த்துதற்கு. உம்மைகள் - இழிவுசிறப்பு. புரிந்தியாப்பர் - தற்றியலிகரம். (ச)

கருரு. புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி
கல்லா வொருவ னுரைப்பவுங் கண்ணோடி
நல்லார் வருந்தியுங் கேட்பரே மற்றவன்
பல்லாரு ணாணல் பரிந்து.

(இ - ள்.) புல்லா - பொருந்தாத, எழுத்தின் - இலக்கண நூல்களையுடைய, பொருள் இல் - அருத்தஞானமில்லாத, வறுங் கோட்டி - வீண் கூட்டத்தினிடையிலே, கல்லா ஒருவன் -(படித்தற்கு உரிய நூல்களைப்) படியாத ஒருத்தன், உரைப்பவும் - (தனக்குத்தோன்றியதொருபொருளை எடுத்துச்) சொல்லவும், நல்லார் - மேன்மக்கள், வருந்தியும் - (குற்றமுடைய அதனைக் கேட்டற்கு) வருத்தப்பட்டும், அவன் பல்லாருள் நாணல் பரிந்து- அக் கல்வியறிவில்லாதவன் பலபேர்முன்னிலையில் அவமானப்படுதற்கு மனம் இரங்கி, கண் ஓடி-(அவனிடத்துத்) தாட்சிணியம்வைத்து, கேட்பர் - (காது கொடுத்துக்) கேட்டிருப்பர்; (எ - று.)

நற்குணமுடையோர் தமது உள்ளத்திற்கு உவப்பு இன்றாயினும், கல்லாதவன்பேசும்பேச்சுக்களையும் புறத்தே செவிகொடுத்துக்கேட்பர்; அறிவுடைய தாம் உபேக்ஷைசெய்தால் அதுநோக்கிப் பிறராலும் உபேக்ஷிக்கப்பட்டு அவன் பலர்முன் அவமானப்படுவனே யென்பதற்கு இரங்கி யென்றபடி.

இதனை "பாடமேயோதி - பரிந்து" என்னும் ௩கசு - ஆஞ் செய்யுளோடு ஒப்பிடுக.

புல்லா எழுத்தின் கோட்டி என்பதற்கு-எழுத்தினைப்புல்லாத கோட்டி என்று கருத்து; இதனை "அருங்கேடன்" (திருக்குறள்) என்பதுபோலக் கொள்க; இது வடமொழிநடை. எழுத்து - அக்ஷரம்; எழுதப்படுவது; இது, இங்கு இலக்கணத்திற்கு ஆகுபெயர். எழுத்தின் - இன்சாரியைநிற்க இரண்டனுருபுதொக்கது. கோட்டி - கோஷ்டீ என்னும் வடமொழியின் திரிபு.

உம்மைகள் - இழிவுசிறப்பு. மற்று - அசை; நற்குணமில்லாத அவ னென்றுங் கொள்ளலாம். உரைப்ப என்பதைப் பெயராகக்கொண்டு, இரண்டாம் வேற்றுமைத்தொகையாக்கி, உரைப்பவற்றை என உரைப்பினுமாம்.

இதனால், மேன்மக்களது பொறுமை கூறப்பட்டது.

இங்கு "புல்லாவெழுத்திற்பொருளில்வறுங்கோட்டி" என்றதை "வெள்ளைக்கோட்டி" என்ற சிலப்பதிகாரத்தோடும், "வம்பக்கோட்டி" என்ற மணிமேகலையோடும், "நிரம்பிய, நூலின்றிக் கோட்டிகொளல்" என்ற திருக்குறளோடும் ஒப்பிடுக. (௫)

கருசு. கடித்துக் கரும்பினைக் கண்டகர நூறி
யிடித்துநீர் கொள்ளினு மின்சுவைத்தே யாகும்
வடுப்பட வைதிறந்தக் கண்ணுங் குடிப்பிறந்தார்
கூறார்தம் வாயிற் சிதைந்து.

(இ - ள்.) கரும்பினை - கரும்பை, கடித்து - (வாயாற்) கடித்தும், கண்தகர - கணுக்கள் நொறுங்கும்படி, நூறி - (ஆலையிற்போகட்டுச்) சிதைத்தும், இடித்து-(உலக்கை கல் முதலியவற்றால்) நொருக்கியும், நீர் கொள்ளினும்-இரசத்தைக் கொண்டாலும், இன் சுவைத்தே ஆகும் - (அக்கருப்பஞ்சாறு) இனிய உருசியை யுடையதேயாம்; (அதுபோல),—வடு பட - குற்றந்தோன்றும்படி, வைது இறந்தக்கண்ணும் - (தம்மைப் பிறர்) திட்டிப்போனவிடத்தும், குடி பிறந்தார் - உயர்குடியிற்பிறந்தவர்கள், சிதைந்து - (தமது நல்ல நிலைமை) கெட்டு, தம் வாயின் - தங்கள் வாயினால், கூறார் - (தீயசொற்களைச்) சொல்லமாட்டார்கள்; (எ - று.)

இதனால், பிறர் வருத்தியகாலத்தும் மிக்குவிளங்குகின்ற மேன்மக்களது நற்குணம் கூறப்பட்டது.

இது - எடுத்துக்காட்டுவமையணி.

'வாயின்' என வேண்டாது கூறினார், 'நல்லசொற்கள்பயின்றது' எனத் தாம்வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு; அடுத்தசெய்யுளிலும், கஎ உ-ஆம் செய்யுளிலும் இதுகொள்க. சுவைத்து - ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும்பெயர். உம்மைகள் - இழிவுசிறப்பு. ஏ - தேற்றம். 'சிதைந்து' என்றதனால், 'தீயசொற்களை' என்பது பெறப்பட்டது. (சு)

கருஎ. கள்ளார்கள் ளுண்ணார் கடிவ கடிந்தொரீஇ
யெள்ளிப் பிறரை யிகழ்ந்துரையார்—தள்ளியும்
வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவ திலர்.

(இ - ள்.) வடு அறு காட்சியார் - குற்றமற்ற அறிவையுடைய மேன்மக்கள், கள்ளார் - (பிறர்பொருளைக்) களவுசெய்யமாட்டார்; கள் உண்ணார்- மதுபானஞ்செய்யார்; கடிவ கடிந்து ஒரீஇ - (நூல்களால்) விலக்கப்பட்ட தீச்செயல்களை வெறுத்துச் செய்யாதொழிந்து, பிறரை எள்ளி இகழ்ந்து உரையார் - அயலாரை அவமதித்து நிந்தித்துப் பேசார்; தள்ளியும் - மறந்

தும், வாயின் பொய் கூறார் - வாயினாற் பொய்சொல்லார்; சாயின் பரிவது இலர் - (தமக்கு வறுமை முதலியவற்றால்) தளர்ச்சி நேர்ந்தகாலத்தும் வருந்துதலையுடைத்தாகார்; (எ - று.)

இதனால், மேன்மக்களது தீச்செயலின்மை கூறப்பட்டது.

கடிவ - பலவின்பாற் பெயர். தள்ளியும் - பிறரால் ஏவப்பட்டும் என்றுமாம். பிரதியக்ஷமாகக்காணுதல்போல அறிவினாற் காணுதல் கூடு மாதலால், அறிவுக்கு 'காட்சி' என்று ஒரு பெயர். அறிவுக்குக் குற்றம் - ஐயந் திரிபு அறியாமைகள். 'சாயின்' என்றதில் இழிவுசிறப்புஉம்மை தொக்கது. தள்ளியும், உம் - இழிவுசிறப்பு.

இப்பாட்டில் சான்றோர்தன்மையைக் கூறியதனால், தன்மைநவிற்சியணி.

கருஅ. பிறர்மறை யின்கட் செவிடாய்த் திறனறிந்
தேதிலா ரிற்கட் குருடனாய்த் தீய
புறங்கூற்றின் மூங்கையாய் நிற்பானேல் யாது
மறங்கூற வேண்டா வவற்கு.

(இ - ள்.) (ஒருவன்), திறன் அறிந்து - நல்லொழுக்கத்தின் வகையை உணர்ந்து, பிறர் மறையின்கண் செவிடு ஆய் - அயலாரது இரகசியங்களைக் கேட்பதிற் செவிடனாகியும், ஏதிலார் இல்கண் குருடன் ஆய் - அயலாரது மனைவியரைக் காதலோடு காண்பதிற் குருடனாகியும், தீய புறம் கூற்றில் மூங்கை ஆய் - (ஒருவர்மேல்) தீயசொற்களை அவர்களைக்காணாதவிடத்துச் சொல்லுவதில் ஊமையாகியும், நிற்பான் எல் - நிற்கமாட்டுவனாயின், அவற்கு-அவனுக்கு, யாதும் அறம் கூற வேண்டா - எந்தத்தருமமும் (பிறர்) உபதேசிக்கவேண்டியதில்லை ; (எ - று.)

அவனிடத்து எல்லாத்தருமங்களும் நிரம்பியுள்ளனவென்றும், இம்மூன்றுமே எல்லாத்தருமங்களுள்ளுஞ் சிறந்தன வென்றும், இவற்றையுடையான் தருமத்தைப் பிறர்க்கெல்லாம் உபதேசிக்கவல்லா னென்றுங் கருத்து.

இதனால், மேன்மக்களது ஒழுக்கங்களின் சிறப்புக் கூறப்பட்டது.

மறை - (வெளிப்பட்டாற் குற்றம்வருமென்று அஞ்சிப் பிறர்க்கு) மறைத்து ஒருவன் சொல்லுஞ்சொல் ; செயப்படுபொருள்விகுதிபுணர்ந்துகெட்ட பெயர். செவிடு-பண்பாதுபெயர். திறன்-ஈற்றுப்போலி. இல்-வீடு, வீட்டிலிருந்து சம்சார காரியங்களை நிர்வகிக்கின்ற மனைவியர்க்கு இடவாகுபெயர். தீய - பலவின்பாற் பெயர் ; பெயரெச்சமாகக்கொண்டும் உரைக்கலாம். கூற்று - கூறு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். மூங்கை - மூக என்னும் வடமொழியின் திரிபு ; இது, மூகை எனவும் நிற்கும். நிற்பானேல் என்றது, அங்ஙனம் நிற்றலின் அருமையை விளக்கிற்று. வேண்டா என்றது - வேண்டும் என்பதன் எதிர்மறையாதலின், ஒருவகை வியங்கோ ளெனக் கொள்க.

'பிறர்மறையின்கட்செவிடாய்', 'தீயபுறங்கூற்றின்மூங்கையாய்','யாது மறங்கூறவேண்டாவவற்கு' என்பவற்றை—"பல்லர் மறையிற் செவியிலன்",

"தீச்சொற்கண்மூங்கை", "அயல அயலவர்நூல்" என்னும் எலாதியோடு ஒப்பிடுக. "பரார்த்ரேஷுஜாத்யந்தா: பரதாரேஷ்வபும்ஸகா: - பரீவா தேஷு ஏமூகா: தேதீவதயிதாமம" என்னும் வடமொழிமேற்கோள் இங்கே உணரத்தக்கது. (அ)

கருகூ. பன்னாளுஞ் சென்றக்காற் பண்பிலார் தம்முழை
யென்னானும் வேண்டுப வென்றிகழ்ப—வென்னானும்
வேண்டினு நன்றுமற் றென்று விழுமியோர்
காண்டொறுஞ் செய்வர் சிறப்பு.

(இ - ள்.) பண்பு இலார் - மேன்மைக்குணமில்லாதவர்கள், தம்உழை தம்மிடத்து, பல் நாளும் - பலதினமும், சென்றக்கால் - (ஒருவர்) வருவாராயின், என் ஆனும் வேண்டுப என்று - (இவர்) யாதாயினும் ஒருபொருளைத் (தம்மிடத்துப் பெற) விரும்புவரென்று கருதி, இகழ்ப - (அவர்களை) இகழ்ச்சி செய்வார்கள் ; விழுமியோர் - மேன்மக்கள், என் ஆனும் வேண்டினும் நன்று என்று - (இவர்) யாதாயினும் (நம்மிடத்துப் பெற) விரும்பினாலும் நல்லதே யென்று கருதி, காண்தொறும் - (அவர்களைப்) பார்க்கும்பொழுதெல்லாம், சிறப்பு செய்வர் - உபசாரங்களைச் செய்வார்கள் ; (எ - று.)

இதனால், மேன்மக்களது மனமாட்சி கூறப்பட்டது.

தொறு என்பது - இடைச்சொல்லாயினும், பெயர்ப்பொருளைத்தருதலால், பெயரெச்சத்திரிபாகிய 'காண்' என்னும் வினைத்தொகை அதனைக் கொண்டுமுடிந்தது. நாளும், உம்மை - முற்று. ஆனும், உம்மை - இழிவுசிறப்பு. நன்றுஎன்றது, அங்கீகாரப்பொருளது. சென்றக்கால் என்றதில், செல் என்ற பகுதி 'தரல் வரல் கொடை செலல் சாரும்படர்க்கை, எழுவாயிரண்டும் எஞ்சிய வேற்கும்" (நன்னூல்) என்ற விதிக்கு மாறாக இங்கே தன்மைக்கு வந்தது, இடவழுவமைதி: இங்ஙனம்வருதல் சிறுபான்மை. தம்முழை, உழை - ஏழனுருபு. (கூ)

கசுO. உடையா ரிவரென் றொருதலையாப் பற்றிக்
கடையாயார் பின்சென்று வாழ்வ—ருடைய
பிலந்தலைப் பட்டது போலாதே நல்ல
குலந்தலைப் பட்ட விடத்து.

(இ - ள்.) (உலகத்திலே சிலர்),—உடையார் இவர் என்று - செல்வமுடையார் இவரென்று கருதி, ஒருதலை ஆ பற்றி - ஒரேதுணிவாகப் பிடித்து, கடையாயார் பின் சென்று - கீழ்மக்கள்பின்னே போய்க்கொண்டு, வாழ்வர் - உயிர்வாழ்வார்கள் ; (அதனாற் பயனென்ன?) (அங்ஙனம்வாழ்பவர்கள்), நல்ல குலம் தலைப்பட்ட இடத்து - சிறந்த குலத்திற் பிறந்தவர்களைச் சேர்ந்தவிடத்து, உடைய பிலம் தலைப்பட்டது போலாதே - (வேண்டும்பொருள்களெல்லாவற்றையும்) உடையதொரு சுரங்கத்தைச் சேர்ந்தது போலாகாதா? [ஆகுமென்றபடி]; (எ - று.)

இதனால், மேன்மக்களது சேர்க்கையின் பெரும்பயன் கூறப்பட்டது.

செல்வரை 'உடையார்' என்றது, உலகவழக்குப்பற்றி. தலையாயார், இடையாயார் என்பன - கடையாயார் என்பதன் எதிர்மொழிகள்; உத்தமர், மத்தியமர், அதமர் எனக் காண்க. வாழ்தல் - ஜீவித்தல். தலைப்படுதல் - ஒருசொல்; தலை - தமிழுபசர்க்கம். குலம் - அதிற் பிறந்தார்க்கு இடவாகுபெயர். தலைப்பட்டவிடத்து - ஒருவகைவினையெச்சம்போலும். போலாது - இடைச்சொல்லடியாப்பிறந்த எதிர்மறைமுற்று; ஏகாரம் - வினவகையால், எதிர்மறைகாட்டிற்று. இங்கு இரண்டு எதிர்மறை, உடன்பாடு உணர்த்திற்று. (௪௦)

---

## கஎ - ஆம் அதிகாரம்.—பெரியாரைப்பிழையாமை.

அஃதாவது - பெரியாராயினாரை அவமதித்து ஒழுகாமை. இரட்டுறமொழிதலென்னும் உத்தியால், பெரியார் என்பது - வலியாற் பெரியராகிய அரசர்மேலும், தவத்தாற்பெரியராகிய முனிவர்மேலும் நின்றது; அன்றியும், பொதுப்படப் பெரியா ரென்றதனால், அறிவு பருவம் ஒழுக்கம் இம்மூன்றினும் பெரியவராகிய ஞானவ்ருத்தர், வயோவ்ருத்தர், சீலவ்ருத்தர் என்னும் இவரையும் உணர்த்தும்: அன்றியும், குலத்திற்பெரியோருமாம். பிழையாமை - பிழைசெய்யாமை; எதிர்மறைத் தொழிற்பெயர். மேன்மக்களது சிறப்பை அறிந்து அவருடன் பழகுவார்க்கு இன்றியமையாதாதலின், இஃது, மேன்மக்களென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது.

கசுக. பொறுப்பரென் றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்—வெறுத்தபி
ன்ஆர்க்கு மருவி யணிமலை நன்னாட
பேர்க்குதல் யார்க்கு மரிது.

(இ - ள்.) ஆர்க்கும் - பேரொலிசெய்கின்ற, அருவி - நீரருவிகளையுடைய, அணி - அழகிய, மலை - மலையையுடைய, நல் நாட - சிறந்த பாண்டியநாட்டையுடையவனே!—பொறுப்பர் என்று எண்ணி - (இவர் நாம் செய்யும் பிழைகளைப்) பொறுத்துவிடுவ ரென்று நினைத்து, புரை தீர்ந்தார்மாட்டும் - குற்றம் நீங்கிய பெரியோர்களிடத்தும், வெறுப்பன செய்யாமை - அவர்வெறுக்கத்தக்க கொடுஞ்செய்கைகளைச் செய்யாதிருத்தல், வேண்டும் - தகுதி; (ஏனெனில்),—வெறுத்த பின் - (அவர்பொறுமல்) வெறுப்பாராயின் அதன்பின்பு, பேர்க்குதல் - (அதனால்வருந் தீங்கை) நீக்குதல், யார்க்கும்-எவ்வகை மேம்பட்டோர்க்கும், அரிது - முடியாது; (எ - று.)

"சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம், பெரியோ ராயிற் பொறுப்பது கடனே" (நறுந்தொகை) என்ற நீதியையே முக்கியமாகக்கொண்டு, பெரியோர்பக்கல் எவ்வகைப்பிழையையுஞ் செய்யற்க; செய்யின், "சிறியோர் பெரும்பிழை செய்தன ராயின், பெரியோ ரப்பிழை பொறுத்தலு மரிதே" (நறுந்தொகை) என்றவாறு, பிழையின் கொடுமையால் அவர்கள்

மனம்பொறுது கோபித்தால் அக்கோபம் தன்பயனைத்தராது நீங்காதாதலால்,அதனால்வருந்தீங்கை விலக்குதல் எவராலுமாகாது என்பது கருத்து. "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது" என்றார் திருக்குறளிலும்.

புரைதீர்ந்தார்மாட்டும், மாடு - ஏழனுருபு, உம்மை - உயர்வுசிறப்பு: இதனை எச்சவும்மையாகக் கொண்டால்,எவரிடத்தும் வெறுப்பன செய்யலாகா தென்பது போதரும். நாட்டுக்கு நன்மை - நிலவளம் நீர்வளம் முதலிய பலவளங்களையும் உடைமை. 'வெறுத்தபின்' என்றது, எதிர்கால வினையெச்சத்தின்தன்மையது. 'போக்குதல்' என்றும் படிக்கலாம். (க)

கரு௨. பொன்னே கொடுத்தும் புணர்தற் கரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்து—மன்றோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமி லறிவி னவர்.

(இ - ள்.) நல்ல நயம் இல் அறிவினவர் - சிறந்த மேன்மை யில்லாத அறிவையுடைய கீழ்மக்கள், பொன்னே கொடுத்தும் புணர்தற்கு அரியாரை - (அதிகமாகப்) பொன்னையே (காணிக்கையாகக் கொண்டுபோய்க்) கொடுத்தாலும் சினேகித்தற்கு அரியரான பெரியோர்களை, கொன்னே - ஒன்றுந்தாராமலே, தலைக்கூட பெற்றிருந்தும் - சிநேகிக்கப் பெற்றுவைத்தும், அன்றோ - ஐயோ, பயன் இல் பொழுது ஆ கழிப்பரே - (அக்காலத்தை நல்லபயன்தருவதாகச் செய்வித்துக்கொள்ளாமல்) பிரயோசனமில்லாத [வீண்] காலமாகக் கழிப்பார்களே! (எ - று.)

அருமையான பெரியோர் வலியத் தம்மிடம்வந்து கூடியபொழுதும் அவர்களைக்கொண்டு நன்மைபெறுமற் காலங்கழிப்பதும் பெரியாரைப் பிழைத்தலாம்; ஆதலின், அவ்வாறு செய்யலாகாது என்பது கருத்து.

பொன்னே, ஏ - உயர்வுசிறப்பு. கொடுத்தும், பெற்றிருந்தும் என்பவற்றில் உள்ள உம்மைகளும் இப்பொருளனவே. அன்றோ - அந்தோ, ஐயோ என்பனபோல, இரக்கப்பொருள்தறிக்கும் இடைச்சொல்; 'கழிப்பரே' என்பதில், ஏகாரமும் - இப்பொருளது. (௨)

கருந. அவமதிப்பு மான்ற மதிப்பு மிரண்டு
மிகைமக்க ளான்மதிக்கற் பால—நயமுணராக்
கையறியா மாக்க ளிழிப்பு மெடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார்.

(இ - ள்.) அவ மதிப்பும் - தாழ்ந்தமதிப்பும், ஆன்ற மதிப்பும் - உயர்ந்த மதிப்பும், இரண்டும்—, மிகை மக்களால் - பெருமையையுடைய மேன்மக்களினால், மதிக்கல் பால - மதிக்கத்தக்க தன்மையையுடையனவாம்; நயம் உணரா - நற்குணத்தை அறியமாட்டாத, கை அறியா - நல்லொழுக்கத்தையும் (தாம்ஒழுக) அறியாத, மாக்கள் - கீழ்மக்கள் செய்கின்ற, இழிப்பும் - அவமதிப்பையும், எடுத்து ஏத்தும் - சிறப்பித்துப் புகழ்தலையும், வடித்த

நூலார் - தெளிந்தெடுத்த நூல்களை உணர்ந்த பெரியோர்கள், வையார்-(ஒரு பொருளாக மனத்திற்) கொள்ளமாட்டார்கள்; (எ - று.)

'நாயின்மேலேறி வையாளிவிட்டாலென்ன, வீழ்ந்தாலென்ன?' என்ற பழமொழிப்படி, அற்பர் புகழ்ந்தாலும்இகழ்ந்தாலும் அதனாற்பிறர்க்குவருவதோர் உயர்வும் தாழ்வும் இல்லை யென்பதாம். பெரியாரது மதிப்பின் சிறப்புக் கூறுவார், சிறியாரது மதிப்பின்சிறப்பின்மையையும் உடன் கூறினார்.

ஆன்ற என்பதில், சால்என்பதன் மரூஉவாகிய ஆல் - பகுதி; 'அகன்ற' என்பதன் மரூஉ என்னவுமாம். முதலடியில், உம்மைபெற்ற சொற்கள், ஈற்றில் இரண்டென்னுந் தொகை பெற்றன ; [நன் - இடை - கூ.] மதிப்பு - தொழிற்பெயர்; 'அவ' - இன்மையுணர்த்துவதொரு வடமொழி உபசர்க்கம். மிகை - மிகுதி; தொழிற்பெயர், ஐ - விகுதி.

மக்கள் - ஐம்பொறியுணர்வையேயன்றி மனமென்பதோரறிவும் உடனுடையார் ; மாக்கள் - மனவுணர்ச்சியில்லாமல் ஐம்பொறியறிவுமாத்திரத்தையேயுடைய ஒருசார் விலங்குபோன்ற மனிதர் : இவ்வேறுபாடு, "மாவுமாக்களு மையறிவினவே," "மக்கள்தாமே யாறறிவுயிரே"என்னுந் தொல்காப்பியச்சூத்திரங்களைக்கொண்டு அறியத்தக்கது. 'கையறியாமக்கள்'என்னாது 'மாக்கள்' என்றது - அவர்கள் விலங்கின்தன்மையரென்னும் இழிவு தோன்றற்கு. உணரா, அறியா என்னும் எதிர்மறைப் பெயரெச்சங்கள் அடுக்கி, 'மாக்கள்' என்னும் ஒருபெயரைக் கொண்டன ; "மூவா முதலா வுலகம்" என்ற சிந்தாமணியிற் போல. எத்து - முதனிலைத்தொழிற்பெயர்.

இச்செய்யுளை, மேல்வரும் உகூச-ஆஞ்செய்யுளோடு ஒப்பிட்டுக்காண்க.

கஉகூச. விரிநிற நாகம் விடருள தேனு
முருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கு
மருமை யுடைய வரண்சேர்ந்து முய்யார்
பெருமை யுடையார் செறின்.

(இ - ள்.) விரி நிறம் நாகம் - படம்விரிக்குந் தன்மையையுடைய ஒளியையுடைய பாம்பானது, விடர் உளது எனும் - வெடிப்புநிலத்தினுள்ளே இருந்தாலும், உருமின் கடு சினம் - இடியினது மிக்ககோபத்தாலாகியது போன்ற ஒலி, சேண் நின்றும் - வானத்தில் நெடுந்தூரத்திலிருக்கவும், உட்கும் - (அதற்கு) அஞ்சும்; (அதுபோல), பெருமை உடையார் செறின்-பெருமைக்குணமுடையவர்கள் கோபிப்பாராயின், (அவர்க்குப்பிழைசெய்தபிறர்), அருமை உடைய அரண் சேர்ந்தும் - (பிறரால் அழித்தற்கும் புகுதற்கும்) அரிய காவலிடத்தைச் சேர்ந்திருந்தாலும், உய்யார் - (அவர்கோபத்துக்குத் தப்பி) உயிர்வாழமாட்டார்; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி. பெரியாரைப்பிழைத்தலினா லுண்டாகிற கேட்டைத் திருஷ்டாந்தமுகமாய்விளக்கினார். "இறந்தமைந்த சார்புடையாராயினு முய்யார், சிறந்தமைந்த சீரார் செறின்" என்றார் திருக்குறளிலும்.

கடுஞ்சினம் - இடியோசைக்கு இலக்கணை. " வானின் றுலகம்வழங்கி வருதலால் " என்ற திருக்குறளிற் போல, 'நிற்ப' என்பது - 'நின்று'

எனத் திரிந்துநின்றது: தன்கருத்தாவின் வினையைக் கொண்டு முடிதற்கு ஏற்ற செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சம், 'உட்கும்' என்னும் பிற கருத்தாவின் வினையைக் கொண்டு முடிதற்கு ஏலாமையால், அதனை அதற்கு ஏற்ற செயவெனெச்சத்தின் திரிபாகக் கொள்ளவேண்டியதாயிற்று; [நன் - வினை - உஎ.] பாம்பு இடியோசைக்கு அஞ்சிவருந்துதல், இயல்பு. நாகம் - வடசொல்; நகத்தில் வாழ்வது: தந்திதாந்தநாமம்; நகம் - மலையும், மரமும். அரண் - சரண மென்ற வடசொல்லின் திரிபு. (ச)

கசரு. எம்மை யறிந்திலி ரெம்போல்வா ரில்லென்று
தம்மைத்தாங் கொள்வது கோளன்று—தம்மை
யரியரா நோக்கி யறனறியுஞ் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள்.

(இ - ள்.) 'எம்மை அறிந்திலிர் - எமது சிறப்பை (நீவிர்) அறிந்தீரல்லீர்; எம்போல்வார்இல்-எம்மைப்போன்றவர் (உலகத்தில்)இல்லை,'என்று—, தம்மை தாம் கொள்வது - தம்மைத்தாமே சிறப்பித்துக்கொள்வது, கோள் அன்று - ஒரு பெருமை யாகாது; அறன் அறியும் சான்றோர் - தருமங்களை அறிந்த மேன்மக்களால், தம்மை அரியர் ஆ நோக்கி - தம்மை (உலகத்தில் பிறர்க்கு) அருமையான குணங்களை யுடையவராகப் பார்த்து, பெரியர் ஆ கொள்வது - பெரியோர்களாக அங்கீகரித்து மதிக்கப்படுவதே, கோள்-(ஒருவர்க்குப்) பெருமையாம்; (எ - று.)

இதனால், பெரியார் தம்மைத்தாமே நன்குமதித்துக்கொள்ளா ரென்பதும், பெரியாரால் மதிக்கப்படுவதே பெருமை யென்பதும் கூறப்பட்டன.

முதலடியில் 'எம்' என்றது, செருக்குப்பற்றிவந்த தன்மைப்பன்மை. அறிந்திலிர் - முன்னிலைப்பன்மை யெதிர்மறை யிறந்தகாலமுற்று. கோள் - கொள்ளப்படுவது;செயப்படுபொருள்விகுதிகெட்டுமுதல்நீண்டபெயர்: முதனிலை திரிந்த தொழிலாகுபெய ரென்பாரு முளர்.

இச்செய்யுளை, மேல் ௩௯௦ - ஆஞ் செய்யுளோடும், "வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை" என்ற திருக்குறளோடும், "தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல்"என்றுதொடங்கும் நீதிநெறிவிளக்கத்தோடும் ஒப்பிட்டுப்பார்க்க.

கசசு. நளிகடற் றண்சேர்ப்ப நாணிழற் போல
விளியுஞ் சிறியவர் கேண்மை—விளிவின்றி
யல்கு நிழற்போ லகன்றகன் றோடுமே
தொல்புக ழாளர் தொடர்பு.

(இ - ள்.) நளி - பெரிய, கடல் - கடலினது, தண்-குளிர்ந்த, சேர்ப்ப-துறையையுடையவனே! சிறியவர் கேண்மை - கீழோரது நட்பு, நாள் நிழல் போல - உதயகாலத்துச் சாயைபோல, விளியும்-வரவரச் சுருங்கும்; தொல் புகழ் ஆளர் - தொன்றுதொட்டு[பரம்பரையாக]வருகிறகீர்த்தியையுடைய பெரியோரது,தொடர்பு - சிநேகம்,விளிவு இன்றி - (அங்ஙனஞ்) சுருங்குதலில்லாமல், அல்கு நிழல் போல் - சாயங்காலத்துச் சாயைபோல, அகன்று அகன்று ஓடும் - மிகவும்வளர்ந்து நீளும்; (எ - று.)

இச்செய்யுளில் உபமானம் உபமேயம் உவமவுருபு பொதுத்தன்மை என்னும் நான்கும் அமைந்திருத்தலால், முற்றுவமையணி; வடநூலார் பூர்ணோபமாலங்காரம் என்பர்.

இச்செய்யுளால், பெரியார்நட்பின் சிறப்பும், சிறியார்நட்பின் சிறப்பின்மையும் ஒருங்கு கூறப்பட்டன. "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" என்றார் திருக்குறளிலும். "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" என்ற நாலடியாரோடு இதனை ஒப்பிடுக. "ஆரப்யகுர்வீக்ஷயிணீக்ரமேண லம்பீபுராவ்ருத்திமதீசபஶ்சாத் - திநஸ்யபூர்வார்த பரார்தபிந்நா சாயேவமைத்ரீகலஸஜ்ஜநாநாம்" என்னும் வடநூன்மேற்கோளும் கவனிக்கத்தக்கது.

பிற்பகற்பொழுது கழியுந்தோறும் நிழல் நீண்டுகொண்டேவருதல் போலப் பெரியார்நட்பு அவர்முடியுமளவும் மிகுந்துகொண்டேவரும்; ஆதலால், அவர்திறத்துப் பிழைசெய்யாமல் அவரைத் துணைக்கொள்க: சிறியோர்நட்பு முதலில் அதிகமாயிருப்பினும் வரவரக் குறைந்துவிடு மாதலால், அவர்கள்நட்பைக் கொள்ளற்க என்பது கருத்து.

பெரியாரைப்பிழையாமைக்கு அவர்நட்பின்பெருமையையறிதல் ஏதுவாகு மாதலால், இப்பாட்டு இவ்வதிகாரத்தில் வைக்கப்பட்டது.

நளி - பெருமையுணர்த்தும் உரிச்சொல்; "தடவுங் கயவும் நளியும் பெருமை" என்னுந் தொல்காப்பியத்தால் உணர்க. சேர்ப்பன் - நெய்தல்நிலத்தலைவன்பெயர். ஒருவர்க்கொருவர் க்ஷேமசமாசாரங்களைக் கேட்பதனால், கேண்மையென்று நட்புக்குப் பெயர்; இது-பண்புச்சொல். அல்கு என்னும் பகுதிக்கு - சுருங்கு என்று பொருள்; இது, பகற்பொழுது சுருங்குதற்கு இங்கு ஆயிற்று. அகன்று அகன்று - மீதூதிபற்றிய அடுக்கு. (சு)

கசுஎ. மன்னர் திருவு மகளி ரெழினலமுந்
துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா—துன்னிக்
குழைகொண்டு தாழ்ந்த குளிர்மர மெல்லா
முழைதங்கட் சென்றார்க் கொருங்கு.

(இ - ள்.) மன்னர் திருவும் - அரசர்களது செல்வத்தையும், மகளிர் எழில் நலமும் - பெண்களது வளர்ச்சியோடுகூடிய அழகையும், துன்னியார் - (அவரை இடைவிடாது) சேர்ந்தவர்கள், துய்ப்பர் - அனுபவிப்பார்கள்; தகல் வேண்டா - (அவற்றிற்கு இன்னார்) தகுதியுடையவ ரென்பது வேண்டுவதில்லை; (எதுபோலவெனில்),—குழை கொண்டு தாழ்ந்த - தளிர்களை (த்தம்மிடத்தே) கொண்டு தாழ்ந்துள்ள, குளிர் மரம் - குளிர்ந்த மரங்கள், தங்கண் துன்னி சென்றார்க்கு எல்லாம் - தம்மிடத்து நெருங்கி வந்தவர்களுக்கெல்லாம், ஒருங்கு - வேறுபாடில்லாமல் ஒருதன்மையாக, உழை - இடமாம்; (எ - று.)

"பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம், நயனுடை யான்கட் படின்" (திருக்குறள்) என்றவாறு எல்லார்க்கும் எளிதில் தவறாமற் பயன்

கொடுத்து உதவுகின்ற அரசர்களது சிறப்பு இதனாற் கூறப்பட்டது; படவே, ஆற்றலாற் பெரியராய அவர்களைப் பிழையாமற் பலரும் பயன்பெற வேண்டுமென்பது கருத்து.

இதில் 'மன்னர்திரு,' 'மகளிரெழினலம்' என்னும் இரண்டு பொருள்களையும், 'துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா' என்னும் பொதுவாகிய ஒருதருமத்தில் முடித்ததனால், ஒப்புமைக்கூட்டவணி; வடநூலார் துல்ய யோகிதாலங்கார மென்பர். பின்னிரண்டடி - எடுத்துக்காட்டுவமையணி; இவ்விரண்டும் சேர்ந்துவந்ததனால், சேர்வையணி; வடநூலார் 'ஸங்கரம்' என்பர்.

மகளிர் - பொதுமகளிர் எனக் கொள்ளல், தகுதி. தாழ்ந்தோர் உயர்ந்தோர் என்னும் வரம்பு இன்றி வந்தவரையெல்லாந் தம்மிடஞ்சேர்க்கின்ற அறிவில்லாதமரங்கள்போலவும் வேசையர்போலவும் அரசர் பெரியாரைச் சிறியாரோடு வாசியறச் சேர்த்தலும் பெரியாரைப்பிழைத்தலாம் என்று இப்பாட்டுக்குக் கருத்துக்கூறுவாரு முளர்.

இச்செய்யுளை "ஆஸந்நமேவந்ருபதிர்பஜதேமநுஷ்யம் வித்யாவிஹீநமகுலீநமஸங்கதம்வா - ப்ராயேணபூமிபதய:ப்ரமதாலதாஶ்ச யத்பார்ஶ்வதோ பவதிதத்பரிவேஷ்டயந்தி" என்னும் வடநூல் மேற்கோளோடு ஒப்பிட்டுக் காண்க. (எ)

சகூஅ. தெரியத் தெரியுந் தெரிவிலார் கண்ணும்
பிரியப் பெரும்படர்நோய் செய்யும்—பெரிய
வுலவா விருங்கழிச் சேர்ப்பயார் மாட்டுங்
கலவாமை கோடி யுறும்.

(இ - ள்.) பெரிய—, உலவா - நீர்வற்றாத, இருங் கழி - மிக்க கழியையுடைய, சேர்ப்ப - கடல்துறையையுடையவனே! தெரிய தெரியும் தெரிவு இலார்கண்ணும் - விளங்க ஆராயும் ஆராய்ச்சி யில்லாதவரிடத்தும், பிரிய - (ஒருவன் கூடிப்) பிரிய, (அப்பிரிவு அவனுக்கு), பெரு படர் நோய் செய்யும் - மிக்க நினைவிற்கு ஏதுவான துன்பத்தைச் செய்யும்; (ஆதலால்), யார் மாட்டும் கலவாமை - எவரிடத்தும் சிநேகஞ்செய்யாமை, கோடி உறும் - (சிநேகஞ்செய்துபிரிதலினும்) பலமடங்கு நல்லது; (எ - று.)

அறிவிலாரிடத்துக் கூடிப் பிரியினும் பெருந்துக்கமுண்டா மாதலால், அறிவுடைய பெரியோரைக் கூடிப்பிரிதலா லுண்டாகுந் துக்கத்துக்கு ஒரு வரையறை யில்லை; ஆதலால், சிநேகஞ்செய்து பிரிதலினும் சிநேகஞ்செய்யாமை நல்லது என்பதாம். சிநேகித்தற்குமுன்பே செவ்வையாக ஆராய்ந்து ஒருவரோடு கூடவேண்டும்; கூடினபின்பு பிரிதலாகாது என்பது கருத்து. "கூடிப் பிரியேல்" என்ற ஔவையார் அமுதமொழி உணரத்தக்கது.

இதனால், பெரியாரைக்கூடிப்பிரிதல் பிழையாமெனக் குறிப்பித்தவாறும்.

படர் - பிரிவாற்றாமையாலுண்டாகுந் துன்பத்தை எப்பொழுதும் நினைத்தல்: சிந்தை; இப்பொருளை, (திருக்குறள்) 'படர்மெலிந்திரங்கல்,'

'தனிப்படர்மிகுதி' என்ற இடங்களிற் காண்க : "படரே யுள்ளல் செலவு மாகும்" என்ற தொல்காப்பியத்தால், இது ஓர் உரிச்சொல்லா மென அறிக. உம்மைஇரண்டனுள், முன்னது - இழிவுசிறப்பு. பின்னது - முற்று. கோடி - வடசொல் : நூறுலட்சம் ; மிகப்பலவான எண்ணிற்கு ஒன்று எடுத்துக்காட்டியது.

இச்செய்யுளின் முதலடியோடு மேல் உசஎ - ஆஞ்செய்யுளின் மூன்று மடியை ஒப்பிடுக. (அ)

கசகூ. கல்லாது போகிய நாளும் பெரியவர்கட்
செல்லாது வைகிய வைகலு—மொல்வ
கொடாஅது தொழிந்த பகலு முரைப்பிற்
படாஅவாம் பண்புடையார் கண்.

(இ - ள்.) கல்லாது - (படித்தற்கு உரிய நூல்களைப்) படியாமல், போகிய - கழிந்த, நாளும் - தினமும்,—பெரியவர்கண் - பெரியோர்களிடத்து, செல்லாது - (அந்நூற்பொருள்களை அறியும்பொருட்டுப்) போகாமல், வைகிய - கழிந்த, வைகலும் - தினமும்,—ஒல்வ - (தம்மாற்கொடுக்கக்) கூடிய பொருள்களை, கொடாது - தானஞ்செய்யாமல், ஒழிந்த - கழிந்த, பகலும் - தினமும்,—உரைப்பின் - சொல்லுமிடத்து,—பண்பு உடையார்கண்- நற்குண நற்செய்கையுடையாரிடத்து, படா ஆம்-உண்டாகாவாம்;(எ - று.)

இதனால், பெரியாரது நற்குணநற்செய்கைகள் கூறப்பட்டன. இதனால், கல்லாமையும் பெரியோரிடத்துச்செல்லாமையும் ஈயாமையும் நீக்குணங்க ளென்பது பெறப்படும்.

நாள், வைகல், பகல் என ஒருபொருளையேகுறிக்கின்ற பலசொற்கள் அடுத்துவந்ததனால், பொருட்பின்வருநிலையணி. கல்லாதுபோகிய நாள், பெரியவர்கண்செல்லாதுவைகிய வைகல்,ஒல்வகொடாதுஒழிந்த பகல் என்ற மூன்றுக்கும் இயையும்படி இறுதியில் 'பண்புடையார்கண்படாவாம்' என்ற வினையை வைத்தது, கடைநிலைத்தொழில்தீவகவணி. (கூ)

கஎ0. பெரியார் பெருமை சிறுதகைமை யொன்றிற்
குரியா ருரிமை யடக்கந்—தெரியுங்காற்
செல்வ முடையாருஞ் செல்வரே தற்சேர்ந்தா
ரல்லல் களைப வெனின்.

(இ - ள்.) தெரியுங்கால் - ஆராயுமிடத்து, பெரியார் பெருமை - பெரியோர்களது பெருமைக்குணமாவது, சிறுதகைமை - (பெருமைபாராட்டாமல்) வணங்கியிருத்தலாம்; ஒன்றிற்கு உரியார் உரிமை - (கல்வி முதலியவற்றுள் யாதாயினும்) ஒன்றற்கு உரிமையுடையவர்களுக்கு உரிய குணமாவது, அடக்கம்-(மனமொழிமெய்கள்) அடங்கியிருத்தலாம்; செல்வம்உடையாரும் - தனவான்களும், தன் சேர்ந்தார் அல்லல் களைப எனின் - தம்மை அடுத்தவர்களது துன்பங்களை நீக்குவார்களாயின், செல்வரே-செல்வமுடையோரேயாவர்; (எ - று.)

இதனால், பெரியோர்களது வணக்கமும் அடக்கமும் பிறர்க்கு உதவி செய்தலும் கூறப்பட்டன.

(நீதிநெறிவிளக்கம்) "கல்வியுடைமை பொருளுடைமையென்றிரண்டு, செல்வமுஞ் செல்வ மெனப்படு - மில்லார், குறையிரந்து தம்முன்னர் நிற்ப போல் தாமுந், தலைவணங்கித் தாழப் பெறின்," (திருக்குறள்) "தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு, வேளாண்மை செய்தற் பொருட்டு," "நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயுநீர, செய்யா தமைகலா வாறு" என்பவற்றை இங்கே அறிக.

சிறுதகைமை - சிறுமையாகிய தகைமை யென விரியும். செல்வமுடையார் என்ற பன்மைக்கு ஏற்ப 'தஞ் சேர்ந்தார்' என்னாமல் 'தற்சேர்ந்தார்' என்றது, ஒருமைப்பன்மைமயக்கம்; "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்," "அற்றுத்தற் சேர்ந்தார்க் கசைவிடத் தூற்றுவர்" என்றஇடங் களிற் போல. (௫௦)

---

## ௧அ - ஆம் அதிகாரம்.—நல்லினஞ்சேர்தல்.

அஃதாவது - தாம் நன்னெறியில் ஒழுகுதலேயன்றித் தம்மைச்சேர்ந் தவர்களையுந் தீநெறியினின்று விலக்கி நல்நெறியிற் செலுத்தவல்ல பெரியோர்களது சேர்க்கை. பெரியோர்பக்கற் பிழையாமலொழுகுதலேயன்றி அவரைப்பிரியாமல் நட்புக்கொள்ளவும் வேண்டும் என உணர்த்துகின்றமை யால், இது பெரியாரைப்பிழையாமையின்பின் வைக்கப்பட்டது. நல்ல இனத்தைச் சேர்தல் என விரியும்.

௧௭௧. அறியாப் பருவத் தடங்காரோ டொன்றி
நெறியல்ல செய்தொழுகி யவ்வு—நெறியறிந்த
நற்சார்வு சாரக் கெடுமே வெயின்முறுகப்
புற்பனிப் பற்றுவிட் டாங்கு

(இ - ள்.) அறியா பருவத்து - அறிவுடையராகாதிருந்த இளம்பிராயத்திலே, அடங்காரோடு ஒன்றி - அடக்கமில்லாத அயோக்கியர்களோடு சேர்ந்து, நெறி அல்ல செய்து ஒழுகியவும் - சன்மார்க்கமல்லாத பாவகாரியங்களைச் செய்து நடந்த குற்றங்களும், நெறி அறிந்த நல் சார்வு சார - நல் வழியைஉணர்ந்த நல்லபெரியோர்களைச் சேர்தலால், புல் பனி வெயில்முறுக பற்று விட்டு ஆங்கு - புல்லைச்சேர்ந்திருந்த பனித்துளி வெயில்மிகுதலால் (அதனைப்)பற்றுதலை விட்டாற்போல, கெடும் - அழியும்; (எ - று.)

இதனால், நல்லினஞ்சேர்தலின்பயன் கூறப்பட்டது. உவமையணி.

அல்ல, ஒழுகிய - பெயர். முன்பின்னாக மாற்றி, செய்து ஒழுகியவை யாகிய நெறியல்லவையும் என்றும் உரைக்கலாம ஒழுகியவவ்வும், வகரமெய்விரித்தல்விகாரம். நெறி - சாஸ்திரஏற்பாடு. சார்வு - சாரத்தக்கவர்க்குத் தொழிலாகுபெயர். சார-காரணப்பொருளதாதலால் இறந்தகாலங்காட்டிய செயவென்னும் வினையெச்சம். விட்டால் என்பது - விட்டு எனத் திரிந்து, ஆங்கு என்னும் உவமையிடைச்சொலலோடு சேர்ந்தது. (௧)

கஎஉ. அறிமி னறநெறி யஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர்கடுஞ்சொற் போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மையெஞ் ஞான்றும்
பெறுமின் பெரியார்வாய்ச் சொல்.

(இ - ள்.) எஞ் ஞான்றும் - எப்பொழுதும், அறம் நெறி - தருமமார்க்கத்தை, அறிமின் - அறியுங்கள்; கூற்றம் - யமனுக்கு, அஞ்சுமின் - பயப்படுங்கள்; பிறர் கடு சொல் - அயலார்சொல்லும் வன்சொற்களை, பொறுமின் - பொறுத்துக்கொள்ளுங்கள்; வஞ்சம் - வஞ்சனையாகிய குணத்தை, போற்றுமின் - (உம்மிடம் வாராதபடி தடுத்துப்) பாதுகாத்துக்கொள்ளுங்கள்; வினை தீயார் கேண்மை - தீச்செயல்களையுடையவரது சிநேகத்தை, வெறுமின் - வெறுத்துவிடுங்கள்; பெரியார் வாய் சொல் - பெரியோரது வார்த்தையை, பெறுமின் - கேட்கப்பெற்று அங்ஙனமே ஒழுகுங்கள்; (எ - று.)

'அறிமின்' முதலிய ஆறும் - ஏவற்பன்மை. 'அஞ்சுமின் கூற்றம்' என்றது - மரணம்வருவது இன்னபோதென்று நிச்சயிக்கப்படாமையால் அதற்கு அஞ்சி விரைந்து அறஞ்செய்யவிரும்புங்கள் என்றவாறு; தீவினைசெய்தல் பற்றி யமனால் விதிக்கப்படுந் தண்டனையினின்று பயந்து நல்வினைசெய்யுங்களென்றுங் கருத்துக்கொள்ளலாம். 'போற்றுமின் வஞ்சம்' என்றவிடத்திலுள்ள போற்றுதலென்பதை "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்" என்ற திருக்குறளில் 'காத்தல்' என்பதுபோலக் கொள்க. இனி, இவ்வாக்கியத்திற்கு-பிறர்செய்யும்வஞ்சனையினின்றும் உம்மை இரட்சித்துக்கொள்ளுமென்றும் பொருள்கொள்ளலாம். வினைதீயார் - தீவினையார் என விகுதி பிரித்துக்கூட்டப்பட்டது; வினையில் தீயவரென்றுமாம். பெரியார்வாய்ச்சொல் - பெரியோர்களது ஆசீர்வாதமுமாம்.

நல்லினஞ்சேர்தற்கு எதிர்மறையாகிய தீயினஞ்சேர்தலை விலக்கவேண்டுமென்பார், அது போல இன்றியமையாத பிறவற்றையும் இனமாக உடனெடுத்துக் கூறினர். (உ)

கஎங. அடைந்தார்ப் பிரிவு மரும்பிணியுங் கேடு
முடங்குடம்பு கொண்டார்க் குறலாற்—றொடங்கிப்
பிறப்பின்னா தென்றுணரும் பேரறிவி னாரை
யுறப்புணர்க வம்மாவென் னெஞ்சு.

(இ - ள்.) தொடங்கி - (நூல்களை) ஆராயத்தொடங்கி, 'அடைந்தார் பிரிவும் - தம்மோடுசேர்ந்த பந்துக்கள் சிநேகிதர் முதலியோரை நீங்குதலும், அரு பிணியும்-(தீர்தற்கு) அருமையான நோய்களும், கேடும் - (மற்றும் பலவகைத்) தீங்குகளும், உடம்பு கொண்டார்க்கு - இவ்வுடம்பைப்பெற்ற மனிதர்களுக்கு, உடங்கு - ஒருசேர, உறலால் - நேர்தலால், பிறப்பு இன்னாது - சன்மம் இனிமையைத்தருவதன்று', என்று—,உணரும் - அறிகின்ற, பேர் அறிவினாரை - சிறந்த புத்தியையுடைய நல்லோர்களை, என் நெஞ்சு - எனது மனம், உற புணர்க - உறுதியாகச் சேரக்கடவது ; (எ - று.)

அம்மா - அசை; இப்படிப்பட்ட நற்கருத்து அருமையாகத் தனக்கு உண்டாகியதைப்பற்றி 'அம்மா' என வியந்ததாகவுங் கொள்ளலாம்.

பிறப்பின் துன்பங்களைக் கண்டு அதனை வெறுத்திருக்கின்ற ஞானியரைச் சேர்தல் நன்மைக்கு ஏதுவா மென்பது கருத்து.

அடைந்தார்ப்பிரிவு- இரண்டாம்வேற்றுமைத்தொகையாதலால், உயர்திணைப்பெயர்முன் வல்லெழுத்துமிக்கது: "இயல்பின் விகாரம்". உடங்கு- 'ஒருங்கு' என்பது போல, ஒருவகைஇடைச்சொல். உறலால் என்னும் மூன்றும்வேற்றுமைக்கு 'இன்னாது' என்பது முடிக்குஞ்சொல். இனி, 'புணர்க' என்பதை முடிக்குஞ் சொல்லாகக் கொண்டு, பிறப்பிற் பல துன்பங்கள் நேர்தலால் (அப்பிறப்பையொழிக்கும்பொருட்டு) என்மனம் அதன் தன்மையை யறிந்தோரைச் சேர்க வென்றும் பொருள்கொள்ளலாம். தொடங்கி உணரும் என்று இயையும். தொடங்கி உறலால் என்று இயைப்பினுமாம். தொடங்கு இப்பிறப்பு என எடுத்து, ஊழ்வினை தொடர்தற்கு இடமான இந்தப்பிறவி யெனவுங் கொள்ளலாம். (ங)

களச. இறப்ப நினையுங்கா லின்னா தெனினும்
பிறப்பினை யாரு முனியார்—பிறப்பினுட்
பண்பாற்று நெஞ்சத் தவர்களோ டெஞ்ஞான்று
நண்பாற்றி நட்கப் பெறின்.

(இ - ள்.) பிறப்பினுள் - தான்பிறந்த மனிதசன்மத்திலே, பண்பு ஆற்றும் நெஞ்சத்தவர்களோடு நண்பு ஆற்றி - நற்குணமுடையவற்றைச் செய்ய வேண்டு மென்னும் மனமுடைய நல்லோர்களுடனே சிநேகத்தைச் செய்து, எஞ் ஞான்றும் - எப்பொழுதும், நட்க பெறின் - (பிரியாமல் ஒருவன் அவர்களோடு) கூடிவாழப் பெற்றால்,—இறப்ப நினையுங்கால் - மிகவும் ஆலோசிக்கு மிடத்து,—இன்னாது எனினும்-(பிறப்புத்) துன்பந்தருவதாயினும், பிறப்பினை - (அவனது) சன்மத்தை, யாரும் - எவரும், முனியார் வெறுக்கமாட்டார்; (எ - று.)

பிணி பசி மூப்புத் துன்பங்களையும் சில்வாழ்நாளையு முடைய மனிதப் பிறப்புக்குச் சிறப்பைத்தரும் பெரும்பயனாவது, நல்லினஞ்சேர்தலே என்பதாம்.

பெறின் என்றது, அங்ஙனம் சிநேகித்தலினது அருமையைக் குறித்தது. நினையுங்கால் இறப்ப இன்னாது என்றும் இயைக்கலாம். (ச)

களரு. ஊரங் கணநீ ருரவுநீர்ச் சேர்ந்தக்காற்
பேரும் பிறிதாகித் தீர்த்தமா—மோருங்
குலமாட்சி யில்லாருங் குன்றுபோ னிற்பர்
நலமாட்சி நல்லாரைச் சார்ந்து.

(இ - ள்.) ஊர் அங்கணம் நீர் - ஊரிலுள்ள சலதாரையினது நீரானது, உரவு நீர் சேர்ந்தக்கால் - சிறப்புப்பொருந்தியதொரு (நதி குளங்களின்) நீரைச் சேர்ந்தால், பேரும் பிறிது ஆகி - (அதற்குப்) பெயரும் வேறாய்,

தீர்த்தம் ஆம்- (அது) புண்ணியதீர்த்தமாய்விடும் ; (அதுபோலவே),—குலம் மாட்சி இல்லாரும் - (தாம் பிறந்த) குலத்தின் பெருமை யில்லாதவர்களும், நலம் மாட்சி நல்லாரை சார்ந்து - நற்குணங்களையுடைய உயர்குடிப்பிறந்தோரை அடைந்து, (அதனால்), குன்று போல் நிற்பர் - மலைபோலப் பெருமையுடையராய் நிற்பர் ; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி. 'ஒரும்' என்பது - அசைநிலை; "அஞ்சுவ தோரு மறனே யொருவனை, வஞ்சிப்ப தோரு மவா" என்ற திருக்குறளிற் போல. இனி, எதிர்காலப்பெயரெச்சமாகக்கொண்டு, (யாவரும்) அறியும் என்றும் பொருளுரைக்கலாம். ஒரும் - ஏவற்பன்மையுமாம்; (நீங்கள்) அறியுங்கள் என்று பொருள். அங்கணம், தீர்த்தம் - வடசொற்கள்.

'குன்றுபோல்' என்ற உவமையால், அளவுசெய்யப்படாத கல்விப்பொருளும், பிறராற் குற்றஞ்சொல்லப்படாத அசைவின்மையும், கல்வி யறிவு ஒழுக்கங்களால் யாவரும் அறிய நிற்றலும், பொருள்வரும்படி இல்லாக்காலத்தும் பிறர்க்கு உபகாரஞ்செய்தற்கு உடன்படுதலும் முதலிய குணங்களையுடைய ராவ ரெனக் கொள்க.

"நல்லமணமுள்ளதொன்றை நண்ணி யிருப்பதற்கு,நல்லமணமுண்டாநயமதுபோல் - நல்ல, குணமுடையோர்தங்களுடன் கூடியிருப் பார்க்குக், குணமதுவேயாஞ்சேர்வுகொண்டு" என்னும் உபதேசரத்தினமாலையோடும், "ஸத்ஸங்காத்பவதிஹி ஸாதுதாகலாநாம்" என்னும் வடநூன் மேற்கோளோடும் இதனை ஒப்பிடுக.

'பேரும்பெரிதாகி' என்றும் பாடம்.　(ரு)

கஎகூ. ஒண்கதிர் வாண்மதியஞ் சேர்தலா லோங்கிய
வங்கண் விசும்பின் முயலுந் தொழப்படூஉங்
குன்றிய சீர்மைய ராயினுஞ் சீர்பெறுவர்
குன்றன்னார் கேண்மை கொளின்.

(இ - ள்.) ஓங்கிய - உயர்ந்த, அம் கண் - அழகிய இடத்தையுடைய, விசும்பின் - ஆகாயத்திலே,—ஒள் - விளக்கமாகிய, கதிர் - கிரணங்களையுடைய, வாள் - பிரகாசமான, மதியம் - சந்திரனை, சேர்தலால் - அடைந்திருத்தலினால்,—முயலும் - முசலும், தொழப்படூஉம் - (யாவராலும்) வணங்கப்படும் ; (அதுபோல),—குன்றிய சீர்மையர் ஆயினும் - குறைந்த சிறப்புள்ளவர்களானாலும், குன்று அன்னார் கேண்மை கொளின் - மலையையொத்த பெரியோர்களது சினேகத்தைக் கொண்டால், சீர் பெறுவர் - (அதனால் தாமும்) சிறப்புப்பெறுவர் ; (எ - று.)

இதுவும் - எடுத்துக்காட்டுவமை. முயலுக்கு அஞ்சலிசெய்தல் தொழுவார்கருத்தி லில்லையாயினும், அவ்வஞ்சலியைச் சந்திரனிடத்தே யிருந்து முயல் தானும் பெறுதல்போல, சீர்மைகுன்றினோர்க்குச் சிறப்புச்செய்தல் செய்பவரதுகருத்திலில்லையாயினும் அச்சிறப்பை நல்லோரினத்திலே யிருந்து தாமும் பெறுவ ரென்பது, கருத்து. "மிக்காரைச்சேர்தல் மிகமாண முன்னினிதே" என்றார், இனியவைநாற்பதிலும். "வ்யபதேசேநமஹதாம்

லித்திஸ்ஸஞ்ஜாயதேபரா - ஸயிநோவ்யபதேஸோகவஸந்திஸஸகாஸ்ஸுகம்" என்பது நோக்கத்தக்கது.

சந்திரனைத் தோன்றுங்காலத்துத் தொழுதல் இயல்பு. சந்திரனிடத்தி லுள்ள களங்கத்தை முயலென்றும், மானென்றும், மறுவென்றும், மலை யென்றும், பூமியின்சாயையென்றும், மரமென்றும் கூறுவது, கவிசமயம்.

'சதுரதந்தனென்னும் அரசயானைக்கு ஒருமுயல் சந்திரமண்டலத்தை க்காட்டி அதனைத் துரத்திவிட்டுத் தன்னினத்தோடு சுகித்திருந்தது' என் னும் பஞ்சதந்திரகதை, இங்கே நினைக்கத்தக்கது.

'ஒள்கதிர்' என்பதில், ளகரம் முன் டகரமாகி, பின்பு ணகரமாக மெலிந்ததெனக் கொள்வர்.

'வான் மதியம்' என்றும் பாடம்.

இச்செய்யுள், இனவேதுகையால் வந்தது. (சு)

கஎஎ. பாலோ டளாயநீர் பாலாகு மல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்றுதாந்—தேரிற்
சிறியார் சிறுமையுந் தோன்றுதா நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து.

(இ - ள்.) பாலோடு அளாய நீர் - பாலுடனே கலந்த நீரானது, பால் ஆகும் அல்லது - அந்தப்பாலாய்த் தோன்றுமே யல்லாமல், நீர் ஆய் நிறம் தெரிந்து தோன்றுது - நீராய்த் தன் நிறம் விளங்கிக் காணப்படாது; (அது போல), தேரின் - ஆராயுமிடத்து, நல்ல பெரியார் பெருமையை சார்ந்து - நற்குணமுடைய பெரியோர்களது மகிமையைச் சேர்தலினால், சிறியார் சிறு மையும் தோன்றுது - அற்பர்களது கீழ்மைக்குணமும் வெளிப்படாது.

இதுவும், எடுத்துக்காட்டுவமையணியே.

"தெருண்ட மேலவர் சிறியவர்ச்சேரினு மவர்தம்,மருண்ட தன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே" எனக் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் கூறி யதும் இக்கருத்துப்பற்றியே.

அளாவிய என்னும் இறந்தகாலப்பெயரெச்சம், அளாய என மருவியது; அளாவு என்னும் முதனிலையில் ஈற்றுயிர்மெய் குறைந்து இறந்தகாலங்காட் டும் யகரஇடைநிலையும் அகரவிகுதியுஞ்சேர்ந்து உண்டானதென்றுஞ் சொ ல்லலாம். 'நிறந்திரிந்து' என்னும் பாடத்துக்கு - வருணம் வேறுபட்டு என்க. 'ஆம்' என்பது - இரண்டுவாக்கியத்திலும் அசை. (எ)

கஎஅ. கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்தபு
லொல்காவே யாகு முழுவ ருழுபடைக்கு
மெல்லியரே யாயினு நற்சார்வு சார்ந்தார்மேற்
செல்லாவாஞ் செற்றார் சினம்.

(இ - ள்.) கொல்லை - (காட்டிலுள்ள) கொல்லைகளிலும், இரு புனத்து - பெரிய வயல்களிலும், குற்றி - மரக்கட்டையை, அடைந்த - அடுத்துள்ள,

புல் - புற்கள், உழவர் உழுபடைக்கு - உழுபவர்களது கலப்பைக்கு, ஒல்காவே ஆகும் - அசையாதனவேயாம்; (அதுபோல), மெல்லியரே ஆயினும்-(இயற்கையில்)வலியில்லாதவர்களே யானாலும், நல் சார்வு சார்ந்தார்மேல் - நல்லினத்தாரைச்சேர்ந்தவர்களின்மேல், செற்றார் சினம்-பகைத்தவர்களது கோபம், செல்லா ஆம் - பயன்படாவாம்; (எ - று.)

இதுவும், திருஷ்டாந்தவணி.

குற்றி பெயர்க்கப்படாமையால், அதையடுத்த புல்லும் பெயர்க்கப் படாது; அதுபோல, பகைவர்சினம் வலியாரிடத்துச் செல்லாமையால் அவரையடுத்த எளியாரிடத்துஞ் செல்லாது என்பது கருத்து. "தக்காரினத்தனாய்த் தானொழுக வல்லானைச், செற்றார் செயக்கிடந்த தில்" என்றார், திருவள்ளுவனாரும்."மெலியோர் வலியவிரவலரை யஞ்சார், வலியோர் தமைத் தாம் மருவின்" என்ற நன்னெறியையுங் காண்க.

குற்றி - குறுமையையுடையதென மரக்கட்டைக்குக் காரணப்பெயர்; குறு என்னும் பண்படி, தன்ஒற்று இரட்டிற்று: இ - பெயர்விகுதி. புல், சினம் என்பவை - பால்பகாஅஃறிணைப்பெயர்களாதலால், பன்மைவினை கொண்டன. ஒல்கா, செல்லா - எதிர்மறைப் பலவின்பால் முற்றுக்கள் ; "ஆவே யெதிர்மறைக் கண்ண தாகும்" (நன்னூல்) என்றதனால்,'ஆ'விகுதி பலவின்பாலோடு எதிர்மறைப்பொருளையுங் காட்டும். படை - கருவி ; உழுபடை - வினைத்தொகைநிலைத்தொடராய், கலப்பைக்குக் காரணப் பெயராயிற்று; வினைத்தொகையாதலின், வலி மிகவில்லை. நற்சார்வு என்றது - தம்பகைவரினும் மிக்க வலியுடையாரை. (அ)

களக. நிலநலத்தா னந்திய நெல்லேபோற் றத்தங்
குலநலத்தா லாகுவர் சான்றோர்—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்குச் சான்றாண்மை
தீயினஞ் சேரக் கெடும்.

(இ - ள்.) நிலம் நலத்தால் - விளைநிலத்தினது நல்லவளத்தால்,நந்திய-வளர்ந்த, நெல்லே போல் - நெற்பயிர் போல, (மனிதர்கள்), தம் தம் குலம் நலத்தால் - தாங்கள்தாங்கள் சேர்கிற கூட்டத்தின் நன்மையால், சான்றோர் ஆகுவர் - மேன்மக்களாவர்; கலம் நலத்தை - மரக்கலத்தினது வலிமையை, தீ வளி - கடுங்காற்று, சென்று - போய், சிதைத்து ஆங்கு - கெடுத்தலால் (அக்கலம் கெடுவது) போல, சான்றாண்மை - (ஒருவரது) மேன்மை, தீ இனம் சேர - தூர்க்குணமுள்ளகூட்டத்தைச்சேர்தலினால்,கெடும் - அழியும்.

உபமாலங்காரம்.

நிலநலத்தால் நந்திய நெற்போல் என்பதற்கு - நெல் நிலநலத்தால் நந்துதல்போல என்று கருத்து. கலம் - பொதுப்பெயர், இங்கே சிறப்பாய்க் கப்பலைக் குறித்தது; அணிகலம், படைக்கலம், உழுகலம், அளவுகலம், உண்கலம் முதலாகப் பலவற்றிற்குப் பொதுவாமாறு காண்க. 'கலநலத்தைத் தீவளி சென்று சிதைத்தாங்கு' என்பதற்கு-கலநலம் தீவளி செல்லுதலாற் சிதைந்தாற்போலஎன்று கருத்து. சான்றாண்மையாவது-(பலகுணங்க

ளாலும்) நிறைந்து (அவற்றை) ஆளுதல்தன்மை; சான்று ஆண்மை எனப் பிரியும்: 'பலகுணங்களாலும்' என்பது சாலுதற்றொழிலாற் பெறப்பட்டதனால், 'அவற்றை' என்பது வருவிக்கப்பட்டது; ஆண்மை - ஆள் என்னும் வினைப்பகுதியின்மேற்பிறந்த பண்புப்பெயர்.

நல்வினஞ்சேர்தலின் சிறப்புக் கூறுவார், தீயினஞ்சேர்தலின் இழிப்பும் உடன்கூறினார். (கூ)

கஅ0. மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த
இனத்தா லிகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
யெறிபுனந் தீப்பட்டக் கால்.

(இ - ள்.) மனத்தால் மறு இலர் ஏனும் - மனத்தின் நிலைமையால் குற்றமில்லாதவர்களாயினும், தாம் சேர்ந்த இனத்தால் - தாங்கள் சேர்ந்த கூட்டத்தின் தீமையால், இகழப்படுவர் - நிந்திக்கப்படுவார், (மனிதர்கள்); (அது எதுபோல எனின்),—எறி புனம் - வெட்டப்பட்ட மரச்செறிவில், தீ பட்டக்கால் - நெருப்புப் பற்றினால், புனத்து - அக்காட்டிலுள்ள, வெறி கமழ் - வாசனைவீசுகின்ற, சந்தனமும் - சந்தனமரமும், வேங்கையும் - வேங்கைமரமும், வேம் - வெந்துபோம்; (எ - று.)

இயற்கையிற் குற்றமிலராயினுஞ் சேர்க்கைக்குற்றத்தாற் கெடுவரென்பது கருத்து.

இதனால், தீயினஞ்சேர்வதனாலாகும் கேடு விளக்கப்பட்டது.

இது, திருஷ்டாந்தவலங்காரம்.

"சந்தனத்தைச் சார்தருவுந் தக்க மணங்கமழுஞ், சந்தனத்தைச் சார் வேய் தழல்பற்ற—வந்தவனந், தானு மச்சந்தனமுந் தன்னினமு மாள்வ தன்றித, தானுங் கெடச் சுடுமே தான்" என்னும் நீதிவெண்பாவை இதனோடு ஒப்பிடுக. "மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா, மின்னானெனப்படுஞ் சொல்", "மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்கு, இனநல மேமாப் புடைத்து" என்றார் திருக்குறளிலும்.

மனத்தா லென்பதற்கு - உருபுமயக்கமாக, மனத்தில் என்றும் பொருள் கொள்ளலாம். ஏகாரம், பிரசித்தியை விளக்கிற்று. (௬0)

## கசூ - ஆம் அதிகாரம்.—பெருமை.

அஃதாவது - எவ்வழியும் மனக்கலக்கமின்றித் தாம் செய்யவேண்டிய வற்றை இயன்றவளவு செய்யும் உறுதிப்பாட்டா லாகிய பெருந்தன்மையை உணர்த்துவது. பெருமை - மகிமை; பண்புப்பெயர். இப்பெருமை நல்வினத்தின் தன்மையாதலால், அதன்பின் வைக்கப்பட்டது; அன்றி, நல்வினஞ்சேர்தலாற் பெருமையுளதா மென்பதுபற்றி, அதன்பின் இது வைக்கப் பட்ட தெனினுமாம்.

கஅக. ஈத லிசையா திளமைசே ணீங்குதலாற்
காத லவரும் கருத்தல்லர்—காதலித்
தாதுநா மென்னு மவாவினைக் கைவிட்டுப்
போவதே போலும் பொருள்.

(இ - ள்.) ஈதல் இசையாது - (பொருளின்மையாற் பிறர்க்கு ஒன்றைக்)கொடுத்தலும் முடியாமல், இளமை சேண் நீங்குதலால் -யௌவனமும் நெடுந்தூரத்தில் நீங்கிவிட்டதனால், காதலவரும் - (நம்மேல் முன்பு) அன்புடைய மகளிரும், கருதது அல்லர் - (இப்பொழுது நம்மை) எண்ணுதலும் இல்லாராயினர்; (ஆதலால்), 'காதலித்து - (அம்மகளிரை)விரும்பி, நாம்—, ஆதும் - வாழக்கடவோம்', என்னும் - என்கிற, அவாவினை - ஆசையை, கைவிட்டு - முழுவதும் நீக்கி, போவதே - (துறவுக்குச்) செல்வதே, பொருள் போலும் - நல்ல காரிய மாகும்; (எ - று.)

ஒருவர்க்கு ஒன்றுகொடுத்துஉபகாரஞ்செய்யக்கூடாமலும் போகங்களை அனுபவிக்கக்கூடாமலும் போனபின்பும் சிற்றின்பத்தில் ஆசைவைத்துத் தடுமாறுவதை விட்டு ஆத்துமானுபவ சுகத்தைப் பெற மனந் துணிவதே பெருமை யென்பது கருத்து.

இச்செய்யுள் ஒருவன் தன்மனத்தைநோக்கி உபதேசித்ததாகச் செய்யப்பட்டதென அறிக.

காதலவரும், உம்மை - உயர்வுசிறப்பு. கருத்து - முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஆதும் - மேலாகக்கடவேம்; தன்மைப்பன்மையெதிர்கால முற்று. போலும் - ஒப்பில்போலி; "ஒப்பில்போலியு மப்பொருட் டாகும்" என்றதொல்காப்பியத்தால், இங்கு உரையசைப்பொருளதாய்நின்றது. (க)

கஅஉ. இற்சார்வி னேமாந்தே மீங்கமைந்தே மென்றெண்ணிப்
பொச்சாந் தொழுகுவர் பேதையா—ரச்சார்வு
நின்றன போன்று நிலையா வெனவுணர்ந்தா
ரென்றும் பரிவ திலர்.

(இ - ள்.) பேதையார் - அறிவில்லாதவர்கள், 'இல் சார்வின் - இல்வாழ்க்கையை அடைந்ததனால், ஏமாந்தேம் - இன்பமடைந்தோம்: ஈங்கு - இவ்வுலகத்தில், அமைந்தேம் - எல்லாவற்றாலும் நிறைந்தோம்,' என்று எண்ணி - என்று நினைத்து, பொச்சாந்து ஒழுகுவர் - (பின்வருந்துன்பத்தை)

மறந்து நடப்பார்கள்; 'அ சார்வு-(இல்வாழ்க்கையாகிய)அப்பற்றுக்கள், நின்றன போன்று - நிலைபெற்றனபோற் காணப்பட்டு,நிலையா - நிலைத்திராவாய் அழிந்துபோய்விடும்,'என உணர்ந்தார் - என்று அறிந்த பெரியோர்கள், என்றும் - எப்பொழுதும், பரிவது இலர் - வருந்துதலில்லாதவராவர்; (எ - று.)

எல்லாவற்றின்தன்மைகளையும் உள்ளபடியறிந்த தத்துவஞானிகள்அழியாதவீட்டுலகத்தில் நிரதிசயவின்பம்பெற்று வாழ்வர் என்று கருத்து.

ஏமாந்தேம், ஏமா-பகுதி; அலமா, இறுமா, அல்லா, சோகா என்பன போல ஒருசொல்:இனி,ஏமம் யா அல்லது ஏமம் ஆ என்னும் இரண்டுசொல் ஒருசொல்லின் தன்மைப்பட்டு ஏமா என்று நின்றதெனவுங் கொள்ளலாம். பொச்சாந்து, பொச்சா - பகுதி. ஈங்கு - இங்கு என்னும் சுட்டின் நீட்சி. பரிவது இலர்-(அந்த இல்வாழ்க்கையை) விரும்புதலிலராவர் என்னலுமாம்.

கஅங. மறுமைக்கு வித்து மயலின்றிச் செய்து
சிறுமைப் படாதேநீர் வாழ்மின்—னறிஞராய்
நின்றுழி நின்றே நிறம்வேறாங் காரண
மின்றிப் பலவு முள.

(இ - ள்.) நீர் - நீங்கள், அறிஞர் ஆய் - அறிவுடையவர்களாய், மறுமைக்கு வித்து - மறுமையின்பத்துக்குக் காரணமான நற்காரியத்தை,மயல் இன்றி - மயங்குதலில்லாமல்,செய்து - துணிந்துசெய்து, சிறுமை படாதே- சிறியோராது தன்மையிற் பொருந்தாமல், வாழ்மின் - வாழுங்கள்; (ஏனெனில்),—நின்றுழி நின்றே நிறம் வேறு ஆம் - இருந்தவிடத்திலிருந்துகொண்டே நிறம் வேறுபட்டுப்போம்; காரணம் இன்றி பலவும் உள - ஒருகாரணமுந்தெரியாமற் பலவேறுபாடுகளும் உண்டாம்; (எ - று.)

மறுமை - இறந்தபின்பு அடையுங் கதி. 'நின்றுழிநின்றேநிறம்வேறாம்' என்றது - உடம்பு நின்ற நிலையில் நிற்கையிலேயே விரைவில் இளமைமுதலிய அதன் தன்மைகள் வேறுபடு மென்றபடி. 'காரணமின்றிப்பலவுமுள' என்றது - நமக்குக் காரணமின்னதென்று தெரியாமல் வருத்தந்தருவதற்குரிய பல இடையூறுகள் நேர்வன என்றவாறு.

இதனால், பெருமைப்படுதற்கு உபாயங் கூறப்பட்டது. (ங)

கஅச. உறைப்பருங் காலத்து மூற்றுநீர்க் கேணி
யிறைத்துணினு மூராற்று மென்பர்—கொடைக்கடனுஞ்
சாஅயக்கண்ணும் பெரியார்போன் மற்றையா
ராஅயக் கண்ணு மரிது.

(இ - ள்.) உறைப்பு அரு காலத்தும் - மழைபெய்தல் அருமையான காலத்திலும், ஊற்று நீர் கேணி - ஊற்றினால் நீரையுடைய குளம்,இறைத்து உணினும் - இறைத்துக்குடித்தாலும், ஊர் ஆற்றும் - ஊரிலுள்ளாரைக் காப்பாற்றும், என்பர் - என்று சொல்லுவார்கள்; கொடை கடனும் - தானஞ் செய்தலாகிய கடமையும், சாயக்கண்ணும் - (வறுமையால்) தளர்ந்த விடத்தும், பெரியார் போல்-பெரியவர்கள்போல, மற்றையார் - சிறியோர்,ஆயக்கண்ணும் - செல்வமுடையோரானவிடத்தும், அரிது - உண்டாதலில்லை.

சுரப்புள்ளதொருகுளம் மழையில்லாதபொழுதும் ஊற்றுநீரால் பலரைக் காப்பாற்றுவதுபோல, பெருமையுடையார், செல்வந் தங்களுக்குஇல்லாதபொழுதும் யாதோ ஒருவகையாற் பிறர்க்கு உதவிசெய்வர்; சிறியாரோ செல்வமிகுதியிலும் அப்படிச்செய்யார் என்பது கருத்து.

முன்னிரண்டடியிற் கூறிய உபமானம் பெரியோர்களது தன்மையாகிய உபமேயத்தைக் குறித்ததனால், பிறிதுமொழித லென்னும் அணி.

ஊற்று - ஊறுவது. குளத்தைக் கேணி யென்பது, அருவாநாட்டார்வழங்குந் திசைச்சொல். ஊர் - ஊரிலுள்ளார்க்கு இடவாகுபெயர்; 'ஊருணி,' 'ஊரடங்கிற்று' என்றவற்றிற் போல. கடனும், உம்மை - அசை; உயர்வு சிறப்புஎன்றலும் ஒன்று. சாயக்கண், ஆயக்கண்-'கண்' விகுதி பெற்ற எதிர்கால வினையெச்சங்கள்: இரண்டிலும், அளபெடை - செய்யுளோசை நிறைத்தற்பொருட்டு வந்தது. மற்றையார் - மற்றையென்னும் இடைச்சொல், வேறுஎன்னும் பொருளது. அரிது என்பதற்குக் கடனும் என்பது எழுவாய்.

'சாஅஅயக்கண்', 'ஆஅஅயக்கண்' என ஈரளபெடையான பாடத்துக்கு ஒரு அளபெடை இன்னிசைநிறைக்கவந்ததெனக் கொள்க.

பின்னிரண்டடிகளில் அளபெடை வந்தது; அளபுத்தொடை. (ச)

கரு. உறுபுன றந்துல கூட்டி யறுமிடத்துங்
கல்லூற் றுழியூறு மாறேபோற்—செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணுஞ் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை.

(இ - ள்.) உறு புனல் தந்து - (செழித்தகாலத்தில்) மிகுந்த நீரைக் கொடுத்து, உலகு ஊட்டி - உலகத்தாரை உண்ணச்செய்து, அறும் இடத்தும் - நீர் அற்றகாலத்திலும், கல் ஊற்று உழி - தோண்டப்படுகிற ஊற்றுக்குழியிலே, ஊறும் - நீர்சுரக்கின்ற, ஆறே போல் - நதியே போல,—(பெரியோர்கள்), செல்வம் - (தமது) பொருளை, பலர்க்கு ஆற்றி - (செழித்துள்ள காலத்தில்) பலபேர்க்குந் தானஞ்செய்து, கெட்டு உலந்தக்கண்ணும் - அழிந்து வறந்தவிடத்தும், சிலர்க்கு - சிலர்க்காயினும், ஆற்றி - தானஞ்செய்து, செயற்பாலவை - செய்யத்தக்க உபகாரங்களை, செய்வர் - செய்வார்கள்;(எ-று.)

ஆறானது வெள்ளமுள்ள காலத்துத் தன்னை எவருந் தோண்டுதல் வேண்டாமலே தானே எங்குஞ்சென்று நீரை உதவி நீர்வறண்டகாலத்திலுந் தோண்டின மாத்திரத்தில் நீரை உதவுதல்போல, குடிப்பிறந்தார் செல்வமுள்ளகாலத்தே எவருந் தம்மைச்சேர்ந்து யாசிக்கவேண்டாமலே தாமே எங்குஞ்சென்று உதவிகள் செய்து செல்வமில்லாதகாலத்திலுந் தம்மை அடைந்தமாத்திரத்தில் உதவிசெய்வர் என்பதாம். "எற்றொன்று மில்லாவிடத்துங் குடிப்பிறந்தார், அற்றுத்தற் சேர்ந்தார்க் கசைவிடத் தூற்றுவர், அற்றக் கடைத்து மகல்யா றகழ்ந்தக்கால், தெற்றெனத் தெண்ணீர் படும்" என இந்நூற் பதினேழாம்அதிகாரத்தில்வந்ததையுங்காண்க. உவமையணி.

"ஆற்றுப் பெருக்கற் றடிசுடு மந்நாளு மவ்வா, றூற்றுப்பெருக்கா லுல கூட்டும்-ஏற்றவர்க்கு, நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும், இல்லை யென மாட்டா ரிசைந்து" என்ற நல்வழிச்செய்யுளோடு இதனை ஒப்பிடுக. "இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார், கடனறி காட்சியவர்" என்னுந் திருக்குறளிலும் இக்கருத்தே விளங்குகின்றது.

கல்லூற்று - வினைத்தொகை.

இச்செய்யுளின் ஈற்றடி போலவே கசஎ, கடுஙு - ஆஞ் செய்யுள்களில் ஈற்றடியு மிருத்தல் காண்க. (டு)

கஎகூ பெருவரை நாட பெரியார்கட் டீமை
கருநரைமேற் சூடேபோற் றோன்றுங்—கருநரையைக்
கொன்றன்ன வின்னா செயினுஞ் சிறியார்மே
லொன்றானுந் தோன்றாக் கெடும்.

(இ - ள்.) பெரு வரை நாட - பெரிய மலையையுடைய நாட்டை யுடைய பாண்டியராசனே!—பெரியார்கண்-பெரியோரிடத்து உண்டான, தீமை - குற்றமானது, கரு நரை மேல் சூடே போல் - பெரிய வெள்ளையெருதின்மேற் போகட்ட சூட்டின் வடுப்போல, தோன்றும் - நன்கு விளங்கும், கரு நரையை கொன்று அன்ன - பெரிய எருதைக் கொன்றது போன்ற, இன்னா - தீச்செயல்களை, செயினும் - செய்தாராலும், சிறியார்மேல் - கீழ்மக்களிடத்து, ஒன்றானும் - ஒருகுற்றமாயினும், தோன்றா - விளங்கிக் காணாமல், கெடும் - அழியும்; (எ - று.)

இதனால், பெருமையுடையோர் சிறிதுங் குற்றஞ்செய்யாது தம்மைக் காக்கவேண்டு மென்பது பெற்றாம்; "கன்றி முதிர்ந்த கழியப்பன்னாள் செயினும், ஒன்றுஞ் சிறியார்க ணென்னானுந் தோன்றாவாம், ஒன்றாய் விடினு முயர்ந்தார்ப் படுங்குற்றங், குன்றின்மே லிட்ட விளக்கு" (பழமொழி) எனப் பிறர்கூறியதுங் காண்க. உவமையணி. பெரும்பாதகமாகிய பசுக்கொலையைக் குறிப்பித்தற்கு, 'நரையைக்கொன்றன்ன' என்றார்.

நரை - வெண்மை; வெள்ளெருதுக்குப் பண்பாகுபெயர். சூடு - சுடப் படுவது; முதனிலை திரிந்தது. 'கருநரைமேல் சூடேபோல்' என்பதற்கு - கரியஎருதின்மேலுள்ள முசுப்புப்போல என்றும் உரைப்பர். தோன்றா - ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்; இதன்முன் வல்லொற்று மிகுவதே தகுதி 'தோன்றாகெடும்' என ஒற்றுமிகாமற் பாடங்கொண்டு, அஃறிணைப் பன்மை முற்றெச்ச மென்பார்க்கு, ஒன்றானும் என்ற ஒருமையோடு வழுவா மென மறுக்க. (சு)

கஎஎ. இசைந்த சிறுமை யியல்பிலா தார்கட்
பசைந்த துணையும் பரிவா—மசைந்த
நகையேயும் வேண்டாத நல்லறிவி னார்கட்
பகையேயும் பாடு பெறும்.

(இ - ள்.) சிறுமை - கீழ்மைக்குணம், இசைந்த - பொருந்திய, இயல்பு இலாதார்கண் - நற்குண மில்லாதவரிடத்து, பசைந்த துணையும் - சினே

கித்தவளவும், பரிவு ஆம் - துன்பமேயாம்; அசைந்த - நிலைதடுமாறிய தீச்செயல்களை, நகையேயும் - விளையாட்டிலேயும், வேண்டாத - விரும்பாத, **நல் அறிவினோர்கண் - நல்ல அறிவையுடைய பெரியோரிடத்து, பகையேயும்- விரோதமும், பாடு பெறும் - பெருமையடையும்**; (எ - று.)

ஒருவன்பெரியோரிடத்துப்பகைமைகொண்டால்,பெரியோர்கள்மிக்க பொறுமையை யுடையவராதலால், அதனால் அவனுக்குத் தீங்கு வாராது; வந்தாலும் ஒருவாற்றால் உய்தல்கூடும். தீயோர்சேர்க்கையால் உண்டாகுந் தீமைகளுக்கு ஒருவாற்றாலும் தப்பமுடியாது என்பது கருத்து. "பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையார், ஏதின்மை கோடி யுறும்" என்றார் திருக்குறளிலும்.

சிறுமை - நற்குணங்கள்யாவு மின்மை. அசைந்த - பெயர். இதற்கு - பிறர் நகைக்குதற்குக் காரணமான கொடுந்தொழில்கள் என்றும் உரைப்பர். நகை - சிரித்தல்; நகு - பகுதி, ஐ - விகுதி: நகை - பகுதியாயின், முதனிலைத்தொழிற்பெயர்; பரிகாச மென்றபடி. இனி, நகையேயும் என்பதற்கு - களிக்குங்காலத்தும் என்றும் உரைக்கலாம்.

பரிகாசத்திலுந் தகாததைக் கொள்ளலாகாதென்பதை "பரிஹாஸே ப்யநௌசித்யம்" என்னும் வடநூல்மேற்கோளாலும் அறிக. (எ)

கஅஅ. மெல்லிய நல்லாருண் மென்மை யதுவிறந்
தொன்னாருட் கூற்றுட்கு முட்குடைமை யெல்லாஞ்
சலவருட் சாலச் சலமே நலவரு
ணன்மை வரம்பாய் விடல்.

(இ - ள்.) மெல்லிய - வலிமையில்லாத, நல்லாருள் - பகையல்லாதவரிடத்து, மென்மை-(தானும்) மிருதுவாயிருத்தற்கும்,—ஒன்னாருள்-(வலிய) பகைவர்களிடத்து, அது இறந்து - அம்மென்மைத்தன்மையை விட்டு,கூற்று உட்கும் உட்கு உடைமை - யமனும் அஞ்சும்படியான பயங்கரத்தன்மையை உடைத்தாயிருத்தற்கும்,—எல்லாம் சலவருள் - எல்லாக்காரியங்களிலும் பொய்யுடையோரிடத்து, சால சலமே - மிகவும் பொய்பேசுதற்கும்,—நலவருள் - நற்குணமுடையோரிடத்து, நன்மை - நற்குணமுடைமைக்கும்,—வரம்பு ஆய்விடல்-(ஒருவன்) எல்லையாயிருக்கக்கடவன்; (எ-று.)

அயோக்கியரிடத்து அயோக்கியமாயும் யோக்கியரிடத்து யோக்கியமாயும் நடப்பது பெருமை யென்பது கருத்து.

'மெல்லிய' என்றதனால் ஒன்னார் வலியவரென்றும், 'ஒன்னார்'என்றதனால் நல்லார் பகையில்லாதவரென்றுங் கொள்ளப்பட்டது. ஒன்னார் ஒன்றார் என்பதன் மரூஉ; தன்னோடுசேராதவர் என்று பொருள்: எதிர்மறைப்பலர்பால்வினையாலணையும்பெயர். சலமுடையோர், சலவர்; நலமுடையோர், நலவர். சலம் - தணியாக்கோபமுமாம். சால - உரிச்சொல்லடியாப் பிறந்த செயவெனெச்சம்.

மென்மை, உடைமை, சலம் என்றவிடங்களில் 'வேண்டுக' என்றாவது, 'செலுத்துக'என்றாவது வினைவருவித்துத்தனித்தனிவாக்கியமாகமுடிப்பாரு

முளர். ஆய்விடல் - 'அல்' விகுதிபெற்றுவந்த உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று; "மக்கட் பதடி யெனல்" என்ற திருக்குறளில் 'எனல்' என்பது போல: இதில், விடு - துணிவுப்பொருளுணர்த்திற்று. இனி, வரம்பாய் - எல்லையாகி, விடல் - செலுத்துக என்றும் உரைக்கலாம்.

இச்செய்யுளில் 'வரம்பாய்விடல்' என்பது, கடைநிலைத்தொழிற்றீவகம்.

கஅ௯. கடுக்கி யொருவன் கடுங்குறளை பேசி
மயக்கி விடினு மனப்பிரிப்பொன் றின்றித்
துளக்க மிலாதவர் தூய மனத்தார்
விளக்கினு ளொண்சுடரே போன்று.

(இ - ள்.) ஒருவன் - ஒருத்தன், கடுக்கி - (முகத்தைக்) கடுமையாக வைத்துக்கொண்டு, கடு குறளை பேசி - (பிறர்மேல்) கொடிய கோட்களைச் சொல்லி, மயக்கிவிடினும் - (தமது அறிவு) மயங்கும்படி செய்தாலும், மனம் பிரிப்பு ஒன்று இன்றி-மனத்தில் வேறுபடுதல் சிறிதும் இல்லாமல், துளக்கம் இலாதவர் - கலக்கமில்லாதவர்கள் தாமே, விளக்கினுள் ஒள் சுடரே போன்று - தீபத்தினிடத்துள்ள பிரகாசமான சுவாலையையே யொத்து, தூய மனத்தார் - பரிசுத்தமான மனத்தை யுடையவ ராவர்; (எ - று.)

ஒருவனிடத்துத் தாமாகக் குற்றங்கண்டன்றிப் பிறர்சொல்லுங் கோட் சொற்களைக் கேட்டு அவற்றைக்கொண்டு துரபிப்பிராயப்படுவேது பெருமையன் றென்பது கருத்து.

குறளை - பழிமொழி; புறங்கூறல். ஒன்று என்பது, இங்கே, சிறிதென்பதைக் காட்டி நின்றது. சுடரே, ஏ - உயர்வுசிறப்பு. 'இன்றி' என்னுங் குறிப்பு வினையெச்சம், 'இலாதவர்' என்னுங் குறிப்பு வினையாலணையும்பெயரைக் கொண்டது. (௯)

கக௦. முற்றுத்துந் துத்தினை நாளு மறஞ்செய்து
பிற்றுத்துத் துத்துவர் சான்றவ—ரத்துத்து
முக்குற்ற நீக்கி முடியு மளவெல்லாந்
துக்கத்து ணீக்கி விடும்.

(இ - ள்.) சான்றவர் - பெரியோர்கள், முன் துத்தும் துத்தினை-முன்னே உண்ணுதற்கு உரிய உணவை, நாளும் - தினந்தோறும், அறம் செய்து- (பிறர்க்குத் தானஞ்செய்தலாகிய) தருமமாகச் செய்துவிட்டு, பின் துத்து- பின்பு உண்ணுதற்கு உரிய உணவை, துத்துவர் - (பின்பு தாம்) உண்பர்; அ துத்து-அவ்வனம்பிறர்க்குக்கொடுத்ததும் தானுண்டதுமாகிய உணவு,— (அவர்களது), மு குற்றம் நீக்கி - (காமம் வெகுளி மயக்கம் என்னும்)மூன்று குற்றங்களையும் போக்கி, முடியும் அளவு எல்லாம் - (அவர்கள்) வீடுபெறு மளவும், துக்கத்துள் நீக்கிவிடும்-(அவர்களைப்) பலதுன்பங்களினின்றும் நீங்கச்செய்யும்; (எ - று.)

தமக்கு அருமையாகக் கிடைத்த உணவு இரண்டுகவளமேயானாலும் அவற்றுள் முதலிலெடுக்குங் கவளத்தை விருந்தினர் சுற்றத்தார் முதலியோர்

களுள் நேர்பவர்க்குக் கொடுத்து மற்றொரு கவளத்தையே தாம் உண்பது, நெடுங்காலமட்டுந் துன்பங்களை நீக்கிஇன்பங்களைத்தரும்படியான பெருமைக் குணமாம் என்பது கருத்து. இங்ஙனஞ் செய்வது, ஐம்பெருவேள்விகளுள் ஒன்றாகிய மநுஷ்யயஜ்ஞம [விருந்தோம்பல்]எனப்படும்; (மற்றவை—பிரம யஜ்ஞம் [வேதமோதுதல்], தேவயஜ்ஞம் [ஓமம்வளர்த்தல்], பித்ருயஜ்ஞம் [தர்ப்பணஞ்செய்தல்], பூதயஜ்ஞம் [பலியீதல்] என்பனவாம்.)

துத்தும் - எதிர்காலப்பெயரெச்சம்; து - பகுதி, த்-சந்தி, து - சாரியை, உம் - விகுதி. துத்து - வினையாலணையும்பெயர்; உண்ணத்தக்க தென்பது பொருள்: து - பகுதி, து - ஒன்றன்பால் விகுதி; து - தொழிற்பெயர் விகுதி யெனக்கொண்டு, தொழிலாகுபெய ரென்றலுமாம். இனி, 'துற்றும்,' 'துற்றினை,' 'துற்று', 'துற்றுவர்,' 'துற்று' எனப்பாடங்கொள்வாரு முளர்; அப்பாடத்திற்கு, துற்று - பகுதி யென்க. முடியுமளவு - இறக்குமளவு என்றுமாம். எல்லாம் என்பதை 'அத்துத்து' என்பதனோடு கூட்டலுமாம். துக்கம் - வடசொல்.

'அறுதியாகிய அவிச்சையும், அதுபற்றி யான்என மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கு இதுவேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருளின்கண் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன்மறுதலையின்கண் செல்லுங் கோபமும்'என வடநூலார் குற்றம் ஐந்தென்றார்; இவை - அவித்யா, அஸ்மிதா, ராகம், அபிநிவேசம், த்வேஷம் என்னும் பஞ்சக்லேச மெனப்படும்: அவற்றுள் அகங்காரம் அவிச்சையிலும், அவாவுதல் ஆசையிலும் அடங்குதலால், தமிழ்நூலார் குற்றம் மூன்றென்பர்; "காமம் வெகுளி மயக்க மிவைமூன்றன், நாமங் கெடக் கெடு நோய்"என்றார் திருவள்ளுவரும். (௧௦)

---

## ௨௦ - ஆம் அதிகாரம்.—தாளாண்மை.

அஃதாவது - இடைவிடாத மெய்ம்முயற்சியை ஆளுந்தன்மை. எல்லா நற்காரியங்களையுங் கைகூடுவிக்கின்ற இக்குணம், பெருமையுடையோர்க்கு இன்றியமையா தாதலின், அதன்பின் வைக்கப்பட்டது. முயற்சியுடையார்க்கே பெருமைசித்திக்குமென்பது அதிகாரமுறைமைக்குக் காரண மெனினுமாம்.

௧௯௧. கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போற்
கேளீவ துண்டு கிளைகளோ துஞ்சுப
வாளாடு கூத்தியர் கண்போற் றடுமாறுந்
தாளாளர்க் குண்டோ தவறு.

(இ - ள்.) கோள் - கொள்ளுதற்கு உரிய நீரை, ஆற்ற - மிகுதியாக, கொள்ளா - கொள்ளமாட்டாத, குளத்தின் கீழ் - நீர்நிலையின்கீழுள்ள, பைங்கூழ் போல் - பசிய பயிர்போல, கேள் ஈவது உண்டு - அன்பர்கள் கொடுப்பதைப் புசித்து, கிளைகளோ - அக்கொடுப்பவர்களுக்கு உறப்பாயுள்ளவர்க

ளோ, துஞ்சுப - (அவனுக்கு வறுமைநேர்ந்தவிடத்துத் தாமும்) வருந்துவர்; (அங்ஙனமன்றி), வாள் ஆடு கூத்தியர் கண் போல்-வாளின்மேலிருந்து ஆடுகின்ற கூத்தையுடைய மகளிரது கண்கள் போல, தடுமாறும் - (பலவிஷயங்களிலும் ஏககாலத்தில்) ஒழியாமல் விரைந்துசெல்கின்ற, தாள் ஆளர்க்கு-முயற்சியைக் கையாளுகின்றவருக்கு, தவறு உண்டோ - (நினைத்துந் தொடங்கியுமுள்ள காரியம்) கைகூடாமற்போவது உண்டோ? [இல்லை யென்றபடி.]

மிக்கநீரைக் கொள்ளமாட்டாத ஏரியின்கீழ்ப் பயிர் அவ்வேரி செழித்திருக்குமளவுஞ் செழித்திருந்து அது வறண்டால் தானும் அழிவதுபோல, ஒரு முயற்சியுஞ் செய்யாமல் அன்பர்கள் கொடுக்கத் தின்றுகொண்டு காலங்கழிக்குஞ் சோம்பர்கள் அவர் செல்வம் வறளும்போது தாமும் அழிவர்; கத்திமுனையின்மேலிருந்துகூத்தாடுகிறவள் அவ்வாட்டந்தவறாமலும்தனக்கு அபாயம்வராமலுங் கவனமாய்க் கண்ணை நாற்புறமுஞ்செலுத்துவதுபோலக் கவனமாய் முயற்சிசெய்பவர்களுக்கு எக்காரியமுந்தவறிப்போகாதாதலால் அவர்களுக்கு எப்பொழுதும் ஒருகுறைவும் இல்லை என்பது கருத்து.

ஆற்ற - ஆற்று என்னும் பகுதியின்மேற் செயவெனெச்சம். கூழ் என்னும் உணவின்பெயர், அதற்குக்காரணமான பயிருக்குக் காரியவாகுபெயர். கிளைகளோ, ஏ - இரக்கத்தில்வந்தது. வாளாடுகூத்தியர் - இரண்டுகையிலும் வாளை எடுத்துச் சுழற்றிக்கொண்டு தாமுஞ் சுழன்று ஆடும் இளமங்கைய ரென்றலும் ஒன்று; இவர்கள், மதங்கிய ரெனப்படுவர். வாள் ஆடு என்பதற்கு - ஒளிபொருந்திய எனப் பொருளுரைத்து, கண்ணுக்கும் அடைமொழியாக்குவர். கூத்தாடும் மகளிரது வாள்போலுங் கண் எனினுமாம். கூத்து - பகாப்பதமாகிய தொழிற்பெயர். தடு - தம்பித்திருத்தல், அது மாறுதல் - தடுமாற்றம்.

'துஞ்சுக' என்றும், 'துஞ்சுவ' என்றும், 'துஞ்சுவர்' என்றும் பாடமுண்டு. (க)

கசுஉ. ஆடுகோ டாகி யதரிடை நின்றதூஉங்
காழ்கொண்ட கண்ணே களிறணைக்குங் கந்தாகும்
வாழ்தலு மன்ன தகைத்தே யொருவன்றான்
றாழ்வின்றித் தன்னைச் செயின்.

(இ - ள்.) ஆடு கோடு ஆகி - துவளுகின்ற சிறுகொம்பாகி, அதரிடை-வழியிலே, நின்றதூஉம் - நின்ற இளமரமும், காழ் கொண்ட கண்ணே - உள்வயிரங்கொண்டவிடத்தே, களிறு அணைக்கும் கந்து ஆகும்-யானையைக் கட்டுவதற்கு ஆதாரமான தறியாகிவிடும்; ஒருவன்—, தான்—, தன்னை—, தாழ்வு இன்றி - (நின்ற நிலையினின்றும்) கீழ்ப்படுதலில்லாதபடி, செயின்-(முயற்சியால்) விருத்திசெய்வானாயின், வாழ்தலும் - (அவனுடைய) வாழ்க்கையும், அன்ன தகைத்தே - அப்படிப்பட்ட தன்மையை யுடையதேயாம்.

முதலில் மிகமெல்லியதாயிருந்தாலும் முடிவில் திரம்பவலியதாம்என்க.

கொண்ட கண் - பெயரெச்சத்தொடர். 'கொண்டக்கண்' என்னும் பாடத்திற்கு-கண்ணிற்று எதிர்கால வினையெச்ச மென்க. களிறு - ஆண்

பாற்பெயர்; "வேழக் குரித்தே விதந்து களி றென்றல்" என்னுந் தொல்காப்பியத்தால், இது யானைக்கு உரியதாதலை அறிக. பெண்பால்-பிடி; "பிடியென் பெண்பெயர் யானைமேற்றே" என்றார் தொல்காப்பியனார். களிறு-களிப்புடையது; களி - பகுதி, று - பெயர்விகுதி. மதத்தாற் கதஞ்சிறந்த ஆண்யானையைக் கட்டுந் தறி மிகவலியதாயிருத்தல்வேண்டு மாதலின், 'களிறணைக்குங் கந்தாகும்' என்றார். கந்து - ஸ்கந்தம் என்னும் வடமொழியின் திரிபு. 'நின்றதூஉம்' என்றதனால், போற்றிவளர்ப்பாரில்லாமல் தானே வளர்வ தென்றவாறு; இது, பிறருதவியில்லாமல் தானே முயன்று சிறப்படைதற்கு உவமை.

உவமையணி. இரண்டாமடி - முற்றுமோனை. (உ)

கசுஙு. உறுபுலி யூனிரை யின்றி யொருநாட்
சிறுதேரை பற்றியுந் தின்னு—மறிவினாற்
காற்றொழி லென்று கருதற்க கையினான்
மேற்றொழிலு மாங்கே மிகும்.

(இ - ள்.) உறு புலி-வலிமைமிகுந்த புலியானது, ஊன் இரை இன்றி-(தான் உண்ணுதற்கு உரிய மிக்க) இறைச்சியாகிய உணவு இல்லாமல், ஒரு நாள் - ஒருதினத்தில், சிறு தேரை பற்றியும் தின்னும் - சிறிய தவளையைப் பிடித்தும் புசிக்கும்; (அதுபோலவே, ஒருவன்), அறிவினால் - தன் அறிவினாலே, கால் தொழில் என்று கருதற்க-(கிடைத்ததொரு தொழிலைக்) காலாற் செய்தற்குரிய சிறுதொழி லென்று நினைத்து அலக்ஷியஞ் செய்யாதிருக்கக் கடவன்; (ஏனெனில்), ஆங்கே - அச்சிறுதொழில் செய்துவருகையிலேயே, கையினால் மேல் தொழிலும் - கையாற்செய்தற்குரிய மேலான செய்கையும், மிகும் - உண்டாகும்; (எ - று)

புலியும் ஒருசமயத்தில் தேரையைத் தின்னும்படி நேரிடும் ஆதலால், நாமும் சமயத்துக்கு ஏற்றபடி ஒரு அற்பகாரியஞ் செய்யவந்தால் அதை அற்பமென்று நினையாமல் முயன்றால் மேலானகாரியம் அப்படியேகைகூடும் என்பது கருத்து.

பேரிறைச்சி கிடையாதகாலத்துப் புலி கிடைத்த சிற்றிறைச்சியையும் இழந்து தின்னுதொழிந்தால் இறந்துவிடுமன்றோ? அங்ஙனம் இறவாமற் கிடைத்ததை உண்டு ஜீவித்ததனால் மறுநாளாயினும் பேரிரை கிடைக்கப் பெறுதல் கூடும்; அதுபோலவே, பெருந்தொழில் கிடையாதகாலத்து ஒருவன் கிடைத்த சிறுதொழிலையும் இழந்து செய்யாதொழிந்தால் அழிந்துவிடுவனன்றோ? அங்ஙனம்அழியாமல்,கிடைத்ததொழிலைச் செய்துவாழ்வதனால் மற்றொருகாலத்தாயினும் பெருந்தொழில் கிடைக்கப்பெறுதல் கூடும்.

எடுத்துக்காட்டுவமையணி. (ங)

கசுச. இசையா தெனினு மியற்றியோ ராற்று
லசையாது நிற்பதா மாண்மை—யிசையுங்காற்
கண்ட நிரையலைக்குங் கானலந் தண்சேர்ப்ப
பெண்டிரும் வாழாரோ மற்று.

(இ - ள்.) கண்டல் - தாழையை, திரை - அலைகள், அலைக்கும் - அலையச்செய்கின்ற, கானல் - கரைச்சோலையையுடைய, அம் - அழகிய, தண் - குளிர்ந்த, சேர்ப்ப - கடல்துறையையுடைய பாண்டியனே!—இசையாது எனினும் - (செய்யத்தொடங்கியதொருதொழில் எளிதில்)முடியாதாயினும், இயற்றி - (இடையூற்றின் மிகுதிக்கு அஞ்சி) விடாமல் அரிதின் முயன்று செய்து, ஓர் ஆற்றால் அசையாது - ஒருவகையாலுந் தளராமல், நிற்பது - (அம்முயற்சிவழியிலேயே) நிலைத்துநிற்பது, ஆண்மை ஆம் - ஆண்தன்மையாம்; இசையும் கால் - (அங்ஙனமன்றி மிக எளிதில் ஒவ்வொரு காரியமுங்) கைகூடுவதானால், பெண்டிரும் - பெண்களும், வாழாரோ - (ஆடவர்போல) மேன்மைபெறமாட்டார்களோ? (எ - று.)

மகளிரினும் ஆடவர்க்கு உள்ள சிறப்பு, எத்துணைச்செய்தற்கரிய செயலையுந் தொடங்கி இடையூற்றினைநோக்கி இடையில் விட்டிடாமல் முடிவு வரையிலும் முயன்று செய்துபோவதேயாம் என்று கருத்து. "அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும், பெருமை முயற்சி தரும்" என்றார் திருவள்ளுவரும்.

மற்று - வினைமாற்று. அம் - அழகைக்குறிக்கும் உரிச்சொல்; சாரியையாகவுமாம். ஆண்மை, மை - தன்மைப்பொருளுணர்த்தும் விகுதி. பெண்டிர், இர் - பலர்பால்விகுதி. ஓர் ஆற்றால் இயற்றி என இயைத்து, ஒருவாறாகச் செய்து என்றுமாம். வாழாரோ - இரண்டு எதிர்மறை உடன்பாடு. கானல் - கடற்கரைச்சோலை. (ச)

கசுரு. நல்ல குலமென்றுந் தீய குலமென்றுஞ்
சொல்லள வல்லாற் பொருளில்லைத்—தொல்சிறப்பி
னொண்பொரு ளொன்றோ தவங்கல்வி யாள்வினை
யென்றிவற்றா னாகுங் குலம்.

(இ - ள்.) நல்ல குலம் என்றும் - உயர்ந்த குடியெனவும், தீய குலம் என்றும் - தாழ்ந்த குடியெனவும், சொல் அளவு அல்லால் - சொல்மாத்திரமாயிருப்பதேயல்லாமல், பொருள் இல்லை - (அச்சொற்களுக்குச் சிறந்த) பொருள் இல்லை; (ஏனெனில்), தொல் சிறப்பின் - பழமையான சிறப்பையுடைய, ஒள் பொருள் ஒன்றோ - சுத்தமான செல்வமொன்று மாத்திரத்தாலோ, தவம் - தவமும், கல்வி - படிப்பும், ஆள் வினை - முயற்சியும், என்ற இவற்றான் - என்றுசொல்லப்பட்ட இக்குணங்களால், குலம்—, ஆகும் - மேன்மையடையும்; (எ - று.)

இயற்கையாய் நல்லகுலமென்றும் தீயகுலமென்றும் இல்லை, நற்குண நற்செய்கையுடைமையால் நல்லகுலமென்றும் அவையின்மையால் தீயகுலமென்றும் ஆகும் என்று கருத்து.

ஒண் பொருள் - ஒளியையுடைய பொருள்; பொருளுக்கு ஒளியாவது - நல்வழியாற் சம்பாதிக்கப்படுதல். அப்படிப்பட்ட பொருளுக்குச் சிறப்பு - அறம் இன்பம் என்னும் இரண்டுபுருஷார்த்தங்களையுந் தருவதாதல். இச் சிறப்பு மனு முதலிய பழைய நூல்களிற் கூறப்பட்ட தென்பது தோன்ற,

'தொல் சிறப்பு' என்றார். ஒன்றே என்பதை எண்ணிடைச் சொல்லாகவுங் கொள்ளலாம்; "அறனொன்றே வான்ற வொழுக்கு" என்ற திருக்குறளிற் போல. என்றிவற்றான் - பெயரெச்சத்தின் ஈறு தொகுத்தல்; இனி, என்று என்பதை எண்ணிடைச்சொல்லாகக் கொண்டு, நின்றவிடத்துப்பிரித்துப் பிறவிடத்துங் கூட்டி உரைத்தலும் ஒன்று. ஆள் வினை - ஆளும் வினையென வினைத்தொகை; தொழிலை நடத்துதற்குக் காரணமான முயற்சியை ஆள்வினையெனக் காரியத்தின்பெயராற் கூறினார்.

"ஆக்கு மறிவா னலது பிறப்பினான், மீக்கொ ளுயர்விழிவு வேண்டற்க" என்னும் நன்னெறியை உணர்க. "சாதி யிரண்டொழிய வேறில்லை சாற் றுங்கால், நீதிவழுவா நெறிமுறையின் - மேதினியில், இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர், பட்டாங்கி லுள்ள படி" என்ற நல்வழிச்செய்யு ளோடு ஒத்த வாய்பாடுடையது இச்செய்யுள். "குணாருத்துங்கதாம் யாதி நது ஜாதிப்ரபாவதஃ" என்ற வடமொழிமேற்கோளும் காண்க. (ரு)

கசஅ. ஆற்றுந் துணையு மறிவினை யுள்ளடக்கி
யூக்க முரையா ருணர்வுடையா—ரூக்க
முறுப்பினா லாராயு மொண்மை யுடையார்
குறிப்பின்கீழ்ப் பட்ட துலகு.

(இ - ள்.) ஆற்றும் துணையும் - (ஒருகாரியத்தைச்) செய்து முடிக்கு மளவும், அறிவினை - (அதுசெய்தற்குத் தமக்குள்ள) அறிவை, உள் அடக்கி- (வெளிப்படுத்தாமல்) மனத்திலேயே அடங்கவைத்து, ஊக்கம் - (தமது) முயற்சியை, உணர்வு உடையார் - அறிவுடையவர்கள், உரையார் - (பிறர் க்குச்) சொல்லார்; ஊக்கம் - (பிறர்) மனவலியை, உறுப்பினால் - (அவர்க ளது முகம் கண் முதலிய) அவயவங்களின் குறிப்பினால், ஆராயும் - ஆராய்ந் தறிகிற, ஒண்மை உடையார்-அறிவையுடையவர்களது, குறிப்பின்கீழ்-புத்தி நுட்பத்தில், உலகு - உலகம், பட்டது - அடங்கியிருக்கின்றது; (எ - று.)

புத்திமான்கள் தமதுமுயற்சி பயன்படுமளவும் தமதுகருத்தைக் குறிப் பினால் பிறர் அறியவொண்ணாதபடி அடக்குவர்;பிறர்கருத்தை அவர்களுறுப் புக்க ளிருக்குந் தன்மையால் அறிந்துகொள்வர்: அப்படிப்பட்டவர்களது குறிப்பில் உலகமெல்லாம் அடங்கியுள்ளது என்பது கருத்து.

ஊக்கம் உறுப்பினா லாராயப்படுதலை, "அடுத்தது காட்டும் பளிங்கு போல் நெஞ்சங், கடுத்தது காட்டும் முகம்," "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின், வகைமை யுணர்வார்ப் பெறின்" என்ற திருக்குறள்களா லறிக. குறிப்பின்கீழ் என்பதற்கு - குறிப்பாலேவுகின்ற குற்றேவலில் என்றும் உரைக்கலாம்.

இரண்டாமடி - முற்றுமோனை.

"யஸ்யக்ருத்யம் நஜாநந்தி மந்த்ரம் வா மந்த்ரிதம்பரே-க்ருதமேவாஸ்ய ஜாநந்தி ஸபைபண்டிதஉச்யதே" என்னும் வடநூன் மேற்கோளை ஒப்பு நோக்குக. (சு)

கசுஎ. சிதலை தினப்பட்ட வால மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றிற்றன் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும்.

(இ - ள்.) சிதலை - செல்லினால், தினப்பட்ட - அரிக்கப்பட்ட, ஆல மரத்தை—, அதன் வீழ் - அதனினின்று இறங்கிய விழுதானது, மதலைஆய்- தாங்குந் தூணாய் நின்று, ஊன்றி ஆங்கு - தாங்கிநின்றாற்போல, தந்தைகண்- பிதாவினிடத்தில், குதலைமை - தளர்ச்சி, தோன்றின்-உண்டானால், (அது), தான் பெற்ற புதல்வன் மறைப்ப-அவன்பெற்ற புத்திரன் (தன்முயற்சியால்) மறைக்க, கெடும் - நீங்கிப்போம்; (எ - று.)

செல்லரித்து வீழ்ந்துபோகத்தக்க ஆலமரத்தை அதன்விழுது தாங்குதல்போலத் தந்தைசெய்யுந்தொழிலுக்குநேருந் தளர்ச்சியை மைந்தன் முயற்சியால் நீக்கவேண்டும் என்பது கருத்து. இதனால், தன்னையேயன்றித் தன் முன்னோரையும்பெருமைப்படுத்தவல்ல முயற்சியின்சிறப்புக் கூறப்பட்டது.

ஆலமரம், அம் - சாரியை. மற்று - அசை ; பின்பு எனினுமாம். வீழ் - விழுந்துள்ளது; கருத்தாப்பொருள் விகுதி புணர்ந்துகெட்டபெயர். மதலை என்பதில் மகனென்னும் பொருளுந் தோன்றும். உவமையணி.

"நைந்தடியற்றவாலம் நடுங்கிவீழ்கின்றதென்று, வந்தவீ ழூன்றி வீழா வகை நிலைவிளக்குமாபோல், மைந்தர்கள் தமக்குள் நல்ல அறிவினால் மகிழ்ந்துசேர்ந்து, தந்தையைத் தளராவண்ணம் தாங்குவர் தவத்தினென்றான்" என்ற ஒட்டக்கூத்தருத்தரகாண்டச்செய்யுள் இச்செய்யுளை அடியொற்றியது. "தூங்குசிறைவாவலுறை தொன்மரங்க ளென்ன, ஓங்குகுலநைய வதனுட் பிறந்த வீரர், தாங்கல் கடனாகும்" என்றார் சிந்தாமணியாரும். (எ)

கசுஅ. ஈனமா யில்லிருந் தின்றி விளியினு
மானந் தலைவருவ செய்பவோ—யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றா
ளரிமா மதுகை யவர்.

(இ - ள்.) யானை-யானையினது, வரி-புள்ளிகளையுடைய, முகம்-முகத்தை, புண் படுக்கும் - விரணப்படுத்துகின்ற, வள் - கூர்மையான, உகிர்-நகங்களையும், நோன் தாள்-வலிமையையுடைய கால்களையுமுடைய,—அரிமா-சிங்கத்தினது, மதுகையவர் - வலிமைபோன்ற வலிமை யுடையவர்கள், ஈனம் ஆய் - (தம்தொழில்முயற்சி) குறைபட்டு, இல் இருந்து - வீட்டிலேயே இருந்து, இன்றி - (ஒருபொருளும்) இல்லாமல், விளியினும் - இறக்கநேர்ந்தாலும், மானம் தலைவருவ - இழிவு நேரும்படியான காரியங்களை, செய்பவோ- செய்வார்களோ ? [செய்யார்]; (எ - று.)

நல்ல சாமர்த்தியமுள்ளவர்கள் ஒருகால் தங்கள்முயற்சி இடையூறுற்றுத் தொடங்கிய தொழில் முடியாமல் வறுமையால் இறக்கும்படி நேரிட்டாலும் பொறுத்திருந்து அம்முயற்சியை மீண்டுங் கைகூடப் பார்ப்பார்களே யன்றி

இழிதொழில்களைச் செய்யார் என்பதாம். (நீதிநெறி விளக்கம்) "நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும், அல்லன செய்தற் கொருப்படார் - பல்பொறிய, செங்கட் புலியே றறப்பசித்தும் தின்னுவாம், பைங்கட் புனத்த பைங் கூழ்" எனவும், (திரிகடுகம்) "தோல்வற்றிச், சாயினுஞ் சான்றாண்மை குன்றாமை" எனவும் பிறர் கூறுமாறுங் காண்க.

உபமேயத்தில் 'இல்லிருந் தின்றி விளியினும்' என்பதற்கு ஏற்ப, உப மானத்தில் 'குகையிலிருந்து உணவின்றி இறக்கினும்' என்றும்; உபமானத் தில்'யானை வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றாள்'என்பதற்கு ஏற்ப, உபமேயத்தில் 'பெருமுயற்சியைச் செய்து முடிக்குங் கூரறிவுந் தக்கவுபா யமு முடையார்' என்றும் வருவித்து உரைக்க.

தலைவருவ - பெயர். முகத்திற் செம்புள்ளிகளை யுடைத்தாயிருத்தல், உத்தமகஜலக்ஷணம். விமானமென்பது 'மானம்' என முதற்குறை விகாரப் பட்டு வருதல்போல, இங்கே அவமானமென்பது 'மானம்'எனக் குறைந்து நின்றது: இனி, மானந் தலைவருவ-பெருமை கெடுபவை என்றும் உரைக்க லாம்; இவ்வுரையில், தலையென்னும் உபசருக்கம், வா என்னும் பகுதியின் பொருளை வேறுபடுத்தியதென்க. (அ)

கசுகூ. தீங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி
தேங்கமழ் நாற்ற மிழந்தாஅங்—கோங்கு
முயர்குடி யுட்பிறப்பி னென்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை யில்லாக் கடை.

(இ - ள்.) தீம் - மதுரமாகிய, கரும்பு - கரும்பானது, ஈன்ற - பெ ற்ற, திரள் கால் - திரண்ட தாளையுடைய, உளை - (குதிரை சிங்கம் முதலி யவற்றின்) பிடரி மயிர் போன்ற, அலரி - பூவானது, தேன் கமழ் நாற்றம் - தேனோடு கூடிப் பரிமளிக்கின்ற வாசனையை, இழந்து ஆங்கு - இழந்தாற் போல,—பெயர் பொறிக்கும் பேர் ஆண்மை இல்லாக்கடை - தன் பெயரை நிலைநிறுத்துதற்கு ஏதுவான பெரிய முயற்சித்திறமை இல்லாதவிடத்து, ஓங்கும் உயர் குடியுள் பிறப்பின் - மிக உயர்ந்த குலத்திற் பிறந்ததனால், என் ஆம் - யாதுபயன் உண்டாம்? [ஒன்று மில்லை யென்றபடி]; (எ - று.)

மிக்கஇன்சுவையுள்ள கரும்பிற் பிறந்தும் அதன் நுனியிலுள்ள மலர் க்குச் சிறப்பில்லாமை போல, உயர்குலத்திற் பிறந்தாலும் முயற்சியில்லா தார்க்குச் சிறப்பில்லை யென்பதாம். உவமையணி.

திரள்கால் - பூவிற்கு விசேடணம். கால்என்றது, அதன் அடியிடத்தை. மெதுவாய்ச் செறிந்து குஞ்சம்போலிருத்தலால், உளை, கரும்பின்மலருக்கு உவமையாயிற்று. ஈன்ற, ஈன் - பகுதி. அலர்வது, அலரி; இ - கருத்தாப் பொருள்விகுதி. தேன்+கமழ்=தேங்கமழ்; தேன்மொழி இறுதியழிந்து வலிவர மெலிமிக்கது. தேம் கமழ் எனப் பிரித்தால், இனிமை மிகுந்த என்று பொருளாம். இழந்தாஅங்கு - செய்யுளோசைநிறைக்க வந்த அளபெடை; அளபெடையில்லாக்கால், புளிமாவின்முன் நேர்வருவது வெண்டளைக்கு வழுவாம். ஓங்கும், உயர் - ஒருபொருட்பன்மொழி. பிறப்பின், ஐந்தனுருபு- ஏதுப்பொருளது. பொறித்தல் - அறிவுடையோரால் எழுதும்படி யிருத்

தல். பேராண்மை - அருமையானமுயற்சிகளைச் செய்யுந் திறம். இல்லாக் கடை - எதிர்மறை எதிர்காலவினையெச்சம். (க)

உ00. பெருமுத் தரையர் பெரிதுவந் தீயுங்
கருனைச்சோ றார்வர் கயவர்—கருனையைப்
பேரு மறியார் நனிவிரும்பு தாளாண்மை
நீரு மமிழ்தாய் விடும்.

(இ - ள்.) கயவர் - கீழ்மக்கள் [ஒருமுயற்சியுமில்லாத சோம்பேறிகள்],—பெரு முத்தரையர் - பெருமுத்தரையர் என்பவர், பெரிது உவந்து-மிகவும் விரும்பி, ஈயும் - அளிக்கிற, கருனை சோறு-பொரிக்கறியோடுகூடிய சோற்றை, ஆர்வர் - உண்பார்கள்; கருனையை பேரும் அறியார் - பொரிக்கறியைப் பேரினும் அறியாமல், நனி விரும்பு தாளாண்மை - மிகவும் விரும்பிச்செய்த தம்முயற்சியாற் பெற்று உண்ட, நீரும் - நீர்மாத்திரமும், அமிழ்து ஆய்விடும் - (சிறப்பினால்) அமிருதத்தை ஒத்ததாகும்; (எ - று.)

தன்முயற்சியில்லாமற் பிறர்முயற்சியால் தான்பெற்ற நல்லுணவினும் பிறர்முயற்சியா லன்றித் தன்முயற்சியாற் பெற்று உண்ட புற்கைநீர்மாத்திரமும் மேலானதென்பது கருத்து. "தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தான் றந்தது, உண்ணலி னூங்கினிய தில்" என்றார் திருக்குறளிலும்.

இச்செய்யுள்செய்தஆசிரியர்காலத்துப்பெருஞ்செல்வத்தினராய்அன்னதானஞ்செய்தலிற் சிறந்த பெருமுத்தரையரென்பவரொருவர் இருந்தனராதல்வேண்டும்; இப்பெயர், இந்நூலின் முப்பதாம் அதிகாரத்தில் ஆறுவது செய்யுளிலும் "நல்கூர்ந்தக்கண்ணும் பெருமுத்தரையரே, செல்வரைச் சென்றிரவாதார்" எனக் காணப்படுகின்றது. ஸ்ரீரங்கத்துக்குச் சமீபத்திலுள்ள முத்தரசநல்லூரில் முத்தரசன் என ஓரரசன்இருந்ததாகவும், அவன்ஸ்ரீரங்கநாதனுக்கு முத்துக்களாலேயே குடை சாமரம் சுருட்டிமுதலிய எடுபிடிகளையும் சில திருவாபரணங்களையுஞ் செய்வித்ததாகவும் ஐதிகியமிருப்பதால், இப்பாட்டிற்சொல்லப்பட்டவன் அவ்வரசனாகவிருப்பினும் இருக்கலாமென்றும் ஊகிக்கப்படுகிறது. பெரு முத்து அரையர்-பெரிய முத்துக்களையுடைய பாண்டியவரசர்கள் எனவும் உரைக்கலாம்; அந்நாட்டிலே முத்து மிகுதியும் உண்டாவது பிரசித்தம். அன்றி, பெரு மு தரையர் எனப் பிரித்து, பெரிய மூன்றுதேசங்களுக்குத் தலைவர் எனக்கொண்டு, சேர சோழ பாண்டியர் என்னுந்தமிழ்நாட்டுமூவேந்தரெனவும் உரைகூறலாம். தமது நாட்டிலுள்ள பிரபுக்களின் பெயரை எடுத்துத் தாம்செய்யும் நூலிற் சிறப்பித்துக்கூறுதல், கவிகளது இயல்பு; கம்பர் இராமாயணத்தில் திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்பமுதலியாரையும், புகழேந்திப்புலவர் நளவெண்பாவில் முரணைநகர்ச் சந்திரன்சுவர்க்கியையும், வில்லிபுத்தூரார் மகாபாரதத்தில் வக்கபாகை வரபதியாட்கொண்டானையும், மண்டலபுருஷன் சூடாமணி நிகண்டில் கிருஷ்ணதேவராயனையும் புகழுமாறு அறிக.

கருனை - மற்றைத் தின்பண்டங்களுக்கும் உபலக்ஷணம். நீரும், உம்மை - இழிவுசிறப்பு; திருப்தியையும் பெருமையையுந் தருவதனால், அமிருதத்தோடு ஒப்பிடப்பட்டது. (க0)

அரசியல் முற்றிற்று.

# இரண்டாவது

# நட்பியல்.

உற்றுழிஉதவுபவராகிய நண்பரின் தன்மையைக்கூறும் பாகம்என்பதாம். அரசனுக்குப் படைபோல யாவர்க்கும் தொழிலிடத்து உதவுவதாகிய நட்பின் இயல்பை விதிமுகத்தாலும் எதிர்மறைமுகத்தாலும் இவ்வதிகாரம்முதல் நான்குஅதிகாரங்களாற் கூறுகின்றார். ஒருவனுக்கு இன்பதுன்பங்கள் சேர்ந்தவிடத்து வந்துஉதவுபவர் உறவினரும் நண்பரு மாதலால் அவ்விருதிறத்தாரது தன்மையும் இவ்வியலிற் கூறப்படுதல் அறிக.

## உக - ஆம் அதிகாரம்.—சுற்றந்தழால்.

அஃதாவது - தனது உறவினரைத் தன்னிடத்தினின்றும் விட்டுநீங்காதபடி அணைத்தல். செல்வம் அதிகாரம் முதலியவற்றால் தாம் தகுந்த மேம்பாட்டை யடையும்பொருட்டுப் பலவகைமுயற்சிகளையும் இடைவிடாது செய்தொழுகும் பெருமையுடையார்க்கு, சமயத்தில்வந்துஉதவும் இவ்வுறவினரைத் தழுவுதலும் அம்முயற்சிகளின் இனமானதொன்று மாதலின், இவ்வதிகாரம் தாளாண்மையென்னும்அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது; பலவகைமுயற்சிகளாலும் பொருள்படைத்தார்க்குப் பந்துஜனவருக்கத்தைத் தழுவிப்பாதுகாத்தல் தருமவழி யாதலால், இவ்வதிகாரம் தாளாண்மையென்னும்அதிகாரத்தின்பின்வைக்கப்பட்டதென்றுங் கொள்ளலாம்: தாளாண்மை கருவியும்,சுற்றந்தழுவுதல் பயனு மாமெனக் காண்க; சுற்றத்தாரைப் பேணியோம்புவது அறநெறியாதலை "தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தானென்றாங்கு, ஐம்புலத்தாறோம்பல் தலை" என்னுந்திருக்குறளாலும் அறிக. கீழதிகாரத்தில் "சிதலைதினப்பட்டஆலமரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றியாங்குக்,குதலைமைதந்தைகட்டோன்றின் தான்பெற்ற, புதல்வன்மறைப்பக்கெடும்" எனத் தோற்றுவாய்செய்த மாட்சியையே விளக்கிக் கூறுதலாலும்,அதிகாரவடைவுமுறைமையை யறிக. முயற்சிசெய்துசெல்வம் சேர்த்தவர்க்கல்லது பிறர்க்கு நெருங்கியசுற்றம்உண்டாகாது என்பதுபற்றி, தாளாண்மையின்பின் சுற்றந்தழால் நிறுத்தப்பட்டதென்பாரும் உளர். சுற்றம் - பந்துவர்க்கம்; சுபஅசுபகாலங்களில் வந்து ஒருவனைச் சுற்றிநிற்குந்தன்மையராகலின்,சுற்றமென்று உறவினர்க்குக் காரணப்பெயர்; சுற்று-பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி: இதனைத் தொழிலாகுபெயராக் கொள்ளினும் அமையும். தழால் - தழுவுதல்; தொழிற்பெயர்: தழுவுஎன்னும்பகுதி ஈறுகெட்டு ஈற்றயலுகரமும்போய் ஆல்என்னுந் தொழிற்பெயர்விகுதியோடு புணர்ந்தது; 'ஓரால்' என்பதும் இவ்வாறே நிற்கும்.

உ0க. வயாவும் வருத்தமு மீன்றக்கா னோவுங்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்
கசாஅத்தா னுற்ற வருத்த முசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும்.

(இ - ள்.) வயாவும்- கருப்பந்தரித்திருக்கிறதனாலுண்டானநோயையும், வருத்தமும் - அதுபற்றி வரும் பலதுன்பங்களையும், ஈன்றக்கால் நோவும் - பிரசவிக்குங்காலத்து உண்டாகும் நோவையும், (எல்லாவற்றையும்), தாய் - தாயானவள், கவான் மகன் கண்டு-தனதுமடியின்மேல் புத்திரனைப்பார்த்து அம்மாத்திரத்தில், மறந்து ஆங்கு-மறந்துபோனாற்போல,—அசா தான் உற்ற வருத்தம் - (பலவகைத்) தளர்ச்சிகளாலும் (ஒருவன்) தான் அடைந்த துன்பமெல்லாம், உசா தன் கேளிரை காண - க்ஷேமவிசாரணை செய்யுந்தன்மையுள்ள தனதுஉறவினரைப் பார்த்தமாத்திரத்தில், கெடும் - இருந்ததுதெரியாமல் நீங்கும்; (எ - று.)

முற்றுவமையணி.

வயா - கருவுற்ற நோய். வருத்தம் - அக்காலத்துத் தக்க உணவையேற்றுக்கொள்ளாமையும், உடம்புமெலிந்து தன்வசந்தப்புதலும் முதலியவற்று லுண்டாவன. ஈன்றக்கால் நோவு - பிரசவவேதனை. 'வயா என்பது - கருக்கொள்ளுங்காலத்து வருவதொரு நோவு: இதனை மசக்கையெனவுஞ் சொல்லுவார்கள்; வருத்தமென்பது - கருவைப்பொறுத்துத் திரியுங்காலத்துவருவதொரு நோவு; ஈன்றக்கால்நோவு என்பது - ஈனுங்காலத்து வருவதொரு நோவு' என்பது, பழையவுரை.

ஈன்றக்கால் - கருவுயிர்க்கையில்; இது, எதிர்காலவினையெச்சம்: இங்கே நிகழ்காலத்துக் கொள்ளப்பட்டது; "சொல் திரியினும் பொருள் திரியா வினைக்குறை" என்ற பொதுவிதியால், பொருளமைதிக்கு ஏற்ப. கவான் - கவீநீ என்னும் வடமொழியின் சிதைவென்பர்; அது வேதத்தில் வழங்குவது: அதற்கு - தோடையென்று பொருள். மகற்கண்டு - உயர்திணையில் ஐயுருபு தொக்கது; உயர்திணைப்பெயரீறு விகாரப்பட்டது, இரண்டாம்வேற்றுமைத்தொகையாதலின்; "இயல்பின் விகாரம்". பலராலும் நன்குவிரும்பப்படுஞ் சிறப்புப்பற்றி மகன் என ஆண்பாலையே கூறினாராயினும், உபலக்ஷணத்தால் பெண்பாலையுங் கொள்க. மகன்என்பதில், மக - பகுதி: இளமை; உரிச்சொல்; ன் - ஆண்பால்விகுதி; இதன்பெண்பால், மகள்: மக்கள்என்பது - இவற்றின் பன்மையெனக் கொள்ளலாம். சுட்டிடைச்சொல்லடியாப்பிறந்த அங்குஎன்பதன் விகாரமான ஆங்குஎன்பது - இங்கே உவமவுருபு. அசா, உசா - முதனிலைத்தொழிற்பெயர்கள்; இவற்றின்மேல் எதிர்மறைத்தொழிற்பெயர்கள் அசாவாமை, உசாவாமை என வரும். காண - செயவெனெச்சம் காரணப்பொருளதாதலின், இறந்தகாலம்; நிகழ்காலத்துக்குஉரிய செயவெனெச்சத்தாற் கூறினது, விரைவையுணர்த்தற்கு. இப்பாட்டிலுள்ள அளபெடைநான்கும், செய்யுளோசை நிறைத்தற்கு வந்தன; அலகிட்டுப்பார்த்து அறிக.

இச்செய்யுளோடு "பொன்னனுன்பிறந்தபோழ்தே, மருளுடைமாதரு ற்ற மம்மர்நோய் மறைந்ததன்றே" என்னும் சிந்தாமணியும், "ஈன்றபொ ழுதிற் பெரிதுவக்கும்......தாய்" என்ற திருக்குறளும் ஒப்புநோக்கத்தக்கன.

சுற்றந்தழுவுதல் தனது பலவருத்தங்களும் ஒழிதற்குக் காரணமென இச்செய்யுளால் சுற்றந்தழாலினது பயன் கூறப்பட்டது. (க)

உ0உ. அழன்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லா
நிழன்மரம்போ னேரொப்பத் தாங்கிப்—பழுமரம்போற்
பல்லார் பயன்றுய்ப்பத் தான்வருந்தி வாழ்வதே
நல்லாண் மகற்குக் கடன்.

(இ - ள்.) அழல் மண்டு போழ்தின் - வெயில்வெப்பம் நெருங்கிய கா லத்தில், அடைந்தவர்கட்கு எல்லாம் - தன்னிடம்வந்து சேர்ந்தவர்யாவர் க்கும், நிழல் மரம் போல் - நிழலையுடையமரம் (பட்சபாதமின்றி வெப்பந் தணித்து உதவுதல்) போல, நேர் ஒப்ப தாங்கி - (துன்பம்நேர்ந்தகாலத்துத் தன்னிடம்வந்துசேர்ந்த சுற்றத்தார்யாவரையும்) ஒரேசமமாக (அத்துன் பத்தினின்றும்) எடுத்துக் காத்து, பழு மரம் போல் - பழுத்துள்ள மரம் போல, பல்லார் பயன் துய்ப்ப - பலரும் தன்னிடத்துப்பயனை அனுபவிக்கும் படி, தான் வருந்தி வாழ்வதே - தான் வருத்தப்பட்டுக்கொண்டாயினும் உயிர்வாழ்ந்திருப்பதே, நல் ஆண் மகற்கு கடன் - ஆண்தன்மையுள்ள நல்ல மனிதனுக்குக் கடமையாம்; (எ - று.)

இதுவும் உவமையணி. முதலடியை உபமானம் உபமேயம் என்னும்இர ண்டுக்குங் கூட்டுக. பழுமரம் - ஆலமரமென்றுங் கொள்ளலாம்; "தெள் ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை, தெண்ணீர்க்கயத்துட் சிறுமீன் சினையி னும், நுண்ணிதே யாயினு மண்ணல் யானை, யணிதேர் புரவி யாட்பெரும் படையொடு, மன்னர்க் கிருக்க நிழலா கும்மே" என்ப வாதலால்.

இலை பூ காய் பழம் முதலிய தனது உறுப்புக்களில் தம்தமக்கு வேண் டுவனவற்றை வேண்டியபொழுது அவரவர் கொய்துகொள்ளத் தான் இடங் கொடுத்துப் பொறுத்திருத்தலையே வருந்துதலாகக் கூறினது; உபமே யத்துக்கும் இங்ஙனமே ஏற்றபடி கொள்க. "பயன்மர முள்ளூர்ப் பழுத்த ற்றுற் செல்வம், நயனுடையான்கட் படின்" எனவும், "மருந்தாகித் தப்பா மரத்தற்றுற் செல்வம், பெருந்தகையான்கட் படின்" எனவும் திருக்குறளி லும்; "மன்னர் திருவும் மகளி ரெழினலமும், துன்னியார் துய்ப்பர் தகல்வேண்டா - துன்னிக், குழைகொண்டு தாழ்ந்த குளிர்மர மெல்லாம், உழை தங்கட் சென்றார்க்கு ஒருங்கு" எனவும், "நடுவூருள் வேதிகை சுற் றுக்கோட் புக்க, படுபனை யன்னர் பலர்நச்ச வாழ்வார், குடிகொழுத்தக் கண்ணுங் கொடுத்துண்ணு மாக்கள், இடுகாட்டு ளேற்றைப் பனை" எனவும் இந்நூலிலும்; "பார்கெழு பழுமரம் பழுத்தற்றாகவும்,........வார்புனல் பெருகவு மறுக்கின்றார்கள் யார்" எனக் கம்பராமாயணத்திலும் வருகின்ற செய்யுள்களின் பொருள் இதனோடு ஒத்ததாம்.

பயன், கடன் - பயம், கடம் என்பவற்றின் ஈற்றுப்போலிகள். 'வாழ்வதே' என்னும் ஏகாரம் - பிரிநிலை. நல் ஆண்மகன் - நற்குணநற்செய்கைகளையுடைய புருஷன். ஆள் மகன் - ஆளும் மகனுமாம். நல்லாண்மகன்- உயர்குலத்திற் பிறந்தவனுமாம். நல்லாள் மகன் எனப்பிரித்தால், நல்லவளது மகனென்று ஆம்.

இச்செய்யுளை, "சாயாமந்யஸ்யகுர்வந்தி ஸ்வயந்திஷ்டந்தி சாதபே-பலந்திசபரார்த்தேச நாத்மஹேதோர்மஹாத்ருமா:," "வதாந்யஸ்ஸம்விபாகேந பூர்ணேகுர்யாதநுக்ரஹம் - சாயயாப்யாயயந்தத்யாத்பலாந்யபிமஹீருஹா:" என்னும் வடநூன்மேற்கோளோடு ஒப்பிட்டுக்காண்க.

இதனால், சுற்றந்தழால்இல்லறத்தார்க்குக் கடமையெனக்கூறப்பட்டது.

உ0௩. அடுக்கன் மலைநாட தற்சேர்ந் தவரை
யெடுக்கல மென்னார் பெரியோ—ரடுத்தடுத்து
வன்காய் பலபல காய்ப்பினு மில்லையே
தன்காய் பொறுக்கலாக் கொம்பு.

(இ - ள்.) அடுக்கல் மலை நாட - (கற்களை ஒன்றன்மேலொன்று) அடுக்கிவைத்தாற்போன்ற மலைகள் பொருந்திய நாட்டையுடைய அரசனே!— பெரியோர் - பெருமைக்குணமுடையவர்கள், தன் சேர்ந்தவரை எடுக்கலம் என்னார் - தம்மை அடைந்தவர்களைப் பாதுகாக்கமாட்டோ மென்று கூறார்; அடுத்து அடுத்து வல் காய் பல பல காய்ப்பினும் - நெருங்கி நெருங்கி வலிய (பெரிய) காய்கள் அனேகங் காய்த்தாலும், தன் காய் பொறுக்கலா கொம்பு -தன்காய்களைச் சுமக்கமாட்டாத மரக்கிளைகள், இல்லையே- (உலகத்தில்) இல்லையன்றோ? (எ - று.)

கனமான காய்கள் எத்தனைகாய்த்தாலும் அவற்றை மரக்கிளைகள் எவ்வளவு மெல்லியனவாயிருப்பினும் பொறுப்பது இயல்பாதல் போல, பெருங்குடும்பமுடைய பந்துக்கள் எத்தனைபேர் தம்மை வந்துசேர்ந்தாலும் பெரியோர் தாங்கள் எவ்வளவு எளியநிலைமையி லிருந்தாலும் அவர்களைக் காத்தலை இயல்பாகக் கொள்வ ரென்பதாம். எடுத்துக்காட்டுவமையணி.

அடுக்கல் - தொழிற்பெயர். அடுக்கல்மலை - ஒன்றோடொன்று தொடர்ச்சியான மலை யெனினுமாம். கண்டவர்களால் மலையப்படுதல்பற்றி, மலையென்பது-காரணப்பெயர்; மலைதல் - அஞ்சுதல்; செயப்படுபொருள் விகுதி புணர்ந்துகெட்டது.

'மலைநாட' என்று மலைமுகமாக நாட்டின்சிறப்பைக் கூறியது, மலையில் விளையத்தக்க மிளகு கோட்டம் அகில் தக்கோலம் குங்குமம் முதலிய பொருள்களாலும் மலையினின்றுபெருகும் அருவிநீர்வளத்தாலும் செழிப்புடையதென்பதோடு, சிறந்த காவலான மலையரணை யுடையதென்னுங் கருத்தையுங் கொண்டு. "இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும், வல்லரணும் நாட்டிற் குறுப்பு" என்னுந் திருக்குறளாலும் நாட்டிற்கு மலை நல்லுறுப்பாதலை அறிக.

பின் 'பெரியோர்' எனப் பன்மையாக வருதற்கு ஏற்ப 'தஞ்சேர்ந்தவரை' என்னாது ஒருமையாக 'தற்சேர்ந்தவரை' என்றது, ஒருமைபன்மைமயக்கம்; இந்நூலில் கீழ் "நடுக்குற்றுத் தற்சேர்ந்தார் துன்பந் துடையார்" என்றவிடத்தும் இவ்விலக்கணவமைதி காண்க. 'தன்' என்பதன் ஈற்று னகரம் வன்மையோடுஉறழாமல் திரிந்தேவருதல், இரண்டாம்வேற்றுமைத்தொகைச் சிறப்புவிதியால். பலபல என்ற அடுக்கு, மிகுதிபற்றிவந்தது; இது இயல்பானதற்கு விதி, [நன் - உயிர் - உ0.] உம் - உயர்வுசிறப்பு.

'கொடிக்குக் காய் பளுவோ?' என்னும் பழமொழி வழங்குதலுங் காண்க.

இதனால், சுற்றந்தழால் பெரியோர்க்கு இயல் பெனப்பட்டது. (ந)

உ0ச. உலகறியத் தீரக் கலப்பினு நில்லா
சிலபகலாஞ் சிற்றினத்தார் கேண்மை—நிலைதிரியா
நிற்கும் பெரியோர் நெறியடைய நின்றனைத்தா
லொற்க மிலாளர் தொடர்பு.

(இ - ள்.) சிறு இனத்தார் கேண்மை - அற்பகுணமுடைய உறவினரது தொடர்ச்சி,—உலகு அறிய தீர கலப்பினும் - உலகத்தாரெல்லோரும் அறியும்படி குறைவுதீர (முதலிற்) கலந்து நின்றாலும், நில்லா - நிலை நிற்கமாட்டாவாம்: சில பகல் ஆம் - சிலதினமே இருக்கும்; ஒற்கம் இல் ஆளர் தொடர்பு - (குணத்) தளர்ச்சியில்லாத உறவினரது சம்பந்தமோ வெனின்,—நிலை திரியா நிற்கும் பெரியோர் நெறி அடைய நின்ற அனைத்து - (தம்தம் வருணாச்சிரம) நிலைமைகளினின்று மாறுபடாமல் ஒருநிலையில்நிற்கின்ற பெரியோர்கள் (மோக்ஷமாகிய) நற்கதியைப் பெறுதற்கு (யோகமார்க்கத்தில்) நிலைநின்ற அத்தன்மைத்து; (எ - று.)

தவறாது நெடுங்காலம்நின்று பயன்படுமென்பது கருத்து. "நூறாண்டு பழகினும் மூர்க்கர்கேண்மை, நீர்க்குட்பாசிபோல் வேர்க்கொள்ளாதே", "ஒருநாட் பழகினும் பெரியோர்கேண்மை, இருநிலம்பிளக்க வேர் வீழ்க்கும்மே" என்றார் நறுந்தொகையிலும். உவமையணி.

உலகு - இடவாகுபெயர். தீர - முடிவுபோக, செவ்வையாக, உறுதிப்பட. உம்மை - உயர்வுசிறப்பு. நில்லா - எதிர்மறைப் பலவின்பால்முற்று; முற்றெச்சமாகவுங் கொள்ளலாம். கேண்மை - பால்பகா அஃறிணைப்பெயராதலால், நில்லா என்னும் பன்மைவினை கொண்டது: இதனை, ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சமாக் கொள்ளலாகாது; 'நில்லாச் சிலபகலாம்' என அதன்முன் வலிமிகவேண்டு மாதலால். அடைய - செயவெனெச்சம், காரியப்பொருளதாதலின், எதிர்காலம். இலாளர் - இல்லாமையை யாளுபவர், இல்லாமையையுடையவர், இல்லாதவரென்க. ஆல் - ஈற்றசை.

அதிகாரம் சுற்றந்தழாலாதலின், 'இனத்தார்' என்றது, உறவினரையே உணர்த்திற்று; கீழிரண்டுபாடல்களில் 'அடைந்தவர்கள்', 'பல்லார்', 'சேர்ந்தவர்' என்றவையும் இவ்வாறே: மேலும் இங்ஙனஞ் சில காண்க.

இதனால், நற்குணநற்செய்கையுடைய உறவினரே தழுவத்தக்கவரென்றும், அங்ஙன மில்லாதவர் தழுவத்தகாதவ ரென்றும் வேறுபாடு கூறப்பட்டது. (௪)

உ0௫. இன்ன ரினைய ரெமர்பிற ரென்னுஞ்சொ
லென்னு மிலரா மியல்பினாற்—றுன்னித்
தொலைமக்க டுன்பந்தீர்ப் பாரேயார் மாட்டுந்
தலைமக்க ளாகற்பா லார்.

(இ - ள்.) இன்னர் - இவர், இனையர் - இத்தன்மையர், எமர் - எமக்கு வேண்டியவர், பிறர் - எமக்கு வேண்டாதவர், என்னும் - என்றுசொல்லுகின்ற, சொல் - வார்த்தை, என்னும் - மிகச்சிறிதும், இலர் ஆம் - இல்லாதவராகின்ற, இயல்பினால் - தன்மையினால், துன்னி - சேர்ந்து, தொலை மக்கள் துன்பம் தீர்ப்பாரே - (துன்பத்தால்) தளர்கிற (உறவினரான) மனிதர்களது வருத்தங்களை ஒழிப்பவர்கள்தாமே,—யார்மாட்டும் - எல்லோரிடத்தும், தலைமக்கள் ஆகல் பாலார்-மேன்மக்களாகுந்தன்மையுள்ளவர்;(எ-று.)

தமது உறவினர் குணக்கேடுடையராயினும் அக்காரணத்தால் தமக்கு வேண்டாதவராயினும் அவர்களுக்கு ஒருதுன்பம்நேருமாயின் அக்காலத்திலே அவர்குற்றங்களை மறந்து அவர்களைக்காப்பதே உத்தமமான நல்லொழுக்க மென்பதாம்.

நற்குணநிறைவுடைய உறவினரே தழுவத்தக்கவரெனக் கீழ்ப்பாட்டிற் கூறப்பட்ட விதிக்கு, சமயபேதவகையால், இப்பாடலில் விலக்குக் கூறியபடியாம். நமது உறவின ரென்றும் உறவினரல்லாதவ ரென்றும் வேறுபாடு கருதாது யாவரையுந்தழுவுதல் தலையறமென இப்பாட்டுக்குக் கருத்துஉரைத்தல் அதிகாரத்தோடு முரண்படுவதாதல் காண்க.

இயல்பினால் - இயற்கையோடுகூடி யென்றும் உரைக்கலாம். தொலை மக்கள் - வினைத்தொகை. அதிகாரத்துக்கு ஏற்ப, மக்கள் - பந்துஜன மெனப்பட்டது. ஏ - பிரிநிலை. யார் - வினா, எஞ்சாமைகுறித்தது ; மாட்டு- ஏழனுருபு: உம் - முற்று. தலைமக்கள் - தலைமையுடைய மக்கள் ; உத்தம அங்கமான தலைபோல யாவர்க்கும் மேற்கொள்ளத்தக்க மக்கள். ஆகற்பாலார் - ஆகுதற்கேற்ற பான்மையை யுடையார். (௫)

உ0௬. பொற்கலத்துப் பெய்த புலியுகிர் வான்புழுக்க
லக்காரம் பாலோ டமரார்கைத் துண்டலி
னுப்பிலிப் புற்கை யுயிர்போற் கிளைஞர்மாட்
டெக்கலத் தானு மினிது.

(இ- ள்.) பொன் கலத்து பெய்த - பொன்னாலாகிய பாத்திரத்திலே இடப்பட்ட, புலி உகிர் வான் புழுக்கல் - புலியின்நகம்போல (வெண்மையான) சிறந்த சோற்றை, அக்காரம் பாலோடு - சர்க்கரையோடும் பாலோடும், அமரார் கைத்து - உறவினராகப் பொருந்தாதவருடைய கையால் வந்

தனை, உண்டலின் - உண்ணுதலைக்காட்டிலும், உப்பு இலி புற்கை - உப்பில்லாததான புல்லரிசிக்கூழை, உயிர் போல் கிளைஞர்மாட்டு - தனது உயிர்போன்ற உறவினரிடத்து, எக் கலத்து ஆனும் - எந்தப்பாத்திரத்திலாயினும், (உண்பது), இனிது-(பலவாற்றாலும்) இனிமையுடையது; (எ-று.)

வால் புழுக்கல் எனப் பிரித்து, சுத்தமான சோறு எனினுமாம்; ("அகன்புனல்" போல.)புழுக்கல்-சமைக்கப்பட்ட சோற்றுக்குத் தொழிலாகுபெயர்; இனி, அல் - செயப்படுபொருள்விகுதி யெனினும் தவறாகாது. அக்காரம் - இக்ஷுஸாரம் என்ற வடமொழியின் சிதைவு என்பர் உணர்ந்தோர்; கருப்பஞ்சாறு என்று முதலிற் பொருள்: அது, பின்பு இலக்கணையாய், அதன்காரியமான சர்க்கரைக்கு வந்தது. அக்காரம் பால் - உம்மைத்தொகை. அமரார் - எதிர்மறைப்பலர்பால்வினையாலணையும்பெயர்; எதிர்மறையாகாரம் புணர்ந்து கெட்டது. 'உப்பும்' என்னும் இழிவுசிறப்பும்மை, விகாரத்தால்தொக்கது; அது, எல்லாச்சுவைகளுள்ளுஞ் சிறந்ததான உப்பினது இன்றியமையாமையை உணர்த்தும். புற்கை - இழிவானஉணவு. எக்கலத்தானும், உம் - இழிவுசிறப்பு. கலம் - உண்கலம்.

'அமரர்கைத்து' என்று பாடமோதி, தேவர்கள்கையிலிருந்து என்று உரைத்தல், மிகத்தகுதியாம். பாலுக்குச் சர்க்கரை யில்லை யென்பார்க்கும் பருக்கையற்ற கூழுக்குப் போட வுப்பில்லை யென்பார்க்கும் அவரவர் தகுதிக்கு ஏற்பக் குறைவு குறைவே யாதலால், 'அக்காரம் பாலோடு' எனவும், 'உப்பிலிப்புற்கை' எனவும் உடன்சேர்த்துக் கூறப்பட்டது.

இதனால், சுற்றத்தார்சிறப்பு வருணனைவகையாற் கூறப்பட்டது. (சு)

உ0எ. நாள்வாய்ப் பெறினுந்தந் நள்ளாதா ரில்லத்து
வேளாண்மை வெங்கருனை வேம்பாகும்—கேளா
யபரானப் போழ்தி னடகிடுவ ரேனுந்
தமராயார் மாட்டே யினிது.

(இ - ள்.) நாள்வாய் பெறினும் - காலத்திலே பெறப்பட்டாலும், தம் நள்ளாதார் இல்லத்து - தமக்கு உறவினரல்லாதவரது வீட்டிலே, வேளாண்மை - உபகாரமாகக் கொடுக்கப்பட்ட, வெம் கருனை - சுவையோடு கூடிய பொரிக்கறியுணவும், வேம்பு ஆகும் - வேப்பங்காய்போலக் கைப்புடையதாம்;கேளாய் -(யான்சொல்வதைக்)கேள்; அபரானப்போழ்தின்-பிற்பகற்பொழுதிலே, அடகு இடுவரேனும் - இலைக்கறியை இடுவாராயினும், தமர் ஆயார்மாட்டே-உறவினரானவரது வீட்டிலேயாயின், இனிது-இனிய சுவையுடையதாம்; (எ - று.)

இங்ஙனந் தோன்றுதற்குக் காரணம் - முறையே அன்பில்லாமையும், அன்புடைமையுமாம். இதுவும், உறவினர்சிறப்பைப் புனைந்துரைவகையாற் கூறியதே.

நாள்வாய் - தினத்தின்தொடக்கமான உதயகாலத்திலே யென்றபடி; நள்ளாதார் - சினேகஞ் செய்யாதவர்; அதிகாரத்துக்கு ஏற்ப, உறவினர்; எதிர்மறைவினையாலணையும்பெயர். வேளாண்மை-பண்புப்பெயர். வெங்

கருணை-விரும்பப்படுங் கறியமுதுமாம்; வெம்மை-விருப்பமுமாதலை "வெம்மை வேண்டல்" என்னுந் தொல்காப்பியத்தா லறிக. வேம்பு - மரத்தின் பெயர், அதன் காய் முதலிய சினைக்கு முதலாதபெயர். அபரானம்-அபராங்ஹம்; வடசொல்திரிபு: அபர அங்ஹ மெனப்பிரிக்க; அபரம்-பின், அங்ஹம் - பகல்: எனவே, மத்தியான்னகாலத்துக்குப் பின்னிட்டபொழுதாம்; இது, வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி. அபரானப்போழ்து-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அடகு - கீரை போல்வன.

இதனை, பாண்டியனை நோக்கியதே யாகவாவது, பிறனொருவனுக்கு உபதேச மூலமாகத் தெரிவித்ததாகவாவது கொள்ளலாம்.

இவ்வதிகாரத்துப் பத்தாம் பாட்டும் இக்கருத்தேயுடையது. "வெருக்குக்கண்வெங்கருணை வேம்பாம்" என்றாற்போல, 'வேளாண்மைவெங்கருணை வேம்பாகும்' எனப்பட்டது. (எ)

௨௦௮. முட்டிகை போல முனியாது வைகலுங்
கொட்டியுண் பாருங் குறடுபோற் கைவிடுவர்
சுட்டுக்கோல் போல வெரியும் புகுவரே
நட்டா ரெனப்படு வார்.

(இ - ள்.) முட்டிகை போல - சம்மட்டியென்னுங் கருவி போல, முனியாது - (தம்தொழிலிலே) வெறுப்பில்லாமல் [சோம்பாமல், ஓயாமல் என்றபடி], வைகலும் - நாள்தோறும், கொட்டி - (பிறபொருளை) அடித்தடித்து, உண்பாரும் - தாம்ஜீவிப்பவர்களும், குறடு போல் கைவிடுவர் - (அனல்வெம்மைநணுகுங்காலத்து அதிலே பொருளை விட்டிட்டுத் தான் நீங்கியொழியுங்) குறடென்னுங் கருவிபோல (ஒருவர்க்குத் துன்பம்வந்தகாலத்து அவரைக்) கைவிட்டு நீங்குவர்; நட்டார் எனப்படுவார் - அன்புடைய உறவினரென்று சொல்லப்படுபவர், சுட்டுக்கோல் போல-உலையாணிக்கோல்போல, எரியும் புகுவர் - (அப்பொருளுடன்கூட) நெருப்பையும் அடைவர்; (எ - று.)

முட்டிகை,குறடு,சுட்டுக்கோல்எனக்கம்மாளர்கருவிகளேஇச்செய்யுளில் உவமையாகக்கொள்ளப்பட்டவாறு காண்க. தமது இன்பத்துக்கு மகிழ்ந்து துன்பத்துக்கு வருந்துபவரே உறவினராவரென்றும், அங்ஙனமன்றி இன்பம் நேர்ந்தகாலத்து உடன்வந்து உண்டு உயிர்வாழ்ந்து துன்பம்நேர்ந்தவாறே அதற்கு உடனில்லாமல் விட்டொழியுந் தன்மையர் உறவினரல்ல ரென்றும் இதனால் உண்மை கூறப்பட்டது. "அற்றகுளத்தி லறுநீர்ப் பறவைபோ,லுற்றுழித் தீர்வா ருறவல்லர் - அக்குளத்திற், கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே, யொட்டி யுலர்வா ருறவு" என்ற ஔவையார் மூதுரையோடு இதனை ஒப்பிட்டு அறிக.

முனியாது - எதிர்மறைவினையெச்சம்; உ - விகுதி, த் - எழுத்துப்பேறு: து - விகுதி யென்பாரும் உளர். வைகலும், உம்மை - தொறுப்பொருளது. கொட்டியுண்பார் - ஒருவரை அடித்து வருத்தித் தாம் உண்டு வாழ்பவர். உம் - உயர்வுசிறப்பு. எரியும், உம் - இழிவுசிறப்பு. புகுவரே, ஏ - தேற்றம். அதிகாரத்தால், நட்டார் என்பது - உறவின ராயிற்று. எனப்படுவார்-என்று

சிறப்பித்துக் கூறப்படுவார்; "ஊரெனப்படுவது உறையூர்", "பூவெனப் படுவது பொறிவாழ்பூவே" என்றாற் போல. (அ)

உ0கூ. நறுமலர்த் தண்கோதாய் நட்டார்க்கு நட்டார்
மறுமையுஞ் செய்வதொன் றுண்டோ—விறுமளவு
மின்புறுவ வின்புற் றெழீஇ யவரோடு
துன்புறுவ துன்புறாக் கால்.

(இ - ள்.) நறு - நல்லமணமுள்ள, மலர் - பூக்களாலாகிய, தண் - குளிர்ந்த, கோதாய் - மாலையையுடையவளே! நட்டார் -உறவினர், நட்டார்க்கு - தம் உறவினர்க்கு, இறும் அளவும் - (அவரும் தாமும்) இறந்தொழியும் வரையிலும், அவரோடு - அவர்களுடனே, (இம்மையில்), இன்புஉறுவ இன்பு உற்று-இன்பமடையத்தக்கவற்றிற்கு இன்பமடைந்து, எழீஇ-நடந்து[ஒழுகி யென்றபடி], துன்பு உறுவ துன்பு உறாக்கால் - துன்பப்படத்தக்கவற்றிற்குத் துன்பப்படாவிட்டால், மறுமையும் செய்வது ஒன்று உண்டோ - மறுமையிலுஞ் செய்வதோர் உதவி (உலகத்தில்) உள்ளதோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

ஒருவர் இன்புறத் தாம் இன்புற்று அவர் துன்புறத் தாமுங் கூடத் துன்புறுபவரே தக்க உறவினராவ ரென உறவினரிலக்கணங்கூறப்பட்டது. உறவினருறவெல்லாம் உடம்பைவிட்டு உயிர்ஒழியுமளவேயாதலால், நட்டார்க்கு நட்டார் மறுமையிற் செய்வதொன்றும் இல்லையாயிற்று.

மலர்த்தண்கோதாய் - பூக்களைச்சூடிய குளிர்ந்த கூந்தலுடையாளே என்றுமாம். நறுமலர்த்தண்கோதை - அன்மொழித்தொகை; கோதை - மாலைபோல்பவளென உரைத்தால், உவமையாகுபெயர். கோதாய் என ஈறு திரிந்தது, விளியுருபு. இது, கமடூஉமுன்னிலை. ஒருவரியல்பை உணராது உறவுகொண்டாடுதல் பெரும்பாலும் மகளிர்தன்மையே யாதலால், பெண்பாலை முன்னிலைப்படுத்தி இது கூறினார். மறுமையும் என்ற உம்மையால், இம்மையிலேயல்லாமல் என்பது விளக்கப்பட்டது. உம்மை - இழிவுசிறப்புப்பொருளதே யாதல்வேண்டும்; ஒருவன் உயிர்வாழ்ந்திருந்த பொழுதிலெல்லாம் இல்லாமல் அவன் இறந்தபின்பு என்றபடி. இனி, உம்மையை ஒன்று என்பதனோடு கூட்டலுமாம். எழுந்து என்பது, 'எழீஇ' என விகாரப்பட்டு அளபெடுத்தது ; சொல்லிசையளபெடை. எழீஇ - எழுந்து ; மகிழ்ச்சியோடு தலையெடுத்து என்றவாறுமாம்.

"உத்ஸவே வ்யஸநேசைவ துர்பிக்ஷே ஶத்ருஸங்கடே-ராஜத்வாரேஶ்மஶாநேசயஸ்திஷ்டதிஸபாந்தவஃ" என்ற வடநூன்மேற்கோள் உணரத்தக்கது.

உகய. விருப்பிலா ரில்லத்து வேறிருந் துண்ணும்
வெருக்குக்கண் வெங்கருனை வேம்பாம்—விருப்புடைத்
தன்போல்வா ரில்லுட் டயங்குநீர்த் தண்புற்கை
யென்போ டியைந்த வமிழ்து.

(இ - ள்.) விருப்பு இலார் இல்லத்து - (தன்மேல்) அன்பில்லாத பிற ரது வீட்டிலே, வேறு இருந்து உண்ணும் - தனியேயிருந்து உண்ணுகின்ற, வெருகு கண் வெம் கருனை - பூனையின்கண்போல் ஒருவகைப்பளபளப்பை யுடைய சுடுகிற பொரிக்கறியுணவும், வேம்பு ஆம் - வேம்புபோலக் கைப் புடையதாம்: விருப்பு உடை தன்போல்வார் இல்லுள் - (தன்மேல்) அன் புடைய[தன்னோடொத்த]தமரது வீட்டிலே, (உண்ணப்படுகின்ற), தயங்கு நீர் தண் புற்கை - தெளிவான நீர்வடிவமாயுள்ள குளிர்ந்த புல்லரிசிக் கூழும், என்போடு இயைந்த அமிழ்து - உடம்பிற்கு ஒத்த அமிருதமாகும்.

அமிருதம்போ லினியதா மென்றபடி. உவமையணி. இக்கருத்து, இவ்வதிகாரத்து ஆறு ஏழாம் பாட்டுக்களோடு ஒத்தது.

விருப்பு - விரும்புதல் ; முதனிலை திரிந்த தொழிற்பெயர். வேறிருந்து என்பதில், அன்பிற்குத் தக்க உபசாரம் பெறுமலிருந்து என்னும் பொரு ளுந் தோன்றும். வெருகு+கண் =வெருக்குக்கண் ; வேற்றுமைப்புணர்ச்சி யில் உயிர்த்தொடர்க் குற்றியலுகரத்துக் ககரவொற்று இரட்டிற்று; "நெடி லோ டுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள், டறவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே" என்ற நன்னூற் சூத்திரத்து 'மிகவே' என்றது காண்க. சுடுகை யே ஒருசுவையாதலால், 'வெங்கருனை' எனப்பட்டது. விருப்புடைத் தன் போல்வார் - ஒருவரோ டொருவர் அன்புடையா ரென்றபடி. தயங்கு நீர்த் தண்புற்கை - பருக்கையற்ற கூழ். என்பு - உடம்புக்குச் சினையாகுபெ யர்; "என்பு முரியர் பிறர்க்கு" என்ற திருக்குறளிற் போல. வேறிருந்து - பிறரோடொப்பப் பந்தியிலில்லாமல் சிறப்பாகத் தான் தனியேயிருந்து என்றுங் கொள்ளலாம். கருனை புற்கை என்றவற்றில், முறையே உயர்வுசிற ப்பு இழிவுசிறப்பு உம்மைகள் விகாரத்தால் தொக்கன. அமிழ்து - அம்ருதம்; வடசொல்; மரணத்தைத் தவிர்ப்பது.

இப்பாட்டின் இரண்டாமடியிற்போலவே முன் உ௦எ - ஆம் பாட்டின் இரண்டாமடியிலும் 'வெங்கருனை வேம்பாகும்' என்னும் உபமானம் வந் துள்ளது. (௧௦)

---

## உஉ - ஆம் அதிகாரம்.—நட்பாராய்தல்.

அஃதாவது - சிறந்த இலக்கணமுடைய சினேகிதரை இன்னரென்று ஆராய்ந்து அறிதல். ஒருவன்குணங்களை ஆராயாமல் அவனோடு விரைந்து நட்புக்கொண்டால் அதனாற் சிலசமயங்களில் தீங்குநேரு மாதலாலும், குற் றங் கண்டு பின்பு அவனைவிடுதல் குற்ற மாதலாலும், நட்புக்கொள்ளு மிட த்துக் குடிப்பிறப்பும் ஒழுக்கமும் குணநலமும் உடைமையைப்பற்றி நன் ருக ஆராய்ந்து நட்புக்கொள்ளக்கடவன் என்பதாம். ஒருவனுக்கு இன்ப துன்பங்கள் நேர்ந்தவிடத்து வந்து உறவினர்போல உதவுபவர் நண்பராத லால், இது சுற்றந்தழாலின்பின் வைக்கப்பட்டது.

நட்பு - இங்கே, நட்புடையார்க்குத் தொழிலாகுபெயர்.

உகக. கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மையெஞ் ஞான்றுங்
குருத்திற் கரும்புதின் றற்றே—குருத்திற்
கெதிர்செலத்தின் றன்ன தகைத்தரோ வென்று
மதுர மிலாளர் தொடர்பு.

(இ - ள்.) கருத்து உணர்ந்து - (நூல்களின்) உட்பொருளை அறியா நின்று, கற்று அறிந்தார் - படித்துத் தேர்ந்தவர்களது, கேண்மை - சிநேகம், எஞ்ஞான்றும் - எப்பொழுதும், குருத்தின் கரும்பு தின்று அற்று - நுனிக்குருத்திலிருந்து (அடிவரையில்) கரும்பைக்கடித்துத்தின்றாற்போலும் [வரவரஇனிமைதரும்]; என்றும்-எப்பொழுதும்,மதுரம்இல்ஆளர்தொடர்பு- (கல்வியறிவாகிய) இனியதன்மை யில்லாதவர்களது சிநேகம், குருத்திற்கு எதிர்செல தின்று அன்ன தகைத்து - (அக்கரும்பையே)குருத்திற்கு எதிரே செல்லும்படி [அடியிலிருந்து](நுனிவரையில்) தின்றாற்போன்ற தன்மையை யுடையது [வரவர இன்னாமையைத் தரும்]; (எ - று.)—அரோ - ஈற்றசை; தேற்றமுமாம்.

இதனால், சிநேகிக்கத்தக்கவரும் சிநேகிக்கத்தகாதவரும் இன்னரெனக் கூறப்பட்டது.

அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்த நட்பு முன்சுருங்கிப் பின் பெருகுதற்கும் அறிவிலாதாரும் அறிவிலாதாருஞ் செய்த நட்பு முன் பெருகிப் பின் சுருங்குதற்குங் காரணம், தம்முள் ஒருவர் ஒருவருடைய குணத்தை முன் அறியாமையும் பின் அறிதலுமாம். கீழ்க் கல்வியென்னும் அதிகாரத்தில் "கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை, நுனியிற் கரும்பு தின் றற்றே - நுனிநீக்கித், தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா, ஈரமி லாளர் தொடர்பு" என்றதிலும் இக்கருத்தே கூறப்பட்டுள்ளது. இதனை "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப், பின்னீர பேதையார் நட்பு" என்னுந் திருக்குறளோடும், "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும் - வரிசையால், வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" என்னும் நாலடியாரோடும் ஒப்பிடுக. பயனுவமையணி. கரும்பை நுனியிலிருந்து தின்றால் வரவர இன் சுவைமிகுதலும், அடியிலிருந்து தின்றால் வரவரச்சுவைகுறைதலும் இயல்பு.

ஏ - தேற்றம். உணராநின்று என்ற நிகழ்கால வினையெச்சம், உணர்ந்து என இறந்தகாலவினையெச்சமாகத்திரிந்தது; "தெய்வந் தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்" என்பதில்'தொழுது' என்பதுபோல. கருத்து உணர்ந்து - தமது கருத்தினாற் கற்கப்படும் நூல்களை இன்னவையென்று அறிந்து என உரைத்தல், சிறப்பு. அறிந்தார் - காரியாகாரியங்களை அறிந்த விவேகிக ளென்றபடி. மதுரம் - வடசொல்.

"இக்ஷோரக்ராத்க்ரமஶ: பர்வணிபர்வணி யதா ரஸவிஶேஷ: - தத்வத் ஸஜ்ஜநமைத்ரீ விபரீதாநாந்துவிபரீதா"என்னும் சுலோகம் ஒப்பு நோக்கத் தக்கது. (க)

உகஉ. இற்பிறப் பெண்ணி யிடைதிரியா ரென்பதோர்
நற்புடை கொண்டமை யல்லது—பொற்கேழ்
புனலொழுகப் புள்ளிரியும் பூங்குன்ற நாட
மனமறியப் பட்டதொன் றன்று.

(இ - ள்.) பொன் - பொன்னோடுகூடிய, கேழ் - நல்ல நிறமுள்ள, புனல் - தண்ணீர், ஒழுக - பெருக, புள் இரியும் - பறவைகள் ஓடுதற்கு இடமான, பூ குன்றம் - அழகிய மலைகளையுடைய, நாட - பாண்டியநாட்டையுடைய அரசனே!—(உயர்குடிப்பிறந்தவர்), இல் பிறப்பு எண்ணி-தமது உயர்குடிப்பிறப்பை நினைத்து, இடை திரியார்-நடுவிலே (தமது நற்குணத்தினின்று) மாறுபடார், என்பது ஓர் நல் புடை - என்றுசொல்லப்படுவதொரு நல்ல தன்மையை, கொண்டமை அல்லது - (தாம்சிநேகிப்பதற்கு ஒருநல்ல காரணமாகக்) கொண்டது மாத்திரமே யல்லாமல், மனம் அறியப்பட்டது ஒன்று அன்று - (பிறரொருவருடைய) மனநிலை (ஒருவரால் உட்புகுந்து) அறியப்பட்டதென்பதொரு தன்மையதன்று; (எ - று.)

ஒருவர் மற்றொருவருடைய மனநிகழ்ச்சியைப் பிரதியக்ஷமாக உண்மை பொருந்தஅறிவது அசாத்திய மாதலால், உயர்குடிப்பிறந்தவர் தமதுஉத்தம குணத்தை எப்பொழுதும்இடையிலேமாறவிடாரென்பதோருறுதிபற்றி நற்குடிப்பிறந்தாருடன் நட்புக்கொள்ளவேண்டுமென இதனாற் கூறப்பட்டது.

கீழ்ப்பாட்டில் நட்பிற்குக் கல்வியறிவு ஒருகுணமென்றார்; இப்பாட்டில் உயர்குடிப்பிறப்பும் ஓர் இலக்கண மெனப்பட்டது.

தெளிவான அழகிய அருவிநீர்வெள்ளம் மேனின்றுவழிந்துபாயும்பொழுது பொன்னை அடித்துக்கொண்டு ஓடிவருதலால் அதனைக்கண்டு இது யாதோஎனப் பறவைகள் அஞ்சிஓடுகின்றன என்று மலையைச்சிறப்பித்தவாறும்.

உகங. யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்—யானை
யறிந்தறிந்தும் பாகனையே கொல்லு மெறிந்தவேன்
மெய்யதா வால்குழைக்கு நாய்.

(இ - ள்.) யானை அனையவர் - யானையைப் போன்றவர்களது, நண்பு - சிநேகத்தை, ஒரீஇ - விட்டு, நாய் அனையார் - நாயைப்போன்றவர்களது, கேண்மை - சிநேகத்தை, கெழீஇக் கொளல் - சேர்த்துக் கொள்ளுதல், வேண்டும் - தகுதி: (ஏனெனில்),—யானை,—அறிந்து அறிந்தும் - பலகாலம் பயின்றிருந்தும், பாகனையே - (தனக்கு உணவு முதலியன கொடுத்துக்காத்திடும்) பாகனையே, கொல்லும்—; நாய்—, எறிந்த வேல் மெய்யது ஆ - (தன்னையுடையவன் தன்மேற் சினந்து) எறிந்த ஆயுதம் தன்உடம்பில்தைத்துள்ளதாயிருக்கையிலும், வால் குழைக்கும் - வாலைக் குழையவைத்து ஆட்டிக்கொண்டு தன்எளிமையையும் அன்புடைமையையும்காட்டிநிற்கும்; (எ-று.)

பலகாலம் தம்மாற் பற்பலவுதவிகளைப் பெற்றிருந்தும் அவற்றை யெல்லாம் அடியோடு மறந்து தம்மிடம் யாதாயினும் ஒருபொழுது கோபத்

துக்குக் காரணமொன்று காணப்பட்டதாயின் அதனையே பிரதானமாகக் கொண்டு எப்பொழுதும் மனத்திலே மறவாது அடக்கிவைத்திருந்து சமயம்பார்த்து அழிக்குந் தன்மையரோடு சினேகஞ்செய்யலாகாது; தம்மாற் செய்யப்பட்டுவரும் பெரிய அபகாரங்கள் பலவற்றையும் மறந்திட்டுத் தம்மால் முன்பு ஒருகாலத்துச்செய்யப்பட்டதொரு சிறியஉபகாரத்தையே உள்ளத்திற் கொண்டு பாராட்டும் இயல்பினருடனே சினேகிக்கவேண்டுமென்பதாம். ஏதுவணியோடு சேர்ந்த உவமையணி.

ஒருவி, கெழுவி என்னுஞ் சொற்கள் விகாரப்பட்டு 'ஓரீஇ', 'கெழீஇ' என அளபெடுத்தன; சொல்லிசையளபெடை. அறிந்தறிந்து - அடுக்கு, மிகுதிப்பொருளது. வேல் - ஆயுதமென்னுமாத்திரையாய் நின்றது. ஆ - ஆகவென்பதன் விகாரம்; இதனிறுதியில் இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 'பாகனையே' என்ற ஏகாரமும்உயர்வுசிறப்பே. யானை, நாய்-இவை, இங்குக்காட்டிய குணத்துக்குமாத்திரமே சிறியார்க்கும் பெரியோர்க்கும் முறையே உவமை. வேண்டும் - தேற்றப்பொருளதோர் வியங்கோள்.

இங்கே நன்றிமறவாத நற்குணமுடையோர்க்குத் தாழ்ந்தமிருகமாகிய நாயை உவமைகூறியது, இழிவுவமைக்குற்றத்தின்பாற்படாது; "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறுபடுதலும் பாருபாடுடைய" என்ற தண்டியலங்கார சூத்திரத்தாலும், அதன்உரையாலும் உயர்ந்தபொருளை இழிந்தபொருளோடு உவமித்தல் புன்புலவர்புணர்க்குங்கால் சிறப்பின்மை தெரிந்து ஆன்றோராற் குற்றமென்று தள்ளப்படுதலும், அதுவே நன்புலவர்புணர்க்குங்கால் சிறப்புடைமை தெரிந்து ஆன்றோராற் குணமென்று கொள்ளப்படுதலுங் காண்க. இவ்வாறு நல்லிசைப் புலவர் செய்யுள்களில் வருவன கண்டுகொள்க. (ரு)

உகச. பலநாளும் பக்கத்தா ராயினு நெஞ்சிற்
சிலநாளு மொட்டாரோ டொட்டார்—பலநாளு
நீத்தா ரெனக்கை விடலுண்டோ தந்நெஞ்சத்
தியாத்தாரோ டியாத்த தொடர்பு.

(இ - ள்.) பல நாளும்-பலதினமும், பக்கத்தார் ஆயினும் - தமதுபக்கத்திலேயே வாழ்ந்துள்ளவர்களானாலும், நெஞ்சில் ஒட்டாரோடு-மனத்திற் பொருத்தமில்லாதவர்களுடன், சில நாளும் - சிலநாளாயினும், ஒட்டார் - சேரமாட்டார், (அறிவுடையோர்); தம் நெஞ்சத்து - தமது மனத்திலே, யாத்தாரோடு - (அன்பால்) கட்டப்பட்டவர்களுடனே, யாத்த - கொண்ட, தொடர்பு - சினேகத்தை, பல நாளும் நீத்தார் என - (அவர்) பலகாலமாய்(த்தம்மை) விட்டுள்ளா ரென்று கருதி, கைவிடல் உண்டோ - (அறிவுடையோர்) நீங்கவிடுதல் (உலகத்தில்) உண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

சினேகத்துக்கும் சினேகமில்லாமைக்குங்காரணம், எப்பொழுதும் அருகிலிருத்தலும் இல்லாமையு மன்று; மனங்கலந்திருத்தலேயா மென்பதாம். நெடுந்தூரத்திலுள்ள சூரியனோடு தாமரைமலர்க்குச் சிநேகமும், எப்பொழுதும்அருகிலேயுள்ள தவளையுடனே அதற்குச்சிநேகமில்லாமையுங் காண்க.

பலநாளும், சிலநாளும் என்ற உம்மைகள் - முறையே, உயர்வுசிறப்பு இழிவுசிறப்புப் பொருளன; இந்தஉம்மைகள் - முறையே, நாளினது மிகுதியையும் குறைவையும் விளக்குவன. பக்கம் - பக்ஷமென்னும் வடமொழியின் திரிபு. நெஞ்சத்தியாத்தாரோடியாத்த - குற்றியலிகரங்கள், அலகுபெறவில்லை. நெஞ்சத்திற் சிலநாளும் ஒட்டார் என எடுத்து, மனத்திற் சிலநாளாயினும் ஒன்றுபடாதவர் எனவும் உரைக்கலாம். (௪)

௨௧௫. கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது
வேட்டதே வேட்டதா நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போன் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
நயப்பாரு நட்பாரு மில்.

(இ - ள்.) கோடு பூ போல - மரக்கிளைகளிலுண்டாகின்ற மலர்போல, மலர்ந்து - (முன்னே முக)மலர்ச்சிபெற்று, பின் கூம்பாது - பின்பு(அம்மலர்ச்சி) குவியாமல், வேட்டதே வேட்டது - (முன் ஒருவரோடொருவர்)விருப்பங்கொண்டதுவே விருப்பமாயிருப்பது, நட்பு ஆட்சி ஆம் - சிநேகதருமத்தைக்காத்தலாகும்; தோட்ட கயம் பூ போல் - தோண்டப்பட்ட நீர்நிலையிலுண்டாகிற மலர் போல, முன் மலர்ந்து - முதலில் (முக)மலர்ச்சிகாட்டி, பின் கூம்புவாரை - பின்பு(அம்மலர்ச்சியொழிந்து முகஞ்)சுருங்குபவர்களை, நயப்பாரும் - விரும்புபவர்களும், நட்பாரும் - சிநேகிப்பவர்களும், இல் இல்லை; (எ - று.)

உவமையணி. கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, புதற்பூ எனப் பூ நான்குவகைப்படும்; நிலப்பூ என ஒன்று கூட்டி ஐந்தென்பாரு முளர். ஆம் - ஆகுமென்பதன் விகாரம். தோட்ட - தோடுகளையுடைய எனவும் உரைக்கலாம்.

௨௧௬. கடையாயார் நட்பிற் கமுகனைய ரேனை
யிடையாயார் தெங்கி னனையர்—தலையாயா
ரெண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே
தொன்மை யுடையார் தொடர்பு.

(இ - ள்.) கடை ஆயார் - கீழ்ப்பட்டவர்கள், நட்பில் - சிநேகதருமத்தில், கமுகு அனையர்-பாக்குமரத்தைஒத்திருப்பர்; ஏனை இடை ஆயார்-மற்றை மத்தியமானவர், தெங்கின் அனையர் - தென்னைமரத்தை ஒத்திருப்பர்; தலை ஆயார் - முதல்தரமானவர்களாகிய, தொன்மை உடையார் - பழமையென்னும் பெருங்குணத்தையுடைய மேன்மக்களது, தொடர்பு - சிநேகம், எண் அரு பெண்ணை போன்று-நினைத்தற்கும் அருமையான (சிறப்பையுடைய) பனைமரத்தை ஒத்து, இட்ட ஞான்று இட்டதே - நட்ட அக்காலத்தில் நட்டதன்மையதே; (எ - று.)

பாக்குமரம்போல ஒருநாள் உபசரணைதவிர்ந்தாலும் பயன்கெடுபவர் அதமர், தென்னைமரம்போல இடையிடையேஉபசரணையில்லாமற்போனாற் பயன் கெடுபவர் மத்தியமர், பனைமரம்போல முதலில் நட்டது மாத்திரமேயன்றிப் பின்புஒருகாலத்திலும் யாதோருபசரணையையும் வேண்டாமல்

என்றும்ஒருபடிப்படப்பயன்படுபவர் உத்தமர் என்பதாம். "உத்தமர்தா மீயு மிடத்தோங்குபனைபோல்வரே, மத்திமர்தாந் தெங்குதனை மானுவரே-முத்த லரும், ஆங்கமுகு போல்வ ரதம ரவர்களே, தேங்கதலியும் போல்வர் தேர்ந்து" என்னும் நீதிவெண்பாவையுங் காண்க. உவமையணி.

கமுகு - க்ரமுகம் என்னும் வடமொழியின் திரிபு. தெங்கின் - இன் சாரியைநிற்க இரண்டனுருபு தொக்கது. பின்னிரண்டடிக்கு வேறுவகையாக அந்வயித்துப் பொருளுரைப்பாரு முளர்;அது பொருந்துமாயிற் கொள்க. பழமையாவது - ஒருகாற்செய்த நட்பைப் பலகாலம் பாராட்டுந் தன்மை; இனி, பரம்பரையாகவரும் நற்குண மென்றுங் கொள்ளலாம். (சு)

உகஎ. கழுநீருட் காரடகே னுமொருவன்
விழுமிதாக் கொள்ளி னமிழ்தாம்—விழுமிய
குய்த்துவையார் வெண்சோறே யாயினு மேவாதார்
கைத்துண்டல் காஞ்சிரங் காய்.

(இ - ள்.) கழு நீருள் கார் அடகு ஏனும் - அரிசிகழுவிய நீரிற் சமைத்த கறுத்த இலைக்கறியே யாயினும், ஒருவன் - ஒருத்தன், விழுமிது ஆ கொளின் - சிறந்த அன்புடையதாக (க்கொடுக்க)ப்பெற்றால், அமிழ்து ஆம் - (அது) அமிருதம்போ லின்சுவையதாகும்; விழுமிய-சிறந்த, குய் - தாளித்த கறிகளோடும், துவை - துவையல்களோடுங் கூடி, ஆர் - நிறைந்த, வெள் சோறே ஆயினும் - வெண்மையான நல்லரிசிசசோறே யானாலும், மேவாதார் கைத்து உண்டல் - தன்னைச்சினேகியாதவரது கையிலுள்ளதை உண்ணுதல், காஞ்சிரம் காய் - எட்டிமரத்தின்காயைத் தின்பதுபோல இன்னாதாகும் ; (எ - று.)

இக்கவியின்கருத்தே கீழ்அதிகாரத்து சு, எ, க0, மூன்றுபாடல்களிற் கூறப்பட்டது.

கழுநீர்-கழுவுநீர்என்பதன்விகாரம்; வினைத்தொகை. சோறேயாயினும் என்றதிலுள்ள ஏகாரமும், உம்மையும் - உயர்வுசிறப்பு. கைத்து - பொருள் என்றபடி. (எ)

உகஅ. நாய்க்காற் சிறுவிரல்போ னன்கணிய ராயினு
மீக்காற் றுணையு முதவாதார் நட்பென்னுஞ் [ம்
சேய்த்தானுஞ் சென்று கொளல்வேண்டுஞ் செய்விளைக்கு
வாய்க்கா லனையார் தொடர்பு.

(இ - ள்.) நாய் கால் சிறு விரல் போல் - நாயின்கால்களிலுள்ள சிறிய விரல்கள்போல, நன்கு அணியர் ஆயினும் - மிகஅருகில் நெருங்கியுள்ளவரானாலும், ஈ கால் துணையும் உதவாதார் - ஈயின்காலளவாகிலும் உதவிசெய்யாதவர்களது, நட்பு - சினேகம், என் ஆம் - யாதுபயனுடைத்தாம்?[ஒரு பயனும் உள்ளதன் றென்றபடி]; செய் விளைக்கும்-கழனியைப்பயிர்விளையும்படி செய்கின்ற, வாய்க்கால் - நீர்க்காலை, அனையார் - ஒத்து மிகஉதவுபவர்களது, தொடர்பு - சினேகத்தை, சேய்த்து ஆனும்-தூரத்திலுள்ளதாயினும், சென்று கொளல் வேண்டும் - போய்ப் பெறவேண்டும் ; (எ - று.)

அணியராயினும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு. 'ஈக்காற்றுணையும்' என்ற உம்மை - இழிவுசிறப்பு. 'செய்த்தானும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு. ஈக்கால் என்றது, இங்கே சிறுமைக்கு எடுத்துக்காட்டுவதோரளவு; "ஈச்சிறகன்னதோர்தோலறினும்" என்றவிடத்து 'ஈச்சிறகு' போல. ஈ - பெயர்ச்சொல்; ஒருபறவை. செய் - கழனியாதலை 'நன்செய்,' 'புன்செய்' என வழக்கிலுங் காண்க. வாய்க்கால் - நீரோடும்கால். (அ)

உ௧௯. தெளிவிலார் நட்பிற் பகைநன்று சாதல்
விளியா வருநோயி னன்று—அளிய
விகழ்தலிற் கோற லினிதேமற் றில்ல
புகழ்தலின் வைதலே நன்று.

(இ - ள்.) தெளிவு இலார் நட்பின் - தெளிவான அறிவு இல்லாதவர்களுடன் கொள்ளுஞ் சிநேகத்தைக்காட்டிலும், பகை - (அவருடைய) விரோதம், நன்று - நல்லது; விளியா வரும் நோயின் - எவ்வுபாயத்தாலுந் தீராமல் நீடித்துவருகிற வியாதியைக்காட்டிலும், சாதல் - இறத்தல், நன்று - நல்லது; அளிய இகழ்தலின் - (ஒருவனது நெஞ்சம்) மிகப்புண்படும்படி நிந்தித்தலைக்காட்டிலும், கோறல் - கொல்லுதல், இனிது - நல்லது; இல்ல புகழ்தலின்-(ஒருவனிடத்து)இல்லாத குணங்களைச் சொல்லித் துதித்தலைக் காட்டிலும், வைதலே - திட்டுதலே, நன்று - நல்லது; (எ - று.)

மூடனுடையபகைமையாற் பெரும்பாலுந் துன்பமேஉண்டாகாது,ஒருகால் உண்டானாலும் அது எளிதில் ஒழித்தற்குக் கூடியதாயிருக்கும், அங்ஙனமன்றாயினும் அதனாலுண்டாகுந் தீங்கினும் அவனது நண்பினா லுண்டாகுந் தீங்குகள் மிகப்பலவாம் ஆதலின், 'தெளிவிலார்நட்பிற் பகைநன்று' என்றார். "சாதலினின்னாததில்லை" என்றபடி ஒருவனுக்கு எல்லாத்துன்பங்களினும் மிக்கதெனப்படுகிற மரணவேதனையைத் தீராதவியாதியினும் நன்று என்றது,ஆதாரமானஉடம்பு நீங்கியவாறே உயிர்க்குத்துன்பநுகர்ச்சி இன்றாமாதலின். மரணத்துன்பத்தினும் மிகுந்த துன்பத்தைத் தருவது நிந்தனை என்பது, மூன்றாம்வாக்கியத்தின் கருத்து. 'இல்லபுகழ்தலின் வைதலே நன்று' என்றது,இல்லாததைச்சொல்லிப்புகழ்தலின்இழிவை விளக்குதற்கு.

தெளிவு இலார் - ஆராய்ந்து தேறி நம்பப்படாதவ ரென்றுங் கொள்ளலாம். தெளிவு - தொழிற்பெயர். பகைமை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோயிற்று. விளியா - ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம்; பெயரெச்சமாகக்கொண்டு, மேல் அரு எனப் பதம்பிரித்து, நீங்காத அருமையான நோயென்றுங் கொள்ளலாம். மற்று - அசை. இல்ல - பெயர்.

அதிகாரம் நட்பாராய்த லாதலால், முதல்வாக்கியத்தை உபமேயமாகவும், மற்றைமூன்றையும் உபமானமாகவுங் கொள்க. (௯)

உ௨௦. மரீஇப் பலரோடு பன்னாண் முயங்கிப்
பொரீஇப் பொருட்டக்கார்க் கோடலே வேண்டும்
பரீஇ யுயிர்செகுக்கும் பாம்பொடு மின்னா
மரீஇப் பின்னைப் பிரிவு.

(இ - ள்.) பலரோடு - அநேகம்பெயருடனே, மரீஇ - சேர்ந்து, பல் நாள் - அநேகநாட்கள், மூயங்கி - கலந்து, பொரீஇ - (தம்குணமும் அவர் குணமும்) ஒத்து, பொருள் தக்கார் - நன்குமதிக்கும் பொருளாகத் தக்க வர்களை, கோடலே - சிநேகஞ்செய்துகொள்ளுதலே, வேண்டும் - தகுதி; பரீஇ - கடித்து, உயிர் செகுக்கும் - உயிரையொழிக்கின்ற, பாம்பொடும் - பாம்போடாயினும், மரீஇ - சிநேகஞ்செய்து,பின்னை பிரிவு - பின்பு அதனை விட்டுநீங்குதல், இன்னு - துன்பந்தருவதாம்; (எ - று.)

தூர்க்குணமுடையவரோடு சிநேகஞ்செய்து பிரிந்தாலும் மனவருத்த முண்டாமாதலால், பின்னொருகாலத்தும் பிரியவேண்டாதபடி முன்னமே ஒருவரிடத்துள்ள குணத்தைப் பழகிப்பார்த்தறிந்து சிநேகிக்கவேண்டுமெ ன்பதாம். இச்செய்யுளில் முந்தின வாக்கியத்திற் கூறிய சித்தாந்தத்திற் குப் பிந்தினவாக்கியத்திற் காரணங்காட்டி நிறுத்தினமையால், ஏதுவணி.

மருவி, பொருவி, பரிந்து என்னும் இறந்தகால வினையெச்சங் கள்-மரீஇ, பொரீஇ, பரீஇ என விகாரப்பட்டு அளபெடுத்தன; சொல்லி சையளபெடை. நான்காமடியில், மரீஇஇ - ஈரளபெடை; நான்குமாத் திரை. பொருட்டக்கார்-உபயோகமாகத் தக்கவர். பாம்பொடும், உம்மை- இழிவுசிறப்பு. இன்னு என்பதை இன்னுது என்பதன் ஈறுதொகுத்தலாக வாயினும், பிரிவு என்பதைப் பன்மை குறிக்கும் பால்பகாவஃறிணைப் பெய ராகவாயினுங் கொள்க. தக்கார்க்கோடல் என்பதில், உயர்திணையீற்று ரகர த்தின்முன் வன்மைமிக்கது, இரண்டாம்வேற்றுமைத்தொகை யாதலின்.

இச்செய்யுளில் நான்குஅடியிலும் எதுகையில் உயிரளபெடை வந்தது, அளபுத்தொடை.

"கூடிப்பிரியேல்," "இணக்கமறிந்திணங்கு" என ஔவையார் கூறியதும் இக்கருத்தேபற்றியாம். "விலங்கேயுந் தம்மோடுடனுறைதன் மேவுங், கலந் தாரைக் கைவிடுதலொல்லா—விலங்கருவி, தாஅயிழியுமலைநாடவின்றே, பேஎயோடானும்பிரிவு" என்னும் பழமொழிச்செய்யுள் நோக்கத்தக்கது.

"யஸ்யநஜ்ஞாயதே ஶீலம் ந குலம் ந ச ஸம்ஶ்ரயஃ - நதேநஸங்கதிம்குர் யாத்" என்னும் வடநூன்மேற்கோள் இங்குக் கவனிக்கத்தக்கது.

[தொல்காப்பியம்-எழுத்ததிகாரம்-நூன்மரபு-சு-கூ.] "நீட்டம்வேண்டி னவ்வள புடைய, கூட்டி யெழூஉத லென்மனார் புலவர்" என்னுஞ் சூத்திர வுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறுமாறு:—"அவ்வளபுடைய' எனப் பன்மையாகக் கூறியவதனான் இவரும் நான்குமாத்திரையுங் கொண்டார். என்னை? இவ்வாசிரியரை 'முந்துநூல்கண்டு' என்றாராகலின். மாபுராண த்து "செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபு,மையப்பாடின்றி யணையுமா—மைதீரொற், றின்றியுஞ் செய்யுட்கெடி னொற்றை யுண்டாக்கு, குன்றுமே லொற்றளபுங் கொள்" என்ற சூத்திரத்தான் அவர்கொண்ட நான்குமாத் திரையும் இவ்வாசிரியர்க்கு ஓதல்வேண்டுதலின். அது "தூஉஉத்தீம்புகைத் தொல்விசும்பு," "பேஎஎர்த்துக்கொல்," "செறாஅஅய்வாழியநெஞ்சு,"

"இலாஅஅர்க்கில்லைத்தமர்," "விராஅஅய்ச்செய்யாமைநன்று," "மரீஇஇப் பின்னைப்பிரிவு" எனச் சான்றோர்செய்யுட்களெல்லாம் நான்குமாத்திரை பெற்றுநிற்றலின். அன்றி, மூன்றுமாத்திரைபெற்றனவேல் ஆசிரியத்தளை தட்டுச் செப்பலோசை கெடுமாயிற்று. இங்ஙனம்அளபெடாதுநின்று ஆசிரியத்தளைதட்டுநிற்பன கலிக்குஉறுப்பாகிய கொச்சகவெண்பாக்கள் இவையல்லனவென்று உணர்க."—என்பது.

இனி, தொல்காப்பியத்துச் "செய்யுளியலில் நேரீற்றியற்சீர்" என்னுஞ் சூத்திரத்தின் (சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் அச்சிட்ட) உரையில் "உறூஉஅர்க்குறுநோ யுரைப்பாய் கடலைச், செறூஉஅய் வாழிய நெஞ்சு" எனவும், "கலாஅற் கிளிகடியுங் கானக நாட, விலாஅர்க் கில்லைத் தமர்" எனவும் தளைவகையின்றி வந்தன' என்றும், "தரவும் போக்கும்"என்ற சூத்திரத்தின் உரையில் 'இங்ஙனம் பாவேறுபடாமையினன்றே "உறூஉஅர்க்குறு நோ யுரைப்பாய் கடலைச், செறூஉஅய் வாழிய நெஞ்சு" என்பதை வெண்பா என்பாமாயிற்றென்பது' என்றும் காணப்படுவதை உற்றுநோக்குமிடத்து, செய்யுளியலுக்கு ௸ பிள்ளையவர்கள் அச்சிட்டுள்ள உரை "நீட்டம் வேண்டின்" என்னுஞ் சூத்திரத்தின் நச்சினார்க்கினியருரையோடு மாறுபடுதலின், அவர்கள் அச்சிட்டுள்ள செய்யுளியலுரை நச்சினார்க்கினியருரையல்லவென்று ஊகிக்கப்படுகின்றது. (௧0)

---

## உ௫ - ஆம் அதிகாரம்.—நட்பிற்பிழைபொறுத்தல்.

அஃதாவது-தம்மாற் சிநேகிக்கப்பட்டாரிடத்து உள்ளனவாகும் பிழைகளைப் பொறுத்தல். ஆராய்ந்து சிநேகிக்கப்பட்டாராயினும், பொறுக்கப்படுங் குற்ற முடையராதலாலும் விதிவசத்தாலும் உரிமையாலும் அந்நட்டார் தமக்குப் பிழைகளைச் செய்தல் கூடும்; அவற்றைப்பொறுப்பது அவரைச் சிநேகஞ்செய்தாரது கடமையாம்; ஆதலின், இவ்வதிகாரம் நட்பாராய்தலின்பின் வைக்கப்பட்டது. நட்பு - நட்டார்க்குத் தொழிலாகுபெயர். பிழை-முதனிலைத்தொழிற்பெயர். திருக்குறளில் 'நட்பாராய்தல்' என்னும் அதிகாரத்தின்பின் 'பழமை' என்னும்அதிகாரத்தை வைத்ததற்குப் பரிமேலழகர் இக்காரணமே கூறிப்போந்தவாறு காண்க.

**உ௪௧.** நல்லா ரெனத்தா நனிவிரும்பிக் கொண்டாரை
யல்லா ரெனினு மடக்கிக் கொளல்வேண்டு
நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு
புல்லிதழ் பூவிற்கு முண்டு.

(இ - ள்.) நல்லார் என தாம் நனி விரும்பி கொண்டாரை - நற்குண நற்செய்கையுடையாரென்று ஆராய்ந்தறிந்து தெளிந்து தம்மால் மிகவிரும்பிச் சிநேகஞ்செய்துகொள்ளப்பட்டவரை, அல்லார் எனினும் - (பின்புஒருகாலத்தில் முன்பு தாம் தேறியபடி) நற்குண நற்செய்கை யுடையவரல்லாதவ ரென்று கண்டாலும், அடக்கி கொளல் வேண்டும் - (அவர்குற்றங்களைப்

பிறர் அறியக் கூறி வெளிப்படுத்தாமல் தம்மனத்திலேயே)அடக்கிவைத்துக் கொள்ளுதலே தகுதி; (ஏனெனில்),—நெல்லுக்கு உமி உண்டு-(யாவராலும் உணவின்பொருட்டு மிகவிரும்பிக்கொள்ளப்படுகிற)நெல்லுக்கும் (பயனற்ற) அதன்உமியாகிய குற்றம் உள்ளது; நீர்க்கு நுரை உண்டு - (யாவராலும் பானத்தின்பொருட்டு மிகவிரும்பி நாடியடையப்படுகிற) நீருக்கும் நுரையா கியகுற்றம் உள்ளது; பூவிற்கும் புல் இதழ் உண்டு - (சிறப்புடைய) மலருக் கும்(பயனற்ற)அதனைமேல்தழுவியுள்ளபுறவிதழாகியகுற்றம்உள்ளது;(எ-று.)

பல சிறந்த குணங்களையுடைய உயர்ந்த பொருள்களிலுஞ் சில குற் றங்க ளிருக்கை உலகவியல்பே யாதலாலும்,"குற்றம்பார்க்கிற்சுற்றமில்லை" என்றபடி ஒவ்வொருவரிடத்துங் குற்றத்தையே நோக்கினால் நண்பரில்லை யாகு மாதலாலும், தம்மாற்சினேகிக்கப்பட்டாரிடத்துப் பின்பு காணப்படுங் குற்றங்களையெல்லாம் பாராட்டாமல் அவரிடத்துள்ள குணங்களையே முக் கியமாகக் கொள்ளவேண்டு மென்பதாம். அடக்கிக்கொளல் - இரகசியத் தில் அவர்க்குத் தாம் அறிவுகூறி அவர்களை அடங்கச்செய்து வைத்துக் கொள்ளுதல் என்றும் உரைகூறலாம்.

பின்னிரண்டடிகளிற்கூறிய மூன்றுஉபமானங்கள் எத்தனைநற்குணமு டையாரிடத்துங் குற்றங்கள் காணக்கூடு மென்ற உபமேயத்தை விளக்கு தலால், பிறிதுமொழிதல் என்னும் அலங்காரம்; வடநூலார் அப்ரஸ்துதப்ர சம்ஸை என்பர்.

விருத்திராசுரனை வதைத்ததனால் இந்திரனைத்தொடர்ந்த பிரமகத்தி யைத் தொலைக்கும்பொருட்டு அவன் அசுவமேதயாகஞ்செய்து திருமாலைப் பூசிக்கவே,அப்பிரமகத்தி தேவர்கள்நியமனத்தின்படி நான்குகூறாய்ப்பிரிந்து ஒன்றினால் வெள்ளம்புரண்டுவரும் ஆற்றிலும், மற்றொன்றாற் சவட்டுநிலத்தி லும், வேறொன்றாற் பருவம்வந்த பெண்களிடத்தும், இன்னொன்றால் வதை செய்பவரிடத்துஞ் சென்றிருக்கிற தென்றும், வெள்ளத்தில் நுரையாகிய பகுதியே அக்கொலைப்பாவத்தின் வடிவ மென்றும் நூல்களிற் கூறப்படுகிற வரலாற்றால், நீருக்கு நுரை குற்றமாதல் அறிக. "மங்கலமாகி யின்றியமை யாதி, யாவருமகிழ்ந்து மேற்கொள மெல்கிப், பொழுதின் முகமலர்வுடை யது பூவே" இதனால், பூவின் சிறப்பை அறிக.

நனி - விசேடித்தஉரிச்சொல். இரட்டுறமொழிதலென்னும் உத்தியால், புல்லிதழ் என்பதற்கு - பண்புத்தொகையாய், இழிவான இதழென்றும்; வினைத்தொகையாய், தழுவியுள்ள இதழென்றும் ஒருங்கு உரைகொள்ளப் பட்டது: முறையே புன்மையான இதழென்றும், புல்லிய இதழென்றும் விரி யும். மேல் நன்றியில்செல்வம் என்னும் அதிகாரத்து கூ - ஆம் பாட்டிலுள்ள "நாறுத்தகடு" என்பதனோடு ஒப்பிடத்தக்கது. பூவிற்கும் என்ற உம்மை - இறந்ததுதழுவியது. "எஞ்சுபொருட்கிளவி செஞ்சொலாயிற், பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்" என்ற தொல்காப்பியவிதியால், உம்மை யில்லாத சொற்கள் முன்னும், உம்மையுள்ள சொல் பின்னும் வைக்கப் பட்டன. இனி, உயர்வுசிறப்பும்மையாகக்கொண்டு, நெல்லுக்கு நீர்க்கு என்பவற்றோடுங் கூட்டலாம். (க)

உஉஉ. செறுத்தோ றுடைப்பினுஞ் செம்புனலோ டூடார்
மறுத்துஞ் சிறைசெய்வர் நீர்நசைஇ வாழ்நர்
வெறுப்ப வெறுப்பச் செயினும் பொறுப்பரே
தாம்வேண்டிக் கொண்டார் தொடர்பு.

(இ - ள்.) செறு தோறு உடைப்பினும் - (தாங்கள்) அடைக்குந்தோறும் உடைத்துக்கொண்டு போவதாயினும், செம் புனலோடு ஊடார் - நல்லநீரு டனே சிறுகோபமுங் கொள்ளாதவர்களாய், நீர் நசைஇ வாழ்நர்-தண்ணீ ரைப் பயன்படுத்த விரும்பி வாழ்பவர்கள், மறுத்தும் சிறைசெய்வர்-மறுபடி மறுபடி அணைகோலி (அந்நீரை)க் கட்டிவைப்பார்கள் : (அதுபோலவே),— வெறுப்ப வெறுப்ப செயினும் - வெறுக்கத்தக்க குற்றமான காரியங்களை (ஒருவர்)வெறுப்புண்டாம்படி மிகுதியாகச் செய்துவந்தாலும், தாம் வேண்டி தொடர்பு கொண்டார் பொறுப்பர் - தாம் விரும்பிச் சினேகஞ் செய்து கொண்டவர் (அவரைப் பிழை) பொறுப்பர்; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி. செறு தோறு - அடக்குந்தோறும்: செறுத்தல் - அடக்குதல். செறு தோறு - வினைத்தொகை; தொறுஎன்பதன் நீட்டல்விகாரமான தோறு என்பது இடைச்சொல்லாயினும் பெயர்ச்சொல் தன்மைப்பட்டுநிற்றலால், செறுஎன்னுங் காலங்கரந்தபெயரெச்சம் அதனைக் கொண்டது. வினைத்தொகை உகரமுன்னர் இயல்பாதற்குரிய இது 'செறுத்தோறு' என வருமொழிமுதல்வலி மிக்குவந்தது, சந்தவின்பப்பொருட்டு. உம்மைஇரண்டும் - இழிவுசிறப்பு ; மறுத்தும், உம்மை - இறந்தது தழுவிய எச்சம். சிறைசெய்தல் - புறத்துச்செல்லவொட்டாது தடுத்தல். நசைஇ-சொல்லிசையளபெடை. வெறுப்ப என்னுஞ் சொல் இரண்டனுள், முன்னது-எதிர்காலப் பலவின்பால் வினையாலணையும் பெயர் ; பின்னது-செயவெனெச்சம், காரியப்பொருளது. இரண்டையும் எச்சமாகவே கொண்டு, துன்பங்களை யென வருவித்து, மிகுதிப்பொருளில்வந்த அடுக்கெனினுமாம். இரண்டையும், பலமுறைசெய்தலாகிய பொருள்நிலையில் வந்த பலவின்பாற்பெயரின் அடுக்காகக் கொள்ளலாகாது, 'வெறுப்பசெயின்' என அஃறிணைப்பன்மைப் பெயர்முன் வருமொழிமுதல்வலி இயல்பாகவேண்டு மாதலால். (உ)

உஉ௩. இறப்பவே தீய செயினுந்தன் னட்டார்
பொறுத்த றகுவதொன் றன்றோ—நிறக்கோங்
குருவ வண்டார்க்கு முயர்வரை நாட
வொருவர் பொறையிருவர் நட்பு.

(இ - ள்.) நிறம் கோங்கு - நல்லநிறமுள்ள கோங்குமரத்தின் மலர்களிலே, உருவம் வண்டு - அழகிய வடிவமுடைய வண்டுகள், ஆர்க்கும் - ஒலித்தற்கிடமான, உயர் வரை - உயர்ந்த மலைகளையுடைய, நாட - நாட்டையுடையவனே!—தன் நட்டார் - தனதுசினேகிதர், இறப்பவே தீய செயினும் - மிகவுந் தீங்குகளையே செய்தாராயினும், பொறுத்தல் - (அப்பிழை

களைப்) பொறுத்தல், தகுவது ஒன்று அன்றோ - (பெருமைக்குணமுடையார்க்குத்) தகுந்திருப்பதொரு காரியமன்றோ?(எனெனில்),—ஒருவர்பொறை இருவர் நட்பு - ஒருத்தர் (ஒருத்தருடைய பிழையைப்) பொறுத்திடுதலே இரண்டுபேரது சிநேகத்துக்குக் காரணமாகும் (ஆதலால்); (எ - று.)

ஏதுவணி. "ஒருவர்பொறை யிருவர்நட்பு" என்னுஞ் சொற்றொடர், "தந்தீமையில்லாதார் நட்டவர்தீமையையு, மெந்தீமையென்றே யுணர்பதா-மந்தண், பொருதிரை வந்துலாம் பொங்குநீர்ச் சேர்ப்ப, வொருவர்பொறை யிருவர் நட்பு" என்ற பழமொழிச்செய்யுளிற் பயின்றுள்ளது. காரணமாகிய பொறுத்தற்குணம், காரியமாகிய சிநேகமாக உபசரிக்கப்பட்டது. இறப்ப - வரம்புகடக்க; இறஎன்னும்பகுதியினடியாப்பிறந்த செயவெனெச்சம். தீய - பெயர். உம்மை - இழிவுசிறப்பு. அன்றோ - தேற்றம். கோங்கு-மரப்பெயர், அதன்சினையான மலருக்கு முதலாகுபெயர். உயர்வரை - ஓங்கின மலை. சிறந்தமலை; இரட்டுற மொழிதல். இது உயர்ந்த உயர்கிற உயரும் எனக் காலந்தோன்ற நிற்றலால், வினைத்தொகை; இதனால் உயர்வாகிய மலையெனப் பண்புத்தொகையாகாது. (௩)

௨௨௪. மடிதிரை தந்திட்ட வான்கதிர் முத்தங்
கடுவிசை நாவாய் கரையலைக்குஞ் சேர்ப்ப
விடுதற் கரியா ரியல்பிலரே னெஞ்சஞ்
சுடுதற்கு மூட்டிய தீ.

(இ - ள்.) மடி திரை தந்திட்ட - மடிந்துவிழுகின்ற அலைகள் கொணர்ந்துகொழித்திடுகின்ற, வான் கதிர் முத்தம் - சிறந்த ஒளியையுடைய முத்துக்களை, கடு விசை நாவாய் - மிகுந்த வேகத்தையுடைய மரக்கலங்கள், கரை அலைக்கும் - கரைகளிலே அலையச்செய்து தள்ளுகின்ற, சேர்ப்ப - கடல்துறையையுடைய பாண்டியனே!—விடுதற்கு அரியார் - (சிநேகம்)விடுதற்குக் கூடாதவர்கள், இயல்பு இலரேல் - இயற்கையான நற்குணம் இல்லாதவராயின், (அவர்), நெஞ்சம் சுடுதற்கு மூட்டிய தீ - (தமது) மனத்தை எரிப்பதற்கு மூட்டப்பட்ட நெருப்பை யொப்பர்; (எ - று.)

கூடிப்பிரிதல் கூடாதாயினும், சிநேகிக்கப்பட்டவர் நற்குணமில்லாமல் துர்க்குணமுடையராயிருந்தால் மனத்திற்கு மிக்கதுன்பமேதரும்; ஆதலின், சிநேகிக்கப்பட்டவர் தம்மாற்கூடியவளவு தவறின்றியொழுகவேண்டுமென்பதாம்.

'விடுதற்கரியார்' என்னும் பிரயோகம் மேல் உ௨௬ - ஆஞ் செய்யுளிலும், இந்த அர்த்தமுள்ள 'விடற்பாலரல்லார்' என்னும் பிரயோகம் அடுத்தசெய்யுளிலும் வருதல்காண்க. நாவாய் - நௌ: என்னும் வடமொழியின் சிதைவென்பர். கடலில் முத்து - சிப்பி சங்கு முதலியவற்றிலிருந்து உண்டானவையும், ரத்நாகரமானதால் இயற்கையிலே உள்ளவையும். செயற்கையான நற்குணம் சிறிதுகாலம் இருக்குமேயன்றி நீடித்து நில்லாதாதலால், 'இயல்பு' எனப்பட்டது. சுடுதற்கு - எதிர்காலவினையெச்சம்; இனி, இச்சொல்லை, சுடுதலென்னுந் தொழிற்பெயரின்மேற் பொருட்டுப்பொரு

னில்வந்த நான்காம்வேற்றுமையாகக் கொள்ளலாகாது: இச்சொல் எதிர்கா லங்காட்டுதலாலும், தொழிற்பெயர் பெரும்பாலும் காலங்காட்டாமையாலு மென்க. கடு - கடி யென்னும் உரிச்சொல் ஈறுதிரிந்தது. (ச)

உஉரு. இன்னா செயினும் விடற்பால ரல்லாரைப்
பொன்னாகப் போற்றிக் கொளல்வேண்டும்—பொன்னொடு
நல்லிற் சிதைத்ததீ நாடொறு நாடித்த
மில்லத்தி லாக்குத லால்.

(இ - ள்.) இன்னா செயினும் - துன்பங்கள்பலவற்றைச் செய்தாராயினும், விடல் பாலர் அல்லாரை - விடத்தக்கவரல்லாதவரை, பொன் ஆக போற்றி கொளல் வேண்டும்-பொன்னைப்போலவேநினைத்து விரும்பி நன்கு மதித்து மேன்மையாகக் கொள்ளுதல் தகுதி; (ஏனெனின்),—பொன்னொடு நல் இல் சிதைத்த தீ - பொன் முதலிய நற்பொருள்களுடனே (ஒருவருடைய) சிறந்தவீட்டையும் எரித்தழித்திட்ட நெருப்பை, நாள் தொறும் நாடி தம் இல்லத்தில் ஆக்குதலால் - தினந்தோறும் விரும்பி (அவர்) தமது வீட்டில் வளர்த்துவைத்தலால்; (எ - று.)

இந்தச்செய்யுளின் முதலடியோடு வருஞ்செய்யுளின் முதலடி ஒப்பு நோக்கத்தக்கது.

நன்மைதீமைபாராது அகப்பட்டவையெல்லாவற்றையும் எரித்தழிக்கும் இயல்பினதாகிய நெருப்பையும் சமைத்தல் விளக்கெரித்தல் முதலிய பிரயோசனங்களின்பொருட்டு உலகத்தில் எல்லோரும் தமதுவீடுகளில் பல இடத்தும் சேர்த்திருக்கவில்லையா? அதுபோலவே, சிலகாலம் துன்பஞ்செய்வாராயினும் பிறகாலத்து உதவிசெய்தல்நோக்கி அவரோடு பிழைபாராது பொறுத்துச் சிநேகிக்கவேண்டு மென்பதாம். நெருப்பை உபமானமாகக் கூறினமையின், துர்க்குணமுடையாரோடு மிகநெருங்காமலும் விட்டுநீங்காமலும் பழகவேண்டு மென்றவாறும்.

பொன் - சிறந்தபொருள்களுக் கெல்லாம் உபலட்சணம். இன்னா - இனிமையென்னும் பண்பினடியாய்ப் பிறந்த எதிர்மறைப் பலவின்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்.

முன்பாட்டில் "நெஞ்சஞ் சுடுதற்கு மூட்டிய தீ"என்றமையின் - யாவரும் அஞ்சுவா ரெனக் கருதி, தீயைச் சேர்த்தல்போல அவரையுஞ்சேர்த்தல்வேண்டுமென்ற இப்பாட்டை அடுத்திருக்கவைத்தார்.

"அப்ரியாண்யபிகுர்வாணோயஃப்ரியஃப்ரியஏவஸஃ - தக்தமந்திரஸாரேபி கஸ்யவஹ்நாவநாதரஃ" என்பது, இதற்குச் சேர்ந்த வடநூன்மேற்கோள்.

உஉசு. இன்னா செயினும் விடுதற் கரியாரைத்
துன்னாத் துறத்த றகுவதோ—துன்னருஞ்சீர்
விண்குத்து நீள்வரை வெற்ப களைபவோ
கண்குத்திற் றென்றுதங் கை.

(இ - ள்.) துன் அரு சீர் - (பிறவிடத்துச்) சேர்தற்கருமையான சிறப்புக்களைத் தம்மிடஞ் சேரப்பெற்றுள்ள, விண் குத்தும் நீள் வரை - ஆகாயத்தைக் குத்துகின்ற நீண்ட மூங்கில்களையுடைய, வெற்ப - மலைகளையுடைய பாண்டியனே!—கண் குத்திற்று என்று தம் கை களைபவோ-தமது கண்ணைக் குத்திவிட்டதென்ற காரணத்தால் தமது கையை வெட்டியொழிப்பார்களோ? [உலகத்தில் எவரும் ஒழிக்கமாட்டாரன்றோ?], (அதுபோலவே), இன்னா செயினும் - துன்பங்களைச்செய்தாலும், விடுதற்கு அரியாரை-விடத்தகாதவர்களை, துன்னா துறத்தல் - சேர்க்காமல் விட்டிடுதல், தகுவதோ - தகுந்ததொரு காரியமாகுமோ? [ஆகா தென்றபடி]; (எ - று.)

இது - எடுத்துக்காட்டுவமையணி. கையைத் திருஷ்டாந்தமாகக்காட்டினமையின், அவர் தமக்கு அங்கமாகுபவ ரென்க. தமக்குக் கண் உவமை கூறப்பட்டதனால், தம்மையும் ஓர் அங்கமாகவே கருதுக வென்றபடியாம். இங்குக்கூறிய உவமையால், தமது அவயவங்களுள் ஒன்றில் மற்றொன்று அஜாக்கிரதையினாற் பட்டு அதற்கு வருத்தத்தை யுண்டாக்கினால் அதற்காக அவ்வருத்தும் உறுப்பைக் கோபித்துக் களைபவ ரில்லாமைபோல ஒருவர் மற்றொருவர்க்குச் சோர்வினால் தீங்கிழைத்தால் அதற்காக அவரை யழிப்பது தகுதியன்று என்பது பெறப்பட்டது.

வரையென்னுங் கணுவின்பெயர் - மூங்கிற்குச் சினையாகுபெயர். களைப - பலர்பால் முற்று : ஓ - எதிர்மறை. (சு)

உஉஎ. இலங்குநீர்த் தண்சேர்ப்ப வின்னா செயினுங்
கலந்து பழிகாணார் சான்றோர்—கலந்தபின்
றீமை யெடுத்துரைக்குந் திண்ணறி வில்லாதார்
தாமு மவரிற் கடை.

(இ - ள்.) இலங்கு நீர் தண் சேர்ப்ப - விளங்குகிற நீரையுடைய குளிர்ந்த கடல்துறையையுடைய பாண்டியனே!—இன்னா செயினும்-(தமக்குத்) துன்பங்கள்பலவற்றைச் செய்திட்டாலும், சான்றோர்- (நற்குணநற்செய்கைகளாலும் கல்விகேள்விகளாலும்) மிக்க பெரியோர், கலந்து பழி காணார் - (ஒருவரைச்) சிநேகித்து அதன்பின் (அவரிடமுள்ள) குற்றத்தைப் பாராட்டமாட்டார் ; கலந்த பின் தீமை எடுத்து உரைக்கும் - சிநேகித்தபின்பு (அவரது) குற்றங்களை வெளிப்படுத்துக் கூறுகின்ற, திண் அறிவு இல்லாதார்- உறுதியான அறிவு இல்லாதவர்கள், தாமும் அவரின் கடை - தாங்களும் (தங்களுக்குத்தீங்குசெய்யும்) அவர்போலவே கடைப்பட்டவராவர்; (எ-று.)

கீழ்மக்களினும் மேன்மக்களுக்கு உள்ள சிறப்பு அவரிடமுள்ள குற்றங்களை ஒருபொருளாக நோக்காது பொறுத்தலே யாதலால், மேன்மக்கள் அங்ஙனஞ் செய்யாராயின் தாமும் கீழ்மக்களாய்விடுவ ரென்பதாம்.

தாம் அறிவுடையராயிருந்தும் கற்றறிமூடராய்க் குற்றங்காணுதலால், அவரிற்கடை என்பதற்கு-அவர்களினுங் கடைப்பட்டவர் என்றும் உரைக்கலாம். சிறியோர்க்குக் குற்றஞ்செய்தல் இயல்பு; பெரியோர்க்கு அதுபொறுத்தல் இயல்பு: ஆகவே, சிறியோர் தம்இயல்பாற் செய்த குற்றங்களைப்

பெரியோர் தம்இயல்பாற் பொருராயின், இயல்புகெட்டு அவரினும் இழிவுடையராவ ரெனக் காண்க. நண்பர்க்குத்தீங்குசெய்யும் அவிவேகம்போல் வதே அவரிடத்துஉள்ள குற்றத்தை யெடுத்துரைக்கும் அவிவேகமு மென்க.

இலங்கு நீர் - விளங்குந் தன்மையுள்ள என்றும் உரைக்கலாம்; நீர் - நீர்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோயிற்று. பழி - பழிக்கப்படுவது; செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்டபெயர். தீமை - பண்புப்பெயர். தாமும், உம்மை-எச்சப்பொருளது;பிறர்க்குத் தீங்குசெய்யாத தாமும் என உயர்வுசிறப்பாகவுமாம். கடை - அதமரென்றபடி; கடையர்க்கு ஆகுபெயர்.

உஉஎ. ஏதிலார் செய்த திறப்பவே தீதெனினு
நோதக்க தென்னுண்டா நோக்குங்காற்—காதல்
கழுமியார் செய்த கறங்கருவி நாட
விழுமிதா நெஞ்சத்து ணின்று.

(இ - ள்.) கறங்கு அருவி நாட - ஒலிக்கின்ற மலையருவிகளையுடைய நாட்டையுடையவனே!—ஏதிலார் செய்தது-அயலார்செய்தது, இறப்பவே தீது எனினும் - மிகவுந் தீமையைத் தருவதேயானாலும், நோக்குங்கால் - (விதியை) ஆராய்ந்துபார்க்குமிடத்து, நோதக்கது என் உண்டு ஆம் - வெறுக்கத்தக்கது யாதுஉள்ளதாம்? [ஒன்றுமில்லை யென்றபடி];(ஆகவே),காதல் கழுமியார் செய்த-அன்புமிகுந்தவர் செய்த தீங்குகள், நெஞ்சத்துள் நின்று-மனத்தில்நின்றால் [ஆராய்ந்து எண்ணினு லென்றபடி], விழுமிதுஆம்-சிறப்புடையதாய்விடும்; (எ - று.)

அயலார் செய்த குற்றமே ஆலோசிக்குமிடத்து வெறுக்கத்தகாத தென்றால், நண்பர் செய்தது பிரியமாகுமென்னத் தட்டில்லை யென்பதாம். கீழ்ச் சிலபாடல்களால், நண்பர் அறிவில்லாமையாற் செய்யுங் குற்றங்களைப் பொறுத்தல் கூறப்பட்டது; இப்பாட்டில், விதிபற்றி அவரால்நிகழுங் குற்றத்தைப் பொறுத்தல் உணர்த்தப்பட்டது.

செய்த - பெயர். செய்த விழுமிதாம் - பன்மையொருமைமயக்கம்; தனித்தனி விழுமியதாகுமென்க. இனி, செய்தது என்பதன் ஈறுதொகுத்தலாகவுங் கொள்ளலாம். நோதற்குத்தக்கது, நோதக்கது. நோ - முதனிலைத்தொழிற்பெயர் ; நான்காம்வேற்றுமைத்தொகை. ஆம் - அசைநிலைப்பொருளது. நிற்ப என்பது, நின்று எனத் திரிந்தது; "வானின்றுலகம் வழங்கிவருதலால்"என்னுந் திருக்குறளிற்போல. விழுமிதா எனப் பிரித்து, துன்பந்தருவதா ? [அன்று] என்றும் உரைக்கலாம்; "விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்" ஆதலின். (அ)

உஉகூ. தமரென்று தாங்கொளப் பட்டவர் தம்மைத்
தமரன்மை தாமறிந்தா ராயி னவரைத்
தமரினு நன்கு மதித்துத் தமரன்மை
தம்மு ளடக்கிக் கொளல்.

(இ - ள்.) தமர் என்று தாம் கொள்ளப்பட்டவர்தம்மை - தமது நண்பினரென்று தம்மால் அபிமானித்துச் சிநேகஞ் செய்துகொள்ளப்பட்

டவர்களை, தமர்அன்மை தாம் அறிந்தார் ஆயின் - தமதுநண்பரென்று கொள்ளுவதற்குஏற்ற குணமுடைய ரல்லாதவராகத் தாம் (பின்பு) அறிந்தாரானால், அவரை தமரினும் நன்கு மதித்து - அவர்களைத் தமது உண்மையான நண்பரினும் மேன்மையாகக் கொண்டு கௌரவித்து, தமர் அன்மை தம்முள் அடக்கிக்கொளல்-(அவர்களிடங்காணப்பட்ட) தமராதற் கேலாத தன்மையைத் தமதுமனத்தினுள்ளேயே அடக்கிவைத்துக்கொள்க.

தமரினும் நன்குமதித்தல் - அவர்கள் தமதுகுணத்தை நோக்கியாயினும் தம்தம்குற்றம் ஒழிதற்பொருட்டும் தம்மிடம் அவர்கள் மேன்மேற் குற்றஞ்செய்திடாமைப் பொருட்டு மென்க. தமரன்மை - தமரல்லாதவர்; பண்பாகுபெயர். இனி, உருபுமயக்கமாய், கொள்ளப்பட்டவர்தம்மை என்பதற்கு - கொள்ளப்பட்டவரிடத்து என்றும் உரைக்கலாம். கொளல் - அல் விகுதி பெற்ற வியங்கோ ளுடன்பாட்டு முற்று; "பயனில்சொற் பாராட்டு வானை—மக்கட்பதடி யெனல்" என்ற திருக்குறளில்'எனல்'என்பது போல.

இப்பாட்டில் 'தமர்' என வந்த சொல்லும் பொருளும் மீண்டும் பலவிடத்து வந்தமையால், சொற்பொருட்பின்வருநிலையணி. (க)

உ௯0. குற்றமு மேனைக் குணமு மொருவனை
நட்டபி னாடித் திரிவேனே—னட்டான்
மறைகாவா விட்டவன் செல்வுழிச் செல்க
வறைகடல்சூழ் வைய நக.

(இ - ள்.) ஒருவனை நட்டபின் - ஒருத்தனைச் சினேகித்தபின்பு, குற்றமும் ஏனை குணமும் நாடி திரிவேனேல் - (அவனிடத்திலுள்ள) குற்றங்களையும் (அவற்றிற்கு எதிரிடையான ) குணங்களையும் ஆராய்ந்து திரிவேனானல், (யான்), அறை கடல் சூழ் வையம் நக - ஒலிக்கின்ற கடல்சூழ்ந்த நிலவுலகத்தார் யாவரும் (என்னை இகழ்ந்து) சிரிக்கும்படி, நட்டான் மறை காவா விட்டவன் செல்வுழி செல்க-சினேகிதனது இரகசியத்தை அடக்கி வைத்துக்காவாமல் வெளியிட்டுவிட்ட பாவி செல்லுங் கதியிற் செல்வேனாக.

இச்செய்யுள், நட்பிற்பிழைபொறுக்கும் இயல்புறுதியை யுடையானொருவன் செய்யுஞ் சபதமூலமாக அக்குணத்தின் கடமையை வெளியிட்டவாறு.

வெளியிட்டால் நேசித்தவனுக்குத் துன்பந்தரக்கூடிய இரகசியங்களை வெளிப்படுத்தினவனுக்கு நேரும் நரகமே ஒருவனைச்சினேகித்தபின் அவனதுகுற்றங்களைப் பாராட்டுபவனுக்கும் நேர்வதென்பதாம். எனவே, இரண்டும் ஒத்த பெரும்பாவ மென்றபடி. நட்டபின் குற்றமும் குணமும் நாடித்திரிதல் தகா தென்றமையின், நட்பதற்குமுன்னமே இவற்றை ஆராய்ச்சி செய்யவேண்டு மென்றும், நட்புச்செய்தபின் குற்றங்களையும் குணமாகவே கருதவேண்டு மென்றும் கூறியபடியாம்.

மறை - மறைத்தற்குஉரியது, (பிறர்க்கு அறியப் படாமல்) மறுக்கத் தக்கது. செல்க - வியங்கோள்முற்று; இங்கே, தன்மையொருமைக்கு வந்தது. வையம் - எல்லாப்பொருள்களையும் வைக்குமிடமெனக் காரணப் பெயர்; இங்கே இடவாகுபெயர். (௧0)

## ௨௪ - ஆம். அதிகாரம்—கூடாநட்பு.

அஃதாவது - திரிகரணங்களுள் உள்ளே மனத்தாற் கூடாமலிருந்தே வெளியே சொற்செயல்களாற் கூடியொழுகுவாரது சிநேகம். கீழ் நண்பர் செய்த பிழைகளைப் பொறுத்தல் வேண்டுமெனக் கூறி, இங்கே, பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாகிய நட்புக் கூறுகின்றமையின், இது அவ்வதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது; திருக்குறளிலும் பழமையென்னும் அதிகாரத்தின்பின் தீநட்பு கூடாநட்பு என்னும் அதிகாரங்களை வைத்தவாறு காண்க. இனி, இதற்கு-குடிப்பிறப்பாலும் குணத்தாலும் ஒழுக்கத்தாலும் மனத்தாலும் அறிவுடைமையாலும் பிறவாற்றாலும் தமது நெஞ்சுக்குப் பொருந்தாதவரைச் சிநேகஞ்செய்யலாகாதென்பதை யுணர்த்துவ தென்றும் பொருள்கொள்ளலாம்.

௨௩௧. செறிப்பில் பழங்கூரை சேறணை யாக
இறைத்துநீ ரேற்றுங் கிடப்பர்—கறைக்குன்றம்
பொங்கருவி தாழும் புனல்வரை நன்னாட
தங்கரும முற்றுந் துணை.

(இ - ள்.) கறை குன்றம் - கறுப்பான மலைகளினின்று, பொங்கு அருவி தாழும் - மிகுந்த அருவிகளாகப் பெருகுகின்ற, புனல் வரை - நீரெல்லையையுடைய, நல் நாட - சிறந்த நாட்டையுடைய பாண்டியனே!—செறிப்பு இல் பழங் கூரை - கட்டுக்கோப்பில்லாத பழையகூரைவீட்டிலே, (மழைக்காலத்தில்), சேறு அணை ஆக - சேற்றினால் அணை உண்டாக (ச்செய்து), (நீர்) இறைத்தும் - (அதனுள்ளேவிழுந்த) நீரை (வெளியிலே) இறைத்தும், நீர் ஏற்றும் - (மேல்விழும்) நீரை (அங்ஙனம்விழவொட்டாமற் கையினாலும் பாத்திரங்களினாலும்) ஏற்றும், தம் கருமம் முற்றும் துணை - தங்கள்காரியம் முடியுமளவும், கிடப்பர் - (சிலர் அதிலே) வாசஞ்செய்திருப்பர்; (எ - று.)

சிலர் தமதுஇயற்கைநற்குணத்தினாலல்லாமல் தங்கள்காரியம் நிறைவேறுதற்பொருட்டு அதுவரையில் மிகத்தாழ்ந்த நிலைமையில் இருப்பதாக வெளிக்குக்காட்டுவேது உண்டு; அப்படிப்பட்டவர்கள்சிநேகம் நம்பிக் கொள்ளத்தக்கதன்று என்பதாம்.

செறிப்பு - அமைதி; தொழிற்பெயர். கூரை - இழிவான மேற்புறத்தையுடைய சிற்றில். அணை - நீரைத்தடுக்குஞ் செய்கரை. குன்றம், அம்-சாரியை. வரை - மலை யென்றால், குன்றம் - அதன்சிகர மென்க. கருமம்-கர்மம்; வடசொல்.

இனி, இப்பாட்டிற்கு - பழுதுபட்ட கூரைவீட்டிலுள்ளவர் மழைபெய்கையில் அதற்குப் பழுதுவாராமற் பலவகையாலுங் காத்துநிற்பது போலச் சிநேகிதரதுகாரியம் முடியுமளவும் அதனைப் பலவகையாலும் முயன்றுகாத்திடுபவரே சேவிக்கத்தக்கவர் பிறரல்லர் என்றும், மழைவருமுன்னமே பழுதுபட்டவீட்டைச் செவ்வைசெய்துகொள்ளாமல் வந்தபொழுது வருந்துகின்றவர் போல வருமுன்காப்பவரல்லாமல் வருங்காலும் வந்தபின்புங் காப்பவர் நட்கப்படாதவ ரென்றுங் கருத்துக்கொள்வாரு முளர்.

நீர்இறைத்தும் - (கூலிக்காகப் பிறர்பயிருக்குத்) தண்ணீரிறைத்தும், ஏற்றும் - யாசகஞ்செய்தும், சேறு அணை ஆக - சேற்றினால் தலைக்கு அணையமைத்துக்கொண்டு, கிடப்பர்-படுத்திருப்பர் என்றும் உரைகொள்ளலாம்.

உகூஉ. சீரியார் கேண்மை சிறந்த சிறப்பிற்றாய்
மாரிபோன் மாண்ட பயத்ததா—மாரி
வறந்தக்காற் போலுமே வாலருவி நாட
சிறந்தக்காற் சீரிலார் நட்பு.

(இ - ள்.) வால் அருவி நாட - வெண்மையான மலையருவிகளையுடைய நாட்டையுடையவனே!—சீரியார் கேண்மை - சிறப்புடையாரது சிநேகம், சிறந்த சிறப்பிற்று ஆய் - மிகுந்த சிறப்புள்ளதாய், மாரிபோல் - (பெய்யும்) மழைபோல, மாண்ட பயத்தது ஆம் - மாட்சிமைப்பட்ட பயனையுடையதாம்; சீர்இலார் நட்பு - சிறந்தகுணமில்லாதவரது சிநேகம், சிறந்தக்கால் - மிகுந்தால், மாரி வறந்தக்கால் போலும் - மழை (பெய்யாமல்)வறந்து போனால் (அந்நிலைமை) போலப் பயனற்றதாம்; (எ - று.)

சிறப்பிற்று - ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்; சிறப்பு - பகுதி, இன் - சாரியை, று - விகுதி. ஏ - தேற்றம். (உ)

உகூகூ. நுண்ணுணர்வி னாரொடு கூடி நுகர்வுடைமை
விண்ணுலகே யொக்கும் விழைவிற்றா—நுண்ணூ
லுணர்வில ராகிய வூதிய மில்லார்ப்
புணர்த லிரயத்து ளொன்று.

(இ - ள்.) நுண் உணர்வினாரொடு கூடி-நுட்பமான அறிவையுடையவர்களுடனே சேர்ந்து, நுகர்வு உடைமை-(அவர்கள்சேர்க்கையா லுண்டாகும் இன்பங்களை) அனுபவிக்குந் தன்மையுடையவராயிருத்தல், விண் உலகே ஒக்கும் விழைவிற்று - தேவலோகவின்பத்தையே ஒத்திருக்கின்ற விரும்பப்படும் மேன்மையுடையது; நுண் நூல் உணர்வு இலர் ஆகிய - நுட்பமான சாஸ்திரங்களை அறியும் அறிவு இல்லாதவரான, ஊதியம் இல்லார்-பயனில்லாதவர்களை, புணர்தல் - சேர்தல், நிரயத்துள் ஒன்று - நரகத்துன்பங்களுள் ஒன்றாகும்; (எ - று.)

விண்ணுலகு, நிரயம் என்பன - அவற்றில் அனுபவிக்கப்படும் இன்ப துன்பங்களுக்கு இடவாகுபெயர். நுண்ணுணர்வு - சூக்ஷ்மபுத்தி. நுகர்வு உடைமை என்பதற்கு - உணவுண்ணுதலையுடையராதல் என உரைத்தல் சிறவாதாம். விழைவு - விரும்புதல்; இங்கே, தொழிலாகுபெயர். நிரயம்-வடசொல். அறிவுக்கு நுட்பம் - ஆழ்ந்த உட்கருத்துக்களையும் அறிதல். நூலுக்கு நுட்பம் - அரியவிஷயங்கள்பலவற்றைக் கூறுதல். (௩)

உகூசு. பெருகுவது போலத் தோன்றிவைத் தீப்போ
லொருபொழுதுஞ் செல்லாதே நந்து—மருகெல்லாஞ்
சந்தன நீள்சோலைச் சாரன் மலைநாட
பந்த மிலாளர் தொடர்பு.

(இ - ள்.) அருகு எல்லாம் - சமீபமான இடங்களிலெல்லாம், சந்தனம் நீள் சோலை - சந்தனமரங்களின் பெரிய சோலைகளையுடைய, சாரல் - பக்கங்களையுடைய, மலை - மலையையுடைய, நாட - நாட்டரசனே !—பந்தம் இல் ஆளர் தொடர்பு - (மனத்தில் அன்பின்) கட்டில்லாதவரது சிநேகம், பெருகுவது போல தோன்றி - முதலில் வளர்வதுபோலக் காணப்பட்டு, வை தீ போல் - வைக்கோலிற்பற்றிய நெருப்புப் போல, ஒரு பொழுதும் செல்லாதே நந்தும் - சிறிதுபொழுதுகூட நிலைத்திராமல் அழியும் ; (எ-று.)

வை - வைக்கோல். சாரல் - மலைப்பக்கம். இங்கே, மலை - மலய பருவதம்; பொதியமலை: அதிலே சந்தனமரங்கள் அதிக மென்று கவிகளெல்லாரும் வருணிப்பர். சந்தநம், பந்தம் - வடசொற்கள். வைத்து ஈப்போல் எனப் பதம்பிரித்தலில் உரை சிறவாமை காண்க. (ச)

உ௩டு. செய்யாத செய்துநா மென்றலுஞ் செய்வதனைச்
செய்யாது தாழ்த்துக்கொண் டோட்டலு—மெய்யாக
வின்புறாஉம் பெற்றி யிகழ்ந்தார்க்கு மந்நிலையே
துன்புறாஉம் பெற்றி தரும்.

(இ - ள்.) செய்யாத நாம் செய்தும் என்றலும்-தம்மாற்செய்யக்கூடாத காரியங்களை 'நாம் செய்வோம்' என்று சொல்லுதலும், செய்வதனை செய்யாது தாழ்த்துக்கொண்டு ஓட்டலும் - தம்மாற்செய்யக்கூடிய காரியத்தைச் செய்யாமல் தாமதித்துக்கொண்டு காலங்கழித்தலும், (இவ்விரண்டும்),— மெய் ஆக இன்பு உறாஉம் பெற்றி இகழ்ந்தார்க்கும் - உண்மையாக (ஐம்புலன்களின்) இன்பங்களை அடையுந்தன்மையை இகழ்ந்த துறவறத்தார்க்கும், அந் நிலையே - அப்பொழுதே, துன்பு உறாஉம் பெற்றி தரும் - துன்பங்களை மிக அடையுந் தன்மையைக் கொடுக்கும் ; (எ - று.)

"செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் னென்பார், நயத்தகு நாகரிகமென்னுஞ்-செயிர்த்துரைப்பின், நெஞ்சுநோமென்று தலைதுமிப்பான்றண்ணளிபோ, லெஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று," "சொல்வன்மையுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல், நல்வினைகோறலின் வேறல்ல - வல்லைத்தம், ஆக்கங் கெடுவ துளதெனினு மஞ்சுபவோ, வாக்கின்பயன் கொள்பவர்" என்றார் நீதிநெறிவிளக்கத்தும்.

செய்யக்கூடாதவை செய்வோமென்று பிறர்க்குக் கூறுதல் தற்புகழ்ச்சி வகையால் டம்பத்தன்மையாகு மாதலாலும், ஆசைகாட்டி மோசஞ்செய்வது நம்பிகைத்துரோகமாய் முடியுமாதலாலும் பெருங்குற்றமாம்; செய்யக்கூடியதைச் செய்யாமையை உபகாரமாகாததோடு அபகாரமாகக்கொள்வர் அறிவுடையோர் என அறிக.

செய்யாத - பெயர். செய்தும் - தன்மைப்பன்மை எதிர்காலமுற்று; தும் - விகுதி. செய்வது - சாதியொருமை. இன்புறாஉம், துன்புறாஉம்- குறில் நெடிலாய்நீண்ட இன்னிசையளபெடை: மூன்று மாத்திரை. இகழ்ந்தார்க்கும், உம் - உயர்வுசிறப்பு.

இவ்விரண்டும் கூடாநட்புடையார்செய லென்பது கருத்தாதலின், இப்பாட்டு இவ்வதிகாரத்தில் வைக்கப்பட்டது. (ரு)

உ௩௬. ஒருநீர்ப் பிறந்தொருங்கு நீண்டக் கடைத்தும்
விரிநீர்க் குவளையை யாம்ப லொக்கல்லா
பெருநீரார் கேண்மை கொளினுநீ ரல்லார்
கருமங்கள் வேறு படும்.

(இ - ள்.) ஒரு நீர் பிறந்து - ஒருஜலத்தில் தானே தோன்றி, ஒருங்கு நீண்டக்கடைத்தும் - ஒருசேரவே வளர்ந்தவிடத்தும், விரி நீர் குவளையை - மலர்ந்துவிளங்கி மணம்வீசுந்தன்மையுள்ள நீலோற்பலமலர்களை, ஆம்பல் - ஆம்பல்மலர்கள், ஒக்கல்லா - ஒத்திருக்கமாட்டா; (அதுபோலவே),—பெருநீரார் கேண்மை கொளினும் - சிறந்தகுணமுடையோரது சிநேகத்தைக் கொண்டாலும், நீர் அல்லார் கருமங்கள் - நற்குணமுடையவரல்லாதவரது தொழில்கள், வேறுபடும் - வேறாகிப்போம்; (எ - று.)

சிறந்தகுவளையுடனே ஆம்பல் பிறந்துவாழ்ந்துபயின்றிருந்தும் அச்சிறப்பையடையாமல் தன் இயல்பிலேயே நிற்றல் போலக் குணவான்களுடனே குணமில்லாதவர் பலநாள்பழகியும் அவர்நற்குணத்தைத் தாம் பெறாமல் தமது இயல்பான தீக்குணத்திலேயே இருப்பர் என்பதாம்.

எடுத்துக்காட்டுவமையணி.

முதலடியில், நீர் - ஜலம்: நீரமென்னும் வடமொழியின் திரிபு; மற்றை மூன்றிடத்தும், நீர் - குணம்: நீர்மையென்னும் பண்புப்பெயரின் விகாரம். உம்மைகளிரண்டும் - உயர்வுசிறப்பு. ஒக்கல்லா - எதிர்மறைப் பலவின் பால்முற்று.

இனியநீர்மையில்லாதவர் கூடாநட்பின ரென்க. "நிறைநீர நீரவர் கேண்மை" என்ற திருக்குறளில் 'நீரவரென்றார், (அறிவுடையாரை) இனிமைபற்றி' என்ற பரிமேலழகர் விசேடவுரையை இங்கே அறிக. (௬)

உ௩௭. முற்றற சிறுமந்தி முற்பட்ட தந்தையை
நெற்றுக்கண் டன்ன விரலான் ஞெமிர்த்திட்டுக்
குற்றிப் பறிக்கு மலைநாட வின்னாதே
யொற்றுமை கொள்ளாதார் நட்பு.

(இ - ள்.) முற்று அல் சிறு மந்தி - (பருவம்) முதிர்த லல்லாத [இளமையான] பெண்குரங்குகள், முன் பட்ட தந்தையை - தமக்குஎதிரேநேர்ந்த தமதுதந்தையான பருவம்முற்றின பெரியஆண்குரங்குகளை, நெற்றுகண்டு அன்ன விரலால் - பயற்றநெற்றைக் கண்டாற்போன்ற தமதுகைவிரல்களால், ஞெமிர்த்திட்டு குற்றி - நெரித்துக்குத்தி, பறிக்கும் - (அதன்கையிலுள்ள கனிமுதலியவற்றைப்) பறித்துக்கொண்டுபோதற்குஇடமான, மலை - மலைகளையுடைய, நாட - நாட்டையுடையவனே!—ஒற்றுமை கொள்ளாதார் நட்பு - தமதுமனத்தோடு ஒன்றுபடாதவரது சிநேகம், இன்னாது - இனிமையாய் இராது; (எ - று.)

மந்தி - குரங்கின் பெண்மைப்பெயர்; "குரங்கு முசுவு மூகமு மந்தி" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். இளமையையும் பேதைமையையுமுடைய பெண்குரங்குகளுக்குத் தந்தையினிடம் விளையாட்டுச் சொல்லப்

பட்டது. தான்வருதற்குமுன்னமே வந்து அங்குள்ள குற்றியைப் பெயர்த்தெடுக்கமாட்டாமலிருக்கிற கிழக்குரங்கை விரலால் அப்பால்தள்ளிவிட்டுத் தான் அக்குற்றியை எளிதிற் பெயர்த்தெடுக்கிற சிறுகுரங்கையுடைய மலையென்று உரைப்பாருமுளர்.

தந்தை - இருதிணைப் பொதுப்பெயர். குற்றி - மரக்கட்டை. ஒற்றுமை - மனம் ஒன்றுபடுதல்; ஸாம்யம். முற்றல் என்பதைத் தொழிற்பெயராகக் கொண்டு, தந்தைக்கு அடைமொழியாக்கினுமாம். (எ)

உ௩௮. முட்டுற்ற போழ்தின் முடுகியென் னாருயிரை
நட்டா னொருவன்கை நீட்டேனேல்—நட்டான்
கடிமனை கட்டழித்தான் செல்வுழிச் செல்க
நெடுமொழி வைய நக.

(இ - ள்.) முட்டு உற்ற போழ்தில் - (எனது நண்பனொருவனுக்குத்) துன்பம்நேர்ந்தபொழுது, முடுகி - விரைந்து, என் ஆர் உயிரை - எனது அருமையான உயிரை, நட்டான் ஒருவன் கை நீட்டேனேல் - (அத்துன்பத்தினின்றும்அவனைக்காக்கும்பொருட்டு) அச்சிநேகிதனொருவனதுவசத்திற்கொடாமற்போவேனானால், (யான்), நெடு மொழி வையம் நக - (மிகப்பலகாலமளவும்) அழியாமல்வழங்கும் புகழ்பழிச்சொற்களையுடைய நிலவுலகத்தார் யாவரும் (என்னை) இகழ்ந்துசிரிக்கும்படி, நட்டான் கடி மனை கட்டு அழித்தான் செல் உழி செல்க-தனதுசிநேகிதனதுகாவலிலுள்ளமனையாளைஉறுதியானகற்பைஅழித்த பாவி செல்லுந் தீக்கதியிற் செல்வேனாக; (எ - று.)

தனது உயிரைக் கொடுத்தாயினும் நண்பனுயிரைக் காக்கவேண்டுவது கடமை, அங்ஙனஞ்செய்யாமற்போனால் அது பெரும்பாவமாம் என்றபடி.

இனி, நட்டான் கடி மனை என்பதற்கு - சிநேகிதனாற் கலியாணஞ் செய்யப்பட்ட மனைவி யென்றும் உரைக்கலாம். முட்டு - முட்டுதல், தடைப்படுதல், இடையூறு; முதனிலைத்தொழிற்பெயர். நெடுமொழி வையம் - மிகப் பிரசித்திபெற்ற உலகம் என்றுமாம். ஆதாரமாகிய உலகம் அழியுமளவும் ஆதேயமாகிய புகழ்ச்சொல்லும் பழிச்சொல்லும் அழியாது நிலைநிற்றலால், 'நெடுமொழிவையம்' எனப்பட்டது. நகல் - பரிகாசம். எவர்க்கும் உயிரினும்மேம்பட்டது ஒன்று இன்றாதலின், 'ஆருயிர்' எனப்பட்டது. ஆருயிர் அருமையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு இடையுகரங் கெட்டது. கடி - பலபொருள்குறிக்கும் உரிச்சொல்.

நட்புக்குணத்தை நன்றாகவுடையானொருவனது பிரதிஜ்ஞைவார்த்தை மூலமாகச் சிறந்த நண்பரது இயல்பு கூறப்பட்டது. (அ)

உ௩௯. ஆன்படு நெய்பெய் கலனு ளதுகளைந்து
வேம்படு நெய்பெய் தனைத்தரோ—தேம்படு
நல்வரை நாட நயமுணர்வார் நண்பொரீஇப்
புல்லறிவி னாரொடு நட்பு.

(இ - ள்.) தேன் படு நல் வரை நாட - தேன்கூடுகள் மிக்க சிறந்த மலைகளையுடைய நாட்டையுடையவனே!—நயம் உணர்வார் நண்பு ஒரீஇ-சிநேக

குணத்தின் இயல்பை அறியுந்தன்மையுடையாரது சினேகத்தை விட்டு, புல் அறிவினரொடு நட்பு-அற்பபுத்தியை யுடையவரோடு சினேகித்தல், ஆன் படு நெய் பெய் கலனுள் - பசுவின்சம்பந்தமாகவுண்டான நெய்யைப் பெய்து வைத்துள்ள பாத்திரத்தில், அது களைந்து - அந்தநெய்யை எடுத்துவிட்டு, வேம்பு அடு நெய் பெய்து அனைத்து - வேம்பின் சம்பந்தமாகப் பொருந்திய நெய்யைப் பெய்துவைத்தாற் போலும்; (எ - று.)

தகா தென்றபடி. உவமையணி.

அரோ - ஈற்றசை ; தேற்றமுமாம். ஆன், ன் - சாரியை. வேம்படுநெய்- வேப்பநெய், வேப்பங்கொட்டையாலாகிய நெய் ; வேப்பெண்ணெ யென வழங்குவர். தேன் - அதன்கூண்டுக்குத் தானியாகுபெயர். இனி, தேம் படு- இனிமைபொருந்திய என்றுங் கொள்ளலாம். ஆன்படு - இனவேதுகை.(க)

உச0. உருவிற் கமைந்தான்க ணூராண்மை யின்மை
பருகற் கமைந்தபா னீரளா யற்றே
தெரிவுடையார் தீயினத்தா ராகுத னாகம்
விரிபெடையோ டாடிவிட் டற்று.

(இ - ள்.) உருவிற்கு அமைந்தான்கண் - பெருமைக்கு உரிய சில நற் குணங்களையுடையானிடத்து, ஊர்ஆண்மை இன்மை - ஊரிலுள்ள பிறர்க்கு உபகாரஞ்செய்யுங்குணமில்லாமை பொருந்துதல், பருகற்கு அமைந்த பால் நீர் அளாய் அற்று - குடிப்பதற்குஏற்ற இன்சுவையையுடைய பாலில் நீர் கலந்தாற் போலும் ; தெரிவு உடையார் - அறிவுடையார், தீ இனத்தார் ஆகுதல் - கொடிய நண்பரை யுடையராதல், நாகம் விரி பெடையோடு ஆடி விட்டு அற்று - நல்லசாதிச்சர்ப்பம் பெட்டைவிரியன்பாம்புடன் புணர்ந்து நீங்கினாற் போலும் ; (எ - று.)

பாலில் நீர்கலந்தாற் சுவைகெடுதல்போலக் குணமுடையானிடம் பிற ர்க்குஉதவாமை யிருந்தாற் குணங்கெடும் ; நாகம் விரிபெடையோடு புணர்ந் தால் அழிதல் போல நல்லோர் துஷ்டசகவாசத்தாற் கெடுவர் என்பதாம். நாகம் விரிபெடையோடு புணர்ந்தாற் சாகு மென்பர்.

இனி, உருவிற்கு அமைந்தான் என்பதற்கு - சிநேகிப்பதற்கு ஒருகார ணமான வடிவழகுக்கு ஓர்இடமாகப்பொருந்தினவன் என்று உரைப்பாரு முளர். பருகல், பருகு - பகுதி. நாகம் - வடசொல். "பேடையும் பெ டையு நாடி னொன்றும்" என்ற தொல்காப்பியச் சூத்திரத்து 'நாடின்' என்ற மிகையால், ஊர்வனவான நாகத்திற்குப் பெடையென்னும் பெண் மைப்பெயர் கொள்ளப்பட்டது. (௨0)

## மூன்றாவது

# இன்பவியல்.

மனிதர்மனத்திற்கு மகிழ்ச்சியுண்டாதலைப்பற்றிக் கூறும் பிரிவு என்ப தாம். இத்தன்மை இவ்வியலின் முதலதிகாரத்தால் உடன்பாடாகவும், மற்றை யிரண்டு அதிகாரங்களால் மறுதலையாகவும் கூறப்படுதல் காண்க. இன்பமாவது - மனத்திற்கு ஆனந்தமுண்டாதற்குக் காரணமாவது.

## உரு - ஆம் அதிகாரம்.—அறிவுடைமை.

அஃதாவது - கல்விகேள்விகளினாலாகிய அறிவோடு உண்மையறிவை யும் உடையவனாதல். இன்னவர் கூடாநண்பர் இன்னவர் கூடுநண்பர் என்று அறிதலும் அவர்களை முறையே கலவாமையும் கலத்தலும் அறிவுடையார்க் கல்லது கூடாமையின், இது அதன்பின் வைக்கப்பட்டது. அறிவு - காரி யாகாரியங்களைப் பகுத்தறிந்துகொள்ளும் விவேகம்; இயற்கையறிவோடு கூடிய செயற்கையறிவு: நூல்களிற்கூறியபடி இம்மைமறுமைவீடுகட்கு உரி யவற்றை அறிவதோடு உலகநடையையும் அறிதல். இனி, எல்லாச்செல் வத்தினுஞ் சிறந்த அறிவாகியசெல்வம் என்றும் உரைக்கலாம்.

உசக. பகைவர் பணிவிட நோக்கித் தகவுடையார்
 தாமேயு நாணித் தலைச்செல்லார் காணா
 யிளம்பிறை யாயக்காற் றிங்களைச் சேரா
 தணங்கருந் துப்பி னரா.

(இ - ள்.) பகைவர் பணிவு இடம் நோக்கி - பகைவர்கள் தாழ்ந்தநிலை மையையடைந்திருத்தலைப் பார்த்து, தகவு உடையார் - தகுந்த அறிவுடை யவர், தாமேயும் நாணி - தம்மில்தாமே வெட்கமடைந்து, தலைச்செல்லார் - (அவரைவெல்லுதற்கு) அச்சமயத்திற் போகமாட்டார்கள்; காணாய்-(நீ)பார்: அணங்கு அரு துப்பின் அரா - வருந்துதலில்லாத வலிமையையுடைய பா ம்பு, திங்களை - சந்திரனை, இளம் பிறை ஆயக்கால் - இளையபிறைச்சந்திர னாகும்பொழுது, சேராது - (வருத்துதற்குப்) போகாது; (எ - று.)

நன்மைதீமைபார்க்குந் தன்மைய தல்லாத கொடியபாம்பும், சந்திரன் இளைத்திருக்கும்பொழுதெல்லாம் அதனை அணுகாதுவிட்டு அது பூர்ணமாய் நிறைந்திருக்கும்பொழுதே அதனைப் பிடித்துப்பீடிக்கிறது; ஆதலால், பகை வரை இளைத்திருக்குஞ்சமயம்பார்த்து வெல்லக்கருதாமல் அப்பொழுது அவர்பால் இரங்கிப் பின்பு அவர்தலையெடுத்தபொழுதே பொருது வெல்லக் கருதுதல் விவேக மென்பதாம். எடுத்துக்காட்டுவமையணி.

கிரகணகாலத்திற்சூரியமண்டலத்தைமறைக்கிற சந்திரனதுசாயையை யும் சந்திரமண்டலத்தைமறைக்கிற பூமியின்சாயையையும் ராகுகேதுக்க ளென்னும் கரும்பாம்பு செம்பாம்புகளாகக்கூறுதல், கவிகளது கொள்கை.

பாற்கடல்கடைந்து அமிருதமெடுத்து அதனைத் திருமால் தேவர்களைத் தனியேஇருத்தி அவர்களுக்குப் பகிர்ந்துகொடுத்துவரும்பொழுது ஓரசுரன் இடையிலே வந்து கையைநீட்ட அவனை அருகிலிருந்தசூரியசந்திராது வார் த்தையினால் விஷ்ணு அசுரனென்று அறிந்து சினந்து தலைவேறு உடல்வே றும்படி சிதைத்திட்டானென்றும்,அப்பொழுதே அவன் இராகு கேது என் னும் இரண்டு தேவசரீரத்தைத் திருமாலின்கரஸ்பரிசத்தாற் பெற்றுப்பின்பு அவனருளால் பருவகாலங்களில் தனக்குப்பகைவரான சூரியசந்திரரைத் தான்வருத்தவும் அக்காலத்தைப் புண்ணியகாலமாகச் சனங்கள் கொண் டாடவும் வரம்பெற்றானென்றும் பௌராணிகர் கூறுவர்.

அணங்கு - முதனிலைத்தொழிற்பெயர். அணங்கு அரு துப்பின் என்ப தற்கு - (பிறர்) வருந்துதற்குக்காரணமான எவராலும் தடுக்கமுடியாத வலி மையையுடைய என்றும் பொருள்கொள்ளலாம். தகவு - தகுதியையுடைய அறிவுக்குத் தொழிலாகுபெயர். (க)

உ௪உ. நளிகடற் றண்சேர்ப்ப நல்கூர்ந்த மக்கட்
கணிகல மாவ தடக்கம்—பணிவில்சீர்
மாத்திரை யின்றி நடக்குமேல் வாழுமூர்
கோத்திரங் கூறப் படும்.

(இ - ள்.) நளி கடல் தண் சேர்ப்ப - பெரிய கடலின் குளிர்ந்த துறை முகத்தையுடையவனே!—நல்கூர்ந்த மக்கட்கு - வறுமையடைந்துள்ள மனி தர்க்கு, அணிகலம்ஆவது-அணிதற்குரியஆபரணமாவது, அடக்கம்-அடங்கி யிருத்தலாம்; (ஒருவன்), பணிவு இல் சீர் - அடங்குதலில்லாத உயர்ந்த தன்மையுடனே, மாத்திரை இன்றி நடக்கும் ஏல்-தன்வரம்புகடந்து நடப் பானானால், வாழும் ஊர் - அவன்வாழ்ந்திருக்கும் ஊரி லுள்ளார் யாவராலும், கோத்திரம் கூறப்படும்-(அவனது)குலம் (இழித்துச்) சொல்லப்படும்;(எ-று.)

எப்படிப்பட்டவர்க்கும் அடக்கம் அவசியமாயினும் தரித்திரர் அடங்கி யிராமற் போனால் அவரைப்பற்றி அவர்குலமும் இகழப்படு மென்பதாம். இதனால், அடங்குதல் அறிவுடைமை யென்றவாறு; இதுபற்றியே, இப்பா ட்டு இவ்வதிகாரத்து நிறுத்தப்பட்டது.

நளிகடல் - உரிச்சொற்றொடராதலின், இயல்பு. கீழ்கடல் மேல்கடல் என்னும் இரண்டெல்லையளவும் உள்ள நாடு என்பார், 'நளிகடற்றண்சேர்ப்ப' என்றாரென்க; பிறநூல்களிலும், இவனது நாட்டிலேயே சூரியனுதிப் பதும் அஸ்தமிப்பதும் எனக் கூறியவாறு காண்க. பலபண்டங்களும் ஏற்று தல் இறக்குத லாவதற்கு ஏற்ற துறைமுகத்தை யுடைத்தாயிருப்பது நாட் டுக்குப் பெருஞ்சிறப்பாதலுங் காண்க. கோத்ரம் - வடசொல். (உ)

உ௪௩. எந்நிலத்து வித்திடினுங் காஞ்சிரங்காழ் தெங்காகா
தென்னாட் டவருஞ் சுவர்க்கம் புகுதலாற்
றன்னாற்றா னாகு மறுமை வடதிசையுங்
கொன்னாளர் சாலப் பலர்.

(இ - ள்.) எந் நிலத்து வித்து இடினும் - எந்தநிலத்திலே விதையைப் போகட்டாலும், காஞ்சிரம் காழ் தெங்கு ஆகா - எட்டிவிதை தென்னமரமாகமாட்டா; தென் நாட்டவரும் சுவர்க்கம் புகுதலால் - தென்திசைநாட்டிலுள்ளவர்களும் சுவர்க்கலோகஞ் சென்று சேர்வதனால், தன்னால் தான் ஆகும் மறுமை - தனது முயற்சிவகையாலேயே மறுமைக்கதி உளதாகும்; வடதிசையும் கொன் ஆளர் சால பலர் - வடக்குத்திக்கிலும் (நற்கதிபெற முயலாது) வீண்காலங்கழிப்பவர் பல ருண்டு; (எ - று.)

தென்னாடெல்லாம் மிலேச்சதேசமென்றும், அதில்வாழ்வார்க்கு நற்கதியில்லை யென்றுஞ் சிலபிரமாணங்களைக்கொண்டு கூறுகிற வடநாட்டாரை நோக்கி அதனை மறுத்து வடதிசையிலிருந்துவந்த சமணமுனிவர் இங்ஙனந் தென்னாட்டாரைச் சிறப்பித்துக் கூறியதுபோலும் இது. நிலத்தினியற்கையால் வித்தினின்று உளதாகும் மரம் வேறுபடாததுபோலத் திசையினியற்கையால் அவரவர்தொழிலினின்று உளதாகும் வினைப்பயன் மாறுபடா தென்பதாம்.

தன் ஆற்றான் - தான்ஒழுகும் ஒழுக்கவழியால் என்றும் உரைக்கலாம். கொன் - பயனின்மை; இடைச்சொல்: அதனை ஆள்பவர், கொன்னாளர். தென்னாட்டவரும் என்பதற்கு - தென்திசைக்கணுள்ள நரகலோகத்தவரும் என்றும், வடதிசையும் என்பதற்கு - வடதிசைக்கணுள்ள புண்ணிய பூமியிலும் என்றும் உரைக்கலாம். உம்மைகளை முறையே எதிரதுஇறந்தது தழுவிய எச்சப்பொருளனவாகவாவது, இழிவு உயர்வு சிறப்புப்பொருளனவாகவாவது கொள்க. காழ் - பால்பகாவஃறிணைப்பெயர். சுவர்க்கம் - ஸ்வர்க்கம்: வடசொல்.

நற்கதிபெறுதற்கு அறிவுடைமையே காரணமென்றும், திசைவேறுபாட்டாற் பயன்வேறுபடுவதாகக் கூறுவது அறிவுடைமையன் றென்றும் அதிகாரத்துக்கேற்பக் கருத்துக் கொள்ளவேண்டும்.

'விரையொன்று போட்டாற் சுரையொன்று முளைக்குமா?' என்பது பழமொழி.

'கபிலரகவல்'எனவழங்கப்படுவதில் "தென்றிசைப்புலையன்வடதிசைக் கேகின், பழுதற வோதிப் பார்ப்பா னாவான், வடதிசைப் பார்ப்பான் தென்றிசைக்கேகின்,நடையதுகோணிப் புலையனாவான்" என்றது போன்ற பொதுவிதிபற்றியகொள்கை இங்குச்சிறப்புவிதிகாட்டி மறுக்கப்பட்டது.(௬)

உ௪௩. வேம்பி னிலையுட் கனியினும் வாழைதன்
தீஞ்சுவை யாதுந் திரியாதா—மாங்கே
யினந்தீ தெனினு மியல்புடையார் கேண்மை
மனந்தீதாம் பக்க மரிது.

(இ - ள்.) வேம்பின் இலையுள் கனியினும் - வேப்பிலையிலே பழுத்தாலும், வாழை - வாழைப்பழம், தன் தீம் சுவை யாதும் திரியாது ஆம் - தனது இனிய உருசி சிறிதும் மாறுபடாதாம்; ஆங்கே - அதுபோலவே,— இனம் தீது எனினும் - சேர்ந்தகூட்டம் குணங்கொடியதாயிருந்தாலும்,

இயல்பு உடையார் கேண்மை - இயற்கைநல்லறிவுடையாரது நட்பு, மனம் தீது ஆம் பக்கம் அரிது - மனங் கொடியதாகுந் தன்மை இல்லை; (எ - று.)

இயற்கையில் இன்சுவைமிக்குள்ள பழமாயின் சேர்க்கையாற் சுவை கெடுதல் இல்லைபோல, இயற்கையில் நல்லறிவு மிக்குள்ள மனிதராயின் சேர்க்கையாற் குணங்கெடுதலில்லை யென்பதாம்.

ஆங்கு-உவமவுருபு; இது உபமான உபமேயங்களுக்குஇடையே வந்து விட்டதனால், இப்பாட்டு எடுத்துக்காட்டுவமையணியாகாது; உவமையணி யேயாம்.

வாழை - அதன் பழத்துக்கு, முதலாகுபெயர். 'தீச்சுவை' என வலி மிக்கு வருமிடத்து, தீமை சுவை யெனப் பிரித்து, கடுஞ்சுவையென்று பொருள்உரைக்கவேண்டும். தீம் என்பதனடியாகப் பிறந்த பெயரெச்சம் தீவிய எனவும், தீமை யென்பத னடியாகப் பிறந்தது தீய எனவும் நிற்கும் வேறு பாட்டையுங் காண்க. வாழை தன் சுவை திரியாது - தொடர்ந்தபொருள் அதன்பயனிலையையே கொண்ட முடிபு. (௪)

உ௪௫. கடல்சார்ந்து மின்னீர் பிறக்கு மலைசார்ந்து
முப்பிணீ டுவரி பிறத்தலாற் றத்த
மினத்தனைய ரல்ல ரெறிகடற்றண் சேர்ப்ப
மனத்தனையர் மக்களென் பார்.

(இ - ள்.) எறி கடல் தண் சேர்ப்ப - அலைவீசுகின்ற கடலினது குளிர்ந்த துறையையுடையவனே!—கடல் சார்ந்தும் இன் நீர் பிறக்கும் - (உப்புச் சுவையுடைய)கடலை அடுத்தும் இன்சுவையுடைய நீர் உண்டாகும்; மலைசார்ந்தும் உப்பு ஈண்டு உவரி பிறத்தலால் - (இனிய அருவிநீரையுடைய) மலையை அடுத்தும் உப்புநிறைந்த உவர்நீர் உண்டாகும் ஆதலால்,—மக்கள் என்பார் - மனிதரெனப்படுபவர், தம்தம் இனத்து அனையர் அல்லர் - (குணஞ் செயல்களில்) தங்கள்தங்கள் இனத்தாரை யொத்தவரல்லர்; மனத்து அனையர் - தம்தம் மனத்தின் அறிவை யொத்தவர் ; (எ - று.)

தமது இயற்கை நற்குணஞ் சேர்க்கையால் மாறுபடாதவரே மனிதரென்று சிறப்பித்துக் கூறப்படுவதற்கு ஏற்றவ ரென்பதாம்.

'மக்களென்பார்' என்பது, "இல்வாழ்வானென்பான்," "ஊரெனப்படுவது உறையூர்" என்பனபோலச் சிறப்புத்தோன்றநின்றது. என்பார் எனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்டது. அதிகாரத்துக்கு ஏற்ப, மனம் அறிவாயிற்று ; மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான்கு அந்தக்கரணங்களுள் ஒன்றன்பெயர் மற்றொன்றிற்கு நூல்களில் மாறிவருவது உண்டு. 'சார்ந்தும்' என்ற உம்மை - முன்னர் இழிவுசிறப்பும், பின்னர் உயர்வுசிறப்புமாம். என்பார் என்பதை முதல்வேற்றுமைச் சொல் லுருபாகவுங் கொள்ளலாம்.

இது, த்ருஷ்டாந்தாலங்காரம்; ஏதுவணி எனினும் அமையும். (௫)

உ௪௬. பராஅரைப் புன்னை படுகடற்றண் சேர்ப்ப
வொராஅலு மொட்டலுஞ் செய்பவோ நல்ல
மரூஉச்செய்தி யார்மாட்டுந் தங்கு மனத்தார்
விராஅஅய்ச் செய்யாமை நன்று.

(இ - ள்.) பரு அரை - பருத்த அரையையுடைய, புன்னை - புன்னை மரங்கள், படு - பொருந்தின, கடல் தண் சேர்ப்ப - குளிர்ந்த கடற்றுறையை யுடைய பாண்டியனே!—தங்கும் மனத்தார் - உறுதியாய் ஒருநிலையில் நிற் கின்ற மனமுடையவர்கள், நல்ல மரூஉ செய்தியார்மாட்டும்-நற்குணங்கள் பொருந்தின செய்கையை யுடையவர்களிடத்தும், ஓராலும் ஒட்டலும் - கூடி நீங்குதலையும் மறுபடி சேர்தலையும், செய்பவோ - செய்வார்களோ? [செய்யா ரென்றபடி]; (இங்ஙனஞ் செய்தலினும்), விராய் செய்யாமை -(எவ ரோடுங் கலந்து) சினேகஞ்செய்யாதிருத்தல், நன்று - நல்ல விவேகமாம்.

அயோக்கியரிடத்துங் கூடிப்பிரிதல் காரியமன்று ; ஆனபொழுது, யோக்கியரிடங் கூடிப்பிரிதலும் மறுபடிகூடுதலும் மனம்ஒருவழிப்பட்டவ ரது செயலாகா: அதனினும் அவர்களைச் சேராமலிருப்பதே மிகநல்லதாம் என்றபடி.

கூடிப்பிரிதலினும் கூடாமை நல்ல தென்றது, கூடியநல்லோரைப் பிரிந்த குற்றமும் துன்பமும் கூடாதவர்க்கு இல்லையாதலின். செய்தி யார் மாட்டும் எனப்பிரித்து, செய்கையையுடைய யாவரிடத்தும் என உரைத்த லும் ஒன்று. தங்குமனத்தார் விராய்ச் செய்யாமை நன்று என இயைத்து, நிலைபெற்றுஒருபெற்றியேநின்ற மனத்தினையுடையார் கூடுதலையும் பிரிதலை யுங்கலந்துசெய்யாமை நல்லதென்று உரைப்பாருமுளர்; ஒன்று,கூடியேயா வது இருக்கவேண்டும் :அல்லது, பிரிந்தேயாவது இருத்தல்வேண்டும் என்ப தாம். "கூடிப் பிரியேல்" என்ற ஔவையார்நீதிவாக்கியத்தில், எதிர்மறை வகையால் 'பிரிந்துகூடேல்' என்னும் பொருளும் ஒருவாறுதோன்றுமாறு காண்க.

பரு + அரை = பராரை; இப்பண்புத்தொகை மரூஉமுடிபு. புன்னை - நெய்தனிலத்துப்பொருள்களு ளொன்று. புன்னைபடு என்பதற்கு - புன்னை மரத்தாற் சிறந்த வென்றும் உரைப்பர். நல்ல - பெயர். மரூஉ - மருவு என் பது விகாரப்பட்ட அளபெடை. இனி, நல்லகுணங்கள் கெட்டுச் சிதைந்து மருவிவழங்கிய செய்கையாரிடத்தும் சலியாதமனமுடையோர் கூடிப்பிரித லும் மீண்டுகூடுதலுஞ் செய்வார்களோ? என்றும் உரைக்கலாம்: இவ்வுரை க்கு, உம் - இழிவுசிறப்பு ; இடையிற்கூறிய உரைக்கு, முற்றுப்பொருளது. அரை - மரங்களிற் கிளைபிரியுமளவும் அடியிலுள்ள கட்டை.

எல்லாவடியிலும் எதுகையில் அளபெடைவந்தது ஓர் அழகாம்; அளபு த்தொடை: அளபெடைவண்ணம். மூன்றுமடியில் அளபெடை செய்யுளி லக்கணத்துக்குஇன்றியமையாததன்றாதலின், இயற்கையளபெடை யென் றாவது, இன்னிசையளபெடை யென்றாவது கொள்ளவேண்டும்.

கீழ்ப் பெரியாரைப்பிழையாமையென்னும் அதிகாரத்தில் "தெரியத் தெ ரியுந் தெரிவிலார் கண்ணும், பிரியப் பெரும்படர்நோய் செய்யும் - பெரிய,

வுலவா விருங்கழிச்சேர்ப்ப யார்மாட்டுங், கலவாமை கோடி யுறும்" என்ற பாட்டிலும் இக்கருத்துக் காண்க.

செய்து யார்மாட்டும் எனப் பிரித்து, குற்றியலிகரமாகக் கொண்டு, நல்லகாரியங்களைப்பொருந்திச்செய்து யாவரிடத்தும் அன்புகொள்ளும்மனத்தையுடையா ரென்றும் உரையிடலாம்; இவ்வுரைக்கு, குற்றியலிகரம்அலகு பெறவில்லை யென்க. முன்னுரையில், மூன்றுமடியில் அளபெடைக்கு அலகில்லை. (௬)

உ௪எ. உணர வுணரு முணர்வுடை யாரைப்
புணரப் புணருமா மின்பம்—புணரின்
றெரியத் தெரியுந் தெரிவிலா தாரைப்
பிரியப் பிரியுமா நோய்.

(இ - ள்.) உணர உணரும் உணர்வு உடையாரை - (நன்மைதீமைகளைப்) பகுத்தறிய வல்ல விவேகமுடையவர்களை, புணர - சேர்தலால், இன்பம் புணரும் - பலவிதஇன்பங்களும் உண்டாகும்; தெரிய தெரியும் தெரிவு இலாதாரை - (நன்மைதீமைகளைப்) பகுத்தறிய வல்ல விவேகமில்லாதவர்களை, புணரின் - (தெரியாமற்) சேர்ந்துவிட்டால், பிரிய - (அவரைவிட்டு) நீங்குமாத்திரத்திலே, நோய் பிரியும் - (அவராலுண்டாகும்) பலதுன்பங்களும் நீங்கும்.

'ஆம்' இரண்டும்-அசை. இறுதியில், மா நோய் எனப்பிரித்து, மிகுந்த துன்பமென்றுங் கொள்ளலாம். உணரும், தெரியும் என்பவற்றிற்கு - நம்முடையசினேககுணங்களை யென்னும் செயப்படுபொருளும் வருவிக்கலாம்.

உணர, தெரிய என்பவற்றைப் பிறவினைப்பொருளில்வந்த தன்வினை யெனக்கொண்டு, பிறர் உணர்த்த, பிறர் தெரிவிக்க எனப் பொருள்கொள்வாரு முளர். புணரின் - கூடுமாயின் என்றுமாம்.

இந்நூலில் ஒவ்வொருபாட்டும் ஒவ்வொருசமணமுனிவரதுகருத்தாதலின், கீழ்க் கூடிப்பிரியலாகாதெனப் பலவிடத்துவந்ததனோடு இது மாறுகொளக்கூறலாகாது; பிறவும் இங்ஙனம் வருமிடங்களுக்கெல்லாம் இது கொள்க: அதிகாரிபேதத்தால் ஒற்றுமைப்படுத்தி அமைத்தலும் ஒன்று.

அடிதோறும் வந்தசொல்லும் பொருளும் மீண்டும் வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணி.

அறிவுடையாரைக் கூடுதலும் அறிவில்லாதாரைப் பிரிதலும் அறிவுடைமை யென்பதாம். (எ)

உ௪அ. நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானு—நிலையினு
மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்.

(இ - ள்.) நல் நிலைக்கண் தன்னை நிறுப்பானும் - நல்லநிலையிலேயே தன்னை வைப்பவனும், தன்னை நிலை கலக்கி கீழ் இடுவானும் - (தான்நின்ற நல்லநிலையினின்று) கலங்கச்செய்துதன்னைக்கீழ்ப்பட்டநிலையிற்சேர்க்கிறவ

னும், நிலையினும் மேல் மேல் உயர்த்து நிறுப்பானும் - (தான்நின்ற) நிலையினும்மேலேமேலே உயர்ந்தநிலையில் தன்னை ஏறிநிற்கச்செய்பவனும்,தன்னை தலை ஆக செய்வானும் - தன்னை (ப்பிறர்பலரினும்) முக்கியமாகச்செய்பவனும், (எல்லாம்), தான் - தானேயாவன்; (எ - று.)

என்றது, ஒருவனுடைய உயர்வுதாழ்வுகளுக்கு அவனுடைய அறிவும் அறிவில்லாமையுமே காரண மென்பதாம்.

நிலையினும், உம்மை - உயர்வுசிறப்பு: அசைநிலையுமாம். மற்றை உம்மைகள் நான்கும் - எண்ணுப்பொருளன. நிறுப்பான் முதலிய நான்கும் - எழுவாய். தான் - பயனிலை. (அ)

உசகூ. கரும வரிசையாற் கல்லாதார் பின்னும்
பெருமை யுடையாருஞ் சேற—லருமரபி
னோத மரற்று மொலிகடற் றண்சேர்ப்ப
பேதைமை யன்ற தறிவு.

(இ - ள்.) அரு மரபின் - (பிற நாடுகளிற்) பெறுதற்கு அருமையான (சிறப்புத்) தன்மையையுடைய, ஓதம் அரற்றும் ஒலி கடல் தண் சேர்ப்ப-அலைகள் மிகவொலிக்கின்ற கடலினது குளிர்ந்த துறைமுகத்தை யுடைய அரசனே!—கருமம் வரிசையால் - காரியத்தின் முறைமையால், கல்லாதார் பின்னும் பெருமைஉடையாரும் சேறல் - படியாத மூடர்களது பின்பும் பெருமையுடைய புத்திமான்களும் செல்லுதல், பேதைமை அன்று - அவிவேகமன்று; அது அறிவு - அது விவேகமேயாகும்; (எ - று.)

காரியநிமித்தம் கல்லாதவரை அநுசரிப்பதும் அறிவுடைமை யென்பதாம். பேதைமையன்று என்றதன்பின் அது அறிவு என்றது, உறுதிப்படுத்த வந்த அநுவாதம்.

கல்லாதார்பின்னும், உம் - இழிவுசிறப்பு. பெருமையுடையாரும், உம் - உயர்வுசிறப்பு. சேறல் என்னுந் தொழிற்பெயரில், செல்-பகுதி. அருமரபின் என்பது, கடற்சேர்ப்புக்கு அடைமொழி. ஓதத்திற்கு அடைமொழியாக் கொண்டால், அதற்கு அருமை - மற்றொன்றுக்கு இல்லாதபடி என்றும் ஒருவிதமாய் ஓங்கியெழுந்து மடியுந்தன்மை யென்க. இனி, கருமவரிசையால் என்பதற்கு-முற்பிறப்பிற்செய்த ஊழ்வினையின் வகையால் என்றும் உரைக்கலாம்; கல்லாதாரைத் தழுவுதல் பாபபலமாமென்றபடி. பேதைமைஅதுஅறிவு அன்று எனப் பிரித்துக்கூட்டி, கல்லாதவர்பின்செல்லுதல் அறியாமையாம்: அது அறிவுடைமையன்று எனத் துணிந்துரைக்கவும் இடமுண்டு. (கூ)

உருO. கருமமு முள்படாப் போகமுந் துவ்வாத்
தருமமுந் தக்கார்க்கே செய்யா—வொருநிலையே
முட்டின்றி மூன்று முடியுமே லஃதென்ப
பட்டினம் பெற்ற கலம்.

(இ - ள்.) கருமமும் உள்படா - (அறம்பொருள்களுக்குக் காரணமான) தொழில்களையும் உடன்பட்டுச்செய்து, போகமும் துவ்வா - (அவற்றால்உள்

னவாகும்) இவ்வுலகவின்பங்களையும் அனுபவித்து, தருமமும் தக்கார்க்கே செய்யா - (தானம்முதலிய) அறத்தொழில்களையும் (அறிவொழுக்கங்களால்) தகுதியுடையவர்களுக்கே செய்து, மூன்றும் ஒரு நிலையே முட்டு இன்றி முடியும் ஏல் - இம்மூன்றுகாரியங்களும் (இங்ஙனம்) ஒருபிறப்பிலேயே (ஒருவனுக்குத்) தடையில்லாமல் நிறைவேறுமாயின், அஃது - அந்நிலைமை, பட்டினம் பெற்ற கலம் - (பிறநாடுகள் பலவற்றிற் சென்று வியாபாரஞ்செய்து இலாபம்பெற்று மீண்டு தனது) பட்டினத்தை யடைந்த மரக்கலத்தை யொக்கும், என்ப - என்றுசொல்வர், (அறிவுடையோர்.)

கருமமும், போகமும், தருமமும் என்றவற்றி லுள்ள உம்மைகள் - எதிரது இறந்தது தழுவிய எச்சப்பொருளன; எண்ணும்மையாகக் கொள்ளக் கூடாது; வெவ்வேறு வினைமுடிக்குஞ்சொல் வந்ததனால். உள்படா, துவ்வா, செய்யா என்னும் மூன்றும் - உடன்பாட்டு இறந்தகால வினையெச்சங்கள். பட்டினம் - நெய்தல்நிலத்தூர், துறைமுகநகரம். போகம் - வடசொல். 'பட்டினம் பெற்ற கலம்'என்ற உபமானத்தால், அப்பிறப்புப் பயன்பெற்ற பிறப் பென்பதாம்.

இம்மூன்று தொழில்களையுஞ் செய்வது அறிவுடைமை யென்பது கருத்து. இம்மூன்றும் இல்லறத்தார்க்கே யுரிய தொழிலாம்.

இங்கே அஃதுஎன்பதில் ஆய்தம் மெய்போல ஒலித்தது; உயிர்போல ஒலியாமையை அலகிட்டுக் காண்க.

இப்பாட்டின் முற்பாதி, திருக்குறளுரையிற் பரிமேலழகரால் "கற்றபின், நிற்க வதற்குத்தக" என்றவிடத்து எடுத்தாளப்பட்டுள்ளது. (க0)

## உகூ - ஆம் அதிகாரம்.—அறிவின்மை.

அஃதாவது - கல்விகேள்விகளினாலாகிய அறிவு இல்லாமையோடு உண்மையறிவும் இல்லாதவனாதல். அறிவு - காரியாகாரியங்களைப் பகுத்தறிந்து கொள்ளும் விவேகம்; இயற்கையறிவோடு கூடிய செயற்கையறிவு: நூல்களிற்கூறியபடி இம்மை மறுமைகட்கு உரியவற்றை அறிவதோடு உலக நடையையும் அறிதல்.

சிறந்தஐங்குரவர்முதலாயினோர் அறிவுறுத்தின காரியங்களை உட்கொள்ளாமல் ஒழித்துவிடுதலும், நூல்களிற்கூறியவற்றை ஐயந்திரிபுகளால் அறிதலும், நூற்கொள்கைமுறைமையையும் உலகவியற்கை முறைமையையும் இகழ்ந்துவிலக்கித் தன்மனத்திற்கு ஏற்றபடி நடந்து எல்லாராலும் இகழப்படுதலும், மறுமைக்கு உறுதியல்லாதவற்றைச் செய்தலும் இப்படிப்பட்டவை அறிவின்மையின்பாற்படும். அறிவுடைமைச்சிறப்பு முன்னதிகாரத்தில் உடன்பாட்டுமுகத்தாற் கூறியஅளவினால் முற்றுப்பெறுமை நோக்கி எதிர்மறைமுகத்தாலும் கூறப்படுகின்றதாதலால், அறிவின்மையென்னும் இவ்வதிகாரம், அறிவுடைமையின்பின் வைக்கப்பட்டது; திருக்குறளில் கல்வியின்பின் கல்லாமை வைக்கப்பட்டது போல. செல்வத்தைச் சம்பாதித்தற்

கும், சம்பாதித்தபொருளைக் காத்தற்கும், அம்மனம் காக்கப்பட்ட பொருளை நல்வழியிற் செலவுசெய்து தானும் அனுபவித்தற்கும் அறிவு கருவியாதலால், இந்த அறிவுடைமை அறிவின்மை அதிகாரங்கள் பொருட்பாலின் பாற்படவெனவாயின வென அறிக.

உ௫௧. நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ்செல்வ—மெண்ணுங்காற்
பெண்ணவா யாணிழந்த பேடி யணியாளோ
கண்ணவாத் தக்க கலம்.

(இ - ள்.) (உலகத்தில் ஒருவர்க்கு), நுண் உணர்வு இன்மை - நுட்பமான அறிவு இல்லாமை,—வறுமை-தரித்திரத்தன்மையாம்; அஃது உடைமை - அந்நுண்ணறிவை உடைத்தாயிருத்தல்,—பண்ண பணைத்த - மிகவளர்ந்த, பெரு செல்வம் - பெரிய சம்பத்தாம்; எண்ணும்கால் - ஆலோசித்துப் பார்க்குமிடத்து,—பெண் அவாய் - பெண்தன்மை மிகுந்து, ஆண் இழந்த - ஆண்தன்மை குறையப்பெற்ற, பேடி - பேடியானவள்,—கண் அவா தக்க-(யாவர்) கண்களும் (காணுதற்கு) விரும்பத்தக்க [மிகஅழகிய], கலம்-ஆபரணங்களை, அணியாளோ-தரிக்கமாட்டாளோ? [தரிப்பள்]; (எ - று.)

மனிதர்க்குச் சிறந்தசெல்வமாவது- அறிவுடைமையே; அச்செல்வமில்லாமையாவது - அறிவின்மையே: மற்றை உலகத்துப் பொன் மணி நெல் முதலிய பொருள்களெல்லாம் செல்வமென்று சிறப்பாகக் கொள்ளத்தக்கவையல்ல. அறிவில்லாதவர்க்கு எவ்வளவு செல்வ மிருந்தாலும் அறிவுடையார்க்குப்போலப் பெருமையும் பயனும் உண்டாகா: அது எதுபோல வெனின்,—பெண்தன்மையமைந்திராத பேடிக்கு எவ்வளவு ஆபரணங்க ளணிந்தாலும் இயற்கைமகளிர்க்குப்போல அழகின்சிறப்பும் இன்பப்பயனும் உண்டாகாதவாறுபோ லென்க.

பின்னிரண்டடிகளால் ஏற்படுங்கருத்து-எடுத்துக்காட்டுவமை. முன்னிரண்டடிகளின் கருத்தாக அமைந்த 'அறிவிலார் செல்வமமைந்தாலும் சிறப்புடையராகார்' என்பது - இதன் உபமேயம்.

பெண்தன்மை குறைந்து ஆண்தன்மை மிகுந்த நபும்சகம் - அலியெனப்படுமென்றும், ஆண்தன்மைகுறைந்து பெண்தன்மைமிகுந்த நபும்சகம்-பேடியெனப்படு மென்றும், பேடு என்பது - இவ்விருவகைக்கும் பொதுப்பெயரென்றும் அறிக. மிகுதியாய் ஆபரணங்களைத்தரித்தல் மகளிர்க்கே இயல்பாதலால், இங்கே, பெண்தன்மைமிகுந்து ஆண்தன்மை குறைந்த பேடு கொள்ளப்பட்டது. பேடி ஆபரணங்களணிதலை, சீவகசிந்தாமணியில் வீணாபதியென்னும் பேடியை "ஒண்பொனுகுகொடியே" என்றதனாலும் அறிக. "பெண்மைவிட் டாணவாவுவ பேடாண்பால், ஆண்மைவிட்டல்லதவாவுவ பெண்பால், இருமையு மஃறிணையன்னவுமாகும்" என்ற இலக்கணம்பற்றி, இங்கே, பெண்ணவாய் ஆணிழந்த பேடியை 'அணியாள்' என உயர்திணைப்பெண்பாலாற் கூறியது; "மைந்த னிப்பொழுதே வென்று வருகுவன் பொற்றேரூர்ந்தா, னந்தமெய்ப்பேடியாகி லென்றன னந்தணாளன்",

என வில்லிபுத்தூரார்பாரதத்திலும், "ஏயே யிவளொருத்தி பேடியோவென்றார்" எனச் சிந்தாமணியிலும் பேடியைப் பெண்பாலாற் கூறியது காண்க.

இனி, பெண் அவாய் என்பதற்கு - பெண்தன்மையை விரும்பி என உரைத்தால், அது ஆணிழந்த என்பதனோடு முடியாது; ஏனெனில்,—ஆண்தன்மையிழத்தற்குக் காரணம் பெண்தன்மையை விரும்புதலல்லாமல் ஊழ்வினைப்பயனுன இயற்கையாமாதலால். இனி, பெண் அவாய் என்பதற்கு - பெண்தன்மையை விரும்பி யென்று உரைத்து, அணியாளோ என்பதனோடு இயைத்து, ஆணிழந்த பேடி பெண்தன்மையை அவாவிக் கண்ணவாத்தக்க கலம் அணியாளோ? என மொழிமாற்றிப் பொருள் கொள்ளுதலும் ஒன்று.

பெண் ஆண் என்பன-பெண்தன்மைக்கும், ஆண்தன்மைக்கும் பொருளாகுபெயர். பெள் ஆள் என்னும் வினைப்பகுதிகள் - ஈறுதிரிந்து பெண் ஆண் என நின்று, பலராலும் விரும்பப்படுதல்பற்றி மகளிர்க்கும், அம்மகளிரை ஆளுதல்பற்றி ஆடவர்க்கும் பெயராகு மென்பர். பெண்மை ஆண்மைகளுள் யாதாயினுமொன்று பேடியிடத்து முற்பிறப்பிற்செய்த தீவினையால் நிறைவுற்றிராமை யாகிற இரங்கற்பாடு தோன்ற, 'பெண்ணவா யாணிழந்த' என்றார்.

அவாத்தக்க - அவாவத்தக்க; "சாவவென்மொழி யீற்றுயிர்மெய் சாதலும் விதி" என்றதன் உபலக்ஷணத்தால், செயவெனெச்சத்து ஈற்றுயிர்மெய் கெட்டது; 'செய்தக்க' 'நோதக்க' என இவ்வாய்பாடுகொண்ட பிறவற்றையும் இங்ஙனமே கொள்க; இனி, அவாத்தக்க - அவாவுதற்குத் தக்க என விரித்து, முதனிலைத்தொழிற்பெயரின்மேல் வந்த நான்காம்வேற்றுமைத்தொகை யெனினும் இழுக்காது. கலம்-அணிகலம். நுண்ணுணர்வு - சூட்சுமபுத்தி. வறுமைக்குக் காரணமான நுண்ணுணர்வின்மை காரியமான வறுமையாகவும், செல்வத்துக்குக்காரணமான நுண்ணுணர்வுடைமை காரியமானசெல்வமாகவும் உபசாரவழக்குப்பற்றிக் கூறப்பட்டன. 'கன்னங்கறுத்த, சின்னஞ்சிறிய, பென்னம்பெரிய' என்பவைபோல, 'பண்ணப்பணைத்த' என்பதை வளர்தற்பொருள்பற்றிவந்த பணை யென்பதன் ஒருவகை யடுக்குச்சிதை வெனக் கொள்க.

"அறிவுடையா ரெல்லாமுடையா ரறிவிலார், என்னுடையரேனுமிலர்" என்ற திருக்குறளோடு இப்பாட்டின் முதலிரண்டடிகளை ஒப்பிடுக. 'செல்வங்களெல்லாம் அறிவாற் படைக்கவும் காக்கவும்படுதலின் அஃதுடையாரை 'எல்லாமுடையர்' என்றும், அவையெல்லாம் முன்னே அமைந்து கிடப்பினும் அழியாமற்காத்தற்கும் தெய்வத்தான்அழிந்துழிப் படைத்தற்கும் கருவியுடையரன்மையின் அஃதில்லாதாரை 'என்னுடையரேனுமிலர்' என்றுங் கூறினர்' என அங்குப் பரிமேலழகர் உரைத்தது, இங்கு இதற்கும் ஒக்கும். தாயத்தார் கள்வர் வலியார் அரசர் என்றிவராற் கொள்ளப்படாமையும் வழிபட்டார்க்குக் கொடுத்தவிடத்துக் குறையாமையுமாகிய சிறப்புப்பற்றி, அறிவுடைமையை 'பண்ணப்பணைத்த பெருஞ்செல்வம்' எனப் பல அடைமொழிகள் கொடுத்துக் கூறினர்; திருவள்ளுவர் "கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு, மாடல்ல மற்றையவை"

என்றாற்போல: இப்படிப்பட்ட சிறப்புப் பொருட்செல்வத்துக்கு இல்லாமை காண்க.

அஃறுடைமை - இங்கே ஆய்தம் உயிர்போல் ஒலித்தது; மெய்போல் ஒலித்ததாகக்கொண்டால் வறுமை யென்ற முன்சீரோடு வெண்டளை தவறுதலை அலகிட்டுக்காண்க. (க)

உ௫உ. பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்
தல்ல லுழப்ப தறிதிரேற்—றொல்சிறப்பி
னாவின் கிழத்தி யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலந்து.

(இ - ள்.) பல் - பலவகைப்பட்ட, ஆன்ற - நிறைந்த, கேள்வி - நூற்கேள்விகளால், பயன் உணர்வார் - (உயிர்வாழ்க்கையின்) பிரயோசனங்களை அறியும் அறிவுடையவர்கள், (செல்வமின்மையால்), பாடு அழிந்து-தம்பெருமை கெட்டு, அல்லல் உழப்பது - துன்பங்களால் வருந்துவதன் காரணத்தை,அறிதிர்ஏல்-ஆராய்ந்தறிய விரும்புவீராயின்,(சொல்வேன்; அது என்னவெனில்:—) தொல் சிறப்பின் - பழமையான சிறப்பையுடைய, நாவின் கிழத்தி - சரசுவதிதேவி, உறைதலால் - (அவர்களிடம் கூடி) வசித்தலால், பூவின் கிழத்தி - ஸ்ரீமகாலட்சுமி, புலந்து - கோபங்கொண்டு, சேராளே - (அவர்களிடஞ்) சேரமாட்டாளே, (என இதுவேயாம்) ; (எ - று.)

உலகத்தில் ஒருவனிடம் ஒருபெண்கூடியிருக்கையில் மற்றொருபெண் வந்து கூடாமற் பிணங்கிப்போவது இயல்பாதலால், அம்மகளிரியற்கைப்படி கல்விமகள் சேர்ந்த விடத்தைச் செல்வமகள் சேராது பிணங்குவள் எனக் கற்பனைமுகத்தால் வருணித்துக் கூறியபடி.

உலகத்திற் பெரும்பாலும் படித்தவர் செல்வமிலராயிருத்தலும் படியாதவர் செல்வமுடையராயிருத்தலுமாகிய மாறுபாட்டிற்கு உண்மையிற் காரணம், "இருவே றுலகத் தியற்கை திருவேறு, தெள்ளியராதலும் வேறு" என்றபடி அவரவர் முற்பிறப்பிற்செய்த ஊழ்வினையேயாம்: இப்படியிருக்க, இங்ஙனம் காரணமல்லாத வொன்றைக் கவிசாதுரியத்தாற் காரணமாகக் கூறி நிறுத்தினது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி; இதனை வடநூலார் ஹேதூத்ப்ரேக்ஷாலங்கார மென்பர்.

இவ்விருமகளிரும் ஒருவனிடம் சேர்ந்திருத்தல் அரியதொரு சிறப்பாதலை "நாவீற்றிருந்த புலமாமகளோடு நன்பொற், பூவீற்றிருந்த திருமாமகள் புல்ல நாளும்"எனச் சீவகசிந்தாமணியிற் கூறியமைகொண்டும் உணர்க. புலத்தல், பிணங்குதல், ஊடுதல் என்பன - ஒருபொருட்சொற்கள்; அதாவது - யாதாயினும் ஒரு காரணம்பற்றித் தலைமகள் தலைமகனைக் கூடாமல் மாறுபடுதல். ஒருவனிடத்தில் ஒருமகள் இருப்பதாக அறிந்தமாத்திரத்தில் மற்றொருமகள் அவனிடம் சேர்தற்குப் பிரியப்படாமல் வெறுப்பது இயல்பாதலை "கண்ணுளார் நுங்காதலர் ஒழிககாமமீங்கென, உண்ணிலாயவேட்கையா லூடினர்" என்ற சிந்தாமணிகொண்டும் உணர்க.

இனி, இதனை, வேறுவகையாக வருணித்துக்கூறுவதும் உண்டு; எங்ஙனமெனின்,—மாமிக்கும் மருமகளுக்கும் ஒற்றுமையில்லாமை பெரும்பாலும் உலகவியற்கையாதலால் அதுபற்றி, மருமகளான கலைமகள் உள்ளவிடத்து மாமியான திருமகள் சேராது வெறுப்பள் என்பதாம்: திருமாலின் மனைவி திருமகளும், அத்திருமாலிடம் தோன்றிய பிரமதேவனது மனைவி சரசுவதியு மாதலால், இவர்கள் மாமிமருகி யராவர்.

'அறிவைப் பெருமைப்படுத்திக் கூறுகிறீரே, அறிவுடையார்பலர் உலகத்திற் செல்வமின்றி வருந்துகிறார்களே' என ஒருவர் வினவினதாகப் பாவித்து உத்தரங்கூறினதாக இச்செய்யுள் செய்யப்பட்டது; இது - இச்செய்யுளில் 'அறிதிரேல்' என்ற சொல்லால் விளங்கும். 'அறிதிரே' என்ற பாடத்துக்கு - அறிவீரன்றோ எனப் பொருள்கூறுக.

கீழ்ப்பாட்டில் "நுண்ணுணர்வின்மைவறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ்செல்வம்" என்றதன்மேல் வந்த ஆட்சேபத்துக்குச் சமாதானங் கூறியதாதலால், இப்பாட்டு இவ்வதிகாரத்து இங்கு வைக்கப்பட்டது. இனி, இருவர்மகளிர் ஒற்றுமைப்பட்டு ஒருங்குசேராமையாகிய உண்மையியல்பை உணராது அறிவுடையார் சிலர் வறியராயிருத்தலையே நோக்கி அறிவுடைமையிற் குறைகூறுதல் அறிவின்மையாம் என இவ்வதிகாரத்தோடு சம்பந்த முரைத்தலு மொன்று.

இப்பாட்டைக் கீழ் 'பழமை'என்னும் அதிகாரத்தில் வந்த "பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் வீயவும், கல்லாதார் வாழ்வ தறிதிரேற்—கல்லாதார், சேதன மென்னு மச்சே றகத்தின்மையாற் கோதென்று கொள்ளா தாங் கூற்று" என்ற பாட்டோடு ஒத்த வாய்பாடுடையதாக அறிக.

பயன் - அறம் பொருள் இன்பம் வீடுகளும் புகழும் முதலியன. உணர்வார், உழப்பது என்பவற்றில், இடைநிலைகள்-எதிர்கால முணர்த்தாது தன்மைமாத்திர முணர்த்தின. "கல்லானேயானாலுங் கைப்பொருளொன் றுண்டாயி, னெல்லாருஞ் சென்றங்கெதிர்கொள்வ - ரில்லானை, யில்லாளுந்தான் வேண்டா ளீன்றெடுத்ததாய் வேண்டாள், செல்லா தவன்வாயிற்சொல்," "இல்லாரையெல்லாருமெள்ளுவர்" என்றபடி பொருளில்லாரை யாவரும் இகழ்வாராதலால் 'பாடழிந்து' என்றும்; "பொருளுடையான்கண்ணதே போகம்", "பொருளிலார்க்கிவ்வுலகமில்" என்றபடி செல்வமில்லாதவர்க்கு இவ்வுலகத்து இன்பமொன்றும் இன்றா மாதலால் 'அல்லலுழப்பது' என்றுங் கூறப்பட்டது.

நாமகளுக்குத் தொல்சிறப்பு -"அறம்பொருளின்பமும் வீடும் பயக்கும், புறங்கடைநல்லிசையுநாட்டும் - உறுங்கவலொன், றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங்கில்லை, சிற்றுயிர்க்குற்ற துணை" எனக் கூறப்படுவதாம்; இனி, அவளுக்குத் தொன்றுதொட்டு வருகிற சிறப்பு முற்பிறப்பிற்செய்த நல்வினைத் தொடர்ச்சியாற் பிற்பிறப்பிலே இயற்கையில் அமைதலென்றுங் கொள்ளலாம். கல்வி உயிர்க்குணமாய் முற்பிறப்பேதொடங்கி உயிரோடு விடாதுதொடர்ந்து அவ்வுயிர்புகுந்தவிடத்துப்புகுந்தன்மை,"ஒருமைக்கண் தான்கற்றகல்வி யொருவற்கு, எழுமையு மேமாப்புடைத்து"என்ற திருக்குற

ளால் அறியப்படும். இப்படிப்பட்ட தொல்சிறப்புச் செல்வத்துக்கு இல்லையாம். நாவின்கிழத்தி - நாக்கிற்குஉரியவள் எனச் சரசுவதிக்குக் காரணப்பெயர்; பிரமனதுநாவில் வாழ்தலாலும், அறிவுடையோர்நாவில் தங்குதலாலும் வந்தது. பூவின் கிழத்தி - பூவிற்குஉரியவள். "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே","பூவிற்குத்தாமரையே","பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை", என எல்லாமலர்களுள்ளுஞ் சிறந்ததாகக் கூறப்படுகிற செந்தாமரைமலரில் வசித்தலால், பூமகளென்று பெயர். இமயமலையில் மரகதப்பாறையில் பதுமையென்னுங்கயத்தில் தோன்றிய பொற்றாமரைமலரில் திருமகள் வீற்றிருக்கின்றனளென்பது, ஜைநநூற்கொள்கை ; "அருமணிமரகதத்தங்கணுறிய, எரிசிறப்பொன்னிதழேந்துதாமரைத், திருமகள்" என்றார் சிந்தாமணியாரும். நாவின்கிழத்தி - கல்விக்கு அதிதேவதை; பூவின்கிழத்தி - செல்வத்திற்கு அதிதேவதை; இச்சொற்கள் - தகுதிப்பொருளில்வந்த நான்காம்வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்கள்; இவற்றில், இன் - சாரியை. கிழத்தி - உரிமையென்னும் பொருளுணர்த்தும் கிழமையென்னும் பண்பினடியாப்பிறந்த கிழவன் என்பதன் பெண்பால்; (கிழம் என்னும் பெயரடியாப்பிறந்த கிழவன் என்பதன் பெண்பால் கிழவியென நிற்கும்.) (உ)

உருரு. கல்லென்று தந்தை கழற வதனையோர்
சொல்லென்று கொள்ளா திகழ்ந்தவன்—மெல்ல
வெழுத்தோலை பல்லார்முன் னீட்ட விளியா
வழுக்கோலைக் கொண்டு விடும்.

(இ - ள்.) தந்தை - (தனது) பிதா, கல் என்று கழற-(கல்வியைக்) கற்பாயென்று இடித்து அறிவுகூற, அதனை - அச்சொல்லை, ஓர் சொல் என்று கொள்ளாது - (தனக்கு உறுதியைத்தருவது) ஒரு வார்த்தையென்று கொண்டு அங்ஙனம்படியாமல், இகழ்ந்தவன் - (இளமையிலே) அலட்சியஞ் செய்துவிட்டவன்,—(பின்பு),பல்லார் முன் - பலபேர்கூடிய சபையில், எழுத்து ஓலை - எழுத்து எழுதப்பட்டுள்ள ஓலையை, மெல்ல - மெதுவாக,நீட்ட-(நீ இதனைப் படியென்று ஒருவர் கொண்டுவந்து) கைநீட்டி(த் தன்னிடம்) கொடுக்க, விளியா - (அதற்குக்) கோபங்கொண்டு, வழு கோலை கொண்டுவிடும் - (அடித்தலாகிய) பிழையைச் செய்யும் தடிக்கொம்பை (அவரை அடித்தற்கு) எடுத்துக்கொண்டிடுவான் ; (எ - று.)

படியாதவனை யாவராயினும் அவனுடைய அறிவின்மையை அறிந்தாவது அறியாமலாவது யாதாயினுமொருபத்திரிகையைக் கொடுத்து இதனைப் படியென்று சொன்னால், அவன் தான்படிக்கமாட்டாமையால், பலர்முன் அவமானப்படுவதற்கு மனம்பொறாமல், அவ்வவமானந் தனக்குவருதற்குக் காரணமாகிற அவரை அடித்தற்குப் பெருங்கோபத்தோடு தடியெடுத்துக் கொள்வான் என்பதாம். தந்தைசொல்லைக்கேட்டு அதன்படி கற்றுஅறிதலையுடையனாகாதவன் தனதுகுற்றத்தைத் தான்கருதி அமைந்திராது பிறர் மேற் குற்றத்தையேற்றிக் கோபித்தல் பெரிய அறிவின்மை யென்றபடி.

இப்பாட்டு - அறிவின்மையின் இழிவை விளக்கியவாறும்.

கல்-வினைப்பகுதியே ஓசைவேறுபாட்டால் ஏவற்பொருளுணர்த்திற்று. கழறல் - உறுதிச்சொல்லை உறுத்திச்சொல்லுதல்; கழறு - பகுதி. ஐங்குரவருள் முதல்வனாய் "தந்தைமகற்காற்றுநன்றி யவையத்து, முந்தியிருப்பச் செயல்," "சான்றோனாக்குதல் தந்தைக்குக்கடனே," "உயர்மிக்கதந்தை" என்றபடி மைந்தனைக் கல்வியுடையனாக்குதலைக் கடமையாகப்பூண்ட தந்தையினது சொல் "தந்தைசொல்மிக்க மந்திரமில்லை" என்றபடி தலைமேற் கொண்டு நன்குமதிக்கத்தக்க தாதலின், அச்சிறப்புத் தோன்ற, அதனை 'ஓர்சொல்' என்றது. கொள்ளாது இகழ்ந்தவன் - மூத்தோர்சொல்லும் வார்த்தையை அமுதமாகக்கொள்ளாமல் உகுத்தவன். இகழ்ந்தவன் என்ற இறந்தகாலம், கற்றற்கு உரிய இளம்பிராயத்தில் என்பதைப் புலப்படுத்தும். இகழ்ந்தவன் கொண்டுவிடும் - செய்யுமென்முற்று ஆண்பாலுக்குச் சென்றது. எழுத்தோலை - எழுத்தையுடைய ஓலை என இரண்டனுருபும் பொருளுந் தொக்கதொகையாக விரிக்க. கைநீட்டுதல் என்ற காரணம், கொடுத்தலாகிய காரியத்தின்மேல் நின்றது - உபசாரவழக்கு.

விளியா - உடன்பாட்டு இறந்தகால வினையெச்சம்; இனி, விளியா - இறந்தாற்போலாகி, வழுக்கு ஓலை - (அங்கிருந்து) தப்பிப்போதற்குக் காரணமான ஒலியை, கொண்டுவிடும் - கொள்வான் என்றும் உரைப்பர்; இவ்வுரைக்கு - மானபங்கப்பட்டுச் சொல்தழுதழுத்து இடம்விட்டுநீங்க வழிதேடுவனென்று கருத்து. வழுக்கு ஓல்-காரியப்பொருளாதன வினைத்தொகை: ஓலை - ஓல் என்பதன் இரண்டாம்வேற்றுமை விரி. இனி, இளியா என்று பதம்பிரித்து, அவமதிச்சிரிப்புச்சிரித்து எனப் பொருள்கொள்ளுதல் மோனைத்தொடைக்குப் பொருந்து மென்க. கொண்டுவிடும், விடு என்னுந் துணைவினை - தேற்ற முணர்த்தும். (௩)

உருச. கல்லாது நீண்ட வொருவ னுலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
விருப்பினு நாயிருந் தற்றே யிராஅ
துரைப்பினு நாய்குரைத் தற்று.

(இ - ள்.) கல்லாது - கல்விகற்காமல், நீண்ட - வளர்ந்த, ஒருவன்—, உலகத்து - லோகத்தில், நல் அறிவாளரிடை புக்கு - நல்லவிவேகமுடையவர்கள்நடுவிலே புகுந்து, மெல்ல இருப்பினும் - பேசாமலிருந்தாலும், (அந்த இருப்பு), நாய் இருந்து அற்றே - நாய் இருந்தாற்போன்றதாம்; இராது - பேசாதிராமல், உரைப்பினும் - (யாதாயினும் ஒன்றை) எடுத்துச்சொன்னாலும், (அது), நாய் குரைத்து அற்று-அந்த நாய் (வாய்மூடியிராமல்) குரைத்தாற்போலும்; (எ - று.)

பரிசுத்தமான இடத்தில் அசுத்தமானநாய் வந்துசேர்ந்தால் அம்மாத்திரத்தால் அவ்விடம்அசுத்தப்படுவதுபோல, நல்லறிவாளர்கூட்டத்தில் அறிவிலான் சென்றால் அம்மாத்திரத்தால் அக்கோஷ்டி மாசடையும்; அதன்மேலும் இவன் வாய்திறந்து ஏதாவது பிழைபடக் குளறினால் அது நாய் குரைத்தல்போல வெறுக்கப்படும் என்றபடி.

பயன்பற்றி வந்த உவமையணி. நாயுவமை கூறியது, இழிவை நன்கு விளக்குதற்கு.

உலகம் - லோக மென்னும் வடமொழியின் திரிபு ; இதனைத் தமிழ்ச் சொல்லென்று சாதிப்பர் நச்சினார்க்கினியர். நல்லறிவு - அறியவேண்டுவன வெல்லாம் அறியும் அறிவு. மெல்ல இருத்தல் - சாதுவாகஇருத்தல் ; சும்மா இருப்பது. உம்மைகள் - முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சப் பொருளன. இராஅது - உயிரளபெடை, செய்யுளோசை நிறைக்க வந்தது ; அலகிட்டுக் காண்க. அற்றே, ஏ - ஈற்றசை. இருப்பின், உரைப்பின் என்ற வினையெச்சங்களினின்று எடுக்கப்படுகிற இருத்தல், உரைத்தல் என்னுந் தொழிற்பெயர்கள் - இருந்தற்று, குரைத்தற்று என்னும் வினைமுற்றுக்களுக்கு எழுவாயாம். (௪)

௨௫௫. புல்லாப்புன் கோட்டிப் புலவ ரிடைப்புக்குக்
கல்லாத சொல்லுங் கடையெல்லாங் கற்ற
கடாஅயினுஞ் சான்றவர் சொல்லார் பொருண்மேற்
படாஅ விடுபாக் கறிந்து.

(இ - ள்.) கடை எல்லாம் - கீழ்மக்களெல்லோரும்,—புல்லா - (இலக்கணத்தோடு) பொருந்தாத, புல் - இழிவான, கோட்டி - சபையிற் கூடியுள்ள, புலவரிடை-அற்பபுத்திமான்கள்நடுவில், புக்கு - அஞ்சாதுசென்று, கல்லாத - தாம்கற்றறியாத விஷயங்களையும், சொல்லும் - தைரியமாய்க்கூறுவர் ; சான்றவர் - (கல்விகேள்விகளினால்) நிறைந்தவர்கள்,—கற்ற - தாம் படித்தறிந்த விஷயங்களையும், கடாயினும் - (சொல்லும்படி பிறர்) கேட்டாலும், பொருள்மேல் படா விடுபாக்கு அறிந்து - (அங்ஙனம் வினவுகிற அவர்களது அறிவு தாம்சொல்லும் அரிய) பொருளின்மேல் முழுவதுஞ்செல்லாமல் நீங்கிப்போகும்விதத்தை அறிந்து, சொல்லார் - சொல்லமாட்டார்கள் ; (எ - று.)

அறிவுடையார்க்கும் அறிவிலார்க்கும் உள்ள வேறுபாட்டை விளக்கியபடி. அறிவிலார்க்கு அடக்கமும் அவையச்சமும் இல்லையாதலாலும், தாம் ஏதாயினும் ஒன்றைப் பலர்முன்சொல்லிப் பெருமையடையவேண்டுமென்ற அவா அதிகமாதலாலும், அவர் இங்ஙனங் கூறுவர் ; நல்லறிவுடையார்க்கோ அவையச்சமில்லையாயினும், "கொள்வோன்கொள்வகையறிந்து அவனுளங் கொளக், கோட்டமில்மனத்தின் நூல்கொடுத்தல்" இலக்கணமாதலால், வினவப்பட்டபொருள்களுள்ளும் ஏற்ற சிலவற்றை முறையாகக்கூறுவரேயன்றி ஒருங்கு கூறார்.

"புல்லாவெழுத்திற் பொருளில்வறுங்கோட்டி" என்றாற்போல, 'புல்லாப்புன்கோட்டி' என்றார் ; அதாவது - "புகழுந் தரும நெறிநின்றோர் பொய்காமம்,இகழுஞ்சினஞ்செற்றமில்லோர்—நிகழ்கலைகள், எல்லாமுணர்ந்தோ ரிருந்தவிடமன்றே, நல்லாரவைக்கு நலம்," "நலனடக்கஞ்செம்மைநவுநிலை நான்கும், குலனென் றிவையுடையோர் கோதில்—புலனில்லோர், சென்று மொழிந்தனவுங் கேட்டோர் செறிந்தவிடம், அன்றே

நிறைந்த வவை" என நல்லவைக்கும் நிறையவைக்குங் கூறப்பட்ட இலக்கணம் சிறிதுமில்லாத சபை.

புலவர் - அறிவுடையவர்; புலம் அல்லது புலமை - அறிவு. 'புல்லாப் புன்கோட்டிப் புலவர்' எனவே, சிற்றறிவினராயிற்று: இனி, புலவர் என்பது-இகழ்ச்சிக்குறிப்பென்றுங் கொள்ளலாம். கடை - கடைப்பட்டவர்க்குப் பண்பாகுபெயர்; அதமரென்க. கடையென்பது - பொருளால் உயர்திணைப்பலர்பாலாயினும், சொல்லால் பால்பகாஅஃறிணைப்பெயராதலால், சொல்லும் என்னும் செய்யுமென்முற்றைக் கொண்டது. எல்லாம் என்னும் பெயர், இருதிணைக்கும் பொது. கடாஅயின் - செய்யுளோசை குன்றுதவிடத்து அளபெடை இன்னிசை நிறைத்தற்கு வந்தது. படாஅ-செய்யுளோசைநிறைக்கவந்த அளபெடை; அலகிட்டுக்காண்க. இரண்டடிகளில் அளபெடை வந்தது, அளபுத்தொடை. உம்மை - உயர்வுசிறப்பு. பொருள் மேல், மேல் - ஏழனுருபு; இனி, மேலென்பது - பொருளினுட் செல்லுதலேயன்றி மேற்செல்லுதலும் அரிதென்பதை விளக்குவதெனவுங் கொள்ளலாம். (கூ)

உருசு. கற்றறிந்த நாவினர் சொல்லார்தஞ் சோர்வஞ்சி
　　மற்றைய ராவார் பகர்வர் பனையின்மேல்
　　வற்றிய வோலை கலகலக்கு மெஞ்ஞான்றும்
　　பச்சோலைக் கில்லை யொலி.

(இ - ள்.) கற்று - (படித்தற்குஉரிய நூல்களைப்) படித்து, அறிந்த - (அவற்றின்பொருள்களை உள்ளபடி) உணர்ந்த, நாவினர் - நாக்கையுடைய பெரியோர்கள், தம் சோர்வு அஞ்சி-(சொல்லும் சொற்களில்) தமக்கு ஏதாவது பிழைநேரிடுமோவென்று பயந்து, சொல்லார்-(விஷயங்களைக் கண்டபடி மிகுதியாகச்) சொல்லமாட்டார்கள்; மற்றையராவார் - கற்றறிந்த நாவினரல்லாத சிறியோர், பகர்வர் - (அப்படிப்பட்ட சோர்வுக்கு அஞ்சாமல் விஷயங்களை ஆராயாது தோன்றினபடி மிகுதியாகச்) சொல்வார்கள்; (அவை எவைபோலவெனின்:—) எஞ்ஞான்றும் - எப்பொழுதும், பனையின் மேல் - பனைமரத்தின்மேல், வற்றிய ஓலை - உலர்ந்துள்ள ஓலைகள், கலகலக்கும் - கலகலவென்று ஒலிக்கும்; பசு ஓலைக்கு - பசுமையாகவுள்ள ஓலைகளுக்கு, ஒலி இல்லை - ஓசை யில்லையாம்; (எ - று.)

ஈரமில்லாத உலர்ந்தஓலைகள் மிகவொலித்தல்போல, சாரமான அறிவு இல்லாதவர்மிகப்பேசுவர்;ஈரமுள்ளபச்சையோலைகள் ஒலியாதவாறுபோல, சாரமான விவேகமுள்ளவர் மிகுதியாகப்பேசாமல் நாவடங்கி மௌனமாகஇருப்பர் என்றபடி. இப்பாட்டின்கருத்தை "சிற்றுணர்வோரென்றுஞ் சிலுசிலுப்பர் நன்றமைந்த, முற்றுணர்வோ ரொன்று மொழியாரே—வெற்றிபெறு, வெண்கலத்தினோசை மிகுமே விரிபசும்பொன், ஒண்கலத்தினுண்டோ ஒலி" என்ற நீதிவெண்பாவின் பொருளோடு ஒப்பிடுக. எடுத்துக்காட்டுவமையணி. இதில் 'கற்றறிந்தநாவினர் சொல்லார் தம் சோர்வஞ்சி' என்பதற்கு - 'எஞ்ஞான்றும் பச்சோலைக்கில்லை யொலி'என்பது- உபமானம்; 'மற்றையராவார் பகர்வர்' என்பதற்கு - 'பனையின்மேல் வற்றிய

வேலை கலகலக்கும்' என்பது - உபமானம்: ஆகவே, இப்பாட்டில் உப மேயவாக்கியங்களை வைத்த முறைமைக்கு ஏற்ப உபமானவாக்கியங்களை நிறுத்தாமல் மாறுபடநிறுத்தியது - எதிர்நிரனிறைப்பொருள்கோள்.

"ஆக்கமுங் கேடு மதனால்வருதலாற், காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு", "யாகாவாராயினு நாகாக்க காவாக்கால், சோகாப்பர் சொல் லிழுக்குப்பட்டு", "ஒன்றானுந் தீச்சொற்பொருட்பயனுண்டாயின், நன் றாகாதாகிவிடும்" என்ற நீதிகளை உள்ளபடி உணர்ந்தவராதலால், கற்றறிந் தவர் தம்சோர்வஞ்சுவர், கல்லாதவர் இப்படிப்பட்டநீதிகளை அறியாராத லாலும், மானம் வெட்கம் பயம் இவற்றை ஒழித்தவராதலாலும் சோர வஞ்சார்.

மற்றையர் - கீழ்க்குறித்ததற்கு எதிரான பொருள் தருகின்ற மற்றை யென்னும் இடைச்சொற்பகுதியடியாப் பிறந்த பலர்பாற்பெயர். கலக லக்கும் - ஈரடுக்கொலிக் குறிப்பு; இரட்டைக்கிளவி. (சு)

உருஎ. பன்றிக்கூழ்ப் பத்தரிற் றேமா வடித்தற்றா
னன்றறியா மாந்தர்க் கறத்தா றுரைக்குங்காற்
குன்றின்மேற் கொட்டுந் தறிபோற் றலைதகர்ந்து
சென்றிசையா வாகுஞ் செவிக்கு.

(இ - ள்.) நன்று - நன்மையை, அறியா - அறியமாட்டாத, மாந் தர்க்கு - மனிதர்க்கு, அறத்து ஆறு - தருமத்தினதுவழியை, உரைக்குங் கால் - சொல்லுமளவில், (அது),—பன்றி கூழ் பத்தரில் - பன்றிக்குக்கூழ் வார்க்கின்ற தொட்டியில், தேமா வடித்தற்று - தேன்மாம்பழத்தினிரசத் தைப் பிழிந்தாற் போலும்; (அன்றியும்), குன்றின்மேல் கொட்டும் தறி போல் - மலைமேல்அடிக்கப்படுகிற கட்டுத்தறிபோல, தலை தகர்ந்து -(அந் தத்தருமவழிகள்) தலைசிதறி, செவிக்கு -(அவர்கள்) காதுகளினுள், சென்று இசையா ஆகும் - போய்ப் பொருந்தாதனவாம்; (எ - று.)

பன்றிக்குக் கூழின்உருசி தெரியுமேயல்லது தேமாவின் சுவை தெரி யாது: அதுபோலவே, கீழ்மக்களுக்கு அதருமவழியின்தன்மை தெரியுமே யல்லது தருமவழியின் பெருமை தெரியாது; ஆதலால், அவர்கட்குச்செய் யுந் தருமோபதேசம், மலைக்கற்பாறையின்மேல் நாட்டும்பொருட்டு வலி மையோடு அடிக்கப்படுகின்ற மரத்தறி அக்கல்லினுட்செல்ல இயலாமல் தான்முறிதல்போல, அவர்கள் காதினுட் செல்லமாட்டாமல் தடைப்பட்டு ஒழியும் என்றபடி. உவமையணி.

பத்தர் - பத்தல்என்பதன் இறுதி லகரத்துக்கு ரகரம் போலி;சாம்பல்-சாம்பர், பந்தல் - பந்தர் என்பனபோல. தேமா - இன்சுவைப்பழமுடைய ஒருவகை மாமரம்; இங்கே, அதன்பழத்தின் இரசத்திற்கு இருமடியாகுபே யர். தேமா - தேன் மா எனப்பிரித்து, தேன்போலினிய மா என உவமத் தொகையாகப்பொருள்கொள்க; தேன்மொழி, மெலிவர இறுதியழிந்தது. ஆல் - ஈற்றசை. மாந்தர்-ஒருமையில்லாமல் எப்பொழுதும் பன்மையிலே யேவரும் பெயர்; இதனை வடநூலார் நித்யபகுவசந மென்பர். உபமேயத்

தில், தலையென்பது - ஒருபொருளையுந் தாராது வந்த உபசர்க்கமாகக் கொள்ளலாம்; அல்லது, தலைதகர்ந்து - சிறப்புக்கெட்டு எனினும் அமையும். செவிக்கு - செவியில்; நான்கனுருபு ஏழாம்வேற்றுமை யிடப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம்.

அறிவிலாதார் யாதாயினும் ஒருநன்மையைச் சொல்லப்படுதற்குந் தகாதவ ரென்பது, இப்பாட்டினாற் கூறப்பட்டது. முதலடியில்வந்த உபமானம், தகுதியில்லாதவிடத்துச் சென்றுசேர்தலாற் பயனற்றதாம் என்பதை விளக்கவந்தது. இதனை "அங்கணத்துளுக்க வமிழ்தற்றால் தங்கணத்த, ரல்லார்முற் கோட்டி கொளல்" என்ற திருக்குறளோடு ஒப்பிடுக. (எ)

உசுஅ. பாலாற் கழீஇப் பலநா ளுணக்கினும்
வாலிதாம் பக்க மிருந்தைக் கிருந்தன்று
கோலாற் கடாஅய்க் குறினும் புகலொல்லா
நோலா வுடம்பிற் கறிவு.

(இ - ள்.) பல நாள் - அநேகநாட்களில், பாலால் கழீஇ - (வெண்மையான) பாலினாலே கழுவி, உணக்கினும் - உலர்த்திவைத்தாலும், இருந்தைக்கு - (இயற்கையிற் கருநிறமுடைய) கரிக்கு, வாலிது ஆம் பக்கம் - வெண்ணிறத்தையுடையதான தொரு பகுதி, இருந்தன்று - உண்டாகமாட்டாது; (அதுபோலவே), கோலால் கடாஅய் - தடியைக்கொண்டு அடித்து அதட்டி, குறினும் - சொன்னாலும், நோலா உடம்பிற்கு - (முற்பிறப்பிற்) புண்ணியஞ்செய்திராத (உயிரையுடைய) உடம்புக்கு [நல்லவூழ் இன்மையால் இயற்கையில் அறிவில்லாத மனிதனுக்கு என்றபடி], அறிவு - ஞானம், புகல் ஒல்லா - வந்துசேரமாட்டாது; (எ - று.)

கரியைப் பாலாற்கழுவினாலும் வெண்மையுண்டாகாததுபோல, ஜன்மாந்தரபுண்ணியமில்லாத மனிதனுக்கு எவ்வளவு சொன்னாலும் அறிவு வருவதில்லை யென்றபடி.

எடுத்துக்காட்டுவமையணி; முன்னிரண்டடி - உபமானவாக்கியம், பின்னிரண்டடி - உபமேயவாக்கியம். "இருந்தை யிலங்க வெளிறுபடாதென்செய்தாலு நிம்பத்து, இருந் தையலந் தித்தியாது" என்பர், திருவரங்கத்தந்தாதியிலும்.

உணக்கின் என்னும் எதிர்காலவினையெச்சத்தில், உணங்குஎன்பதன் பிறவினையான உணக்கு - பகுதி. உம்மைகள் இரண்டும் - உயர்வுசிறப்பு. வாலிது - வால் என்னும் பெயரினடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும்பெயர்; இ - சாரியை. பக்கம் - பக்ஷ மென்னும் வடமொழியின் திரிபு. இருந்தன்று - எதிர்மறை யிறந்தகால ஒன்றன்பால் வினைமுற்று. குறின் - கூறின்என்பதன் குறுக்கல். ஒல்லா - ஒல்லாது என்பதன் விகாரம்; எதிர்மறைஒன்றன்பால் வினைமுற்று.

அறிவுபெறாதவனது இகழ்ச்சி தோன்ற, 'உடம்பிற்கு' என அஃறிணையாக் கூறினர்: இழிபுபற்றிவந்த திணைவழுவமைதி; உயர்திணைப்பொருளினுடைய உடம்பையும் உயிரையும் வேறுபிரித்துஎடுத்துக்கூறினால் அவை

அஃறிணையாம்; "ஏவவுஞ்செய்கலான் தான்தேறா னவ்வுயிர், போஒமளவு மோர்நோய்" என இகழ்ச்சிதோன்ற உயிர்மாத்திரத்தாற் கூறியதூங் காண்க. இவனிடத்துச் சேதனமான [உணருந்தன்மையதான] உயிர் இருந் தும் அதன்தன்மை தலையெடாமல் அசேதனமான [உணருந்தன்மையதல் லாத] உடம்பின்தன்மையே முழுவதும் தலையெடுத்துநின்றமை தோன்ற, 'உடம்பிற்கு' எனக் கூறினாரென்க. முற்பிறப்பில் நல்வினை செய்திருந்தா லொழிய இப்பிறப்பில் நல்லறிவுதலைப்படாதாதலால், 'நோலாஉடம்பிற்கு அறிவுபகலொல்லா' எனப்பட்டது.

"ஸ்வபாவோயாத்ருபீயஸ்யநஜஹாதிகதாசந-அங்காரஶ்ஶததௌதேந மலிநத்வம்நமுஞ்சதி" என்னும் வடநூன்மேற்கோள் அறியத்தக்கது. (அ)

உ௫௯. பொழிந்தினிது நாறினும் பூமிசைதல் செல்லா
திழிந்தவை காமுறூஉ மீப்போ—லிழிந்தவை
தாங்கலந்த நெஞ்சினார்க் கென்னாகுந் தக்கார்வாய்த்
தேன்கலந்த தேற்றச்சொற் றேர்வு.

(இ - ள்.) பொழிந்து - (தேனைச்) சொரிந்து, இனிது - இனியதாக, நாறினும் - நல்மணம்வீசினாலும், பூ மிசைதல் செல்லாது - பூவிலுள்ளதேனை உண்ணுதற்குப்போகாமல், இழிந்தவை காமுறூஉம் - (துர்க்கந்தமுள்ள) இழிவானபொருள்களை விரும்புகிற, ஈ போல்-ஈயைப்போல,—இழிந்தவை தாம் கலந்த - (உயர்ந்தவைகள் இருக்கவும் அவற்றைவிட்டு) இழிவானவற் றைப் பொருந்திய, நெஞ்சினார்க்கு - மனத்தையுடைய அவிவேகிகளுக்கு,— தக்கார் வாய் - (அறிவு ஒழுக்கங்களினால்) தகுதியையுடையவர்களது வாயி லுண்டாகிற, தேன் கலந்த-தேனின்தன்மை பொருந்தின, தேற்றம் சொல்- தெளிவையுண்டாக்கும் உபதேசமொழிகளினுடைய, தேர்வு - தெளிவு, என் ஆகும் - யாதுபயன்படும்?[ஒருபயனையுந் தாரா தென்றபடி;] (எ - று.)
பயன்பற்றிவந்த உவமையணி.

இனிது - இனிமையென்னும் பண்பினடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்; இங்கே வினையெச்சப்பொருள்பட்டு, நா றின் என்பதனை யடுத்து, வினையுரியாய் நின்றது. உம்-உயர்வுசிறப்பு. பூ - அதிலுள்ள தேனுக்கு இடவாகுபெயர். காமுறு-காமமுறு என்பதன் விகா ரம்; ஏமுறு, ஐயுறு, பேதுறு என்பன போல: காமம் - விருப்பத்தை, உறு தல் - அடைதலென்க. தக்கார் - யோக்கியர். தேன் - தேனின்தன்மை க்கு முதலாகுபெயர். இனி,கலந்த என்பதை உவமவுருபாக்கொண்டு, தேன் கலந்த - தேனையொத்த என்றுமாம். தேன்கலந்த தேற்றச் சொல்-தேன் நாவுக்கு இனிமை தருதல்போலச் செவிக்குஇனிமையைத் தந்து நன்மை யை விளக்கும் வார்த்தை யென்க. 'தேங்கலந்த' என்று பாடமோதி, தேம் கலந்த எனப் பிரித்து, இனிமைபொருந்தின என வுரைத்தலு மொன்று.

தாமாகவும்அறியாமல் பிறர் சொன்னாலும் உணராத பேதைகளுக்கு அஃறிணைப்பொருள்களில் இழிவை யுடைத்தான ஈயை உவமை எடுத்துக் கூறி அவர்கள்சிறுமையை விளக்கினார். (௯)

௨௬0. கற்றா ருரைக்குங் கசடறு நுண்கேள்வி
பற்றாது தன்னெஞ் சுதைத்தலான்—மற்றுமோர்
தன்போ லொருவன் முகநோக்கித் தானுமோர்
புன்கோட்டி கொள்ளுமாங் கீழ்.

(இ - ள்.) கற்றார் - (நூல்களைக்)கற்றறிந்தவர்கள், உரைக்கும்-சொல்லு கின்ற, கசடு அறு நுண் கேள்வி - குற்றமற்ற நுட்பமான நூற்கேள்விகளை, பற்றாது - உறுதியாக உட்கொள்ளாமல், தன் நெஞ்சு - தனது மனம், உதைத்தலால் - இகழ்ந்து தள்ளிவிடுதலினால்,—கீழ் - கீழ்மகன்,—தன்போல் மற்றும் ஒருவன் முகம் நோக்கி - தன்னைப்போன்ற வேறு மொரு கீழ்மகனது முகத்தைப் பார்த்து, தானும் ஓர் புல் கோட்டி கொள்ளும் - (அறிவில்லாத) தானும் ஓர் இழிவான பிரசங்கத்தைச் செய்வான் ; (எ - று.)

கசடு - குற்றம் ; கேள்விக்குக் குற்றம்- ஐயந்திரிபுகள் : "கற்க கசடறக் கற்பவை" என்றதிற்போலக் காண்க. கேட்கப்படுகின்ற பொருள்களின் நுட்பத்தைக் கேள்வியின்மேல் ஏற்றி, 'நுண்கேள்வி' என்றார் ; "நுணங்கிய கேள்வியர்" எனத் திருக்குறளிலுங் காண்க. "நிரம்பிய, நூலின்றிக் கோட்டிகொளல்," "அல்லார்முற் கோட்டிகொளல்" எனத் திருக்குறளிலும், "புல்லாவெழுத்திற் பொருளில்வறுங் கோட்டி" என இந்நூலிலும்போல, கோட்டியென்பது - அங்குச் சொல்லுஞ் சொல்லுக்கு இடவாகுபெயராம். தானும் என்ற உம்மை - இழிவுசிறப்பு ; அறிவுடையான் பிரசங்கஞ் செய்தல்போல என்றாவது, அறிந்தவர் சொல்லும் நூற்கேள்விகளை இகழ்ந்தது மாத்திரமேயன்றி என்றாவது இறந்ததுதழுவியஎச்சப்பொருளாக்கலு மொன்று. கீழ் - கீழ்மையுடையவனுக்குப் பண்பாகுபெயர் ; அவனது இழிவை நன்குவிளக்குதற்கு, கீழ்என அஃறிணைச்சொல்லாற் கூறினாரென்க. கீழ்மக்கள் புன்கோட்டிகொள்ளுதல், கற்றாரிடத்துப் பொறாமைமிகுதியால். ஓர், ஆம் இரண்டும் - அசைகள். (௬0)

---

## ௨எ - ஆம் அதிகாரம்.—நன்றியில்செல்வம்.

அஃதாவது - சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாததும் கேடுதருவதுமான செல்வத்தினது இயல்பு. நன்றி - நன்மை ; இப்பண்புப் பெயர் - இங்கு, நல்லபயனுக்கு ஆகுபெயர் : இல்செல்வம் - பண்புத்தொகை. செல்வத்தை நல்வழிப்படுத்துவது அறிவின்பயனாதலால், அவ்வறிவின்மை செல்வம் நல்வழிப்படாமைக்கும் தீவழிப்படுதற்கும் காரணமாகும் இயைபுபற்றி, இவ்வதிகாரம் அறிவின்மையென்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது.

௨௬௧. அருகல தாகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா
பெரிதணிய ராயினும் பீடிலார் செல்வங்
கருதுங் கடப்பாட்ட தன்று.

(இ - ள்.) "அருகலது ஆகி - சமீபத்திலிருத்தலையுடையதாய், பல பழுத்தக் கண்ணும் - அநேகமாய்ப் பழங்கள் பழுத்திருக்கப் பெற்றாலும், பொரி தாள் விளவினை-பொரிந்த அரையையுடைய விளாமரத்தை, வாவல்- வௌவால்கள், குறுகா - சேரமாட்டா ; (அதுபோல),—பெரிது அணியர் ஆயினும் - மிகவும் சமீபத்திலுள்ளவரா யிருந்தாலும், பீடு இலார் - (எளிதிற் பிறர்க்கு உதவுதலாகிய) பெருமைக்குண மில்லாதவர்களது, செல்வம் ஐசுவரியம், கருதும் கடப்பாட்டது அன்று - (எளியவர்களால் தமக்குக் கிடைக்குமென்று) நினைக்கத்தக்க முறைமையையுடைய தன்று; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி; முன்னிரண்டடியில் உபமானவாக்கியமும், பின்னிரண்டடியில் உபமேயவாக்கியமும் ஏற்றத்தாழ்வில்லாமல் (பிம்பப் பிரதிபிம்பபாவந்தோன்ற) ஒருபடிப்பட்டிருத்தல் காண்க.

அருகலது - அருகல் என்னுந் தொழிற்பெயரின்மேற் பிறந்த உடன் பாட்டு ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்: அ - சாரியை ; இனி, அருகு என்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த எதிர்மறை யொன்றன்பால் தெரிநிலைவினையாலணையும்பெயராகக் கொண்டால், குறையாததாய் என்று பொருள்படும். உம்மைகள் இரண்டும் - உயர்வுசிறப்பு.

மரங்களுக்கு உரிய கோழரை, பொகுட்டரை, பொரியரை, முள்ளரை யென்னும் நால்வகை அரையுள், விளாமரம் பொரியரையாதலால், 'பொரி தாள்விள' எனப்பட்டது. பொரியரை - பொருக்குள்ள அரை. அரை யெனினும், தாளெனினும் ஒக்கும் ; அது - கிளைபிரியுமளவுமுள்ள மரத்தின் அடிக்கட்டை. விளஎன்பதைத் தனிப்பெயரென்றாவது, விளா வென்னுங் குறியதன்கீழ் ஆக் குறுகின தென்றாவது கொள்க. விளவினை, இன் சாரியை, ஐ - இரண்டனுருபு. வாவல் - வௌவாலென்னும் பறவையாதலை, "தூங்குசிறைவாவலுறை தொன்மரங்களென்ன"எனச் சீவகசிந்தாமணியிலுங் காண்க. வாவல் - பால்பகாஅஃறிணைப்பெய ராதலின், குறுகா என்னும் பலவின்பால்முற்றைக் கொண்டது. விளாமரத்துக்குப் பெருமை யிருந்தாலும் அதனை வௌவால் குறுகாமைக்குக் காரணம், இதற்கு அதனாற் பயனில்லாமை யென அறிக. பெரிது - குறிப்புமுற்றெச்சவினையுரி. அணியர் - அணிமையென்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புவினையாலணையும்பெயர். கடப்பாட்டது - கடப்பாடு என்பதன்மேற்பிறந்த ஒன்றன் பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்; உயிர்த்தொடர்க்குற்றியலுகரத்தின் டகரவொற்று இரட்டிற்று. கடப்பாடு என்பது - கடமை படு என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்ட கடப்படு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

எளியவர்க்கு வௌவாலை உவமைகூறினது, பலவிடத்துஞ் சென்று இனியபலங்களைப்பெற்று நுகரும் இயற்கைய ரென்பதுபற்றியாதல் வேண்டும். விளா வௌவாலொழிந்த பிறபலபிராணிகளுக்கு உபயோகப்படுதல் போல, பீடிலார் செல்வமும் எளியரல்லாதார்க்குக் கண்டபடி பயன்படுதலைக் கொள்க. (க)

உகூஉ. அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினுங்
கள்ளிமேற் கைநீட்டார் சூடும்பூ வன்மையாற்
செல்வம் பெரிதுடைய ராயினுங் கீழ்களை
நள்ளா ரறிவுடை யார்.

(இ - ள்.) அள்ளி கொள்வ அன்ன - (கைகளால்) அள்ளியெடுத்துக் கொள்ளத்தக்கவை போன்ற [அழகாய் நிறைந்த], குறு முகிழ ஆயினும் - சிறிய அரும்புகளை யுடையனவா யிருந்தாலும், சூடும் பூ அன்மையால் - (அவை) சூட்டிக்கொள்ளத்தக்க மலரல்லாமையால், (உலகத்தில் மனிதரெவரும்), கள்ளிமேல் கை நீட்டார் - கள்ளிச்செடியின்மேல் (பூப்பறித்தற்குக்) கைநீட்டமாட்டார்கள் ; (அதுபோலவே), செல்வம் பெரிது உடையர் ஆயினும் - செல்வத்தை மிகுதியாக உடையவர்களாயிருந்தாலும், கீழ்களை - கீழ்மக்களை, அறிவு உடையார் - புத்திமான்கள், நள்ளார் - விரும்பிச் சேர மாட்டார்கள் ; (எ - று.)

மிகஅழகிதான பொருளின்மேல் அள்ளியெடுத்துக்கொள்ளலாம்படியான விருப்பம் உண்டாதல் இயற்கையாதலால், 'அள்ளிக்கொள்வன்னகுறுமுகிழ' என்றார். கொள்வன்ன - கொள்வவன்ன என்பதன் தொகுத்தல். முகிழ்ப்பது, முகிழ்;வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்துகெட்டது. உம்மைகள் - உயர்வுசிறப்பு. கைநீட்டார் - இரண்டாம்வேற்றுமைத்தொகை யாதலால், "குறில்வழி யத் தனியைந் நொதுமுன் மெலிமிகலுமாம்" என்ற பொதுவிதிப்படி தனிஐகாரத்தின்முன் மெலிமிகாதாயிற்று; "விகாரத்து இயல்பு." உபமானத்தில் 'சூடும்பூவன்மையால்' என்றதற்கு ஏற்ப, உபமேயத்தில் 'பயன்படுஞ் செல்வ மல்லாமையால்' என்க.

எடுத்துக்காட்டுவமையணி.　　(உ)

உகூங. மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்
வல்லூற் றுவரில் கிணற்றின்கட் சென்றுண்பர்
செல்வம் பெரிதுடைய ராயினுஞ் சேட்சென்று
நல்குவார் கட்டே நசை.

(இ - ள்.) மல்கு - மிகுந்த, திரைய - அலைகளையுடைய, கடல் - சமுத்திரத்தின், கோடு - கரையிலே, இருப்பினும் - (தாம்) வாழ்ந்திருந்தாலும், (மனிதர்), வல் ஊற்று - வலிமையான நீர்ச்சுரப்பையுடைய, உவர்இல்கிணற்றின்கண் - உப்புத்தன்மையில்லாத கிணற்றினிடத்திலே, சென்று - (வெகு தூரமாகவிருந்தாலும்) போய், உண்பர் - (நீரைக்) குடிப்பார்கள்; (அதுபோலவே),—செல்வம் பெரிது உடையர் ஆயினும் - (அருகிலுள்ள கீழ்மக்கள்) செல்வத்தை மிகுதியாகஉடையவர்களாயிருந்தாலும், சேண் சென்றும் - வெகுதூரத்திற்போயாயினும், நல்குவார்கட்டே நசை-கொடுக்கும் நன்மக்களிடத்திலே உள்ளதாகும் (பெரியோர்க்கு) விருப்பம் ; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி. மல்கு திரை - வினைத்தொகை. திரைய - குறிப்புப்பெயரெச்சம். இருப்பினும், ஆயினும் என்ற உம்மைகள் - உயர்வு

சிறப்பு, சேட்சென்றும் என்ற உம்மை - இழிவுசிறப்பு. ஊற்று - ஊறுதல்: முதனிலை திரிந்த தொழிற்பெயர். வல்லூற்று என்றது, விரைவில் நீர்சுரக்கும் நல்லூற்றன்றி, இடையிடையே நீரற்றுச்சுரத்தலும், தோண்டத் தோண்ட நீர் ஊறுதலும் தோன்றற்கு. "அறுநீர்ச் சிறுகிணற்றூறல்" என மேல்வருவதுகாண்க. கிணற்றிலுள்ள நீரின்உவர்ப்பின்மையைக் கிணற்றின் மேலேற்றி, "உவரில்கிணறு" என்றார். இனி, விரைவில் நீர்சுரக்கும் ஊற்று எனினுமாம். வல்-முந்தியபொருளில், பண்படி; பிந்தியபொருளில், இடைச்சொல். உண்ணல் என்பது - உண்பன தின்பன பருகுவன நக்குவன எனப் பகுத்துக்கூறுமிடத்துச் சிறப்புவினையும், அங்ஙனம் பகுப்புநோக்காதவிடத்துப் பசிதாகங்கள் தீர உட்கொள்ளப்படும் பொருளெல்லாம் உண வெனப்படுமாகலின் பொதுவினையு மாகுதலால், இங்கு 'பருகுவர்' என்னாது 'உண்பர்' என்றார். கடலில்நிறைந்த நீரும் உதவாமைக்குக் காரணம் உவர்ப்பாதல்போல, கீழ்மக்கள்செல்வம் பெரிதாயினும் உதவாமைக்குக்காரணம் லோப மென்க. உபமேயத்திலுள்ள சேண் என்பதை உபமானத்திலுங் கூட்டிக்கொள்க. கிணற்றை நல்குவார்க்கு உவமைகூறியதனால், அவர்கள் சிறுசெல்வமுடையரா யிருந்தாலு மென்க. (௩)

**உ௬௪.** புணர்கடல்சூழ் வையத்துப் புண்ணியமோ வேறே
யுணர்வ துடையா ரிருப்ப—வுணர்விலா
வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வரே
பட்டுந் துகிலு முடுத்து.

(இ - ள்.) உணர்வது உடையார் - அறியவேண்டுவனவற்றை யெல்லாம் அறியும் அறிவையுடையவர்கள், இருப்ப - செல்வமில்லாது வறியராய் இருக்க, உணர்வு இலா - அறிவு (சிறிதும்) இல்லாத, வட்டும் வழுதுணையும் போல்வாரும் - வட்டு வழுதுணை என்னுஞ் செடிகள்போல அசேதனமாய் எளிதிற் கிடைக்கத்தக்க கீழ்மக்களும், பட்டும் துகிலும் உடுத்து - (செல்வ மிகுதியால்) பட்டுவஸ்திரங்களையும் வேறுவகை நல்லவஸ்திரங்களையும் உடுத்துக்கொண்டு, வாழ்வரே - வாழ்கின்றார்களே; (இங்ஙனம்), புணர் கடல் சூழ் வையத்து - நெருங்கிய சமுத்திரஞ் சூழ்ந்த பூமியில், புண்ணியமோ வேறே - (முற்பிறப்பிற்செய்த) நல்வினைப்பயனோ வேறுவகையா யுள்ளது; (எ - று.)

செல்வத்தைச் சம்பாதித்தலும் பாதுகாத்தலும் அதனாற்பயன்கொள்ளுதலும் அறிவுடையார்க்கு அல்லது கூடாவன்றோ? அவ்வாறன்றி, அறிவுடையார் வறியராகவும் அறிவிலாதவர் செல்வராகவுங் காணுதலால், அறிவுடையராதற்கு ஆகும் ஊழ் செல்வமுடையராதற்கு ஆகாது, செல்வமுடையராதற்கு ஆகும் ஊழ் அறிவுடையராதற்கு ஆகாது என்றதாயிற்று: "இருவே றுலகத்தியற்கை திருவேறு, தெள்ளியராதலும் வேறு" என்றார், தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும். இதனால், ஊழ்வினையாற் செல்வம் பெறவேண்டியகாலத்து அறிவாகிய துணைக்காரணமும் வேண்டாவென்பது பெறப்படும்.

*அறிவிலார்செல்வம் நன்மையில்லாததெ்தன இப்பாட்டுக்கு இவ்வதிகாரத்திற் பொருத்தங் காண்க.*

*புண்யம் - வடமொழி. புண்ணியமோ, ஓகாரம் - அதிசய இரக்கச்சொல். வேறே என்ற ஏகாரம் - தேற்றம். வாழ்வரே என்ற ஏகாரம் - இரக்கத்தோடு பிரசித்தியை விளக்கிற்று. வேறு - பொதுக்குறிப்பு முற்றுப் பகாப்பதம். போல்வாரும், உம்மை - இழிவுசிறப்பு; மற்றை நான்கு உம்மைகளும் - எண்ணுப்பொருளன. வட்டு - பனைவட்டெனக் கூறுதல் பொருந்தாது; அது, அட்டு எனப்படுவது.* (௪)

௨௬௫. நல்லார் நயவ ரிருப்ப நயமிலாக்
கல்லார்க்கொன் றாகிய காரணந்—தொல்லை
வினைப்பய னல்லது வேனெடுங் கண்ணாய்
நினைப்ப வருவதொன் றில்.

(இ - ள்.) வேல் - வேலாயுதம் போன்ற, நெடு - நீண்ட, கண்ணாய் - *கண்களையுடையவளே!—நயவர் - நற்குணமுடையவரான, நல்லார்-நல்லறிவுடையவர்கள், இருப்ப - (வறியவராய்) இருக்க, நயம் இலா - நற்குணமில்லாத, கல்லார்க்கு - கற்றறிவில்லாதவர்க்கு, ஒன்று - ஒரு செல்வப்பொருள், ஆகிய காரணம் - உண்டாகிற காரணம், (என்னவெனில்),—தொல்லை வினை பயன் அல்லது-முற்பிறப்பிற்செய்த நல்வினையின்பயனே யல்லாமல், நினைப்ப வருவது ஒன்று இல் - ஆலோசித்துப்பார்க்கத் தோன்றுவதான காரணம் வேறொன்று மில்லை; (எ - று.)*

*முன்பாட்டிற் கூறினபடி அறிவுடையார் செல்வம்பெறாமைக்கும், அறிவிலார் செல்வம்பெறுதற்கும் காரணம் - செல்வமுடையராதற்கு வேண்டிய சுகிருதம் முன்னையோர்க்கு இல்லாமையும், பின்னையோர்க்கு உண்மையுமே யென உறுதிப்படுத்தியபடி.*

*ஒன்று - ஒருபொருளுக்கும், ஒருகாரணத்துக்கும் எண்ணளவாகு பெயர். இங்கே, தொல்லைவினை யென்றது, இடத்திற்கு ஏற்ப நல்வினையாயிற்று; இனி, வினைப்பயன் நல்லது எனப்பிரித்து, வேறுவாக்கியமாக்கியும் உரைக்கலாம். கண்ணுக்கு வேல் உவமை - கூர்மைக்கும், வடிவிற்கும், ஆடவரை வருத்துதற்கும் என்க. கண்ணாய் - கண்ணாள் என்பதன் விளி; வேல்நெடுங்கண்ணாய் - மகடூஉமுன்னிலை. இப்பாட்டிற் பெண்ணை முன்னிலைப்படுத்திக்கூறியது - உலகத்துப் பெரும்பான்மையான இயற்கைபற்றி, கல்வி வறுமைக்கும் கல்வியின்மை செல்வத்துக்கும் காரணமென்று மகளிர் தமது இயற்கையான பேதைமையாற் கருதக்கூடுமென்றுஎண்ணி அவர்களுடைய அவ்வெண்ணத்தை அகற்றுதற்பொருட்டு என்னலாம்.* (௫)

௨௬௬. நாருத் தகடேபோ னன்மலர்மேற் பொற்பாவாய்
நீருய் நிலத்து விளியரோ—வேருய
புன்மக்கள் பக்கம் புகுவாய்நீ பொன்போலு
நன்மக்கள் பக்கந் துறந்து.

(இ - ள்.) நாறு - பரிமளம்வீசுதலில்லாத, தகடேபோல் - புறவிதழ் போல, நல் மலர் மேல் - (எல்லாமலர்களுள்ளுஞ்) சிறந்த தாமரைப்பூவின் மேலிருக்கிற, பொன் பாவாய் - பொன்னாலாகிய பதுமைபோ லழகிய திரு மகளே! நீ—, பொன்போலும் - பொன்னைப்போல் அருமையான, நல் மக்கள் பக்கம் - நற்குணமுடைய மனிதர்களிடத்தை, துறந்து - விட்டு, வேறு ஆய - (அந்நன்மக்களினின்று) வேறுபட்ட, புல் மக்கள் பக்கம் - இழிகுண முடைய மனிதர்களிடத்தில், புகுவாய் - சென்றுசேர்வாய்: (ஆதலால்), நிலத்து - உலகத்திலே, நீறு ஆய் விளி - சாம்பலாய் அழிவாய்; (எ - று.)

உலகத்தில் பெரும்பாலும் நற்குணநற்செய்கையையுடைய யோக்கியர் வறியராகவும், அங்ஙனமில்லாத அயோக்கியர் செல்வராகவும் இருக்கிற அக்கிரமத்தை நடுவுநிலைமையையுடைய ஒருவன் பார்த்து மனம்பொறாமல் அச்செல்வத்திற்கு அதிதேவதையான இலக்குமியின்மேற் கடுங்கோபங் கொண்டு அவளுக்குப் பெருஞ்சாபமிட்டதாகச் செய்யப்பட்டது இச்செய்யுளென அறிக.

இதில், நாறுத்தகடு என்ற உபமானம் - பூவின்மேல் இருந்தும் அப்பூவின் நறுமணம் புறவிதழுக்கு இல்லையாதல்போல, சிறந்ததாமரைமலரில் இடையறாதுவாழ்ந்தும் அம்மலருக்குரிய மென்மைக்குணம் திருமகட்குச் சிறிதும்இல்லையாமென்பதைவிளக்கிநின்றது.பொற்பாவை என்ற உபமானமும், எல்லாராலும் விரும்பப்படும் அழகு திருமகட்கு இருந்தபோதிலும் அதற்கேற்ற குணம்செயல்கள் இல்லையென்பதை நன்குவிளக்க வந்தது. இனி, நாறுத்தகடேபோல் என்பதற்கு - மணமில்லாத பொற்றகடுபோல மென்மையில்லாமல் கண்ணுக்கினிமை மாத்திரமாய் நிற்கிற வெனவும் உரைக்கலாம்.

தகடேபோல் பாவாய் என இயையும். தகடே, ஏ - அசை. பாவாய் - பாவையென்பதன் விளி. விளி - ஏவலொருமை. நன்மக்களுக்குப் பொன் உவமை - அருமைக்குமாத்திரமேயன்றி, நன்குமதிக்கப்படுதற்கும், மங்களகரமாயிருத்தற்கும், யாவராலும் விரும்பப்படுதற்கும், பலவகையாகஉபயோகப்படுதற்கும், பெருஞ்சிறப்புக்கு மாம். அரோ - ஈற்றசை. (௬)

உ௬எ. நயவார்க ணல்குரவு நாணின்று கொல்லோ
பயவார்கட் செல்வம் பரம்பப்—பயின்கொல்
வியவாய்காண் வேற்கண்ணா யிவ்விரண்டு மாங்கே
நயவாது நிற்கு நிலை.

(இ - ள்.) வேல் கண்ணாய் - வேல்போலுங் கண்களையுடையவளே!— நயவார்கண் - உதவிசெய்தலையுடையவரிடத்து உள்ள, நல்குரவு - வறுமை, நாண் இன்று கொல் ஓ - வெட்கமில்லாததோ? பயவார்கண் - (ஒருவர்க்கும்) உதவாதவரிடத்து உள்ள, செல்வம் - ஐசுவரியம், பரம்ப பயின்கொல்- விடாமற் பரவுதற்கு (ஏற்ற) பிசினோ? இ இரண்டும் - (நன்மக்களிடத்து வறுமையும் புன்மக்களிடத்துச்செல்வமும் ஆகிய) இந்தஇரண்டும், ஆங்கே- அவ்வவ்விடத்திலே, நயவாது நிற்கும் - நன்மைப்படாமல் நிற்கின்ற, நிலை - நிலைமையை, வியவாய் காண் - (நீ) வியந்து பார் ; (எ - று.)

செல்வவறுமைகளுக்கு முற்பிறப்பின்வினையே யொழிய இப்பிறப்பில் அவரவர்குணம் காரணமன்று என்று பேதைமையொழிய விளக்கியபடி.

நயவார் - நயத்தையுடையவர் : உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணை யும்பெயர். நயமென்பது - உதவிசெய்தலென்னும் பொருளதாதலை "செல்வம், நயனுடையான்கட் படின்", "நயனுடையான் நல்கூர்ந்தானாதல்" எனத் திருக்குறளிலுங் காண்க ; இனி, நயவாரென்பது-நயஎன்னும் வினைப் பகுதியடியாப் பிறந்த எதிர்மறை வினையாலணையும்பெயராய், (செல்வத்தை ஒருபொருளாகக் கருதி) விரும்பாதவர் எனப் பொருள்பட்டு, மேன்மக்க ளாதலுமாம்.

நாண் - நாணம் ; முதனிலைத்தொழிற்பெயர். 'நாணாவது-செயத்தகாத வற்றின்கண் உள்ளமொடுங்குதல்' ஆதலால், தான்சேர்ந்துவருத்துதற்கு உரி யரல்லாத நல்லோரிடம் நீங்காது பலகாலஞ்சேர்ந்திருக்கிற நல்குரவை 'நா ணின்றுகொல்' என்றார். கொல் - இடைச்சொல் ; இரண்டிடத்தும் ஐய வினாப்பொருளது. ஒ - அசை. பயவார் - பயஎன்னும் வினைப்பகுதியடியாப் பிறந்த எதிர்மறைத் தெரிநிலைவினையாலணையும்பெயர் ; பயத்தல் - பயன் படுதல், பயின் பரம்புதலாவது - நாற்புறமும் ஒட்டும்படி வியாபித்தல். 'பயின்கொல்' என்றது, தகாதவிடத்தில் நெடுங்காலம் நீங்காது நிலைநிற்ற லால். வியவாய் - உடன்பாட்டு ஏவலொருமை முற்றெச்சம். இரண்டும், உம் - முற்று. ஆங்கு - அங்கு என்பதன் நீட்டல். ஏ - அசை.　　(எ)

உகூஅ. வலவைக ளல்லாதார் காலாறு சென்று
கலவைக ளுண்டு கழிப்பர்—வலவைகள்
காலாறுஞ் செல்லார் கருனையாற் றுய்ப்பபவே
மேலாறு பாய விருந்து.

(இ - ள்.) வலவைகள் அல்லாதார் - நாணிலிகளல்லாதவர் [நாணமு டைய யோக்கியர்கள்], (வறுமையினால்), கால் ஆறு சென்று- தங்கள் கால் களால் தூரவழிநடந்துபோய், கலவைகள் உண்டு - (அங்கங்குச் சிறிதுசிறி தாக இரந்துபெற்ற பலவகைக்) கலப்பானஉணவுகளைப் புசித்து, கழிப்பர்- (காலங்) கழிப்பார்கள் ; வலவைகள் - நாணிலிகளான அயோக்கியர்களோ, (செல்வமுடைமையால்), கால் ஆறும் செல்லார் - காலால் வழிநடத்தலுஞ் செய்யாதவராய் [ஓரடியெடுத்து வைத்தலேனும் வேண்டாதவராய்], இரு ந்து - (இரப்போர்க்குக்கொடுக்க மனமில்லாமல் கதவடைத்துத் தம்வீட்டி னுள்ளேயே) இருந்து, மேல் ஆறு பாய - நெய்யாறு பாலாறு தயிராறுகள் மேன்மேற் பெருக, கருனையான் - பொரிக்கறிகளுடனே, துய்ப்ப- (நல்லு ணவுகளைத் தாம் தனியே) உண்பார்கள் ; (எ - று.)

இப்படி தகாதவரிடம் உண்டாவது நன்மையில்லாதசெல்வமாமென இப்பாட்டு நன்றியில்செல்வ மென்ற அதிகாரத்துக்கு ஏற்றதாயிற்று.

சிலப்பதிகாரத்தில் "மாதர்க்கோலத்து வலவையினுரைக்கும்" என்ற விடத்து, அடியார்க்குநல்லார் 'வலவையின் - நாணிலிகளைப்போல: "வல வைகளல்லாதார்" என்றார் பிறரும்' என்று இதனை மேற்கோள் காட்டி

உரைத்தது காண்க. இனி, வலவை யென்பதற்கு - பேய் என்ற பொருளும் உள்ளதாதலால், 'வலவைகளல்லாதார்' என்பதற்கு - பேய்த்தன முடையவ ரல்லாதவர் என்றும் பொருள் கொள்ளலாம். கலப்புடையது, கலவை: கதம்பம்; ஐ - கர்த்தாப்பொருள்விகுதி. காலாறும் செல்லார், உம் - இழிவுசிறப்பு. ஏற்ற வாகன மிருத்தலாலும், காரியமொன்றுமில்லாமையாலும், சிறிதும் நடந்துசெல்லா ரென்க. கருவியான் - 'ஆன்' என்னும் மூன்றனுருபு, இங்கே உடனிகழ்ச்சிப்பொருளது; "தூங்குகையானோங்குநடைய" என்பதிற் போல. துய்த்தல் என்ற வினைக்கு - 'நல்லுணவுகளை' என்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது, அவாய்நிலையால். துய்ப்ப - பலர்பால் வினைமுற்று; ப-விகுதி; இவ்விகுதியே இங்கு எதிர்காலங்காட்டிற்று. விருந்து எனப் பதம்பிரித்து, பண்பாகுபெயராய், புதிய உணவுகளை யென்றும் உரைக்கலாம். இனி,மேலாறுபாய இருந்து என்பதற்கு-உடம்பின்மேல்வேர்வைநீர் ஆறுய்ப்பெருக (வீட்டினுள்ளேயே யாசகரை வரவொட்டாது கதவடைத்து) இருந்து என்றும் பொருள்கொள்ளலாம்.(அ)

உசுகூ. பொன்னிறச் செந்நெற் பொதியொடு பீள்வாட
மின்னொளிர் வானங் கடலுள்ளுங் கான்றுகுக்கும்
வெண்மை யுடையார் விழுச்செல்வ மெய்தியக்கால்
வண்மையு மன்ன தகைத்து.

(இ - ள்.) பொன் நிறம் - பொன்போன்ற நிறத்தையுடைய, செந்நெல் - செந்நெற்பயிர்கள், (நாடுகளிற் கழனிகளிலே), பொதியொடு பீள் வாட - பொதிந்திருக்குங் கதிர்களோடு தமதுகருவும்உட்பட வாடாநிற்க, (அங்கு மழையைப்பொழியாமல்), மின் ஒளிர் வானம் - மின்னல் விளங்கப் பெற்ற மேகங்கள், கடலுள்ளும் கான்று உகுக்கும்- சமுத்திரத்தினிடையில் நீரை வெளிப்படுத்திச் சொரிதலுமுண்டு; வெண்மை உடையார்-அறிவின்மையுடையவர்கள், விழு செல்வம் எய்தியக்கால் - மேன்மையான செல்வத்தை அடைந்தால், வண்மையும் - (அவர்கள்) தானஞ்செய்தலும், அன்ன தகைத்து - அப்படிப்பட்ட தன்மையையேயுடையது; (எ - று.)

அறிவிலாதார் தம்மிடம்அகப்பட்ட செல்வத்தைச் சற்பாத்திரத்தில் உபயோகப்படுத்தாமல் தகாதவர்க்கு உதவுவர் என்பது கருத்து.

உவமையணி: எடுத்துக்காட்டுவமையணியன்று; பின்வாக்கியத்தில் 'அன்னதகைத்து'என உவமவுருபு வந்ததனால். பலர்க்கும் உபயோகப்படுதலால் இன்றியமையாத பயிர் - பலர்க்கும் உபயோகப்படுகிற நல்லோர்க்கும், உவர்ப்புச்சுவையுடைமையால் பயன்படாத கடல் - தூர்க்குணமுடைமையாற் பயன்படுதலில்லாத நல்லவரல்லார்க்கும் உவமையாயின.

செந்நெல் - ஒருவகைச் சிறந்தநெல்; இது - நீரில் விளைவது. பொதி-கருவைஉள்ளேபொதிந்திருத்தலையுடைய கதிருக்குக் காரணப்பெயர்; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெட்டது. பீள் - பயிரின் இளங்கரு. வாட என்னுஞ் செயவெனெச்சம் - உடனிகழ்ச்சிப்பொருள தாதலின், நிகழ்காலமுடையது. வானம் - ஆகாயத்திற் சஞ்சரிக்கும் மேகத்துக்கு, இடவாகு

பெயர்; அம் - சாரியை. கடலுள்ளும், உம் - இழிவுசிறப்பு. கான்று, கால்- பகுதி. வெண்மை - அறிவுமுதிராமை. வெண்மையுடையார் - அசாரமா னவர் என்றபடி. விழு - விழும மென்பதன் விகாரம். விழுமம் என்பது - சிறப்பென்னும் பொருள் தரும் உரிச்சொல்லாதலே, "விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்" என்ற தொல்காப்பியத்தா லறிக. வண்மையும், உம் - இறந்ததுதழுவிய எச்சம். (கூ)

உஎ0. ஓதியு மோதா ருணர்விலா ரோதாது
மோதி யனையா ருணர்வுடையார்—தூய்தாக
நல்கூர்ந்துஞ் செல்வ ரிரவாதார் செல்வரு
நல்கூர்ந்தா ரீயா ரெனின்.

(இ - ள்.) உணர்வு இலார் - பகுத்தறிவில்லாதவர்கள், ஓதியும் - படித் திருந்தாலும், ஓதார் - படியாதவர்களே : உணர்வு உடையார் - பகுத்தறி வுடையவர்கள், ஓதாதும் - படியாதிருந்தாலும், ஓதி அனையார் - படித்தாற் போன்றவர்களே; தூய்து ஆக - (மனம்) பரிசுத்தியுடையதாயிருக்க, இரவா தார் - யாசித்தல்செய்யாதவர்கள், நல்கூர்ந்தும் - வறுமையடைந்திருந்தா லும், செல்வர் - ஐசுவரியமுடையவர்களே : செல்வரும் - செல்வமுடையோ ரும், ஈயார் எனின் - (தக்கோர்க்குக்) கொடாமற்போவாராயின், நல்கூர்ந் தார் - தரித்திரப்பட்டவர்களே ; (எ - று.)

உபமானஉபமேயத்தன்மை தோன்றத் தனித்தனி இரண்டுநீதிகள் இப் பாட்டிற் கூறப்பட்டன; அதிகாரம் நன்றியில்செல்வமாதலால், இப்பாட்டில் முன்னிரண்டடி - உபமானமும், பின்னிரண்டடி - உபமேயமும் ஆகும். படிப்பிற்குப்பயன் அறிவாதல்போல, செல்வத்திற்குப்பயன் தக்கவர்க்கீகுத லென்பதாம். படித்தும் அறிவில்லாத கற்றறிமோழைகள்போல்வர், தக் கார்க்குஈயாத செல்வ ரென்க. செல்வமின்றியும் இரவாதவர் - படிப்பின்றி உணர்வடைந்தவர்போல அதிசயிக்கத்தக்கவராவர்.

ஓதியும், செல்வரும் என்ற உம்மைகள் - உயர்வுசிறப்பு. ஓதாதும், நல் கூர்ந்தும் என்ற உம்மைகள் - இழிவுசிறப்பு. ஓதி - ஓதினால்; எச்சத்திரிபு: இனி, ஓதி - அறிவுடையவனெனப் பெயருமாம்.

முன்னிரண்டடியில் உபமானங்களைக் கூறிய முறைமைக்கு மாறுபா டாகப் பின்னிரண்டடிகளில் உபமேயங்களை நிறுத்தினது, எதிர்நிரனிறைப் பொருள்கோள். முதலடி - முற்றுமோனை. (௧0)

நான்காவது

# துன்பவியல்.

மனிதர் மனத்திற்குத் துன்ப முண்டாதலைப்பற்றிக் கூறும் பிரிவு; அத்துன்பங்கள் இரப்போர்க்கீயாமை முதலிய காரணங்களால் உண்டாகும். அதனை இதுமுதல் நான்குஅதிகாரங்களாற் கூறுகின்றார்.

## உ௮ - ஆம் அதிகாரம்.—ஈயாமை.

அஃதாவது - வறியவர்களாய் இரந்தவர்களுக்கு இல்லையென்னுதபடி கொடுத்தலைச் செய்யாமை. கீழ்ப் பத்தாம்அதிகாரமாகிய ஈகைக்கு எதிர் மறையாய் அதன்பின்வைத்தற்குஉரிய இவ்வதிகாரத்தை இங்குவைத்தற்குக் காரணம் என்னவெனின்:—சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாதது கீழ்க்கூறிய நன்றியில்செல்வ மாதலால், அது பிறர்க்குப்பயன் படாமையா லுளதாங் குற்றம் பெரும்பான்மையதும் மனத்திற்குத்துன்ப மூட்டுவதும் மிக்கஇழிபுடையதாதலும்பற்றி, ஈயாமையை அதன்பின் இவ்வதிகாரத்தில் விவரித்துக்கூறுகின்றன ரென அறிக. கீழ் அதிகாரத்தின் இறுதிச்செய்யுளில் "செல்வரு நல்கூர்ந்தா ரீயாரெனின்" எனத் தோற்றுவாய்செய்யப்பட்ட ஈயாமையின் இழிவை விரித்துக்கூறுகின்றமையின், இவ்வதிகாரம் நன்றியில்செல்வத்தின்பின் வைக்கப்பட்டதென்றுங்கொள்க. ஈயாமை - எதிர்மறைத் தொழிற்பெயர்.

உ௭௧. நட்டார்க்கு நள்ளா தவர்க்கு முளவரையா
லட்டது பாத்துண்ட லட்டுண்டல்—லட்ட
தடைத்திருந் துண்டொழுகு மாவதின் மாக்கட்
கடைக்குமா மாண்டைக் கதவு.

(இ - ள்.) நட்டார்க்கும் - (தம்மோடு) சிநேகங்கொண்டவர்களுக்கும், நள்ளாதவர்க்கும் - சிநேகங்கொள்ளாதவர்களுக்கும், உள வரையால் - (தமக்கு) உள்ள அளவிற்குஏற்ப, அட்டது பாத்து - சமையல்செய்த உணவைப் பங்கிட்டுக்கொடுத்து, உண்டல் - (பின்பு தாமும்) உண்ணுதல்,—அட்டு உண்டல் - சமைத்து உண்டு வாழும் விதமாம்; (அங்ஙனமின்றி), அட்டது-சமைத்தஉணவை, அடைத்து இருந்து உண்டு - (தம்வீட்டினுள் எவரும் வரவொண்ணாதபடி வாயிற்கதவை) மூடித் தாம் உள்ளேயிருந்து புசித்து, ஒழுகும்-நடக்கின்ற, ஆவது இல் மாக்கட்கு-பயனில்லாத மனிதர்களுக்கு, ஆண்டை கதவு - மேலுலகத்தின் கதவு, அடைக்கும் - (உட்புகவொண்ணாது) மூடப்படும்; (எ - று.)—ஆம் - அசை.

"செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான், நல்விருந்து வானத்தவர்க்கு", "ஒன்றாக நல்ல துயிரோம்ப லாங்கதன்பின், நன்றாய்ந் தடங்கினார்க் கீந்துண்டல்—என்றிரண்டு, குன்றாப் புகழோன் வருகென்று மேலுலகம், நின்றது வாயில் திறந்து" என்றபடி இம்மையில் விருந்தோம்பிய

வனை மறுமையில் தேவர்கள் எதிர்கொண்டு உபசரிப்ப ராதலால், அப்படியில்லாதவனுக்கு மேலுலகத்தின்கதவு அடைக்கப்படு மெனப்பட்டது.

நட்டார் - சுற்றத்தார், நள்ளாதவர் - விருந்தினர் என்றும், முன்பழக்கமுண்மையாற் குறித்து வந்தவரும் அஃதுஇன்மையாற் குறியாது வந்தவருமென்ற இருவகைவிருந்தினருள் முன்னையவர்-நட்டார், பின்னையவர் - நள்ளாதவர் என்றுங் கொள்ளலாம். இவர்களுள், நள்ளாதவரினும் நட்டவர்வருவது பெரும்பான்மையாதலாலும், அவர்கட்கு உதவாமை பெரும்பழிப்புக்கிடமாதலாலும், அவர்களை முன்வைத்தது.

உம்மைகள் இரண்டும் - எண்ணுப்பொருளன. உள - உள்ள: தொகுத்தல். அட்டது என்னும் ஒன்றன்பால் வினையாலணையும்பெயர், சாதியொருமை; அட்டவை யென்க. 'அட்டது' என்ற ஒருமைச்சொல், மிகச்சிறிதாயினும் பகுத்து உண்ணுதலே தகுதியென்பதை விளக்கு மென்க; இக்கருத்தே, 'உளவரையால்' என்பதனாலும் நன்குவிளக்கப்பட்டது. பாத்து - பகுத்து என்பதன் மரூஉ. ஆவது - எதிர்கால வினையாலணையும்பெயர்; செல்வம்படைத்ததனாற் பெறலாகும் பயனென்க. முற்பிறப்பின் நல்வினையால் அரிதிற்பெற்ற செல்வத்தைத் தக்கபடி பயன்படுத்தாத அவிவேகிகளான மனிதரை 'மக்கள்' என்னாது 'மாக்கள்' என்றார். அடைக்கும் - செயப்பாட்டுவினைப்பொருளில் வந்த செய்வினைச் செய்யுமென்முற்று. 'அடைக்கும் கதவு' என்ற முடிபுக்கு விதி - "செயப்படு பொருளைச் செய்தது போலத், தொழிற்படக் கிளத்தலும் வழக்கினு ளுரித்தே" என்பது. சேய்மைப்பொருள் குறிக்கும் அகரச்சுட்டிடைச்சொல்லடியாப் பிறந்து முதல்நீட்சிபெற்ற ஆண்டு என்பது - இங்கே, மறுமையில் இன்பம்பெறுதற்குஉரிய சுவர்க்கத்தைக் குறித்தது.

முதலடியில், தொடைமுரண் காண்க. (௧)

உ௭உ. எத்துணை யானு மியைந்த வளவினாற்
சிற்றறஞ் செய்தார் தலைப்படுவர்—மற்றைப்
பெருஞ்செல்வ மெய்தியக்காற் பின்னறிது மென்பா
ரழிந்தார் பழிகடலத் துள்.

(இ - ள்.) எ த்துணை ஆனும் - எவ்வளவானாலும், இயைந்த அளவினால் - தமக்குக்கூடிய அளவால், சிறு அறம் செய்தார் - சிறிய தருமங்களையாயினுஞ் செய்துவைத்தவர்கள், தலைப்படுவர் - மேன்மை யடைவார்கள்; மற்றை -இங்ஙனம் அப்பொழுது அப்பொழுது தருமஞ்செய்யாத, பெருஞ்செல்வம் எய்தியக்கால் பின் அறிதும் என்பார்-மிகுதியானபொருள் கிடைத்தால் அதன்பின்பு (தருமஞ்செய்தலை) ஆலோசிப்போம் என்று வாழ்நாளைக் கழிப்பவர்கள், பழி கடலத்துள் அழிந்தார் - உலகநிந்தனையாகிய கடலில் அகப்பட்டுச் சிதைந்தவராவர்; (எ - று.)

எத்துணையானும், உம்மை - இழிவுசிறப்பு. ஆனும்-ஆயினும் என்பதன் மரூஉ. மற்றை யென்னும் இடைச்சொல் - பிறிதென்னும் பொருளது. கடலத்துள், அத்து - சாரியை. பழிகடலத்துள் அழிந்தார் - வரம்பில்லாத

பழியை யடைவ ரென்பதாம்; இனி, பழிக்கப்படுவது என்ற காரணத்தாற் பாபமும் பழியெனப்படுதலால், பாவக்கடலில் மூழ்குவ ரென்றுமாம். பழிக் கடலத்துள்ளெனப் பண்புத்தொகையில் வலியிரட்டிவரற்பாலது, ஓசையின்ப நோக்கிப் பழிகடலென இயல்பாய் நின்றதென்க. அழிந்தார் - நிச்சய மாய் அழிவர்; தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. மற்றையென்பது, என்பார் என்பதோடு இயையும். பின்- இங்கே காலங்குறிக்கும்.

பெருஞ்செல்வம் வருவது நிச்சயமன்மையாலும், அங்ஙனம்வந்தாலும் அதன்பின் உடம்புநீடித்திருப்பது நிலையில்லையாதலாலும், கிடைத்தவரை யில் இளமையிலே அறஞ்செய்யாதவர் பின்பு நாய்காணிற் கற்காணுவாருய் நன்மைபெறு ரென்பதாம்.

"மற்றறிவாம்நல்வினை", "இன்றுகொலன்றுகொல்" என்னும் இந் நூற் செய்யுள்கள் இங்கு உணரத்தக்கன. (உ)

உஎ௩. துய்த்துக் கழியான் றுறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியு மடவோனை—வைத்த
பொருளு மவனை நகுமே யுலகத்
தருளு மவனை நகும்.

(இ - ள்.) துய்த்து கழியான் -(அருமையாகப்பெற்ற பொருளைத்)தான் அனுபவித்துக் காலங்கழியாமலும், துறவோர்க்கு ஒன்று ஈகலான் - துற வறத்தார்க்கு ஒருபொருளையேனும் கொடுத்து உதவாமலும், வைத்து கழி யும் - (பாடுபட்டுத்தேடினபொருளை வீணாக)வைத்துப்(பயன்கொள்ளாமல்) இறக்கின்ற, மடவோனை அவனை - அறியாமையையுடையவனாகும் அந்தப் பெரிய லோபியை, வைத்த பொருளும் - (அவன்தேடி)வைத்த செல்வமும், நகுமே - (பார்த்துச்) சிரிக்கும்; உலகத்து அருளும் - உலகத்திலே விளங்கு கிற கருணையென்னுஞ் சிறந்தகுணமும், அவனை நகும்-அவனைப்(பார்த்துச்) சிரிக்கும்; (எ - று.)

இங்கே, நகுதல் - பிறனைஇகழ்தல்காரணமாக உண்டாயிற்று; பரிகாச மாகச்சிரித்தல். "அருளிலார்க்கு அவ்வுலகமில்லை," "அறனும்அருளுடை யான்கண்ணதே யாகும்" என்றபடி தானம்முதலிய தருமங்களைச் செய்து நற்கதியைப் பெறுதற்குக் காரணமான அருளைச் சிறிதும் உடையனாகாமல் பொருளைப்பாழ்படுத்தினதுபற்றி, அவ்வருள் இவனை இகழ்ந்துசிரிப்பதாயிற் று; அருளுடையனாய்ப் பிறர்க்குக்கொடாவிட்டாலும் தானாவது அனுபவிக்க லாமே, அதுவுஞ்செய்யாமல் பொருளையீட்டுதலையே பயனாகக்கருதிக் கா லங்கழித்த அறியாமையை நோக்கி, அந்தப்பொருளும் சிரிப்பதாயிற்று.

துறவோர்க்கு என்பதற்கு- '(ஆதரிக்கத்தக்கவரால்) துறக்கப்பட்டவர் க்கு என்றும் உரைக்கலாம். கிருகஸ்தாச்சிரமத்திலிருப்பவன் முற்றுந்துறந்த யோகவொழுக்கத்தார்க்கு அவ்வொழுக்கநெறியை முடியச்செல்லுமள வும் அச்செலவிற்குப் பசி நோய் குளிர் முதலியவற்றால் இடையூறுவாராமல் உண்டியும் மருந்தும் உறையுளும் முதலியன உதவி அந்நெறியில்வழுவாமற்

செலுத்தவேண்டியவனுதலை "இல்வாழ்வானென்பா னியல்புடையமூவர்க்கும், நல்லாற்றி னின்ற துணை" என்ற திருக்குறளினாலும், ஆதரிப்பவரால் துறக்கப்பட்டவர்க்குத் தான் ஆதாவாய் நின்று வேண்டுவன செய்யவேண்டுபவனுதலை "துறந்தார்க்குந் துவ்வாதவர்க்கு மிறந்தார்க்கும், இல்வாழ்வானென்பான் துணை" என்ற திருக்குறளினாலும் அறிக. பொருளும், அருளும் என்ற உம்மைகள்-முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சப்பொருளன; எண்ணுப்பொருளனவாகா: வெவ்வேறு வாக்கியத்தில் வந்ததனுல். ஏ-தேற்றம்; ஈற்றசையுமாம்.

பற்றுக்களை முற்றத்துறத்தலை யுடையவ ரென்ற பொருளில், துறவோர்என்பதிற் பகுதியாகிய துறவு-செய்வினையென்றும்,களைகளுனவரால் விடப்படுதலையுடையவ ரென்ற பொருளில், துறவு - செயப்பாட்டுவினைப் பொருளில்வந்த செய்வினை யென்றும் அறிக. துறவோர் - உடன்பாட்டுப் பெயரின் ஈற்றயலாகாரம் ஓவாயிற்று; மடவோன்என்பதிலும் இது. கழியான், ஈகலான் - எதிர்மறை முற்றெச்சங்கள். ஈகலான் என்பதில், ஈ - பகுதி, கு - சாரியை, அல் - எதிர்மறையிடைநிலை, ஆன் - விகுதி. மடவோன் என்பதில், மடம் அல்லது மடமை - பகுதி. 'அருளும் பொருளும் நகும்'— அஃறிணையில், செய்யாதது செய்வதுபோலச் சொல்லப்பட்டது. ஒன்று என்பதன் இறுதியில் இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. மடவோனை, அவனை - ஒருபொருளின்மேல் வந்த பெயர்கள். இங்ஙனம் விசேடணம், விசேடியம் என்ற இரண்டிலும் வேற்றுமையுருபுகளை விரித்து வைப்பது, ஒருவகைப் பாஷைநடை.

"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள், ஐந்து மகத்தே நகும்" என்ற திருக்குறளோடு இதனை ஒப்பிடுக.　　(௩)

உ௭௪. கொடுத்தலுந் துய்த்தலுந் தேற்று விடுக்குடை
யுள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வ மில்லத்
துருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தா
லேதிலான் றுய்க்கப் படும்.

(இ - ள்.) கொடுத்தலும் - (பிறர்க்குக்) கொடுத்தலையும், துய்த்தலும்-(தான்) அனுபவித்தலையும், தேற்று - அறிந்து செய்யாத, இடுக்கு உடை உள்ளத்தான் - லோபகுணத்தையுடைய மனமுடையவன், பெற்ற - சேர்த்துவைத்த, பெரு செல்வம் - மிகுந்த ஐசுவரியமானது,—இல்லத்து உரு உடை கன்னியரை போல-குடியிற்பிறந்த வடிவழகுள்ள பெண்களைப்போல, பருவத்தால் - (அனுபவித்தற்கு உரிய) காலம் வந்தபொழுதில், ஏதிலான் துய்க்கப்படும் - அயலானுல் அனுபவிக்கப்படும்; (எ - று)

குடும்பத்திற்பிறந்த மணஞ்செய்யப்படாத மகளிர் இங்கே லோபியின் செல்வத்துக்கு உவமை; தன்னை வருந்திப்பெற்றுவளர்த்தவனுக்கு உதவாமல் அதுசெய்யாத பிறனனுபவத்துக்கே பின்புஉதவுதலாகிய இவ்வொரு பொதுத்தன்மையில் மாத்திரமே யென்க. இப்படிப்பட்ட கன்னியர்தன்மையை, "வலம்புரியீன்றமுத்தம் மண்மிசையவர்கட்கல்லால், வலம்புரிபயத்

தையெய்யாது அனையரே மகளிர்" எனச் சிந்தாமணியிலும், "பலவுறுநறுஞ் சாந்தம்படுப்பவர்க்கல்லதை, மலையுளேபிறப்பினும்மலைக்கவைதாமென்செய்யும், நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே," "சீர்கெழுவெண்முத்தம் அணிபவர்க்கல்லதை, நீருளேபிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும், தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே," "ஏழ்புணரின்னிசை முரல்பவர்க்கல்லதை, யாழுளேபிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யும், சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே" எனக் கலித்தொகையிலுங் கூறியவாறு காண்க. உவமையணி. லோபியின் பெருஞ்செல்வம் ஏதிலான் துய்க்கப்படுதல் - கள்ளர் முதலியோராற் பறித்துக்கொள்ளப்படுதல். லோபத்திற்குப் பற்றுள்ள மென்று ஒருபெயராதலால், அப்பொருள்கருதி, அதனை இங்கு 'இடுக்குடையுள்ளம்' என்றார். பொருளை விடத்தகுமிடத்து விடாது பற்றுதலைச்செய்யும் உள்ளம்: எனவே, லோபமாம்.

தேற்றா என்பதை-தேறா என்பது விரித்தல்விகாரம்பெற்றதென்றாவது, பிறவினை தன்வினைப்பொருளில் வந்ததென்றாவது, இருவினைக்கும் பொதுவென்றாவது கொள்க; "நட்பாடல் தேற்றாதவர்", "வாளினாற் பேசினல்லால் வாயினாற்பேசல்தேற்றேன்", "வாணிகமொன்றுந்தேற்றாய்," "தேற்றாய் பெரும", "தேற்றாவொழுக்கம்" எனப் பிறவிடங்களிலுங் காண்க. இடுக்கு என்னுஞ் சொல் - லோபமென்னும்பொருளதாதலை, இந்நூலில் "இடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம்" என்றதனாலும் அறிக. இடுக்கு - முதனிலைத்தொழிற்பெயர்; இடுக்குதல் - இறுகப்பிடித்தல். இனி, இடுக்கு என்பதை இடுங்கு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயரெனக் கொண்டு, குணக்குறைதலையுடைய அற்பமனமுள்ளவனென்றும் உரைக்கலாம். உரு, கன்னி, பருவம் - ரூபம், கந்யா, பர்வம் என்னும் வடமொழிகளின் திரிபுகள். பருவத்தால் - மூன்றாம்வேற்றுமையின் 'ஆல்' உருபு ஏழாவதன் இடப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம்; "காலத்தினாற் செய்த நன்றி" என்பதிற் போல. (௪)

உ௭௫. எறிநீர்ப் பெருங்கட லெய்தி யிருந்து
மறுநீர்ச் சிறுகிணற் றூறல்பார்த் துண்பர்
மறுமை யறியாதா ராக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

(இ - ள்.) எறி-(அலைகளை) வீசுகிற, நீர்-மிக்கநீரையுடைய, பெரு கடல்-பெரியசமுத்திரத்தை, எய்தி இருந்தும் - (தாம்) அடைந்திருந்தாலும், (அது உவர்ப்பினாற் பயன்படாமையால், எல்லோரும்), அறு நீர்-(இடையிடையே) அற்றுஅற்றுச்சுரக்கிற நீரையுடைய, சிறு கிணறு-சிறியகிணற்றின், ஊறல்-ஊற்றை, பார்த்து - தேடிக்கண்டு, உண்பர் - (அந்நீரைக்) குடிப்பார்கள்; (ஆதலால்),—மறுமை அறியாதார் ஆக்கத்தின் - மறுமைப்பயனையறியாத லோபிகளுடைய பெருஞ்செல்வத்தினும், சான்றோர் கழி நல்குரவே- (மறுமைப்பயனையறிந்த மிக்கநற்குணங்களால்) நிறைந்த பெரியோரது மிக்க வறுமையே, தலை - மேலானது ; (எ - று.)

சான்றோர் வறியராயிருக்கையில் உதவுகிறஅவ்வளவும் உதவார்,கீழ்மக்கள் செல்வம் நிரம்பியபொழுதிலும் என்பது கருத்து. வறுமையடைந்திருந்தும் செல்வமுடைய லோபிகள்போல ஆகாமல் சான்றோர் மறுமைப்பயனை யடைவர் என்று கருத்துக்கொள்ளினுமாம்.

'மிக்கசெல்வமுடைய லோபிகளை யடைந்திருந்தாலும் அவர்கள் பயன்படாமையால், உலகத்தார், சிறிது சிறிதாகவாயினும் பயன்படத்தக்க வறியரான நல்லோரைத் தேடியடைந்து உண்டு வாழ்வர்' என்னும் பொருள் தோன்ற நின்றதனால், முன்னிரண்டடி - பிறிதுமொழிதல் என்னும் அலங்காரம்; வடநூலார் அப்ரஸ்துதப்ரசம்ஸை யென்பர்: உபமேயத்தைக் கூறாமல் உபமானத்தைமாத்திரம் கூறி அதனால் உபமேயத்தைப் பெறவைத்தலும் - இவ்வணியின் இலக்கணம். பின்னிரண்டடியில், அறிவிலாரது செல்வத்தினும் அறிவுடையார்வறுமையே சிறந்ததென்பதற்கு முன்னிரண்டடியின் கருத்துக் காரணமானது, ஏதுவணியின்பாற்படு மென்க.

ஊறல்என்னுந் தொழிற்பெயர், ஊறுதலையுடைய நீருக்கு ஆதுபெயர்; இதில், அல் - கருத்தாப்பொருள்விகுதி யென்றுங் கூறலாம். ஆக்கப்பட்டது, ஆக்கம்; அம் - செயப்படுபொருள்விகுதி: ஆக்குதல் - சம்பாதித்தல், உண்டாகச்செய்தல். கழி - மிகுதியுணர்த்தும் உரிச்சொல். தலை - தலைமையையுடைய தென்றுவது, உத்தமஅங்கமான தலைபோலச் சிறந்ததென்றுவது பொருள்.

"கடல்பெரிது, மண்ணீருமாகா ததனருகே சிற்றூறல், உண்ணீருமாகிவிடும்" என்பதனை இச்செய்யுளின் முதலிரண்டடிகளோடு ஒப்பிடுக.

கீழ் உகரு - ஆஞ்செய்யுளும் இங்குக் கவனிக்கத் தக்கது. (ரு)

உஎசு. எனதெனா தென்றிருக்கு மேழை பொருளை
யெனதெனா தென்றிருப்பன் யானுந்—தனதாயிற்
றானு மதனை வழங்கான் பயன்றுவ்வான்
யானு மதனை யது.

(இ - ள்.) எனது எனது என்று இருக்கும் ஏழை பொருளை - 'என்னுடையது' 'என்னுடையது' என்று (மிக்கஅபிமானங்கொண்டு செலவுசெய்யாமல்)இருக்கிற அறிவில்லாதலோபி(சேர்த்துவைத்துக்கொண்டுள்ள) செல்வத்தை, யானும் எனது எனது என்று இருப்பன் - (அப்பொருளோடு யாதொருசம்பந்தமுமில்லாத) யானும் 'என்னுடையது' 'என்னுடையது' என்று (அபிமானந்தோன்றக்) கூறிக் களிப்புற்றிருப்பேன்; தனது ஆயின் - (அச்செல்வம்) அவனுடையதாயிருக்குமானால், தானும் அதனை வழங்கான் பயன் துவ்வான் - அவன்தானும் அச்செல்வத்தைப் (பிறர்க்குக்) கொடுத்தலும் (அந்தச்செல்வத்தால்) இன்பப்பயனைத் தான் அனுபவித்தலுங் கூடுமே அதுசெய்கிறதில்லை: யானும் அதனை அது - நானும் அப்பொருளை அப்படியே [பிறர்க்குவழங்குதலும் பயன்துய்த்தலும் செய்யேன்]; (எ - று.)

சம்பாதித்த லோபி செல்வத்தை உபயோகப்படுத்தாமல்'எனது'என்று சொல்வதற்கும், சம்பாதியாதவன் அப்படி சொல்வதற்கும் ஒன்றும் வித்தி

யாசமில்லை; ஏனெனில்,—செல்வத்தின் பயனாகிய தானனுபவித்தலும் பிறர்க்குக்கொடுத்தலும் இருவர்க்கும் இல்லையாதலால் என்பது கருத்து.

மிக்க லோபகுணமுடைய ஒருவனது செல்வத்தைக்குறித்துப் பரிகாசஞ்செய்யு மியல்புடைய ஒருவன் சொன்னதாக இச்செய்யுள் செய்யப் பட்டதென அறிக.

எனது - யான்என்பதனடியாப்பிறந்து அகரச்சாரியையும் 'து' விகுதியும்பெற்ற ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர்; ஆறும்வேற்றுமை விரியன்று. அடுக்கு, செல்வத்தினிடத்தில் மிக்கஅன்பை விளக்க வந்தது. இரண்டாமடியில் அடுக்கைத் துணிவுணர்த்த வந்ததாகவுங் கொள்ளலாம். தன்னோடுஇயைபில்லாத பொருளை எனதுஎன்றுகருதி அதனிடத்துப் பற்றுச்செய்யும் அபிமானம், மமகார மெனப்படும் ; இதன்இனமாகிய தானல்லாத உடம்பை யானென்பது - அகங்காரம். "நுண்ணுணர்வின்மை வறுமை" ஆதலால், அறிவாகியசெல்வமில்லாத லோபியை இங்கே 'ஏழை'என்றார்; இனி,செல்வமிருந்தும் பயன்பெறாமையால் அவன் வறியவனோடு ஒப்பனென்னுங்கருத்தால் ஏழை யென்றதாகவுங் கொள்ளலாம். ஏழையென்பது - உயர்திணைப்பெயராதலின், 'ஏழைபொருள்' என அதன்முன் வலி இயல்பாயிற்று. இனி, ஏழையானவன் பொருளை எனது எனது என்றிருப்பன் என எழுவாய்த்தொடராகவும் உரைக்கலாம். யானும், உம்மை - இறந்ததுதழுவிய எச்சமும், இழிவுசிறப்புமாம்.

இப்பாட்டிற்கூறியுள்ள விஷயம் நகைப்பை விளைத்தலால், இப்பாட்டு- ஹாஸ்யரஸத்தின்பாற்படும்.

"க்ருஹமத்யநிகாதேந தநேந தநிநோயதி - பவாமஃகிந்நதேநைவதநேந தநிநோவயம்" என்னும் வடநூல்மேற்கோள் உணரத்தக்கது. (௬)

உ௭௭. வழங்காத செல்வரி னல்கூர்ந்தா ருய்ந்தா
ரிழந்தா ரெனப்படுத லுய்ந்தா—ருழந்ததனைக்
காப்புய்ந்தார் கல்லுதலு முய்ந்தார்தங் கைந்நோவ
யாப்புய்ந்தா ருய்ந்த பல.

(இ - ள்.) வழங்காத செல்வரின் - (பொருளை) உபயோகப்படுத்தாத தனவான்களினும், நல்கூர்ந்தார் - வறுமைப்பட்டவர், உய்ந்தார் - (துன்பங்களினின்றும்) தப்பினர்; (அது எப்படியெனில்:—) இழந்தார் எனப்படுதல் உய்ந்தார் - (இருந்தபொருளை) இழந்துவிட்டார்கள் எனப்படுகிற அபவாதத்தினின்றும் தப்பினார்கள் ; அதனை உழந்து காப்பு உய்ந்தார்-அப்பொருளை வருந்திக்காப்பாற்றுகிற சிரமத்தினின்றுந் தப்பினார்கள் ; கல்லுதலும் உய்ந்தார் - (அப்பணத்தைப் புதைத்துவைத்தற்பொருட்டு நிலத்தைத்) தோண்டுகிற வருத்தத்தினின்றுந் தப்பினார்கள் ; தம் கை நோவ யாப்பு உய்ந்தார் - தமது கைகள் நோகும்படி இறுகப்பிடித்தலினின்றுந் தப்பினார்கள்; உய்ந்த பல - (இங்ஙனம் அவர்கள்) தப்பினவை இன்னும் பல (உண்டு); (எ - று.

இப்பாட்டோடு "வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்,நல்குரவேபோலு நனிநல்ல—கொன்னே, அருளிலனன்பிலன்கண்

ணறைய னென்று,பலராலிகழப்படான்'' என்றநீதிநெறிவிளக்கச்செய்யுளை ஒப்பிடுக.

இழந்தா ரெனப்படுதல் முதலிய குறைகள் செல்வமுடையவரிடத்து மிகுதியாய் நிற்க, மற்றைப் பயன்பெறாதவிஷயத்தில் செல்வரும் வறிய ரும் ஒப்பரென்பது கருத்து.

உய்ந்த பல என்றது-அருளில்லாதவன், அன்பில்லாதவன், கண்ணோ ட்டமில்லாதவன்,லோபி என்று பலராலும் இகழப்படுதல் முதலியன இன் மைபற்றி. ''உடாஅது முண்ணாதுந் தம்முடம்புசெற்றுங், கெடாஅத நல்ல றமுஞ் செய்யார்—கொடாஅது, வைத்தீட்டினா ரிழப்பர் வான்றோய்மலை நாட, உய்த்தீட்டுந் தேனீக் கரி'', ''உண்ணா னொளிநிறா னோங்கு புகழ் செய் யான், துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே, வழங்கான் பொ ருள்காத் திருப்பானேல் அஆ, இழந்தானென் றெண்ணப் படும்'' என்ற துணிபின்படி லோபிகள்செல்வம் நிலைபெறா தழிதலால், 'இழந்தாரெனப் படுத லுய்ந்தார்' எனப்பட்டார்.

கல்லுதல்; கல் - பகுதி, உ - சாரியை. யாப்பு என்னுந் தொழிற்பெய ரில், யா - பகுதி; யாத்தல் - கட்டுதல். உய்ந்த - அன்சாரியைபெறாத பல வின்பால் வினையாலணையும் பெயர். கல்லுதலும், உம்மை - இறந்ததும் எதிரதும் தழுவிய எச்சம். நோவ என்னுஞ் செயவெனெச்சம் - காரியப் பொருளதாதலின், எதிர்காலம்.　(எ)

உஎஅ. தனதாகத் தான்கொடான் றாயத் தவருந்
தமதாய போழ்தே கொடாஅர்—தனதாக
முன்னே கொடுப்பி னவர்கடியார் தான்கடியான்
பின்னை யவர்கொடுக்கும் போழ்து.

(இ - ள்.) (சிலகுடும்பங்களில், பொருள்சேர்த்துவைத்தவன்), தனது ஆக-(அப்பொருள்) தனக்குஉரியதாயிருக்க, தான் கொடான்-(அப்பொழுது) தான் (அச்செல்வத்தைப் பிறர்க்குத்) தானஞ்செய்யான்; தாயத்தவரும் - (பின்பு அப்பொருளைப் பெறுதற்குஉரிய) தாயத்தார்களும், தமது ஆய போழ் தே - (அப்பொருள் அவன்காலத்தின்பின்) தம்முடையதாகியபொழுது, கொடார்-(தாமும் அதனைப் பிறர்க்குத்)தானஞ்செய்யார்; முன்னே-முன்பு [சம்பாதித்தவன் வாழ்ந்துள்ளகாலத்தில்], தனது ஆக - (அச்செல்வம்)தன் னுடையதாயிருக்கையில், கொடுப்பின் -(அதனைத் தான் பிறர்க்குக்) கொடுத் தால், அவர் கடியார் - அத்தாயத்தவர் விலக்கமாட்டார்; பின்னை - பின்பு [அவனிறந்தபின் அச்செல்வம் தாயத்தாருடையதாயிருக்கையில்], அவர் கொடுக்கும் போழ்து - அத்தாயத்தவர் தானஞ்செய்யுஞ் சமயத்தில், தான் கடியான் - (அப்பொருளை ஈட்டியவன்) வந்துவிலக்கமாட்டான்; (எ - று.)

பொருளைச்சம்பாதித்தவன் தானதருமங்கள் செய்யாமலே உலோபத் தோடுஇறந்தாலும், அதன்பின் அச்செல்வத்தை அடையும் தாயத்தாராவது ''பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு, பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்'' என்றபடி நல்வழியிற் செலவுசெய்து புகழும் புண்ணியமும்

பெறுதல்கூடும்: அங்ஙனமுமில்லாமல் அனைவருமே பெரியலோபிகளாயுள்ள சிலகுடும்பத்தாரைப்பற்றி இச்செய்யுள் செய்யப்பட்டதென அறிக.

தாயத்தவரும், உம்மை - இறந்ததுதழுவியஎச்சம். தாயமாவது - தமப்பன்பாட்டன்முதலானோர்மூலமாகவந்தபொருள்; அதனையெடுத்துக்கொள்ளத்தக்க தந்தைவழிச்சுற்றத்தவர்-தாயாதர்: அவரே இங்கு 'தாயத்தவர்'எனப்பட்டவர். ஏ - இசைநிறை. கொடாஅர் - அளபெடை, செய்யுளோசை நிறைப்பது. தனதாகக் கொடுப்பின் என்பதற்கு - தனக்குப் புண்ணியமும் புகழும் உண்டாம்படி தானஞ்செய்தா லென்றும் பொருள்கொள்ளலாம். முன், பின் - காலங்குறித்தன; ஏ, ஐ - சாரியைகள். (அ)

உஎகூ. இரவலர் கன்றாக வீவாரா வாக
விரகிற் சுரப்பதாம் வண்மை—விரகின்றி
வல்லவ ரூன்ற வடியாபோல் வாய்வைத்துக்
கொல்லச் சுரப்பதாங் கீழ்.

(இ - ள்.) இரவலர் - யாசகர், கன்று ஆக - கன்றை ஒப்ப, ஈவார் - கொடுப்பவர், ஆ ஆக - பசுவை ஒப்ப, விரகின் சுரப்பது - உற்சாகத்தோடு பயன்தருவதே, வண்மை ஆம் - தானகுணமாம்; விரகு இன்றி - (அப்படிப்பட்ட) உற்சாகமில்லாமல், வல்லவர் ஊன்ற வடி ஆ போல் - வலிமையுடையவர்கள் அழுத்திவருத்தப் பால்தருகிறபசுப்போல, வாய் வைத்து கொல்ல - பலஉபாயங்களைச்செய்து வருத்த, சுரப்பது - பயன்தருவது, கீழ் ஆம் - கீழ்மைக்குணமாம்; (எ - று.)

கன்றைக்கண்டமாத்திரத்தில் மகிழ்ச்சியோடு பாலைச்சுரக்கும் நல்ல சாதிப்பசுப்போல, இரப்பவரைக் கண்டமாத்திரத்தில் சிறிதும் வெறுப்பில்லாமல் மிக்கமகிழ்ச்சியோடு அவர்க்குவேண்டியபொருளைக் கொடுப்பது தான் கொடை; கன்று வாயைவைத்து ஊட்டிவருத்தவும் பிறர்பலர் பலவாறுபிடித்துஅழுத்தவும்மனமின்றிப்பால்சுரக்கிற அற்பசாதிப்பசுப்போல, இரப்பவர் வாயினாற்பலபேசிவருத்தவும் மற்றும்பலர் பலவாறு நிர்ப்பந்தப்படுத்தவும் வெறுப்போடு கொடுப்பது கொடையாகாது என்பது கருத்து; உவமையணி.

இரவலர் - இரத்தலில் வல்லவர்; இர வலர் எனப் பிரிக்க: அல்லது, இரத்தலையுடையவர்; இரவல்அர் எனப்பிரிக்க: இரவல் என்னுந்தொழிற்பெயரில், அல் - விகுதியாம். கன்று - இளமைப்பெயர்; "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையும்,ஆனோ டைந்துங் கன்றெனற் குரிய" என்பது,தொல்காப்பியம். ஆக - உவமவுருபு. விரகின்-பக்குவமாக, சிரமமின்றிஎன்றபடி. வண்மையென்னும் பண்புப்பெயரில்,வள் - பகுதி. வாய் - வாயில்; உபாயம். இனி, 'வாய் வைத்துக் கொல்ல' என்பதற்கு - நேர்ந்தஇடங்களில்நிந்தனை செய்து வருத்த என்றும், உறுப்பிடங்களில் கருவிகளைக்கொண்டு நோவு பண்ண என்றும் பொருள்கொள்ளலாம். கொல்லுதல் என்பது - இங்கே மிக்கதுன்பஞ்செய்தலையுணர்த்திநின்றது; "தன்னையே கொல்லுஞ் சினம்" என்ற திருக்குறளிற்போல : அங்கு இந்நாலடியாரையே மேற்கோள்காட்டி

ஞர் பரிமேலழகர். வடிஆ - வினைத்தொகை: வடித்தல் - ஊற்றுதல்; இங்கே பால்சுரத்தல். கீழ் - கீழ்மையென்னும் பண்புப்பெயரின் விகாரம். ஊன்ற, கொல்ல என்னுஞ் செயவெனெச்சங்கள், காரணப்பொருளவாய் இறந்த காலங் காட்டும். (௯)

உ௫0. ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக்
காத்தலு மாங்கே கடுந்துன்பங்—காத்தல்
குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக்
குறைபதி மற்றைப் பொருள்.

(இ - ள்.) ஈட்டலும் - (பொருளைச்)சம்பாதித்தலும், துன்பம்-வருத்தமாம்; மற்று-பின்பு, ஈட்டிய ஒள் பொருளை - அங்ஙனம்சம்பாதித்த சிறந்த செல்வத்தை, காத்தலும் - பாதுகாத்தலும், ஆங்கே - அவ்வாறே, கடு துன்பம் - மிக்க வருத்தமாம்; காத்தல் குறைபடின் - அப்பாதுகாப்புக் குறைந்தால், துன்பம் - வருத்தமாம்; கெடின் - (அச்செல்வம்) அழிவடைந்தால், துன்பம் - வருத்தமாம்; (ஆதலின், இவ்வாறு), பொருள் - செல்வம், துன்பக்கு உறைபதி - (பலவகை) வருத்தங்கட்கும் இருப்பிடமாம்; (எ - று.)— மற்றை - அசை.

இப்பாட்டோடு "இன்னல்தரும்பொருளையீட்டுதலுந் துன்பமே, பின்னதனைப்பேணுதலுந் துன்பமே-அன்ன,தழித்தலுந்துன்பமே யந்தோ பிறர்பா, விழத்தலுந்துன்பமேயாம்" என்ற நீதிவெண்பாவை ஒப்பிடுக. "ஒண்பொருள்,செய்வமென் பார்க்குந் துயிலில்லை யப்பொருள்,காப்பார்க்குமில்லை துயில்" என்றார் நான்மணிக்கடிகையிலும்.

"அர்த்தாநாமார்ஜநே துஃகம் ஆர்ஜிதாநாஞ்சரக்ஷணே - ஆயேவ்யயே மஹத்துஃகம் கதமர்த்தாஸ்ஸுகாவஹாஃ" என்பது, இதற்கு நேரான வடநூன்மேற்கோள்.

துன்பத்துக்குக் காரணமானதைத் துன்பமெனக் காரியமாகக்கூறியது, உபசாரவழக்கு. உம்மைகள் இரண்டும் - முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சப்பொருளன. மற்று என்னும் இடைச்சொல் - இங்கே, பின்என்னும் பொருளது. 'ஒண்பொருள்' என்றது, செல்வம் இம்மைமறுமைகளிற் புகழ்புண்ணியங்களை விளைத்து அறத்துக்கும் இன்பத்துக்குங் காரணமாகுஞ் சிறப்புப்பற்றி; இனி, ஒண்பொருள் - தருமவழியாற் சேர்க்கப்பட்ட பொருளென்றுங் கொள்ளலாம். உறைபதி - வினைத்தொகை. துன்பக்கு - அத்துச்சாரியை தொக்கது. (௰)

## உ௬ - ஆம் அதிகாரம்.—இன்மை.

அஃதாவது - ஐம்பொறிகளால் அனுபவிக்கப்படும் பொருள் யாவும் இல்லாமை. இவ்வறுமை முற்பிறப்பில் ஈயாமையின் பயனாதலால், அக்காரண காரியமுறைபற்றி ஈயாமையின்பின் வைக்கப்பட்டது. இன்மை - எதிர் மறைப் பண்புப்பெயர்.

உ௫க. அத்திட்ட கூறை யரைச்சுற்றி வாழினும்
பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்து
மொத்த குடிப்பிறந்தக் கண்ணுமொன் றில்லாதார்
செத்த பிணத்திற் கடை.

(இ - ள்.) அத்து இட்ட கூறை - செந்நிறம் பொருந்திய ஆடையை [காஷாயவஸ்திரத்தை], அரை சுற்றி வாழினும் - இடையிலே கட்டிக்கொண்டு உயிர்வாழ்ந்தாலும் [துறவிகளாயிருந்தாலும்], பத்து எட்டு உடைமை - பத்தாயினும் எட்டாயினும் பொருளை உடைத்தாயிருத்தல், பலருள்ளும் பாடு எய்தும் - பலசனங்களுள்ளும் பெருமையை யடையும் ; ஒத்த குடி பிறந்தக் கண்ணும் - (உலகத்தாரதுமதிப்புக்கு) ஏற்ற உயர்குலத்திற் பிறந்தாலும், ஒன்று இல்லாதார் - சிறிதும்பொருளில்லாதவர், செத்த பிணத்தின் கடை - உயிர்நீங்கிய உடம்பாகிய பிணத்தினுங் கடைப்பட்டவராவர் ; (எ - று.)

சந்நியாசியாயிருந்தாலும், சிறிதாயினுஞ்செல்வமிருந்தால்தான், ஒருவனைப் பலரும் பெருமைப்படுத்துவார்கள்; உயர்ந்தகுலத்திற்பிறந்திருந்தாலும், சிறிதும் பொருளில்லாதிருந்தால், ஒருவனை எவரும்லட்சியஞ்செய்வாரில்லை என உலகவியல்பு கூறியவாறு. பிணத்துக்காயினும் அந்திமகிரியைகளில் சில உபசாரங்கள் நேர்கின்றன ; செல்வமில்லாதவரையோ எந்தவிதத்திலும் உபசரிப்பாரில்லை யென்பார், 'பிணத்திலும் கடை' என்றார். "கொடிது கொடிது வறுமை கொடிது" என்றார் ஔவையாரும். பலர் உள்ளும் பாடு எனப் பிரித்து, பலருங் கருதும் மதிப்பு எனினுமாம்.

வறுமையின் இழிவைக் கூறுவார், செல்வத்தின் உயர்வையும் உடன் கூறினர். வாழினும், உம் - இழிவுசிறப்பு. பலருள்ளும், உம் - முற்று. பிறந்தக்கண்ணும், உம்-உயர்வுசிறப்பு. துறவிகள் காஷாயவஸ்திரம்தரித்தல் மரபு. இனி, அத்து இட்ட கூறை என்பதற்கு - தையல் நிறைந்த துணியென்றும் பொருள்கொள்ளலாம். 'அத்து' என்றது - இவ்விருபொருளையுமுடையதாதலை, "அரைப்பட்டிகையுந் துன்னமு மசைச்சொல்லும், செந்நிறமும் மிவை தெரியில் அத்தென்ப" என்னும் பிங்கலந்தையினாலும் அறிக. [இதில் துன்னம் - தையல், ஒன்றோடொன்று இசைத்தல்.] பாதியென்னும் பொருள் தரும் அரையென்பது - இங்கே, உடம்பின்மத்தியபாகத்துக்கு ஆகுபெயர். பத்து எட்டு - அப்பொருளுக்கு எண்ணலளவாகுபெயர். இவற்றின்பின் ஐயவும்மைகள் செய்யுள்விகாரத்தால் தொக்கன வென்க. பாடெய்தும் -பெருமைபெறுதற்குக் காரணமாமென்க ; உபசாரவழக்கு. 'செத்த' என வேண்டாதுவந்த அடைமொழி, பிணத்தின் பயனின்மையை நன்குவிளக்கும்.

செத்த, சா - பகுதி. கடை - கடையர்; பண்பாகுபெயர். 'பதருள்ளும்' என்ற பாடத்துக்கு - அசாரமானவருளாயினு மென உரைக்க. (க)

உ௫உ. நீரினு நுண்ணிது நெய்யென்பர் நெய்யினும்
யாரு மறிவர் புகைநுட்பந்—தேரி
னிரப்பிடும்பை யாளன் புகுமே புகையும்
புகற்கரிய பூழை நுழைந்து.

(இ - ள்.) நீரினும் - (எல்லாப்பொருள்களினும் நுட்பமாயுள்ள)நீரைக் காட்டிலும், நெய் - நெய்யை, நுண்ணிது என்பர் - நுட்பமானது என்று (யாவரும் அறிந்து) சொல்வார்கள் ; நெய்யினும் - அந்நெய்யைக்காட்டிலும், புகை நுட்பம்- புகையினது நுண்ணிதாயிருக்குந்தன்மையை, யாரும் அறிவர் - எல்லோரும் அறிவார்கள்; தேரின்- ஆலோசித்தறிந்தால், இரப்பு இடும்பை ஆளன் - இரத்தலாகிய துன்பத்தை யுடையவன், புகையும் புகற்கு அரிய பூழை - (அதிநுட்பமான) அந்தப்புகையும் உட்புகுதற்கு முடியாத துவாரத்தில், நுழைந்து புகும் - நுழைந்து செல்வான்; (எ - று.)

யாசகன் மிகவும் நொய்யவனென அவனது இழிவைக் கூறியவாறு. 'புகையும் புகுதற்கு அரிய பூழை நுழைந்துபுகும்' என்றது, கவி அதிசயோக்தியாக வருணித்துக் கூறியது.

ஏ - தேற்றம்; ஈற்றசையுமாம். உம்மைகள் மூன்றும் - இழிவுசிறப்பு; அவற்றின் நுண்மையைக் காட்டுதலால். இவற்றில் நுண்மை யென்றது, மிகச்சிறிய துளையிலும் நுழைதற்கேற்ற சிறுமையை. இரப்பு - தொழிற்பெயர் ; பு - விகுதி. துன்பத்துக்குக் காரணமானதைத் துன்பமென்றது, உபசாரவழக்கு. இனி, இரப்பிடும்பை - இரப்பினாலாகிய துன்ப மென்றுமாம். நிரப்பு எனப் பதம்பிரித்து, வறுமைத்துன்பமெனப் பொருள்கொள்ளினும் அமையும்; நிரப்பு - வறுமையாதலை, "நெருநலுங், கொன்றதுபோலு நிரப்பு", "நிரப்பினுள், யாதொன்றுங் கண்பாடரிது" எனத் திருக்குறளிலுங் காண்க. எல்லாப்பொருள்களும் நிரம்பியிருத்தலைக் குறிக்கும் 'நிரப்பு' என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர், எதிர்மறையிலக்கணையால், பொருளொன்று மில்லாமையைக் குறிக்கு மென்க. பூழை - புழை யென்பதன் நீட்டல். (உ)

உ௫௩. கல்லோங் குயர்வரைமேற் காந்தண் மலராக்காற்
செல்லாவாஞ் செம்பொறி வண்டினங்—கொல்லைக்
கலாஅற் கிளிகடியுங் கானக நாட
விலாஅஅர்க் கில்லைத் தமர்.

(இ - ள்.) கொல்லை - கொல்லைகளிலே, கலால் - கற்களைக்கொண்டு, கிளி - கிளிகளை, கடியும் - (தினைப்புனங்காப்பவர்) அதட்டிஓட்டுதற்கு இடமான, கான் அகம் - காட்டினிடத்தையுடைய, நாட-நாட்டையுடைய அரசனே!—கல் ஓங்கு உயர் வரைமேல் - கற்களால்வளர்ந்துள்ள உயர்ந்த மலையின்மேலே, காந்தள் - காந்தட்செடிகள், மலராக்கால் - பூப்பூவாவிட்டால்

செம்பொறி வண்டு இனம் - சிவந்த உடற்புள்ளிகளையுடைய வண்டுகளின் கூட்டங்கள், செல்லா ஆம் - (அவற்றினிடத்துப்) போகாவாம்; (அதுபோலவே), இலார்க்கு - பொருளில்லாதவர்க்கு, தமர் இல்லை-(விரும்பி வரும்) இனத்தவர் உளராகார்; (எ - று.)

காந்தள் பூவாதபோது வண்டுகள் அதனிடம் செல்லாமைபோல, ஒருவன் செல்வமுடையனாகாதவிடத்து அவனிடம் உறவினர்வாராரென்பதாம். இதிற் காந்தளென்றதைப் பிறமலர்களுக்கும் உபலக்ஷண மென்னலாம்.

எடுத்துக்காட்டுவமையணி. முன்னிரண்டடி - உபமானவாக்கியம்; இறுதியடி - உபமேயவாக்கியம்.

தனிச்சொல்லோடு கூடிய மூன்றுமடி - ஆடூஉமுன்னிலை. மருதநிலமாகிய அந்நாட்டை அடுத்துள்ள முல்லை குறிஞ்சி நிலங்களின் மாட்சிமை கூறுவார், 'கொல்லைக் கலாற் கிளிகடியுங் கானகநாட' என்றார். "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடைய தரண்" எனக் கூறப்பட்ட நீரரண் நிலவரண் மலையரண் காட்டரண் என்னும் நால்வகையரண்களுள் மலையரண் காட்டரண்களின் அமைதியை 'கொல்லைக் கலாற் கிளிகடியுங் கானகநாட' என்றதனால் உணர்த்தினாரெனக் கொள்ளலுமொன்று.

கல்லால் - கலால் எனச் செய்யுள்விகாரத்தால் தொக்கது. கல்லால் என்பதற்கு - இரத்தினங்களா லென்று பொருள்கொண்டால், செல்வச் சிறப்பை விளக்கும். கான் - கானம் என்னும் வடமொழியின் திரிபு. அளபெடை இரண்டும் - செய்யுளோசை நிறைப்பன. "செறாஅஅய் வாழிய நெஞ்சு" என்ற திருக்குறளிற்போல, இலாஅஅர்க்கு என்பதில் ஈரளபெடுத்தது; மாத்திரை நான்கு. உ௨௦-ஆம்பாட்டின் உரையைப் பார்க்க. தமர்-தம்மவர்; தாம் - பகுதி, முதல்குறுகினது-விகாரம். ஓங்கு உயர் - ஒருபொருட்பன்மொழி யென்றுங் கொள்ளலாம். (௩)

உ௩௪. உண்டாய போழ்தி னுடைந்துழிக் காகம்போற்
றொண்டா யிரவர் தொகுபவே—வண்டாய்த்
திரிதருங் காலத்துத் தீதிலிரோ வென்பா
ரொருவரு மிவ்வுலகத் தில்.

(இ - ள்.) உடைந்த உழி - (உடம்பு உயிர்நீங்கிச்) சிதைந்தவிடத்து, காகம்போல் - அளவில்லாத காக்கைகள் (அதனைத்தின்பதற்கு அவ்விடம் வந்துசேர்தல்) போல, உண்டு ஆய போழ்தின் - (ஒருவர்க்குச் செல்வம்)உண்டானபொழுதில், ஆயிரவர் - ஆயிரம்பேர், தொண்டு - அடிமையாய், தொகுப - வந்துகூடுவார்கள்; (அவ்வொருவர்தாமே), வண்டு ஆய் திரிதரும் காலத்து - வண்டைப்போன்று (பலவிடத்தும் உணவின்பொருட்டு) அலையுங் காலத்தில், தீது இலிரோ என்பார் ஒருவரும் - (அவரைநோக்கி 'நீர்)துன்பமில்லாமலிருக்கிறீரோ?' என்று க்ஷேமம் விசாரிப்பவர் ஒருவரும், இ உலகத்து இல் - இந்த உலகத்தில் இல்லை [அரிய ரென்றபடி]; (எ - று.)

இழிவுதோன்ற, பிறர்பொருளை உண்ண விரும்பி அப்பொழுதுமாத்திரம் ஓடிவருகிற துர்க்குணமுடைய பலர்க்குப் பிணம்பிடுங்கித்தின்னுங் காக்

கையை உவமைகூறினர். இங்கே செல்வத்துக்குப் பிணம் உவமையாவது, அதன் நிலையில்லாமையை விளக்கும். வண்டுகள் பூக்களுள்ள விடங்களி லெல்லாந் தேடிச்சென்று அலைந்து பலபூக்களிலுமுள்ள தேனை உட்கொள் வதுபோல, இரப்பவர் கொடையாளிகளுள்ள விடங்களிலெல்லாந் தேடிப் பலதிக்குகளிலுஞ் சென்று அலைந்து அவர்களிடமுள்ள பொருளைப் பெற்று உண்ணும் இரத்தல்தொழிலின் இயல்பை விளக்க, 'வண்டாய்த் திரிதருங் காலத்து' என்றார். உவமையணி.

போழ்தின், இன் - ஏழனுருபு. உடைந்துழி - உடைந்தவுழி: பெய ரெச்சத்தின் அகரவீறு தொகுத்தல். 'உடைந்துழி' - எதிர்காலவினையெச்ச முமாம். காகம் - வடசொல்; கா என்று கத்துதல்பற்றி வழங்கும் பெயர். ஆயிரவர் - எண்ணடியாப்பிறந்த பலர்பாற்பெயர். தொகுப - பலர்பால் முற்று. ஏ - தேற்றம். ஆய் - உவமவுருபு. திரிதரும், தா - துணைவினை; குறுக்கலும், விரித்தலும் - விகாரங்கள். ஒருவரும், உம்மை - இழிவுசிறப்பு. செல்வமில்லாத காலத்தில் யோகக்ஷேமம் விசாரிக்கும் ஒருவனது உயர்வு விளங்குதற்கு, மரியாதைப்பன்மையாகக் கூறினா ரென்க. (ச)

உஅரு. பிறந்த குலமாயும் பேராண்மை மாயுஞ்
சிறந்ததங் கல்வியு மாயுங்—கறங்கருவி
கன்மேற் கழூஉங் கணமலை நன்னாட
வின்மை தழுவப்பட் டார்க்கு.

(இ - ள்.) கறங்கு - ஒலிக்கின்ற, அருவி - நீரருவிகள், கல்மேல் - கற்க ளின்மேல் (விழுந்து), கழூஉம் - (அக்கற்களின்மாசைப் போக்கிச்) சுத்தி செய்தற்கிடமான, கணம் - கூட்டமாகிய, மலை-மலைகளையுடைய, நல்-சிறந்த, நாட - நாட்டையுடையவனே!—இன்மை தழுவப்பட்டார்க்கு - வறுமை யால் அடையப்பட்டவர்களுக்கு,—பிறந்த குலம் மாயும்-(அவர்கள்) பிறந்த நற்குடியின் பெருமையும் அழியும்; பேர் ஆண்மை மாயும் - சிறந்தஆண்மைக் குணங்களும் அழியும்; சிறந்த தம் கல்வியும் மாயும் - (எல்லாப்பொருளினுஞ்) சிறந்த அவர்களதுகல்வித்திறமையும் அழியும்; (எ - று.)

பொருளில்லாதார்க்குக் குடிப்பிறப்பு முதலிய மேன்மைகள் இருந்தா லும் அவர் சிறப்படையா ரென்பது கருத்து. ஆண்மை - பராக்கிரம மென் றுவது, அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி யென்னும் ஆண்குணம் நான்கு மென்றுவது கொள்க.

கறங்கு அருவி - வினைத்தொகை. மழையில்லாத காலத்தும் வற்றுத லில்லாத நீர்ப்பெருக்கத்தின் அமைதியை அந்நாட்டிற்குக்கூறி அதன்வளத் தைத் தெரிவிப்பார், 'கறங்கருவிகன்மேற்கழூஉங்கணமலைநன்னாட' என்றார். கழூஉம் - கழுவும் என்பது விகாரப்பட்டு அளபெடுத்தது; சொல்லிசையள பெடை. கணம்-வடசொல். நாட்டுக்கு நன்மை-நிலவளம் நீர்வளம் முதலிய பலவளங்களு முடைமை. அடைமொழி கொடாமற் பொதுப்படக்கூறினல் அச்சொற்கள் பெரும்பாலும் சிறப்பையே குறிப்பது மரபாதலால், பிறந்த

குலம் என்றது - உயர்குலமாயிற்று; குடிப்பிறப்பு, ஒழுக்கமுடைமை, குணசாலி, அறிவுடையான், கந்தமலர் என்பன காண்க.

"குடிப்பிறப்பழிக்கும் விழுப்பங்கொல்லும், பிடித்தகல்விப்பெரும்புணை விடூஉம், நாணணிகளையு மாணெழில்சிதைக்கும், பூண்முலைமாதரொடு புறங்கடைநிறுத்தும், பசிப்பிணி யென்னும் பாவி" என்ற மணிமேகலையையும், "தொல்வரவுந்தோலுங்கெடுக்குந் தொகையாக,நல்குரவென்னுநசை" என்ற திருக்குறளையும், "நலனு மிளமையு நல்குரவின் கீழ்ச்சலம்" என்ற நான்மணிக்கடிகையையும், "மானங் குலங் கல்வி வண்மை யறிவுடைமை, தானந் தவ முயர்ச்சி தாளாண்மை—தேனின், கசிவந்தசொல்லியர்மேற்காமுறுதல் பத்தும், பசிவந்திடப் பறந்துபோம்" என்ற நல்வழியையும் இங்கே அறிக. (௫)

உ௫௬. உள்கூர் பசியா லுழைநசைஇச் சென்றார்கட்
குள்ளூ ரிருந்துமொன் றாற்றாதா—னுள்ளூ
ரிருந்துயிர் கொன்னே கழியாது தான்போய்
விருந்தின னாதலே நன்று.

(இ - ள்.) உள் - வயிற்றினுள்ளே, கூர் - மிகுந்த, பசியால் - பசியினாலே, உழை - தன்னிடத்தை, நசைஇ - விரும்பி, சென்றார்கட்கு - வந்து அடைந்தவர்களுக்கு, உள் ஊர் இருந்தும் - ஊர்க்குள்ளே யிருந்தும், ஒன்று ஆற்றாதான் - ஒருதவியுஞ்செய்யமாட்டாத வறியவன், உள் ஊர் இருந்து - அந்த ஊரினுள்ளே யிருந்து, உயிர் - தனது உயிர்வாழ்நாளை, கொன்னே கழியாது - வீணாகக் கழியாமல், தான் போய் விருந்தினன் ஆதலே - தான் (வேறு ஊர்க்குப்) போய் ஒருவனுக்கு) விருந்தாளியாவதே, நன்று நல்லது; (எ - று.)

தன்னிடம் பசித்துவந்தவர்கட்கு உதவிசெய்யமாட்டாத தரித்திரன் ஓர்ஊர்க்குள்ளே இருந்துகுடித்தனஞ்செய்தலைக்காட்டிலும் எங்கேயாகிலும் போய்ப் பிச்சையெடுப்பது நல்லது என்பதாம்; எனவே, "இன்றுமைவேண்டின் இரவெழுக" என்றபடி யாசகனாப்புறப்படுவது எல்லாவற்றினுந் துன்பந்தருவதென்பது பிரசித்தம்: அதனினுங்கீழ்ப்பட்டதாகும்பொருளில்லாமை என்பது கருத்து. இதனால், இரந்தாயினும் பொருள்சேர்த்தல் வேண்டுமென்பது போதரும். பொருளுள்ளவன் ஊரினுள் இருந்து பிறர்க்குஉதவுதலுஞ் செய்வானானால், பலர்க்கும் பயன்படுதல் கூடும்: பொருளில்லாதவன் ஊரினுள் இருந்தும் எவர்க்கும் பயன்படான் எனப் பொருளில்லாதானது பயனற்றதன்மையை விளக்கியவாறு.

கூர் - மிகுதியுணர்த்தும் உரிச்சொல். நசை என்ற பெயர்ச்சொல் - நசைஇ என அளபெடுத்து, நசைந்துஎன்ற வினையெச்சத்தின் பொருளைத் தந்தது; "ஊனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார், வரனசைஇ யின்னுமுளேன்" என்ற திருக்குறளிற்போல: இது செய்யுளோசைகுறையாதவிடத்துவந்த சொல்லிசையளபெடை. ஊரினதுஉள் - உள்ளூர்; முன்பின்னாகத் தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை: இது, இலக்கணப்போலியின்பாற்படும், அது - பிறர்க்குப்பயன்படத்தக்க உள்ளூரிலிருத்தலின் தகுதியை விளக்கும்,

உயிர் - உயிர்வாழும்நாளுக்கு இருமடியாகுபெயர். கொன் - பயனின்மைப் பொருள்குறிக்கும் இடைச்சொல்; ஏ - சாரியை. ஒருவன் பிறப்பெடுத்ததற் குப்பயன் தன்னிடம்ஒருபொருளைவிரும்பிவந்தவர்க்குஉதவுதலே யாதலால், அதுசெய்யாதுவிடுகலை 'உயிர்கொன்னேகழித்தல்' என்றார். விருந்து - புதுமை: பண்புப்பெயர்; புதியனாய்ச் செல்பவன், விருந்தினன். ஆதலே, ஏ - பிரிநிலை; தேற்றமுமாம். ஆற்றாதான் என்பது - அதிகாரத்தால், செல்வ மில்லாதவ னென்றதாயிற்று.

இனி, இப்பாட்டுக்கு "இரத்தலி னின்னாது மன்றநிரப்பிய, தாமே தமி யருணல்" என்ற திருக்குறளின் கருத்தோடொப்ப, உள்ளூரிலிருந்தும் பசியால் வந்தவர்க்கு ஒன்றைத்தாராமல் தானே உண்பவன் அங்ஙனஞ்செய்தலினும் இரத்தலே நல்லது என்றும் பொருளுரைக்க இடமுண்டு. (சு)

உஅஎ. நீர்மையே யன்றி நிரம்ப வெழுந்ததங்
　　கூர்மையு மெல்லா மொருங்கிழப்பர்—கூர்மையின்
　　முல்லை யலைக்கு மெயிற்றாய் நிரப்பென்னு
　　மல்ல லடையப்பட் டார்.

(இ - ள்.) கூர்மையின்-கூர்மையையுடைய, முல்லை - முல்லையரும்பின் சிறப்பை, அலைக்கும் - அழியச்செய்கின்ற, எயிற்றாய் - பற்களையுடையவளே! நிரப்பு என்னும் - வறுமையென்கிற, அல்லல் - துன்பத்தால், அடையப்பட் டார் - சேரப்பட்டவர்கள், நீர்மையே அன்றி - (தமது) நற்குணங்களைமாத் திரமேயல்லாமல், நிரம்ப எழுந்த-பூர்ணமாய்ச்சிறந்துநிற்கிற,தம்கூர்மையும்- தமது அறிவின் நுட்பத்தையும், எல்லாம் - மற்றுமுள்ள சிறப்புக்களெல்லா வற்றையும், ஒருங்கு - ஒருசேர, இழப்பர் - இழந்துவிடுவார்கள்; (எ - று.)

பொருளிலாதாருடைய நற்குணம்முதலியவை விளங்காஎன்பது கருத்து.

நீர்மையே என்ற ஏகாரத்தை உயர்வுசிறப்பாகவாவது பிரிநிலையாகவா வதுகொள்க.கூர்மையும்,உம்-இறந்ததுதழுவியஎச்சம். ஒருங்கு-எஞ்சாமைப் பொருள்தரும் இடைச்சொல். கூர்மை, வெண்மை,அழகு இவற்றில் முல்லை மலரினும்பல்சிறந்ததென்பார்,'கூர்மையின்முல்லையலைக்குமெயிறு'என்றார். முல்லை-அதன்மலருக்கு,முதலாகுபெயர்: பொருளாகுபெயரென்பதும்இது. அல்லல் - இங்கே, துன்பத்துக்குக் காரண மென்றபடி. நிரப்பென்னும் அல்லல் - காரணம் காரியமாக உபசரிக்கப்பட்டது. 'எல்லா மொருங்கிழ ப்பர்'—"ஸர்வம் ஶூந்யம் தரித்ரஸ்ய" என்பர் வடநூலார். (எ)

உஅஅ. இட்டாற்றுப் பட்டொன் றிரந்தவர்க் காற்றாது
　　முட்டாற்றுப் பட்டு முயன்றுள்ளூர் வாழ்தலி
　　னெட்டாற்றுச் சென்று நிரைமனையிற் கைநீட்டுங்
　　கெட்டாற்று வாழ்க்கையே நன்று.

(இ - ள்.) இட்டு - அற்பமான, ஆறு - (வறுமையின்) வழியிலே, பட்டு- அகப்பட்டு, ஒன்று - (யாதாயினும்) ஒருபொருளை, இரந்தவர்க்கு - யாசித் தவர்கட்கு, ஆற்றாது - கொடுக்கமாட்டாமல், முட்டு ஆறு பட்டு - சங்கட

மான வழியிலே பொருந்தி, முயன்று - (தன்னைப்பாதுகாத்துக்கொள்ளு தற்குமாத்திரம்) பிரயத்தனப்பட்டு, உள் ஊர் - ஊரினுள்ளே, வாழ்தலின் - வாழ்தலைக்காட்டிலும், நெடு ஆறு சென்று - தூரமான வழியிலே போய், நிரை மனையில் - வரிசையாயுள்ள வீடுதோறும், கை நீட்டும் - (பிச்சைவாங்கு தற்குக்) கையை நீட்டுகிற, கெடு ஆறு வாழ்க்கையே - கெட்டவழியில் வாழ் தலே, நன்று - நல்லதாம்; (எ - று.)

இப்பாட்டில் அமைந்தது இவ்வதிகாரத்தின் ஆறும்பாட்டின் கருத்தே யானாலும், ஒவ்வொருபாடலும் ஒவ்வொருவராற் பாடப்பட்டதாதலால் கூறியதுகூறலாகா தென உணர்க.

இட்டு என்பது - சிறுமையென்னும் பொருளதாதலை "ஆகாறளவிட்டி தாயினுங் கேடில்லை" எனத் திருக்குறளிலும், "இட்டிடைப்பின்னைகேள்வர்" எனத் திருச்சந்தவிருத்தத்திலுங் காண்க. இட்டு ஆறு-சிறியதானவழி;என வே, எளிய வறுமைநெறியாயிற்று. முட்டுஆறு - வருத்தமானவழி; எனவே, இதுவும் வறுமையாம். இட்டாற்றுப்படுதல் இரந்தவர்க்கும், முட்டாற்றுப் படுதல் இரக்கப்பட்டவர்க்குங் கொள்க. வாழ்தலின் நன்று என இயையும். 'நிறைமனை' என்ற பாடத்துக்கு - பொருள்நிறைந்த வீடு என்க. கெட்டவாறு என்பது - கெட்டாறு எனப் பெயரெச்சவீறு தொகுத்தல்; வேட்டகம், அட்டில் என்பவற்றிற் போல. (அ)

உருகூ. கடகஞ் செறிந்ததங் கைகளால் வாங்கி
யடகு பறித்துக்கொண் டட்டுக்—குடைகலனு
வுப்பிலி வெந்தைதின் றுள்ளற்று வாழ்பவே
துப்புரவு சென்றுலந்தக் கால்.

(இ - ள்.) துப்புரவு - அனுபவிக்கப்படும் பொருள்கள், சென்று உலந் தக்கால் - அழிந்தொழிந்தால், (அவ்வேழைகள்), கடகம் செறிந்த தம் கைக ளால் - (முன்னே) கடகமென்னுங் கைவளைகள் பொருந்தியிருந்த தமது கைகளாலே, வாங்கி-(பக்கங்களிலுள்ள தூறுகளை அப்பால்) தள்ளி, அடகு- கீரைகளை, பறித்து கொண்டு - பறித்துக்கொண்டுபோய், அட்டு - சமைத்து, குடை கலன் ஆ - (நுங்கெடுத்த பனங்காய் தேங்காயோடு முதலிய) குடை யப்பட்ட பொருள்களையே (வேறுபாத்திரமில்லாமையால்) உண்கலமாகக் கொண்டு, (அவற்றில்), உப்பு இலி வெந்தை தின்று - உப்பில்லாத (அந்த) வெந்தகீரையைப் புசித்து, உள் அற்று - மனவூக்கங்கெட்டு, வாழ்ப - வாழ் வார்கள்; (எ - று.)— எ - இரக்கம்.

இப்பாட்டு - செல்வமில்லாமையின் தன்மையைச் சொல்வதாய் இவ் வதிகாரத்தில் வைக்கப்பட்டாலும், இதனை 'செல்வநிலையாமை' என்ற அதி காரத்திற் சேர்த்தல் மிகப்பொருந்தும்; அங்ஙனமிருக்கவும், இந்நூலின் நா னூறுபாடல்களையும் பப்பத்துப்பாடலையுடைய நாற்பது அதிகாரங்களாக ஒழுங்குபடப் பகுக்கவேண்டி இதனை இவ்வதிகாரத்தில் வைத்தனரென்க.

செல்வம் மாறினால் கைந்நோவ இலைக்கறி பறித்துச் சமைத்து உண்டு உய்யுமாறு நேரும் வறுமை மிக்கதுன்பந்தரு மென்று கருத்து.

வாங்கி என்பதற்கு - (கீரைக்குரிய செடிகளை) வளைத்து என்றும் பொருள்கொள்ளலாம். கடகம்-பொன் மணிமுதலியவற்றாற் செய்யப்படும் ஒரு வகைக்கைவளை. இதனால், அவர்கள் முன்பு நல்லசெல்வமுடையாராயிருந்தமை நன்கு புலப்படும். 'உப்பில்லாப்பண்டம் குப்பையிலே' என்றபடி அறுவகைச்சுவைகளுள்ளும் உப்பு பிரதானமாதலால், அதுவுமில்லாதவெந்தையென அவ்வுணவின் இழிவை வெளியிட்டவாறு. குடை - செயப்படுபொருள்விகுதி புணர்ந்து கெட்டது. இலி, இ - பெயர்விகுதி. உள் - உடம்பினுள்ளிடத்திலே யிருக்கின்ற அகத்துறுப்பாகிய மனத்துக்கு இடவாகுபெயர். துப்புரவு என்பதைத் துப்பு உரவு எனப் பிரித்து, அனுபவித்தற்கேற்ற சிறப்பை யுடையவை யெனக் காரணப்பொருள் கூறுக; துப்பு - அனுபவித்தல், தொழிற்பெயர்: உரவு - வலிமை.

இப்பாட்டு,"பாலுடையமிர்தம்பைம்பொற்கலத்திடைப்பாவையன்ன, நூலடுநுசுப்பினல்லா ரேந்தவு நோர்ந்துநோக்காச், சேலடுகண்ணி காந்தட்டிருமணித்துடுப்புமுன்கை, வாலடகருளிச்செய்ய வனத்துறைதெய்வமானாள்" என்னுஞ் சிந்தாமணியை நினைப்பூட்டுகின்றது. (கூ)

உகூ௦. ஆர்த்த பொறிய வணிகிளர் வண்டினம்
பூத்தொழி கொம்பின்மேற் செல்லாவா—நீர்த்தருவி
தாழா வுயர்சிறப்பிற் றண்குன்ற நன்னாட
வாழாதார்க் கில்லைத் தமர்.

(இ - ள்.) நீர்த்து - நல்லதன்மையையுடையதான, அருவி - நீரருவி தாழா- குறைவுபடாத, உயர் சிறப்பின் - மேலான சிறப்பையுடைய, தண்- குளிர்ச்சியான, குன்றம் - மலைகளின்வளத்தையுடைய, நல் நாட - சிறந்த நாட்டையுடைய அரசனே! ஆர்த்த பொறிய-(உடம்பை) நிறைத்தபுள்ளிகளையுடைய, அணி கிளர் வண்டு இனம் - அழகுமிகுந்த வண்டுகளின் கூட்டங்கள், பூத்து ஒழி கொம்பின்மேல் - பூப்பூத்துநீங்கின[மலரில்லாத]மரக்கிளைகளின்மீது, செல்லாஆம்-போகமாட்டாவாம்; (அதுபோலவே), வாழாதார்க்கு - (செல்வமுடையராய்) உயிர்வாழாதவர்க்கு, தமர் இல்லை - இனத்தவர் (எவரும்) உளராகார்; (எ - று.)

எடுத்துக்காட்டுவமையணி. தனிச்சொல்லுடன்கூடிய மூன்றாமடி - ஆூஉமுன்னிலை. இப்பாட்டு - இவ்வதிகாரத்தின் மூன்றாம்பாட்டோடு ஒத்த கருத்தை யுடையது.

ஆர்த்த என்பதைத் தனியே எடுத்து, ஒலியுடைய வென்று பொருள் கூறி, வண்டினத்துக்கு அடைமொழியாக்கினும் அமையும். நீர்த்து அருவி- நீரையுடையதாகிய அருவி யென்றலு மொன்று. நீர்த்து-நீர்என்பதன்மேற் பிறந்த ஒன்றன்பாற் குறிப்புவினையாலணையும்பெயர். பொறிய - குறிப்புப் பெயரெச்சம். கிளர் வண்டு - வினைத்தொகை. (௪௦)

## ௩௦ - ஆம் அதிகாரம்.—மானம்.

அஃதாவது-எப்பொழுதும் தம்நிலையினின்று தாழாமையும், ஊழ்வினையால் தாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையுமாம். உலகத்திற் பெரும்பாலும் பொருளின்மைகாரணமாக மானத்தையிழந்து இரப்பது இயல்பாதலால், அங்ஙனம் மானத்தைக்கெடுப்பது தகுதியன்று என்பார், இதனை 'இன்மை' என்னும் அதிகாரத்தின் பின்னும், 'இரவச்சம்' என்னும் அதிகாரத்தின் முன்னும் வைத்தன ரென அறிக. மாநம் - வடசொல்.

உ௯௧. திருமதுகை யாகத் திறனிலார் செய்யும்
பெருமிதங் கண்டக் கடைத்து—மெரிமண்டிக்
கானந் தலைப்பட்ட தீப்போற் கனலுமே
மான முடையார் மனம்.

(இ - ள்.) திரு மதுகை ஆக-(தம்மிடத்தில்) செல்வம் வலிமையுடையதாக, (அச்செருக்கினால்), திறன் இலார் செய்யும் - தக்க நற்குண மில்லாதவர்கள் செய்கின்ற, பெரு மிதம் - வரம்புகடந்த நடத்தையை, கண்டக் கடைத்தும் - பார்த்தபொழுது,—மானம் உடையார் மனம் - மானத்தையுடையவர்களுடைய நெஞ்சம்,—எரி மண்டி கானம் தலைப்பட்ட தீ போல்- எரிதல்பொருந்திக் காட்டிற் பற்றியெழுந்த அக்கினிச்சுவாலை போல, கனலும் - கொதிக்கும்; (எ - று.)—ஏ - தேற்றம்.

செல்வச்செருக்கால் அயோக்கியர் எல்லைகடந்து நடக்கையில், மானிகளுக்கு மனவருத்தமுண்டாம் என்றபடி. பெருமிதம் - மிதத்தினும் விஞ்சியது என்க; மிதம் - எல்லை. எரி - முதனிலைத்தொழிற்பெயர். (க)

உ௯௨. என்பா யுகினு மியல்பிலார் பின்சென்று
தம்பா டுரைப்பரோ தம்முடையார்—தம்பா
டுரையாமை முன்னுணரு மொண்மை யுடையார்க்
குரையாரோ தாமுற்ற நோய்.

(இ - ள்.) தம் உடையார் - தமது மானத்தைத் தாம்காக்கும் இயல்புடையவர்,—என்பு ஆய் உகினும்-(பொருளில்லாமையால் உணவுகிடையாமல் தம் உடம்பு) எலும்புமாத்திரமாகிச் சிதைவதாயிருந்தாலும், இயல்பு இலார்பின் சென்று - நற்குணமில்லாதசெல்வரதுபின்னேபோய், தம் பாடு உரைப்பரோ - தமதுவருத்தத்தைக் கூறுவார்களோ? [கூறார்]; தம் பாடு - தமது வருத்தத்தை, உரையாமை - தாம் சொல்லாமலிருக்கையிலே, முன் உணரும் - முன்னே (குறிப்பினால்) அறிந்து உதவத்தக்க, ஒண்மை உடையார்க்கு - கூரறிவையுடையவர்களுக்கு, தாம் உற்ற நோய் - தாம் அடைந்த துன்பத்தை, உரையர்ரோ - கூறாதிருப்பாரோ? [கூறுவர்]; (எ - று.)

மானிகள் எவ்வளவுதாழ்ந்தநிலைமையிலும் தமது வருத்தத்தைத் தகாதவர்க்குக்கூறார்: ஏனெனில்,—அவமானமேயன்றிப் பயனில்லாமையால்; தக்கவரோடுகூறுவார்கள்: ஏனெனில்,—தாம்கூறாவிடினும்அவர்கள்தாமாகவே

அறிந்துகொள்வாராதலாலும், அவர்களிடங் கூறுவதிற் பயனுண்மையாலும் என்பது கருத்து. "இரத்தலுமீதலேபோலுங்கரத்தல்,கனவிலுந்தேற்றாதார் மாட்டு", "இரப்பனிரப்பாரையெல்லாமிரப்பிற்,கரப்பாரிரவன்மினென்று" என்ற திருக்குறள்களாலும் லோபிகளிடம் தமதுகுறைகூறுதல் குற்றமும், உதாரகுணமுள்ளவரிடம் கூறுதல் குற்றமன்மையுங் காண்க. "ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே, கெட்டா னெனப்படுதல் நன்று" என்பது நீதியாதலால், உடம்புஇறக்கவரினும் மானிகள் தம்மையிகழுந் தன்மையார்பின்போய்த் தமது துன்பத்தைக் கூறாராவர். ஒருவர் கருத்தை அவர்கூறாமலே அவர்களுடைய முகம் கண் முதலியவற்றின் குறிப்புக்கொண்டு அறிவது விசேஷமாதலால், 'உரையாமை முன்னுணரு மொண்மை' எனப்பட்டது.

உரையாரோ - இரண்டு எதிர்மறை உடன்பாடுஉணர்த்திற்று. உரையாமை-எதிர்மறைவினையெச்சம்; மை-விகுதி. "நரம்பெழுந்துலல்கூர்ந்தாராயினும்" என்றாற்போல, 'என்பாயுகினும்' என்றார். பின் - இங்கே, இடம். "நல்லவைசெய்யி னியல்பாகும் தீயவை, பல்லவர் தூற்றும் பழியாகும்" ஆதலால், நற்குணம் 'இயல்பு'எனப்பட்டது. முன் - காலமுன். (௨)

௨௯௩. யாமாயி னெம்மில்லங் காட்டுதுந் தாமாயிற்
காணவே கற்பழியு மென்பார்போ—ணாணிப்
புறங்கடை வைத்தீவர் சோறு மதனான்
மறந்திடுக செல்வர் தொடர்பு.

(இ - ள்.) யாம் ஆயின் - நாமானால், எம் இல்லம் காட்டுதும் - (வரும் விருந்தினர்க்கு) நமதுவீடுமுழுவதையுங் காண்பிப்போம்; தாம் ஆயின்-செல்வச்செருக்குடையவர்களானால், காணவே கற்பு அழியும் என்பார் போல் - (தமதுவீட்டைப் பிறர் உட்புகுந்து)பார்த்தமாத்திரத்திலே அதன்உறுதிகெடுமெனக் கருதுவார்போல, நாணி - (பிறர்க்குத் தமதுவீட்டைக் காட்டக்) கூச்சப்பட்டு, புறங்கடை வைத்து-(அவர்களை வீட்டு) வெளியிடத்திலேயே இருத்தி, சோறும் ஈவர் - உணவையுங் கொடுப்பார்கள்: அதனால் - ஆகையால், செல்வர் தொடர்பு மறந்திடுக - (மானமுடையவர்) செல்வச்செருக்குடையாரைப் பின்தொடர்தலை மறந்துவிடக்கடவர்; (எ - று.)

செல்வர்கள் பிறரை வீட்டினுள் வரவிடாமைக்குக் காரணம் அவர்கள் பார்த்தால் தமது வீட்டின் வலிமை அழிந்துவிடுமென்னுங் கருத்து என்று கற்பித்துக்கூறினது, ஏதுத்தற்குறிப்பேற்றவணியின் பாற்படும்.

'யாமாயினெம்மில்லங்காட்டுதும்' என்றது, கவிக்கூற்று; இது-உலகத்தில் செல்வச்செருக்கில்லாத தம்போலியர் வந்தவிருந்தினரை உள்ளேயழைத்துப்போய் உபசரிக்கும் நல்லியல்பை விளக்கும். கற்பு - கல்லின்தன்மை. கடைப்புறம் - புறங்கடையென முன்பின்னாகமாறியது-இலக்கணப்போலி; வெளிவாயிலென்று பொருள். சோறும் என்ற உம்மை - இழிவுசிறப்பு; அது உள்ளே வைத்து இடுதல் தகுதியேயன்றிப் புறத்திலேவைத்து ஈதல் தகுதியன்றென்பதைக் காட்டும். மறந்திடுக - வியங்கோள்; இடு - துணிவுப்பொருளுணர்த்துந் துணைவினை. தொடர்பு - அநுசரணை. இனி, இல்லம் என்

பதற்கு - இடவாகுபெயராய் மனைவியென்றும், கற்பு என்பதற்கு - பதிவிர தாதருமமென்றும் உரைப்பாரு முளர். போல் - ஒப்பில்போலி: உவமப் பொருள்தருவதன்று: இங்கு, தற்குறிப்புப்பொருள் தருவது. (ஙு)

உகூச. இம்மையு நன்று மியனெறியுங் கைவிடா
தும்மையு நல்ல பயத்தலாற்—செம்மையி
னானங் கமழுங் கதுப்பினாய் நன்றேகாண்
மான முடையார் மதிப்பு.

(இ - ள்.) நானம்- கஸ்தூரிப்புழுகு, செம்மையின் - நன்றாக, கமழும் - நறுமணம் வீசப்பெற்ற, கதுப்பினாய்- கூந்தலையுடையவளே! மானம் உடையார் மதிப்பு - மானமுள்ளவர்களது பெருமை, இம்மையும் - இவ்வுலகத்திலும் [இப்பிறப்பிலும்], நன்று ஆம் - (புகழைவிளைத்தலால்) நல்லதாகும்; இயல் நெறியும் கைவிடாது - (நல்லோர்கள் செல்லத்தக்க) நியாயவழியையும் விட்டுநீங்காததுபற்றி, உம்மையும் - மறுமையிலும், நல்ல பயத்தலால்- சிறந்த புண்ணியப்பயன்களை உண்டாக்குதலால், (அந்த மானம்), நன்றே - (மறுமைக்கும்) நல்லதே; காண்- (இதனை நீ) அறி; (எ - று.)—ஏ - தேற்றம். 'காண்' என்பதையும் - தேற்றமுணர்த்துவ தென்னலாம்; முன்னிலையசையென்பாரு முளர்.

மதிப்பு-பிறரால் நன்குமதிக்கப்படுதல். இம்மையும், உம்மையும் என்ற உம்மைகள் - முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சம். இயல்நெறி- வினைத்தொகை ; இதன்மேல்உள்ள உம்மையும் - எச்சப்பொருளதே. நல்ல- பெயர். கதுப்பு - கபோலமுமாம். கன்னத்திலுங் கஸ்தூரி அணிவதுண்டு. மானம் உடையார் - மானங்கெடாதவருமாம்.

"புகழின்றாற் புத்தேள்நாட் டுய்யாதால் என் மற்று, இகழ்வார்பின் சென்று நிலை" என்ற திருக்குறளினால், மானங்கெடுதல் இம்மை மறுமை யிரண்டு பயன்களையுந் தாராத தாகுமாறு காண்க.

இனி, இப்பாட்டு - மானமுடையவர்கள் பிறரைமதிக்கும் மதிப்பு இம் மைக்கும் நல்லதாம்; இயல்பாகிய ஒழுக்கநெறியையுங் கைவிடாதுநிற்கும்; மறுமைக்கும் நல்லஇன்பங்களையுண்டாக்கும்; ஆதலால், நல்லதாம் என்றும் பொருள்படும்.

'இசைநெறியுங் கைவிடாது' என்றும் பாடம். (ச)

உகூரு. பாவமு மேனைப் பழியும் படவருவ
சாயினுஞ் சான்றவர் செய்கலார் சாத
லொருநா ளொருபொழுதைத் துன்ப மவைபோ
லருநவை யாற்றுத லின்று.

(இ - ள்.) பாவமும் - (மறுமைக்குத்) தீவினையும், ஏனை பழியும் -மற்றை (இம்மைக்கு) உலகநிந்தனையும், பட - உண்டாகும்படி, வருவ - நேர்கிற காரியங்களை, சான்றவர்-(நற்குண நற்செய்கைகளால்) நிறைந்த பெரியோர், சாயினும்-(அவற்றைச் செய்யாவிட்டால் தமக்கு) மரணம் நேர்வதாயிருந்தாலும், செய்கலார் - செய்யமாட்டார்கள் ; (ஏனெனில்),—சாதல் - இறத

தல், ஒருநாள் ஒருபொழுதை துன்பம் - இறக்கிற ஒருநாளிலே இறக்கிற அவ் வொருபொழுதில்மாத்திரமே (அனுபவித்துக்கழிகின்ற) துன்பமாகும்; அவைபோல் - அந்த இழிதொழில்கள்போல, அரு நவை ஆற்றுதல் இன்று - (உயிருள்ள வளவும் அழியும்படி) அருமையாகிய மிக்கதுன்பங்களைச் செய்த லில்லை; (எ - று.)

பாவம் - பாபம்என்னும் வடமொழியின் திரிபு. முதலடியில், உம்மைகள் - எண்ணுப்பொருளன. வருவ - பெயர். சாயினும், உம்மை - இழிவு சிறப்பு; அது - "சாதலினின்னாததில்லை" எனக் கூறப்படுகிற மரணவேதனையின் மிக்ககொடுமையை விளக்கும். 'சாவினும்' என்றும் பாடம். பொழுதை - ஐயீற்றுடைக்குற்றுகரம். ஏதுவணி.

"பரம்ப்ராணபரித்யாகோ நமாநபரிகண்டநம் - ம்ருத்யுஸ்ஸ்யாத்க்ஷணிகந்து:கம் மாநபங்கோதிநேதிநே" என்னும் வடநூல்மேற்கோள் இங்கு அறியத்தக்கது. (௬)

௨௯௩. மல்லன்மா ஞாலத்து வாழ்ப வருளெல்லாஞ்
செல்வ ரெனினுங் கொடாதவர்—நல்கூர்ந்தார்
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தரையரே
செல்வரைச் சென்றிரவா தார்.

(இ - ள்.) மல்லல் - (பலவகை) வளப்பங்களையுடைய, மா ஞாலத்து - பெரியபூமியிலே, வாழ்பவருள் எல்லாம் - உயிர்வாழ்பவர்களெல்லாருள்ளும், செல்வர் எனினும் கொடாதவர் - தனவான்களாயிருந்தாலும் தானஞ்செய்யாதவர்கள், நல்கூர்ந்தார் - தரித்திரரேயாவர்; நல்கூர்ந்தக்கண்ணும்-வறுமையடைந்தவிடத்தும், செல்வரை சென்று இரவாதார் - பொருளுடையாரிடம்போய் அவரை யாசியாதவர், பெரு முத்தரையரே - (பெருஞ்செல்வமுடைய) பெருமுத்தரையரென்னும் பிரபுவைப் போல்பவரேயாவர்; (எ - று.)

இச்செய்யுள்செய்த ஆசிரியர்காலத்தில் பெருஞ்செல்வத்தினராய்ச் சிறந்த பெருமுத்தரையரென்பவரொருவர் இருந்தனராதல் வேண்டும். இப்பெயர் - இந்நூலின் இருபதாம்அதிகாரத்தில் பத்தாவது செய்யுளிலும் "பெருமுத்தரையர் பெரிதுவந்தீயுங், கருனைச்சோறார்வர் கயவர்" எனக் கூறப்பட்டுள்ளது.

செல்வம்படைத்ததன்பயன் பிறர்க்குக்கொடுத்தலே யாதலால் அதனைச் செய்யாதவர் வறியவரும், செல்வமில்லாமையின்காரியமாகிய இரத்தல் இல்லாமையால் இரவாதவர் செல்வமுடையவருமாகக் கருதப்படுவரென்க.

"மல்லல்வளனே"என்ற தொல்காப்பியத்தால், மல்லல்என்பது-வளமென்னும் பொருளுணர்த்துவதோ ருரிச்சொல்லாதலை யறிக. மா - மஹா என்னும் வடமொழியின் விகாரம்; இது - பெருமையாகிய குணத்தை யுணர்த்தலால், தமிழில் உரிச்சொல்லின்பாற்படும்.

வறுமைக்காலத்திலும் பிறரிடம்போய் இரவாமல் மானத்தைக்காப்பது நலம் என்ற கருத்துப் புலப்படுதலால், இப்பாட்டு இவ்வதிகாரத்ததாயிற்று.

உ௬எ. கடையெலாங் காய்பசி யஞ்சுமற் றேனை
யிடையெலா மின்னாமை யஞ்சும்—புடைபரந்த
விற்புருவ வேனெடுங் கண்ணாய் தலையெல்லாஞ்
சொற்பழி யஞ்சி விடும்.

(இ - ள்.) புடை பரந்த - பக்கங்களிலே பரவிய, வில் புருவம் - விற்போல் வளைந்த புருவங்களையும், வேல் நெடு கண்ணாய்-வேலாயுதம்போன்ற நீண்டகண்களையு முடையவளே! கடை எலாம் - அதமர்கள்யாவரும், காய் பசி அஞ்சும்- (வயிற்றை) வருத்துகின்ற பசிக்குப் பயப்படுவார்கள் ; ஏனை - (அவர்களினும்) வேறுபட்ட, இடை எலாம் - மத்திமர்கள்யாவரும், இன்னாமை அஞ்சும் - துன்பத்திற்குப் பயப்படுவார்கள்; தலை எல்லாம் - உத்தமர்களோ எனில், சொல் பழி அஞ்சிவிடும் -(உலகத்தாருடைய) சொல்லால் வருகின்ற பழிக்குப் பயப்படுவார்கள்; (எ - று.)

லோகாபவாதத்தால் மானக்கேடு உளதாமென்று அஞ்சுவர் மேன்மக்களென்று கருத்து. "நெல்லி, னரிசியானின்புறாஉங் கீழெல்லாம் தத்தம் வரிசையா னின்புறாஉ மேல்" என்றபடி கீழ்மக்கள் மான அவமானங்களைக் கருதாமல் கிடைத்த உணவுமாத்திரத்தால் உவப்பவரும், மேன்மக்கள் அங்ஙனமன்றி அவமானஞ்சிறிதுமில்லாமல் மானமேமுழுதுமுண்டாக மகிழ்பவரு மாதலால் 'கடையெலாங் காய்பசியஞ்சும்' என்றும், 'தலையெலாஞ் சொற்பழியஞ்சிவிடும்' என்றும், தற்காலத்துப்பயனாகிய பசிநீங்குதலையும் எக்காலத்தும் பயனாகிற புகழ்விளைதலையும் நோக்கியல்லாமல் அரசர்முதலியோரால் நேரக்கூடிய மரணதண்டனைமுதலிய துன்பங்கட்குப் பயந்து தீச்செயலொழிந்துநற்செயல்புரியுமியல்பினர் இடைப்பட்டவராதலால் 'இடையெலா மின்னாமை யஞ்சும் 'என்றுங் கூறினர். "இரத்தலினின்னாததில்லை" என்றதனால் இன்னாமை இறத்தலுமாம்.

பொருளால் உயர்திணைப்பலர்பாலாயினும், சொல்லால் கடை இடை தலை என்பன பால்பகாஅஃறிணைப்பெயராதலால், 'அஞ்சும்' என்னுஞ் செய்யுமென்முற்றைக் கொண்டன;இங்ஙனமன்றி, செய்யுமென்முற்றுப் பலர்பாலுக்கு உரியதாகாமை உணர்க. மற்று - அசைநிலையென்றாவது, வினைமாற்றென்றாவது கொள்க. இன்னாமை - எதிர்மறைப் பண்புப்பெயர் ; இனிமையென்பதன் மறுதலை. புருவத்துக்கு வில் உவமை - வளைந்தவடிவினால் மாத்திரமேயன்றி ஆடவரைவருத்துதலாலுமாம். புருவம் - ப்ரூঃ என்னும் வடமொழியின் சிதை வென்பர்; வடமொழியில் இதன் இரண்டாம் வேற்றுமை - ப்ருவம் என நிற்கும்.

"அவ்ருத்தேர்ப்பயமங்யாநாம் மத்யாநாம்மரணாத்பயம்-உத்தமாநாந்து மர்த்யாநா மவமாநாத்பரம்பயம்" என்பது, இப்பாட்டிற்கு நேரான வடநூன்மேற்கோள். (எ)

உ௬அ. நல்லர் பெரிதளியர் நல்கூர்ந்தா ரென்றெள்ளிச்
செல்வர் சிறுநோக்கு நோக்குங்காற்—கொல்ல
னுலையூதுந் தீயேபோ லுள்கனலுங் கொல்லோ
தலையாய சான்றோர் மனம்.

(இ - ள்.) 'நல்லர்-(இவர்) நன்மையுடையவர், பெரிது அளியர்-மிகவுங் கருணைசெய்யத்தக்கவர், நல்கூர்ந்தார் - வறுமையடைந்தவர்,' என்று - என்று இவ்வாறுகூறி, எள்ளி - அவமதித்து, செல்வர் - தனவான்கள், சிறு நோக்கு நோக்கும் கால் - (பிறரை)அற்பப்பார்வையாகப் பார்க்கும்போது, —தலை ஆய சான்றோர் மனம் - உத்தமர்களாகிய பெரியோரது நெஞ்சம், கொல்லன் உலை ஊதும் தீயேபோல்-கருமான் உலைக்களத்தில் ஊதியெழுப்பும் நெருப்புப்போல, உள் கனலும் - உள்ளே கொதிக்கும்; (எ - று.)

கொல் ஓ இரண்டும் - அசைநிலை; 'இடைச்சொற்கள் வேண்டிய பல பொருளை விளக்கும்' என்ற வடமொழிநியாயத்தால், இங்கே இவ்விடைச் சொற்களுக்குத்தேற்றப்பொருளுரைத்தலும்பொருந்தும். நல்லர்,பெரிதளியர், நல்கூர்ந்தார் என்பன -இங்கே இரக்கத்தாற்சொல்லுஞ் சொற்களல்லவென்றும், இகழ்ச்சியாற்சொல்லுஞ் சொற்களாமென்றும் அறிக; அது, சிறுநோக்குநோக்குதலால் உணரப்படும்: ஆனதுபற்றியே,சான்றோர்மனம் கனல்வதாயிற்று. கோபத்தை யடக்குதலும் சான்றோரியல்பாதலால்,அதனை வெளிக்காட்டாது'உள்கனலும்' என்றார். சிறுநோக்கு-அலட்சியமாகப் பார்த்தல். கொல்லன்-இரும்பைக்கொல்லுதல் பற்றிவந்த பெயர்; கொல்லுதல் - மிகஅடித்தல். தீயே, ஏ - அசை; உயர்வுசிறப்புமாம். மனம் - மநஸ்; வடசொல். கால் - காலம்; விகாரம். (அ)

௨௬௯. நச்சியார்க் கீயாமை நாணன்று நாளு
மச்சத்தா னாணுத னாணன்று—மெச்சத்தின்
மெல்லிய ராகித்தம் மேலாயார் செய்தது
சொல்லா திருப்பது நாண்.

(இ - ள்.) நச்சியார்க்கு - (தம்மை) விரும்பி வந்தவர்க்கு, ஈயாமை - (அவர்வேண்டிய பொருளைக்) கொடாதிருப்பது, நாண்அன்று-நாணமன்று; நாள் நாளும் - தினந்தோறும், அச்சத்தால் - (அஞ்சவேண்டிய காரியங்களுக்கு) அஞ்சுதலால், நாணுதல் - வெள்குதலும், நாண் அன்று - நாணமாகாது: (தாம), எச்சத்தின் - (செல்வக்) குறைவையுடைய, மெல்லியர் ஆகி-அற்பர்களாயிருக்கையில், தம் மேலாயார் செய்தது - தம்மினும்மேலான செல்வவான்கள் தமக்குச்செய்த எளிமையை, சொல்லாது இருப்பது - பலர்க்குஞ் சொல்லி வெளிப்படுத்தா திருப்பது, நாண் - நாணமாம்;(எ-று.)

அடக்கமில்லாத செல்வவான்கள் தம்மிடத்துச்செய்த அவமதிப்பைப் பிறரறியச்சொல்லாதிருத்தலே, மானத்துக்குஉரிய நாணமாய் எல்லாநாணங்களினுஞ் சிறக்கு மென்பது கருத்து.

நாணுவது - லஜ்ஜை. நச்சியார் - இறந்தகால வினையாலணையும்பெயர்; நச்சு - பகுதி. நாளும் - அடுக்கு, தொறுப்பொருளது; உம்மை - முற்றுப் பொருளது. ஆகி - ஆக; எச்சத்திரிபு. ஆம் - அசை. இனி, பின்வாக்கியத்துக்கு - செல்வத்தில்தாம்குறைபட்டவராயிருக்கையில் தம்மினும மேலானவர் தமக்குச்செய்த உபகாரத்தைப் பலரும்அறிய எடுத்துக்கூறி நன்றி பாராட்டாமலிருப்பது வெட்கத்திற்குக் காரண மெனப் பொருளுரைத்தலும் தகுதியாம். (௯)

௩00. கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
யிடம்வீழ்ந்த துண்ணா திறக்கு—மிடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மான மழுங்க வரின்.

(இ - ள்.) கடமா - காட்டுப்பசுவை, தொலைச்சிய - கொன்ற, கான் உறை வேங்கை - காட்டில்வசிக்கின்ற பெரும்புலியானது, இடம் வீழ்ந்தது உண்ணாது இறக்கும் - (தான்கொல்லும்பிராணிகளுள் தனது) இடப்பக்கத்தில்விழுந்ததைத் தின்னாமலிருந்தே சாகும்; (அதுபோலவே), விழுமியோர் - சிறப்புள்ள பெரியோர், இடம் உடைய - செல்வத்தையுடைய, வான் அகம் கை உறினும் - சுவர்க்கலோகத்தினிடம் கைவசமாகக் கிடைப்பதானாலும், மானம் அழுங்க வரின் - (தமது) மானங் கெட வருவதாயிருந்தால், வேண்டார் - (அந்தச் சுவர்க்கவின்பத்தையும்) விரும்பார்; (எ - று.)

மானக்குறைவு வருவதாயிருந்தால் எப்படிப்பட்ட சிறப்புடையதையும் விரும்பார் அறிவுடையோர் என்பது கருத்து. பராக்கிரமமுள்ள புலிக்குத் தான்இறக்கும்படிநேர்ந்த பசியைத் தீர்த்தற்கு இன்றியமையாத உணவேயாயினும் இடப்பக்கத்தில் வீழ்ந்ததை எடுத்துண்ணுமை இயல்பாதல் போல, மிகவிரும்பத்தக்க சிறப்புடைய பொருளேயாயினும் மானங்கெட வருவதைச் சிறிதும்விரும்பாமை மானிகளுக்கு இயல்பென்க. எடுத்துக் காட்டுவமையணி. உபமானத்தால், உபமேயத்தில் 'உயிர்நீப்பர், மானம் வரின்' என்ற குணமும் பெரியோரிடம் உள்ளதாக விளங்கும்.

பெருமிதமுடைய புலி மிகப்பசித்தாலும் தனதுஇடப்பக்கத்தில் வீழ்ந்ததை உண்ணாதாலையும், வலப்பக்கத்தில் வீழ்ந்ததையே உண்ணுதலையும், அத்தகைய புலி மனவுறுதியுடையார்க்கு உவமையாதலையும், அது யானையைக்கொல்லும் வலியதாதலையும், "கடுங்கட்கேழ லிடம்பட வீழ்ந்தென, வன்றவணுண்ணுதாகி வழிநாட், பெருமலைவிடரகம்புலம்ப வேட்டெழூஉந், திருங்களிற்றொருத்தல் நல்வலம்படுக்கும்,புலிபசித்தன்ன மெலிவி லுள்ளத், துரனுடையாளர்கேண்மையோ, டியைந்த வைக லுளவாகியரோ" எனப் புறநானூற்றிலுங் காண்க.

கடமா என்பதை - கடம் ஆ என்றுவது,கடம் மா என்றுவது பிரித்து, காரணப்பெயராகப் பொருள்கொள்க; கடம் - காடு, ஆ - பசு, மா-விலங்கு. கடமாஎன்பதற்கு - கன்னமதத்தையுடைய யானையெனப் பொருள்கொள்ளலு மொன்று. இடம் - செல்வமாதலை "இடனில்பருவத்து மொப்புரவிற் கொல்கார்", "இடமில்லாக்காலும்" எனத் திருக்குறளிலுங் காண்க. இனி, இடமுடைய என்பதற்கு - விசாலமான இடத்தையுடைய எனப் பொருள் கொள்வாருமுளர். தொலைச்சிய, தொலைச்சு - பகுதி; இது - தொலையென்பதன் பிறவினை ; தொலைச்சுதல் - ஒழியச்செய்தல். உம் - உயர்வுசிறப்பு. மானம் மழுங்க என்றும் பிரிக்க இடமுண்டு. (௩0)

## ௩க - ஆம் அதிகாரம்.—இரவச்சம்.

அஃதாவது- இரத்தற்கு அஞ்சுதல். ஒருவரிடம் சென்று ஒருபொருளை யாசிப்பது தமதுமானங் கெடுவதற்குக் காரணமாகு மாதலால்,மானமுடை யார் அந்தஇரத்தல்தொழில்செய்வதற்கு அஞ்சுவர் என்ற காரணம்பற்றி, இது மானம் என்னும் அதிகாரத்தின்பின் வைக்கப்பட்டது. திருக்குறளுரையில், பரிமேலழகர் 'இரவச்சமாவது-மானந்தீர வரும் இரவிற்கு அஞ்சுதல்' என்று கூறியதுங் காண்க. இரவச்சம் என்ற தொடர் - வேற்றுமைப்புணர்ச்சி, நான்காம்வேற்றுமைத்தொகை; இரத்தலை அஞ்சுதல் என இரண்டாம் வேற்றுமைத் தொகையாகவும், இரத்தலினின்று அஞ்சுதல் என ஐந்தாம் வேற்றுமைத்தொகையாகவும் விரிப்பினும் அமையும். இரவு அச்சம் என்ற இரண்டுசொற்களும் - தொழிற்பெயர்கள்.

பொருளைச் சம்பாதித்தற்கு உரிய நல்வழிகள் பலவற்றில் இரத்தல் ஒன்றாகக் கொள்ளத்தக்கதன்று என்ற சம்பந்தம்பற்றி, இவ்வதிகாரம் பொருட்பாலுக்குப்பொருந்துவதாயிற்று;பிறவற்றிற்கும் இங்ஙனமே கண்டுகொள்க.

௩0௩. நம்மாலே யாவரிந் நல்கூர்ந்தா ரெஞ்ஞான்றுந்
 தம்மாலா மாக்க மிலரென்று—தம்மை
 மருண்ட மனத்தார்பின் செல்பவோ தாமுந்
 தெருண்ட வறிவி னவர்.

(இ - ள்.) 'இ நல்கூர்ந்தார் - இந்த வறியவர், நம்மாலே ஆவர் - நம்மாலேயே செல்வமுடையவராவர்: (இதுவேயன்றி), எஞ் ஞான்றும் - எப்பொழுதும், தம்மால் ஆம் ஆக்கம் இலர் - தமது முயற்சியாற் சம்பாதிக்கும் பொருளுடையவரல்லர்,' என்று - என்று எண்ணியும் சொல்லியும், தம்மை மருண்ட- தம்மைத் தாமே(மேலானவராக)மயங்கின,மனத்தார்பின் - மனத்தையுடையவர்களின்பின்னே, தெருண்ட அறிவினவர் தாமும் - தெளிந்த அறிவுள்ளவர்களும், செல்பவோ - (இரத்தற்குச்) செல்வார்களோ ? [செல்லார்;] (எ - று.)

'பிறர்க்கு வேண்டுவன கொடுக்கவேண்டுவது நமது கடமை' என்று கொள்ளாமல், 'நாம் கொடுத்தால்தான் இந்தத் தரித்திரர்க்குப் பொருளுண்டேயொழிய அவர்களுடைய சொந்தமுயற்சியால் ஒருகாசுங் கிடையாது' என்று இரப்பவர்களை இகழ்ந்தும், தம்மைப் பெருமைபாராட்டியும் செருக்குக் கொள்ளுகின்ற அற்பர்களிடத்து விவேகிகள் யாசகத்திற்காகச் செல்ல மாட்டார் என்பதாம்.

கடவுள் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொருமுகமாய்ச் சீவனம்கற்பித்திருத்தலால், 'நாம் கொடுக்கிறோம்' என்று நினைப்பது அறிவின்மையாம்; ஆதலால், அங்ஙனம் நினைப்பவர் 'மருண்ட மனத்தார்' ஆவர். "இகழ்ந்து எள்ளாது

ஈவாரைக் காணின் மகிழ்ந்து உள்ளம், உள்ளுள்உவப்பது உடைத்து"எனத் திருக்குறளிற்கூறியபடி, வருகிற யாசகர்களை அவமதித்து இழிவுசொல்லாமல் நன்குமதித்து இனியவைகூறி வேண்டியபொருள் கொடுப்பவரே யாசிக்கப் படத்தக்கவ ரென்றும், அங்ஙனம் இல்லாதாரிடத்துப் போய் ஒருபொருளை இரத்தலைப்பற்றி அஞ்சவேண்டு மென்றும் கூறியதாயிற்று.

நம்மால்-செல்வச்செருக்கினால் தம்மை உயர்த்தல்பற்றிவந்த தன்மைப் பன்மை. ஏ - பிரிநிலை. ஆவர் - ஆக்கமடைவர். ஆம் - ஆகும் என்பதன் விகாரம். பின் - இடைசசொல்; இங்கே இடப்பொருளது. ஓ - எதிர் மறை. தாம் - அசை. உம் - உயர்வுசிறப்பு. (௯)

௩௦௨. இழித்தக்க செய்தொருவ னார வுணலிற்
பழித்தக்க செய்யான் பசித்த றவறோ
விழித்திமைக்கு மாத்திரை யன்றோ வொருவ
னழித்துப் பிறக்கும் பிறப்பு.

(இ - ள்.) ஒருவன்—, இழித்தக்க செய்து - இழிவுக்குக் காரணமாகிய செய்கைகளைச் செய்து, ஆர உணலின் - வயிறுநிரம்ப உண்ணுதலைக்காட்டி லும், பழித்தக்க செய்யான் பசித்தல்- பழிக்கத்தக்க காரியங்களைச் செய்யாத வனுய்ப் பசியோடிருத்தல், தவறோ - குற்றமாகுமோ ? [ஆகாது]; (ஏனெ னில்),—ஒருவன் அழித்து பிறக்கும் பிறப்பு-ஒருமனிதன் அழிந்து (மறுபடி) பிறக்கிறபிறப்பு,விழித்து இமைக்கும் மாத்திரை அன்றோ-(மூடினகண்ணைத்) திறந்து இமைகொட்டுதலாகிய அளவுடையதன்றோ ? (எ - று.)

'மானத்தை விட்டாயினும் உயிரைப் பாதுகாக்கவேண்டும்' என்பாரது கொள்கையை இதில் மறுக்கின்றார். இந்த உடம்பு போனால், வேறுஉடம்பு கிடைப்பது அரிதென்று நினைக்கவேண்டாம்; கண்மூடித்திறக்கும் ஒருமாத் திரைப்பொழுதினுள்ளே இவ்வுயிர் வேறுஉடம்பைச் சேரும்: ஆதலால், இவ் வுடம்பைப் பாதுகாக்கும்பொருட்டென்று மானத்தைவிட்டுஇரந்துபிழைத் தலினும், மானங்கெடாமல் பட்டினியாயிருந்து உயிர்விடுவதே நலம் என்ப தாம். இரவச்சத்தை வற்புறுத்துதற்பொருட்டு, இவ்வாறு கூறினர். உயிர்க ட்கு இயல்பாய்க் கடிதிற் பிறப்பு வரு மென்றும், நிலையில்லாதஉடம்பைப் பாதுகாக்கும்பொருட்டு நிலையாகப் புகழ்பெறும் மானத்தைத் துறக்க லாகா தென்றும் கூறியவாறு; "பாவமு மேனைப்பழியும் படவருவ, சாயினுஞ் சா ன்றவர் செய்கலார் சாதல்,ஒருநா ளொருபொழுதைத் துன்ப மவைபோல், அருநவை யாற்றுத லின்று"எனக் கீழ் மானமென்னும் அதிகாரத்தில் வந்த துங் காண்க.

இழித்தக்க, பழித்தக்க - இழித்தற்குத்தக்கவை, பழித்தற்குத்தக்கவை என நான்காம்வேற்றுமைத் தொகையாக விரியும்: இழி, பழி - முதனிலைத் தொழிற்பெயர்கள். தக்க- அன் சாரியைபெறாத பலவின்பால் வினையாலணை யும்பெயர். ஆர - திருப்தியுண்டாக. மாத்திரை - மாத்ரா என்னும் வட மொழியின் திரிபு."இயல்பெழு மாந்த ரிமை நொடி மாத்திரை"என்றார் நன் னூலார். அன்றோ-தேற்றம். அழிந்து என்பது, எதுகை நோக்கி, அழித்து

என வலித்தல்விகாரம் பெற்றது; இவ்வுடலையொழித்து எனப் பிறவினையாகவும் கொள்ளலாம். விழித்திமைக்கு மாத்திரை யன்றோ - இமைத்து விழிக்கின்ற பொழுதாயிருக்குமென விகுதி பிரித்துக்கூட்டினுமாம்; உறங்கிக் கண்விழிக்கும் அளவன்றோ ? என்று உரைப்பினும் அமையும்.

உ"றங்குவது போலுஞ் சாக்காடு உறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" என்ற திருக்குறளையும், "பிறந்தவர் சாதலு மிறந்தவர் பிறத்தலும், உறங்கலும் விழித்தலும் போன்ற தன்மையின்" என்ற மணிமேகலையையும் இங்கே அறிக.

முன்னிரண்டடியிற் கூறிய பொருளைப் பின்னிரண்டடியிற் காரணங் காட்டி நிறுவியதனால், ஏதுவணி. பின்னிரண்டடியில் உபமானஉபமேயங்கட்கு ஐக்கியத்தைச் சொன்னது, காட்சியணி. (௨)

௩௦௩. இல்லாமை கந்தா விரவு துணிந்தொருவர்
செல்லாரு மல்லர் சிறுநெறி—புல்லா
வகம்புகுமி னுண்ணுமி னென்பவர்மாட் டல்லான்
முகம்புகுத லாற்றுமோ மேல்.

(இ - ள்.) இல்லாமை - பொருளில்லாமை, கந்து ஆ - காரணமாக, இரவு துணிந்து-யாசிப்பதை நிச்சயித்து, ஒருவர்—, சிறு நெறி-(இரத்தலாகிய) அற்பவழியில், செல்லாரும் அல்லர் - போகாமலும் இருக்கமாட்டார்; (ஆனாலும்), புல்லா - தழுவிக்கொண்டு, 'அகம் புகுமின் -(எமது) வீட்டுக்கு வாருங்கள்; உண்ணுமின் - புசியுங்கள், என்பவர்மாட்டு அல்லால் - என்று சொல்லுந் தன்மையரிடத்தல்லாமல், (பிறரிடத்து), மேல் - மேன்மைக்குணமுடையோர், முகம் புகுதல் ஆற்றுமோ - முகங்காட்டிச்செல்லுதலைப் பொறுப்பார்களோ?[பொறார் என்றபடி] ; (எ - று.)

உலகத்தில் மனிதர்க்கு வறுமையால் இரக்கும்படி நேர்தலும் உண்டு; அப்படி நேர்ந்தாலும், கண்டவிடத்தும் சென்றுஇரவாமல், யாசகரை மனமுவந்து முகமலர்ந்து இன்சொற்சொல்லி ஆதரிக்குந் தன்மை யுள்ளவரிடமே செல்வர் மேலோர் என்பதாம்.

கந்து- கந்தம் என்னும் வடமொழியின் திரிபு: கந்து- கிழங்கு: இங்கே காரணத்துக்கு இலக்கணை; 'மூலம்' என்பதுபோல. ஸ்கந்தமென்னும் வடசொல்லின் திரிபாகக் கொண்டு, பற்றுக்கோடெனப் பொருளுரைத்தலுமொன்று. செல்லாரும், உம் - இழிவுசிறப்பு. செல்லாரும் அல்லர்=செல்லவேசெல்வர் ; இரண்டு எதிர்மறை, உடன்பாட்டை யுணர்த்திற்று. ஓகாரம் - எதிர்மறை. 'மேல்' - மேலோர் ; பண்பாகுபெயர்; இது, பொருளால் உயர்திணைப் பலர்பாலாயினும், சொல்லால் பால்பகாஅஃறிணைப்பெயராதலால், 'ஆற்றும்' என்னும் வினையைக் கொண்டது. ஒருவர் என்பது - பகுதியை நோக்குமிடத்து ஒருமையேயாயினும், விகுதிபற்றிப் பலர்பால்முற்றையே கொள்ளும். 'அகம்புகுதும்' என்றும் பாடம். (௩)

௩0௪. திருத்தன்னை நீப்பினுந் தெய்வஞ் செறினு
முருத்த மனத்தோ டுயர்வுள்ளி னல்லா
லருத்தஞ் செறிக்கு மறிவிலார் பின்சென்
றெருத்திறைஞ்சி நில்லாதா மேல்.

(இ - ள்.) தன்னை—,திரு - இலக்குமி, நீப்பினும் - கைவிட்டாலும், தெய்வம்—,செறினும் - கோபித்துவருத்தினாலும், உருத்த மனத்தோடு-(சோர்வில்லாமல்) ஊக்கங்கொண்ட மனத்துடனே, உயர்வு உள்ளின் அல்லால்-(தன்)மேன்மையை நினைத்தலேயல்லாமல்,—மேல்-மேன்மைக்குணமுடையவன்,—அருத்தம் செறிக்கும் அறிவுஇலார் பின் சென்று - (ஈகைத்தன்மையில்லாமல் லோபத்தாற்) பொருளைச்சேர்த்துவைக்கும்அவிவேகிகளிடத்திற் போய், எருத்து இறைஞ்சி நில்லாது - தலைகுனிந்துநிற்கமாட்டான்;(எ-று.)

வறுமையும் மற்றும் பலதுன்பங்களும் நேர்ந்தாலும் தைரியத்தைவிடாமல் தமதுமேன்மையையே எண்ணிப் பெரியோர்கள் இரவாதிருப்பர்களேயன்றி, லோபிகளிடம் போய்த் தலைவணங்கிநிற்கமாட்டார்கள் என்பதாம்.

செல்வம் சம்பாதித்ததற்குப் பிரயோஜனமாகிய தான்அனுபவித்தல் பிறர்க்குக் கொடுத்தல் என்ற இரண்டும் சிறிதும்இல்லாமல் செல்வத்தை வருந்திமேன்மேலுஞ்சேர்த்து எவர்க்குந் தெரியாமற் பத்திரப்படுத்திப்புதைத்துவைத்து அழிபவர் பொருளின்பயனை அறியாதவ ராதலால், 'அருத்தஞ் செறிக்கும் அறிவிலார்' எனப்பட்டனர். "பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக், கேடுகெட்ட மானிடரே" என்றார் ஒளவையாரும். திரு - செல்வத்துக்குஉரிய தலைவி; "நல்லா ளுடன்படின் தானே பெருகும் கெடும்பொழுதில், கண்டனவுங் காணக் கெடும்" ஆதலால், செல்வம் ஒழிதலை 'திரு நீப்பின்' என்றது.

'தன்னை' என்பதை 'செறின்' என்பதோடுங் கூட்டுக. உம்மைகள் இரண்டும் - இழிவுசிறப்பு. நீப்பின், ப் - எழுத்துப்பேறு. உள்ளின் - வினையெச்சம், தொழிற்பெயர்த்தன்மைப்பட்டது. தைவம், அர்த்தம் - வடசொற்கள். தெய்வம் - ஊழ்வினை. எருத்து - பிடரி. ஆம் - அசை. (௪)

௩0௫. கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணு
மிரவாது வாழ்வதாம் வாழ்க்கை—யிரவினை
யுள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ
கொள்ளுங்காற் கொள்வார் குறிப்பு.

(இ - ள்.) கரவாத - (யாசகர்க்குப் பொருளை) ஒளிக்காத [உள்ளதைக் கொடுக்கின்ற], திண் அன்பின்-உறுதியான அன்பையுடைய, கண் அன்னார் கண்ணும் - (தம்) கண்ணையொத்த மேலோரிடத்தும், இரவாது வாழ்வது - யாசகஞ்செய்யாமல் வாழ்வதே, வாழ்க்கை ஆம் - (ஒருவர்க்கு) நல்வாழ்க்கையாம்; இரவினை உள்ளும் கால் - யாசித்தலாகியதொழிலை நினைக்கும்பொழுதே, உள்ளம் உருகும் - மனம் கரைந்து அழிந்துபோகின்றது; (அப்படியிருக்க), கொள்ளும் கால் - (பிறரிடத்துத் தாம் ஒருபொருளை இரந்து) பெறும்

பொழுது, கொள்வார் குறிப்பு - (அங்ஙனம்) பெற்றுக்கொள்பவரது மனம், என்கொலோ - எப்படிப்பட்டதாமோ? (எ - று.)

லோபிகளல்லாதவரும், மனமொத்த அன்புள்ளவரும், கண்போலச்சிறந்தவருமானவரிடத்தும் இரக்கக்கூடாது; ஏனென்றால்,—இரத்தலென்பதை நினைக்கும்பொழுதே மனம்அழிகிறது; இரந்து பொருள்பெறும்போது, மனம் என்னநிலைதான் அடையுமோ? என்பதாம். ஏதுவணி. இனி, 'என்கொலோ கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு'என்பதற்கு - பிறர் வருந்திச் சம்பாதித்த பொருளைத் தாம் ஒருமுயற்சியுமின்றி யாசகமாகப் பெறுபவரது எண்ணம் என்னவோ? என்றும் கருத்துக்கொள்ளலாம்: அந்த எண்ணம் இகழத்தக்க தென்றபடி.

"கரவாது உவந்தீயுங் கண்ணன்னார் கண்ணும், இரவாமை கோடியுறும்," "இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள, உள்ளதூஉ மின்றிக் கெடும்" என்ற திருக்குறள்கள் இங்கு ஒப்புநோக்கத்தக்கன.

கண் அன்னார்-உறுப்புக்களிற் சிறந்த கண்போல, மனிதரிற்சிறந்த உத்தமரென்க. உம் - உயர்வு சிறப்பு. உருகுமால், ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம். கொல், ஓ - அசைகள், குறிப்பு - தொழிற்பெயர். உள்ளம் - அகத்துஉறுப்பு. (௯)

௩௦௫. இன்னா வியைக வினிய வொழிகென்று
தன்னையே தானிரப்பத் தீர்வதற்—கென்னைகொல்
காதல் கவற்று மனத்தினாற் கண்பாழ்பட்
டேதி லவரை யிரவு.

(இ - ள்.) 'இன்னா-துன்பங்கள், இயைக - (நமக்கு வந்து) பொருந்தக்கடவன: இனிய-இன்பங்கள், ஒழிக-(நம்மைவிட்டு) நீங்கக்கடவன,' என்று-என்று எண்ணி, தன்னையே-தன்மனத்தையே, தான் நிரப்ப-தான் நிரம்பச் செய்தலினால் [திருப்திப்படுத்துவதனால் என்றபடி], தீர்வதற்கு - நீங்கிப்போகும்படியான வறுமைக்காக, காதல் கவற்றும் மனத்தினால் - பொருளாசை கவலைப்படுத்தும் மனத்தோடு கூடி, கண் பாழ்பட்டு - (துன்பத்தால்) கண்கள் பொலிவிழக்கப்பெற்று, ஏதிலவரை இரவு - அயலாரை யாசித்தல், என்னைகொல் - என்னபயன் கருதியோ? (எ - று.)

இன்பம் துன்பம் என்பன மனத்தின் குண மாதலால், இன்பத்தைத் துன்பம்போலவும், துன்பத்தை இன்பம்போலவும் எண்ணி மனத்தில் திருப்தியடைந்துவிட்டால், வறுமைத்துன்பம் நீங்கிவிடத்தக்கதன்றோ? அப்படி நம்மாலேயே நீக்கத்தக்க ஒன்றை ஒழிப்பதற்காக நமதுமனத்தைப்பண்படுத்தாமல் புண்படுத்திப் பொருளாசையால்ஒடுங்கிப் பிறரைப்போய்யாசிப்பது சிறிதும் அவசியமில்லாத தென்பதாம். இவ்வாறு மனத்தால் துன்பம் இன்பமாகப் பாவிக்கப்படுதல் கூடுதலை, "வைததனை யின்சொல்லாக் கொள்வானு நெய்பெய்த, சோறென்று கூழை மதிப்பானு—மூறிய, கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர், மெய்ப்பொருள் கண்டு வாழ்வார்" என்பது கொண்டு அறிக. இன்பம் துன்பமாகப் பாவிக்கப்படுதல், இளமைநிலை

யாமை யாக்கைநிலையாமை செல்வம்நிலையாமை முதலியவற்றை உணர்த லால் இனிது கூடும்.

கவற்று - கவல் என்பதன் பிறவினை; று - விகுதி. பாழ்படுதல் - வாடு தல். கண் பாழ்பட்டு என்பதற்கு - அறிவழிந்து என்றும் பொருள்கொள்ள லாம். காதல் - காதுதல்: (மனத்தை) வருத்துவது என்கிற காரணம் பற்றி ஆசைக்குப் பெயராயிற்று. இரப்ப எனப் பிரித்து - தன்மனத்தையே தான் வேண்டிக்கொண்டால் எனினும் அமையும். (௬)

௩௦௭. என்றும் புதியார் பிறப்பினு மிவ்வுலகத்
தென்று மவனே பிறக்கலான்—குன்றின்
பரப்பெலாம் பொன்னொழுகும் பாயருவி நாட
விரப்பாரை யெள்ளா மகன்.

(இ - ள்.) குன்றின் பரப்பு எலாம் - மலைகளினுடைய பரந்த இடங்களி லெல்லாம், பொன் ஒழுகும் - பொன்ஓடுதற்குக் காரணமான, பாய் அருவி- விரைவாகவருகின்ற அருவிகளையுடைய, நாட-நாட்டையுடைய அரசனே!— இ உலகத்து - இந்தப் பூலோகத்தில், என்றும் - எப்பொழுதும், புதியார் பிறப்பினும் - புதியராய் மனிதர்கள்பிறந்துகொண்டிருந்தாலும்,இரப்பாரை எள்ளா மகன் அவனே - யாசகர்களை இகழாத மனிதனே, என்றும் பிறக்க லான் - எப்பொழுதும் பிறவாதவன்; (எ - று.)

இரப்பவரைஅவமதியாமல் ஆதரிக்கும் இயல்புடைய உத்தமமனிதனே புதிதுபுதிதாய் மேன்மேலும் மனிதர் பிறத்தற் கிடமான இவ்வுலகத்தில் தான் பிறவாமல் நற்கதியடைவன் என்பதாம். இரப்பவரையிகழாத மனி தனைப் பிறக்கக் காண்கிறோமில்லை யென அருமைபாராட்டிக் கூறியதாக வும் உரைகொள்ளலாம்.

இச்செய்யுள், யாசகர்க்குஅவ்விரத்தல்தொழிலில்உண்டாகிறஅச்சத்தை உள்ளபடியறிந்து மனமிரங்கி அவர்கட்குத் தானஞ்செய்யுந் தன்மையுடைய வனைப் புகழ்ந்துகூறுதலாகிய சம்பந்தம்பற்றி, இவ்வதிகாரத்தில் வைக்கப் பட்டதென்க. 'இது இரவச்சமானது எப்படியென்னில்,—இந்த உலகத்தில் இரக்குமவனை இகழாதவர் யாரு மில்லை யென்றவாறுதலால், நிலையாதஉட ம்பினை விரும்பி இகழ்ச்சிக்கு இடங்கொடாமல் அவ்விரப்பினையஞ்சி அத னைத் தவிரவேண்டு மென்பதாம்' என்பது, பழையவுரை.

மருதநிலமாகியஅந்நாட்டை அடுத்துள்ள குறிஞ்சிநிலத்தின் மாட்சிமை யையும் அங்கிருந்து பொன்னை அடித்துக்கொண்டு பெருகுகின்ற நீர்வெள் ளம் நிலவளத்திற்குக் காரணமாய்ச் சிறந்திருத்தலையுங் கூறுவார், 'குன்றின் பரப்பெலாம் பொன்னொழுகும் பாயருவி நாட' என்றார்.

இவ்வுலகத்து என்றும் பிறக்கலான் என்றதனால், முத்திபெறுவ னென்பது பெறப்படும்; மீளாவுலகமாகிய முத்தியைப் பெற்றவர் மீண்டும் இங் குப் பிறத்தலில்லை யென்பது, நூல்துணிபு: அப்படிப்பட்ட உயர்கதியும் உதாரகுண முள்ளவனுக்குக் கிடைக்கு மென்றவாறு.

பரப்பு - பரந்த இடத்துக்குத் தொழிலாகுபெயர். ஒழுகும் - பெயரெச்சம், காரியபபொருளது; 'நோய்தீரும் மருந்து' என்ற விடத்துப் போல. இனி, ஒழுகும் என்ற தன்வினைக்கு - ஒழுக்கும் எனப் பிறவினைப்பொருள் கொண்டு, பொன்னைக்கொழிக்கிற என்று உரைப்பினுமாம். அவனே, ஏ - பிரிநிலை. மகனவன், அவன் - முதல்வேற்றுமைச் சொல்லுருபு. (எ)

௲௦அ. புறத்துத்தன் னின்மை நலிய வகத்துத்தன்
னன்ஞான நீக்கி நிறீஇ யொருவனை
யீயா யெனக்கென் றிரப்பானே லந்நிலையே
மாயானோ மாற்றி விடின்.

(இ - ள்.) புறத்து - வெளியிலே [உடம்பிலே], தன் இன்மை - தனது வறுமை, நலிய - வருத்த [தன்மேனியைப் பொலிவழிக்க], (அதற்காக), அகத்து தன் நல் ஞானம் நீக்கி நிறீஇ - மனத்தில் தனதுநல்லஅறிவைத் தள்ளி (அறியாமையை) நிலைநிறுத்தி, ஒருவனை - (செல்வமுடைய) ஒருத்தனை, எனக்கு ஈயாய் என்று இரப்பானேல் - 'எனக்கு (ஒருபொருளைக்)கொடுப்பாய்' என்று (ஒருவன் சென்று) யாசிப் பானானல், மாற்றிவிடின் - (அந்தச்செல்வமுடையவன் இல்லையென்று) மறுத்துவிட்டால், அ நிலையே - அவ்விடத்திலேயே [அப்பொழுதே], மாயானோ - (அவ்விரப்பவன்) இறந்துபோகமாட்டானோ? (எ - று.)

வறுமைகாரணமாகஉடம்புவருந்துதலினால் உணர்விழந்து ஒருவனிடம் போய் யாசிக்கிறபொழுது, அவன் இல்லையென்று சொன்னால், அந்த யாசகன் மரணவேதனையடைவானே!என்றுஇரங்கிக்கூறியபடியாம்."இரப்பவர் சொல்லாடப் போஒ முயிர்" என்றார் திருக்குறளிலும். உடம்பைவருத்துகிற வறுமையைத் தொலைக்கும்பொருட்டு யாசிப்பது, அவ்வுடம்பை இவ்வாறு மரணவேதனைக்கு உள்ளாக்கி மிகவருத்துதலாய் முடிதலால்,இரப்பது பேதைமை; அதற்குஅஞ்சவேண்டும் என்பது, இதனாற் போந்த பொருள். மானங்கெட்டு இரந்தும் விரும்பியபொருள்பெறாது ஈவோனால்மறுக்கப்பட்டவனுக்கு உண்டாகும் அவமானத்தினும் அவனதுமரணமே மேல் என்ற கருத்தும் கொள்ளலாம்.

இனி,உடம்பைவருத்துகிற வறுமையை யொழிக்கும்பொருட்டு ஒருவன் இரக்கத்துணிவானானால் அதனிலும் அப்பொழுதே இறந்து அவ்வுடம்பை விட்டு அவ்வழியால் உடம்பைப்பற்றிய வறுமையை ஒழிப்பது நல மென்று கருத்துக்கொள்ளவும் இடமுண்டு; இக்கருத்துக்கு, அ நிலையே - (வறுமை உடம்பை வருத்துகின்ற) அப்பொழுதே, மாற்றிவிடின்-(இரக்கமுயலாமல் அதனால்வருத்தப்படுகின்ற உடம்பை)ஒழித்தால், மாயானோ - (அவ்வறுமை) நீங்கமாட்டானோ? என்று பதவுரை கொள்க.

நலிய - இங்கே, பிறவினைப் பொருளது. ஞானம் - ஜ்ஞாநம் என்னும் வடமொழியின் திரிபு. ஈயாய் - ஏவலொருமை; ஆய் - விகுதி. 'ஈ' - இழிந்தோனேற்றல்வினை;"ஈ தா கொடு வெனு மூன்று முறையே, யிழிந்தோ னொ

ப்போன் மிக்கோ னிரப்புரை" என்றார் நன்னூலார். அந்நிலேயே, ஏகாரம் - தேற்றவகையால் விரைவுகுறிக்கும். மாயானோ,ஓகாரம் - இரக்கமும் வினுவுமாம். ஒருவனை இரத்தல் என இயையும்.

முதலடியில் 'புறத்து', 'அகத்து' என மாறுபட்டசொற்கள் வந்தது, தொடைமுரண். (அ)

௩0௯. ஒருவ ரொருவரைச் சார்ந்தொழுக லாற்றி
வழிபடுதல் வல்லுத லல்லாற்—பரிசழிந்து
செய்யீரோ வென்னு மென்னுஞ்சொற் கின்னாதே
பையத்தான் செல்லு நெறி.

(இ - ள்.) ஒருவர்—,ஒருவரை-மற்றொருவரை, சார்ந்து ஒழுகல் ஆற்றி - சேர்ந்து (அவர்கருத்தின்படி) நடத்தலைச் செய்து, வழிபடுதல் - (அவரிடம் தாம்) வணக்கத்தோடிருத்தலே, வல்லுதல் அல்லால் - வல்லவராயிருப்பது முறைமையே யல்லாமல்,—பரிசு அழிந்து - பெருமை கெட்டு, என்னுனும் செய்யீரோ என்னும்-'(எனக்கு) ஏதாயினும் (உதவி) செய்யமாட்டீர்களோ?' என்று இரந்துசொல்லுகின்ற,சொற்கு-சொல்லேக்காட்டிலும்,—தான் பைய செல்லும் நெறி - தான் துன்பமுண்டாகப் போகும் வழி, இன்னாதே - இனிமையாகஇராதா? (எ - று.)

ஒரு வறியவன் தன்வறுமையை நீக்குதற்பொருட்டுச் செல்வமுடையவனையடைந்து அவனிடம் தக்கபடி நடந்து வணக்கத்தோடு இருத்தல்செய்யத் தக்கதேயன்றி,மானமிழந்துஅவனிடம் ஒருபொருளேயும் இரத்தல் கூடாது; அப்படி இரந்துஉண்டு இனிதுஉயிர்வாழ்தலினும் வறுமையால் வருத்தப்பட்டுக்கொண்டு காலங்கழித்தலே மேல் என்பதாம்.

இச்செய்யுளில், மானமழிந்து இரத்தலி லுள்ள குற்றத்தினுல், வறுமையினுல் வருந்தி நடத்தற்குக் குணங்கூறியுள்ளது,அகமலர்ச்சியணியாம்; இது, வடமொழியில் உல்லாஸாலங்கார மெனப்படும்: ஒன்றன் குணத்தினுலாவது குற்றத்தினுலாவது மற்றொன்றற்குக் குணமாவது குற்றமாவது உண்டாதலேச் சொல்லுதல், இதன் இலக்கணம்.

தான் ஒருவனைச் சார்ந்திருக்கையில், தனது குறிப்பை யறிந்து அவனே ஏதாவது உதவிசெய்தால் அவ்வுதவியை ஏற்றுக்கொண்டாலுங் கொள்ளலாம்; வாய்திறந்து இரப்பது இழிவுஎன்பது, இதனுற் போந்த பொருள். பையத் தான்செல்லும் நெறி இன்னாதே என்பதற்கு - மெல்லத் தான் இல்லறத்தைவிட்டுத் துறவறத்துக்குப் போய்த் தவஞ்செய்யும் வழி இனியதன்றோ? என்று உரைப்பாரு முளர்; அவ்வுரை, தவத்தைத் தாழ்வுபடுத்திச் சொல்வதாய் முடிதலால், தகுதியன்றென விடுக்க.

வல்லுதல் என்ற தொழிற்பெயரில், வல்- பகுதி; இது - வன்மையென்னும் பண்பினடி வினைச்சொல்தன்மைப்பட்ட தாதல் வேண்டும். செய்யீர் - முன்னிலேப்பன்மை யெதிர்மறை வினைமுற்று; உடன்பாட்டு ஏவற்பன்மையாகவுங் கொள்ளலாம். ஓ - வினு. சொற்கு- நான்காம்வேற்றுமை, எல்லேப்பொருளது. இன்னாதே, ஏகாரம் - வினுவகையால் எதிர்மறைப்பொருளை

புணர்த்தி, 'இரண்டு எதிர்மறை ஓர் உடன்பாட்டை யுணர்த்தும்' என்ற நியாயத்தால் உடன்பாட்டுப்பொருளைக் குறித்து, தேற்றக்கருத்தை விளக்கும். பைய - துன்பப்பொருளையுணர்த்தும் 'பை' என்பத னடியாகப் பிறந்த வினையெச்சம்; பைதல் [துன்பம்] என வருதலையுங் காண்க. (௯)

௩௧௦. பழமைகந் தாகப் பசைந்த வழியே
கிழமைதான் யாதானுஞ் செய்க—கிழமை
பொறாஅ ரவரென்னிற் பொத்தித்தந் நெஞ்சத்
தறாஅச் சுடுவதோர் தீ.

(இ - ள்.) பழமை கந்து ஆக - பழைய பயிற்சி காரணமாக, பசைந்த வழியே-(ஒருவர் மற்றொருவர்பக்கல்) அன்புகொண்டவிடத்து, (அவர்), கிழமைதான் யாது ஆனும் செய்க - யாதாயினும் ஒரு தக்கஉதவியைச் செய்யக் கடவர்; அவர் கிழமை பொறார் என்னின் - அவர் (அப்படி) தக்கஉதவி செய்யுந் தொழிலை ஏற்றுக்கொள்ளாமற் போவாராயின், (அது), தம் நெஞ்சத்து - தமது மனத்திலே, பொத்தி - பதிந்து, அறா - நீங்காமல், சுடுவது-எரிக்கும்டியான, ஓர் தீ - ஒரு தீயாகும்; (எ - று.)

வறுமையடைந்தவர் அவ்வறுமைநீங்கப் பிறரிடம் சென்று இரத்தலா லுண்டாகும் மானபங்கத்திற்கு அஞ்சிப் பழையநண்பரிடம் அன்போடு சென்றால், அவர்கள் தம்மால் இயன்றமட்டில் உதவி செய்யக்கடவர்; அவ்வாறு உதவியொன்றும் செய்யாமற்போனால், அது, அடைந்தவர்களது மனத்தை மிகவும் வருந்தச்செய்யும் என்பதாம்.

பின்னிரண்டடிகளில் உபமான உபமேயங்கட்கு ஐக்கியம்[ஒற்றுமை] கூறியுள்ளது, காட்சியணியாம்.

பழமை - சிநேகிதராது பலழயவராகுந் தன்மை. பொறாஅர், அறாஅ- செய்யுளோசை நிறைக்க வந்த உயிரளபெடைகள். கிழமை - உரிமை; உரிய உதவிக்குப் பண்பாகுபெயர். கிழமை பொறாஅர் அவர் என்னின் என்பதற்கு - தாம் உரிமை பற்றிச் செய்த உதவியை வந்தவர் ஏற்றுக்கொள்ளாமற்போனால் என்று உரைப்பாரு முளர்; அவ்வுரை, அதிகாரத்துக்குச் சம்பந்தப்பட்டதன்றாம். புறத்தையே சுடுந் தீயினும் வேறுபாடு தோன்ற 'ஓர்தீ' என்றாரென்னலாம்.

இவ்வதிகாரத்துப் பாடல்களிற் சிலவற்றைச் செய்தவர்கள், கண்டவரிடத்தும்போய் மானங்கெட இரத்தலை முழுவதும்இகழ்ந்து, பழக்கமுடையவரை அடைந்து அவராற் குறிப்பறிந்துசெய்யப்படும் உதவியை ஏற்றுக்கொள்ளுதலை ஒருவாறு உடன்படுங் கருத்துடையவர் எனக் காண்க. (௧௦)

ஐந்தாவது

# பொதுவியல்.

அரசியல் முதலியவற்றுள் அடங்காதொழிந்தவற்றின் இயல்பைக்கூறும் பிரிவு என்பதாம். அத்தன்மை அவையறித லென்னும் இவ்வதிகாரமொன் றனுற் கூறப்படுதலால், ஓரதிகாரந்தானே ஓரியலானமை அறிக.

## ரு௨- ஆம் அதிகாரம்.—அவையறிதல்.

சபையின் தன்மையை அறிதல்; அஃதாவது - சபையில் உள்ளவர்களது கல்வி கேள்விகளின் தகுதிகளை நுட்பமாகஅறிந்து அதற்குஏற்றபடி தான் அங்கு நடத்தல். இரவச்சத்துக்கும் அவையறிதலுக்கும் சமீபமான சம்பந்த மில்லையானாலும், மானத்தைப்பாதுகாப்பவர்க்கு இரவச்சம்போலவே அவை யறிதலும் இன்றியமையாத தென்கிற காரணம்பற்றி, இரவச்சத்தின்பின் வைக்கப்பட்டது. இரப்பது அவமானமடைவதற்குக் காரணமாவதுபோல, சபையறியாமற் சென்று நடத்தலும் மானக்கேட்டுக்குக் காரணமாகுதல் கா ண்க. அவை - ஸபா என்னும் வடமொழியின் திரிபு; சபை, சவை, அவை எனக் காண்க. 'அவை' என்பது - அவையிலுள்ளாரது குணங்களுக்கு இரு மடியாகுபெயர்.

ருகக. மெய்ஞ்ஞானக் கோட்டி யுறழ்வழி விட்டாங்கோ
ரஞ்ஞானந் தந்திட் டதுவாங் கறத்துழாய்க்
கைஞ்ஞானங் கொண்டொழுகுங் காரறி வாளர்முன்
சொன்ஞானஞ் சோர விடல்.

(இ - ள்.) மெய் ஞானம் - உண்மையான அறிவையுடைய, கோட்டி - சபையிலே, உறழ் வழி - சேரும் முறைமையை, விட்டு - நீங்கி, ஆங்கு - அவ் விடத்திலே, ஓர் அஞ்ஞானம் தந்திட்டு-அறிவில்லாமைக்குஉரியதொரு வார் த்தையைக் கொண்டுவந்து(எடுத்துச்)சொல்லி, அது - அந்த அஞ்ஞானவார் த்தையையே, ஆங்கு - அச்சபையிலே, அற - மிகுதியாக, துழாய் - பரப்பி, கை ஞானம் கொண்டு ஒழுகும் - அற்பமான அறிவைக் கொண்டு நடக்கின்ற, கார் அறிவு ஆளர் முன் - பழிக்கப்படும் அறிவையுடையவர்களின் முன்பு, சொல் ஞானம் - (புகழ்ந்து) சொல்லத்தக்க (தமது) ஞானத்தை, சோர விடல் - (ஒருவர்)தளரவிடக்கடவர்; (எ - று.)

சிலர் விவேகிகளின் சபையிலே போய்த் தாம்அடக்கமாகஇருந்துஅவர் கள்சொல்வதைத் தெரிந்துகொள்வதை விட்டு, அங்கே தமதுஅறிவில்லாமை க்குஉரிய ஒருபேச்சை வெளியிட்டு அதனையே முரட்டுத்தனமாய் ஸ்தாபிக்க வும் தொடங்குவர்; அப்படிப்பட்ட மூடர்களின் முன்னிலையில் விவேகிகள் தமது சிறந்தமொழிகளை உறுதிப்படுத்திச்சொல்லாமல் விட்டிடவேண்டும் என்பதாம். "புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள்,நன்கு செலச் சொல்லுவார்" என்றார் திருக்குறளிலும்.

இச்செய்யுளில் ஒரேபொருளுள்ள 'ஞானம்' என்ற சொல் பன்முறை வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணியாம்.

மெய்ஞ்ஞானக்கோட்டி - சபையிலுள்ளாரது தத்துவசாஸ்திரஞானம், சபையின்மேல்ஏற்றிக் கூறப்பட்டது; உபசாரவழக்கு. உறழ்வழி - வினைத்தொகை. அஞ்ஞானம் - அஜ்ஞாநம்: வடசொல். கைஞ்ஞானம், கை - சிறுமை. பழியைக் கருநிறமுடையதென்று வருணித்தல் கவிமரபாதலால், அத்தன்மையை இங்கே பழிக்கப்படும் அறிவின்மேல் ஏற்றி, 'காரறிவு' என்றார். (௧)

௯௧௨. நாப்பாடஞ் சொல்லி நயமுணர்வார் போற்செறிக்குந்
தீப்புலவற் சேரார் செறிவுடையார்—தீப்புலவன்
கோட்டியுட் குன்றக் குடிபழிக்கு மல்லாக்காற்
றோட்புடைக் கொள்ளா வெழும்.

(இ - ள்.) நா பாடம் சொல்லி - வாய்க்குவந்த பாடங்களை எடுத்துச்சொல்லி, நயம் உணர்வார் போல்-நல்லநூற்பொருள்களை அறிபவர்போல (த்தன்னைக் காட்டி), செறிக்கும் - (கூட்டஞ்) சேர்க்குந்தன்மையுள்ள, தீ புலவன் - தகுதியல்லாத புலவனை, செறிவு உடையார் சேரார் - அடக்கமுள்ள நற்புலவர்கள் சேரமாட்டார்கள்; (ஏனெனில்),—தீ புலவன் - அந்த இழிகுணமுடைய புலவன், கோட்டியுள்-சபையிலே, குன்ற - (கேட்பவர்மனம்) வருந்தும்படி, குடி பழிக்கும் - (நற்புலவர்களின்) குலத்தை நிந்திப்பான்; அல்லாக்கால்-அப்படியல்லாவிட்டால், தோள் புடைக்கொள்ளா எழும்-தோள்களைத் தட்டிக்கொண்டு (சண்டைக்கு) எழுவான்; (எ - று.)

வாய்க்குவந்ததைச் சொல்லித் தன்னைப் படித்தவனாகப் பிறர்மயங்கும்படிகாட்டி இந்தஆடம்பரத்தாற் சனங்களைக் கூட்டிவிடுகிற டம்பத்தன்மையுள்ள போலிப்புலவனிடத்து அடக்கமுடையோர் சென்றுபேசுதல் தகாது; ஏனென்றால்,—அவன் அங்கே தனக்குத் தோன்றியபடியெல்லாஞ் சொல்லுகிற சொல்லுக்கு இவர்கள் ஏதாவது தக்கஆக்ஷேபஞ்சொன்னால், அதற்கு ஏற்ற உத்தரஞ் சொல்லமாட்டாமையால் அவன் கோபங்கொண்டு இவர்கள் குலத்தைப்பற்றிப் பழித்துப்பேசவாவது தலைப்படுவான்: அல்லது, கோபாவேசத்தாற் சண்டைக்குக்கிளம்பினாலுங் கிளம்புவான் என்பதாம்.

முன்னிரண்டடிகளிற் கூறியுள்ள விஷயத்தைப் பின்னிரண்டடிகளிற் காரணங்காட்டி நிறுவியது, ஏதுவணியாம்.

இங்கே 'பாடம்' என்றது, நெட்டுருவாய்த் தனக்குத் தெரிந்தவிஷயம் என்றபடி. செறிக்கும் என்பதில் பகுதியாகிய செறி என்பது - தன்வினை பிறவினை இரண்டுக்கும் பொது; இங்கே பிறவினைக்கு வந்தது: செறியும் என்றது, செறிக்கும் என வலிமிக்கதே, பிறவினைக்குறி. புலம்-அறிவு; அல்லது, புலமை-கல்வித்தேர்ச்சி; அதாவது - பலவேறுவகைப்பட்ட நூலுணர்ச்சிகளையெல்லாம் ஒருங்கேகொண்ட பேரறிவுடைமை: பாண்டித்தியம்; அதனையுடையவன் புலவன். புலவற்சேரார்-உயர்திணையில் இரண்டாம்வேற்றுமையுருபு தொக்கது; உயர்திணைப்பெயரின் ஈறு விகாரமாயிற்று: இரண்டாம்

வேற்றுமைச் சிறப்புவிதியால். புலவன் பழிக்கும், எழும் - செய்யுமென் முற்று ஆண்பாலுக்கு வந்தது. புடைக் கொள்ளா - புடைத்தலைக் கொண்டு; புடை - முதனிலைத்தொழிற்பெயர். (உ)

௩௧௩. சொற்றாற்றுக் கொண்டு சுனைத்தெழுதல் காமுறுவர்
கற்றாற்றல் வன்மையுந் தாந்தேறார்—கற்ற
செலவுரைக்கு மாறறியார் தோற்ப தறியார்
பலவுரைக்கு மாந்தர் பலர்.

(இ-ள்.) சொல் தாறு கொண்டு -சொற்களாகிய முட்கோல்களைக் கொண்டு, சுனைத்து எழுதல் காமுறுவர் - தினவுகொண்டு (வாதஞ்செய்ய) எழுந் திருத்தலை விரும்புபவர்களாய்,—கற்ற ஆற்றல் வன்மையும்-(பிறரது) படித்த சாமர்த்தியத்தையும் (பேசுதல் முதலியவற்றிலுள்ள) வல்லமையையும், தாம் தேறார் - தாம் அறியாதவராய்,—கற்ற- (தாம்) அறிந்தவைகளை, செல-(பிறர் மனத்திற்)புகும்படி, உரைக்கும் ஆறு அறியார் - சொல்லும் வழியை அறியா தவர்களாய்,—தோற்பது அறியார்-(வாதப்போரில் தாம்)தோல்வியடைதலை யும் அறியாதவர்களாய், பல உரைக்கும் - அநேகவார்த்தைகளை (வீணாகச்) சொல்லுகிற, மாந்தர்-மனிதர்கள், பலர் - (உலகத்தில்) அநேகர் (இருக்கின் றார்கள்); (எ - று.)

உலகத்தில் அற்பஞானமுடையவர் பலர், சபையில் தாமும்ஏதாவதொ ன்றை எடுத்துச்சொல்லி வாதஞ்செய்து பிறரோடு மாறுகொள்ளவேண்டு மென்று மிக்க விருப்பங்கொண்டு கிளம்புவார்கள்; அவர்கட்கு, தம் எதிரில் வாதஞ்செய்பவரது படிப்பும் சாமர்த்தியமும் பிரசங்கசக்தி முதலியனவும் தெரியா; தமக்குத்தெரிந்த விஷயங்களையும் ஒழுங்குபடச்சொல்லத் தெரி யாது; தாமாக ஆசைப்பட்டு எடுத்துக்கொண்ட வாதத்தில் பிறரால் தமது கொள்கை தோற்றுப்போனால் அதுவுந் தெரியாது; மேன்மேல் எதையாவது சொல்லிக்கொண்டிருப்பார்கள்: இப்படிப்பட்ட பயனில்சொல்பாராட்டுந் தன்மையார் சபைக்கு உரியவரல்லர் என்பதாம்.

தாம்செய்யத்தொடங்கும்வாதப்போர்க்குத்தமதுசிற்றறிவுடையசொற் களையேஆயுதமாகஅவர்கள்கருதுதலால், ‘சொல்தாற்றுக்கொண்டு’என்றார்; உருவகம். தாறு + கொண்டு=தாற்றுக்கொண்டு; நெடிற்றொடர், வேற்றுமை யில் டகரவொற்றுஇரட்டிற்று. சுனைத்தல்-சொறிதல்; இங்கே,உபசாரவழக் காய், அதற்குக்காரணமாகிய தினவின்மேல் நின்றது: இனி, சுனைத்து-கோ பித்துஎன்றுமாம். ‘துனைந்தெழுதல்’என்ற பாடத்துக்கு-விரைந்துகிளம்புத லென்க. காமுறுவர், காமுறு - பகுதி; இது, காமமுறு என்பதன் விகாரம். கற்றாற்றல் - கற்றவாற்றல் என்பதன் தொகுத்தல். தோற்பது - தோல்வித் தானமெனப்படும். (௩)

௩௧௪. கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற்
பெற்றதாம் பேதையோர் சூத்திர—மற்றதனை
நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும்.

(இ - ள்.) கற்றதூஉம் இன்றி-(தான்)படித்ததுசிறிதுமில்லாமல், கணக்காயர் பாடத்தால் - பள்ளிக்கூடத்திற் படிப்பவர்களது வாய்ப்பாடத்தைக் கேட்டு அதனால், பேதை- மூடன், ஓர் சூத்திரம் - ஒருசூத்திரத்தின் மூலபாடத்தை, பெற்றது ஆம் - பெற்றவனாவன்; (அப்படி பெற்றானாயின்),மற்று - பின்பு, அதனை - அச்சூத்திரத்தை, நல்லாரிடை புக்கு - நல்லவித்துவான்களுடைய சபையிற் போய், நாணாது சொல்லி - வெட்கப்படாமற் சொல்லி, தன் புல் அறிவு காட்டிவிடும் - தனது இழிவான அறிவை வெளிப்படுத்திவிடுவான்; (எ - று.)

மூடன் ஆசிரியரை வழிபட்டு முறைறயே கல்விகற்காமல் கல்விச்சாலைகளிற் கற்கும் மாணாக்கர் வாய்ப்பாடத்திற்காக வாய்விட்டுப் பலமுறைஉருச் சொல்லும்பொழுது கேட்டு யாதாயினும் ஒருசூத்திரத்தை மாத்திரம் தான் தெரிந்துகொள்வானாயின், அவ்வளவோடு இராமல், படித்த பெரியோர்கள் கூட்டத்திற் போய்க் கூச்சமில்லாமல் அச்சூத்திரத்தை அரைகுறையாகக் குழறித் தனது அஜ்ஞானத்தை வெளியிடுவான் என்பதாம்.

பேதையர்களின் தன்மையைச் சுவைபடக்கூறியிருத்தலால், இச்செய்யுள் - தன்மைநவிற்சியணியாம்; இது, வடமொழியில் ஸ்வபாவோக்தி எனப்படும்.

நன்றாகப் படித்தவனுக்கு, ஏதாவது ஒன்றைச் சபையிலே எடுத்துச்சொல்லும்பொழுது தவறுபடுமோவென்ற நாணம் மிகுதியாக உண்டாகக்கூடும்; அது கற்றறியாதவனுக்கு இல்லை யாதலால், 'நாணாதுசொல்லி' எனப்பட்டது. அறிவுடையோரது சபையில் அறிவில்லாதவன் போனாலும் மௌனமாக இருந்தால், அவனது அஜ்ஞானம் எல்லோர்க்கும் வெளிவிளங்காது; அவ்வாறு அடங்கியிராமல் "நுணலுந் தன்வாயாற் கெடும்" என்றபடி தன்வாயால் தனது பேதைமையைப் புலப்படுத்துதலால், 'சொல்லித் தன் புல்லறிவு காட்டிவிடும்' என்றார்; "கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங், கொற்கமின் றாத்தைவா யங்காத்தல் - மற்றுத்தம், வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை, புல்லுரு வஞ்சுவ போல்" என்றதை இங்கே அறிக.

கற்றதூஉம், உம் - இழிவுசிறப்பு; இன்னிசையளபெடை. கற்றதூஉமின்றி என்பதற்கு - வரன்முறையால் நல்லாசிரியரிடம் படித்ததொன்று மில்லாமல் என்றும், கணக்காயர்பாடம் என்பதற்கு - உபாத்தியாயர் பிறர்க்குச் சொல்லிக்கொடுக்கிற பாடத்தினால் என்றும் உரைப்பாருமுளர். பேதை-அறிவின்மை; பேதைமையென்னும் பண்பினடி; அறிவில்லாதவனுக்குப் பண்பாகுபெயர். அவிவேகியினுடைய இழிவு விளங்க, 'பெற்றது' என அஃறிணையாக் கூறினர்; "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால் திணை யிழுக்கினு மியல்பே" என்பது காண்க. ஸூத்ரம் - வடசொல். கணக்கு ஆயர் - கணக்கை ஆய்த லுடையவ ரென்க; கணக்கு - எண்ணும், எழுத்தும்.

'நல்லாரவைப்புக்கு' என்றும் பாடம். (௭)

௩௧௫. வென்றிப் பொருட்டால் விலங்கொத்து மெய்கொள்ளார்
கன்றிக் கறுத்தெழுந்து காய்வாரோ—டொன்றி
யுரைவித் தகமெழுவார் காண்பவே கையுட்
சுரைவித்துப் போலுந்தம் பல்.

(இ - ள்.) வென்றிப் பொருட்டால் - (பிறரைத் தாம்) வெல்வதுகாரணமாக, விலங்கு ஒத்து - மிருகங்கள் போன்று, மெய் கொள்ளார் - உண்மைப் பொருளை ஏற்றுக்கொள்ளாதவராய், கன்றி கறுத்து - மிகக்கோபித்து, எழுந்து - (போர்க்குச்) சித்தமாய், காய்வாரோடு - மனங்கொதிப்பவர்களோடு, ஒன்றி - சேர்ந்து, உரை வித்தகம் எழுவார் - (தமது) சொல்லின்வன்மையைக்காட்டப் பிரயத்தனப்படுபவர், சுரை வித்து போலும் தம் பல் - சுரைக்காயின் விதைகள்போன்ற தங்கள்பற்களை, கையுள் காண்ப -(உடனே தங்கள்)கையிற் காண்பார்கள் ; (எ - று.)

தாமாகவும் அறியாமல் பிறர்சொன்னாலுங்கேட்டுத்தெரிந்துகொள்ளாமல் முரட்டுத்தனத்தையுடையவர்களாய் மிருகத்தோடொத்த குணமுள்ள அற்பஅறிவுடையாரோடு புத்திமான்கள் யாதாயினும் ஓர் உண்மைப்பொருளைச் சொல்லத்தொடங்கக்கூடாது; அப்படித்தொடங்கினால், அந்த முரடர்கள் இவர்களையும் இவர்கள்சொல்லையும் மதியாததோடுவிடாமல், இவர்களைக் கன்னத்திலறைந்து இவர்கள்பற்களை உதிர்த்துஇவர்கள்கையிற்கொடுப்பார்கள் என்பதாம்.

'மூடர்களுடன் பேசுவதன் பயன் பல்லுடையக் கன்னத்தி லடிபடுவதே' என்பதை வேறுவகையாகக் கூறியிருப்பது, பிறிதினவிற்சியணியாம் ; இது, வடமொழியில் பர்யாயோக்த மெனப்படும்.

வென்றிப்பொருட்டால், பொருட்டு - நான்காம்வேற்றுமைச்சொல்லுருபு; ஆல் - அசை. மிருகங்களினும் மனிதர்கட்கு உள்ள ஏற்றம், உணர்வுடைமை; அது இல்லாமையின், 'விலங்கொத்து' என்றார்; "விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனையவர்" என்ற திருக்குறளையுங் காண்க. விலங்கு- குறுக்காகவடிவமமையப்பெற்றதுஎனக் காரணப்பெயர்: இது -'திர்யக்' என்ற வடசொல்லின் பொருள் கொண்டது. கன்றிக் கறுத்து - ஒருபொருட்பன்மொழி. கறுத்தல் - கோபித்தல் : உரிச்சொல்; கருமை யென்னும் பண்பினடி விகாரப்பட்டு வினைத்தன்மையடைந்தது. காண்பவே, ஏ - தேற்றம்.

நான்காமடி - வடிவுவமை."நிரைமுத்தனைய நகையுங் காணாய், சுரைவித்தேய்ப்பப் பிறழ்ந்துவேறாயின" என்ற மணிமேகலையையுங்காண்க.(௫)

௩௧௬. பாடமே யோதிப் பயன்றெரித றேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்கால்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
யீன்றாட் கிறப்பப் பரிந்து.

(இ - ள்.) பாடமே ஓதி-ஒருபாட்டின்மூலபாடத்தைமாத்திரமேவாய்ப்பாடமாகச்சொல்லி,பயன் தெரிதல் தேற்றாத - (அதன்)பொருளை ஆராய்

தறியமாட்டாத, மூடர்-அறிவில்லாதவர், முனிதக்க சொல்லுங்கால்-(கேட்ப வர்)கோபிக்கத்தக்ககுற்றமானசொற்களைச்சொல்லும்பொழுது,கேடு அருஞ் சீர் சான்ரோர் - அழிவில்லாத புகழையுடைய பெரியோர்கள், அவரை ஈன்ருட்கு இறப்ப பரிந்து - அவர்களைப்பெற்றதாய்விஷயத்தில்மிகஇரங்கி, சமழ்த்தனர் நிற்ப - (அவர்களை அவமானப்படுத்துதற்கு) நாணங்கொண்டவர்களாய் நிற்பார்கள்; (எ - று.)—ஏ - தேற்றம்.

செய்யுள்களின் பொருள்நுட்பமறியாத மூடர்கள் தவருக எதைச்சொன்னுலும் புத்திமான்கள் கேட்டுப் பொறுத்துக்கொண்டுநிற்பது, 'இவனைப் பெற்ற தாய், இவன் நம்மால் அவமானப்படுஞ் செய்கையைக் கேள்விப்பட்டால் வருந்துவளே!' என்று எழுந்த இரக்கத்தாற்போலும் என்பதாம்.

பெரியோர் தமக்கு இயல்பாகவுள்ள பொறுமைக்குணத்தினுல் மூடர்களைப்பொறுத்திருத்தற்கு,கவி,ஈன்ருட்கிறப்பப்பரிதலைக்காரணமாகக்கற்பித்துக்கூறியது, ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம்; இவ்வணியில் தற்குறிப்பேற்றவுருபு தொக்குநின்றது ; இங்ஙனம் உருபுதொக்குவரும் இவ்வணியை வடநூலார் கம்யோத்ப்ரேக்ஷை யென்பர்.

இவனது தாயின் தகுதியை நோக்கி இவன்பிழையைப் பொறுத்தல் கூடுமேயல்லது, இவன்பிழையையே நோக்கினுல் பொறுக்கக் காரணமில்லை யென்பது கருத்து. இனி, இவனைச் சபித்தால் இவன்தீங்குஅடைய அதற்காக இவன்தாய் வருந்துவளே யென்று அவர்கள் பொறுத்திருப்பார்க ளென உரைப்பாருமுளர். "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி, கல்லா வொருவ னுரைப்பவுங் கண்ணோடி, நல்லார் வருந்தியுங் கேட்பரே மற்றவன், பல்லாருள் நாணல் பரிந்து" என்பதனோடு இச்செய்யுளை ஒப்பிடுக.

பாடமே, ஏ - பிரிநிலை. தேற்ருத - பிறவினை தன்வினைப்பொருளதென்ருவது, இருவகைவினைக்கும் பொதுவானது இங்கே தன்வினைக்கு வந்ததென்ருவது, தேருதஎன்பதன் விரித்த லென்ருவது கொள்ளத்தக்கது. மூடர் - வடசொல். முனி - முதனிலைத்தொழிற்பெயர். கேடு - முதனிலை திரிந்ததொழிற்பெயர். சீர் - ஸ்ரீ என்னும் வடமொழியின் சிதை வென்பர். மற்று - அசை ; வினைமாற்றுமாம். (௬)

௬௭. பெறுவது கொள்பவர் தோள்போ னெறிபட்டுக்
கற்பவர்க் கெல்லா மெளிய நூன்—மற்றம்
முறிபுரை மேனிய ருள்ளம்போன் றியார்க்கு
மறிதற் கரிய பொருள்.

(இ - ள்.) நூல் - சாஸ்திரங்கள்,—பெறுவது கொள்பவர் தோள் போல் - கிடைக்கிறபொருளைப் பெற்றுக்கொள்கின்ற விலைமகளிரது தோள்கள் போல, நெறி பட்டு கற்பவர்க்கு எல்லாம் - (படிக்கிற) வழியிலே யிறங்கிப் படிக்கிறவர்கட்கெல்லாம், எளிய - சுலபத்தில் கிரகிக்கத்தக்கனவாம்; பொருள் - (அந்தச்சாஸ்திரங்களின்) அர்த்தங்களோ வெனின்,—அ முறி புரை மேனியர் உள்ளம் போன்று - தளிரையொத்த உடம்பையுடைய அந்த வே

சையர்களது மனத்தை யொத்து, யார்க்கும் அறிதற்கு அரிய - எவர்க்கும் அறிவதற்கு அருமையானவை; (எ - று.)

சாஸ்திரங்களின் மூலபாடத்தையும் அதன்பதவுரையையும் அறிதல், விலைமகளிரைச் சேர்தல்போலப் பலர்க்கும் சுலபசாத்தியமாம்; அவற்றின் சாரமானபொருளையும் ஆழ்ந்தகருத்தையும் அறிதல், அவ்வேசையரதுகருத்தின் நிலைமைபோல யாவர்க்கும் எளிதில் அறியமுடியாதவை என்பதாம்; உவமையணி. மூலபாடம்படித்தலோடு நிற்காமல் பொருளையுங் கருத்தையும் நுட்பமாகஅறியுந்தன்மையுடையவரே, சபைக்குத் தக்கவர்;அப்படியறியாதவர் தக்கவரல்லர் என அதிகாரத்துக்கு ஏற்பக் கருத்துக்கொள்க.

பெறுவது - எதிர்காலவினையாலணையும்பெயர்;சாதியொருமை. எளிய, அரிய - பண்படியாப்பிறந்த பலவின்பாற் குறிப்புமுற்றுக்கள். மற்று - வினைமாற்று. தளிர்-மேனிக்கு, மென்மை செம்மை அழகுகளில் உவமை. புரை - உவமவுருபு; வினைத்தொகை.

போன்றியார்க்கும் - குற்றியலிகரம், அலகுபெறவில்லை; மேனியருள் ளம்போன் றியார்க்கும் என்று சீர்பிரித்தால், அலகுபெறும். (எ)

௩௧௮. புத்தகமே சாலத் தொகுத்தும் பொருடெரியா
ருய்த்தக மெல்லா நிறைப்பினு—மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே பொருடெரிந்து
தேற்றும் புலவரும் வேறு.

(இ - ள்.) புத்தகமே - புத்தகங்களைமாத்திரமே, சால தொகுத்தும் - மிகுதியாகச் சேர்த்தும், பொருள் தெரியார் - (அவற்றின்) பொருளை அறியாதவர்களாய், உய்த்து - (அவற்றைக்) கொண்டுவந்து, அகம் எல்லாம் நிறைப்பினும்-வீடுமுழுவதும் நிறைத்தாலும், அவற்றை போற்றும் புலவரும் வேறே- அப்புத்தகங்களைப் பாதுகாக்கும் புலவர்களும் வேறானவரே: பொருள்தெரிந்து - (அவற்றின்)அர்த்தங்களை அறிந்து, தேற்றும்-(பிறர்க்கும்)அறிவிக்கும், புலவரும் - அறிவுடையோரும், வேறு - வேறானவரே; (எ - று.)

புத்தகங்களை மிகுதியாகச்சேர்த்ததனாலே எவரும் புலவர்களாகமாட்டார்கள்; அவற்றின்பொருளைத் தாம் அறிந்து பிறர்க்கும் போதித்து விளங்கச்செய்பவர்களே புலவர்களாவர் என்பதாம். 'அவற்றைப் போற்றும் புலவரும் வேறே' என்றது, அவர்கள் புஸ்தகபரிபாலகராகவே மதிக்கப்படுவார்கள் என்றபடி. புத்தகங்கள் சேர்த்து வைத்தவனுக்குப் பயன்படாமல் படிப்பவர்க்கே பயன்படுதலை, செல்வம் சேர்த்துவைத்தவர்க்குப் பயன்படாமல் அனுபவிப்பவர்க்கே பயன்படுதல்போலக் கொள்க. புஸ்தகபரிபாலகரைப் புலவ ரென்றது, இகழ்ச்சி.

புத்தகம் - புஸ்தகம்: வடசொல்: ஏ - பிரிநிலை. தொகுத்தும், நிறைப்பினும், உம்மைகள் - உயர்வுசிறப்பு. மற்று - வினைமாற்று. புலவர் வேறு— வேறு என்பது, இருதிணை ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவான குறிப்பு வினைமுற்றுப் பகாப்பத மாதலால், புலவர் என்ற உயர்திணைப்பலர்பால் எழுவாய்க்குப் பயனிலையாய் நின்றது. மூன்றும்அடியிலுள்ள பிரிநிலையேகாரத்தைப் பிரித்து நான்காம்அடியோடுங் கூட்டுக. (அ)

௩௧௯. பொழிப்பகல நுட்பநூ லெச்சமிந் நான்கிற்
கொழித்தகலங் காட்டாதார் சொற்கள்—பழிப்பி
னிரையாமா சேர்க்கு நெடுங்குன்ற நாட
வுரையாமோ நூலிற்கு நன்கு.

(இ - ள்.) பழிப்பு இல்-குற்றமில்லாத, நிரை ஆமா - கூட்டமாகிய காட்டுப்பசுக்களை, சேர்க்கும்-(தம்மிடத்திலே) சேரச்செய்கிற, நெடுங் குன்றம் - உயர்ந்த மலைகளையுடைய, நாட -(பாண்டிய) நாட்டையுடைய அரசனே!— பொழிப்பு - பொழிப்புரையும், அகலம்-அகலவுரையும், நுட்பம் - நுட்பவுரையும், எச்சம் - எச்சவுரையும், இ நான்கின் - (ஆகிய) இந்த நான்குவகையுரைகளாலும், கொழித்து - நன்றாகஆராய்ந்து, நூல் அகலம் - ஒருநூலினுடைய விரிவான பொருள்களை, காட்டாதார் - எடுத்துக் காட்டாதவர்களுடைய, சொற்கள்—, நூலிற்கு - ஒருநூலுக்கு, நன்கு உரை ஆமோ - சிறந்த உரையாகுமோ? [ஆகா என்றபடி]; (எ - று.)

ஒருநூலுக்கு உரைகூறுமிடத்து, அவ்வுரை நான்குவகைப்படும்; பொழிப்புரை, அகலவுரை, நுட்பவுரை, எச்சவுரைஎன. பொழிப்புரையாவது-மூலபாடங்காட்டுதல், பதப்பொருள்சொல்லுதல், உதாரணங்காட்டுதல்என்பன. அகலவுரையாவது - தான் உரையிடப்புகுந்த நூலிலும் பிறநூலிலும் உள்ள பொருள்களின் ஒற்றுமைவேற்றுமைநயங்களைப்பற்றித் தானே பலஆட்சேபங்களை எடுத்துக்காட்டல். நுட்பவுரையாவது-ஏற்றகாரணங்களினால் தக்க சமாதானங்கூறி அந்தஆட்சேபங்களை யொழித்தல். எச்சவுரையாவது - இங்ஙனம்ஆட்சேபசமாதானங்களாற்சித்தாந்தஞ்செய்யப்பட்டபொருளை உரைத்தல். இவற்றை "பொழிப்பே யகலம் நுட்ப மெச்சமெனப், பழிப்பில்சூத்திரம் பன்னல் நான்கே," "அவற்றுள், பாடங் கண்ணழிவு உதாரணமென்றிவை, நாடித் திரிபில வாகுதல் பொழிப்பே," "தன்னூல் மருங்கினும் பிறநூல் மருங்கினும், துன்னிய கடாவின் புறந்தோன்றும் விகற்பம், பன்னிய வகல மென்மனார் புலவர்," "ஏதுவி னிங்கவை துடைத்தல் நுட்பம்," "துடைத்துக் கொள்பொருள் எச்சமாகும்" என்னுஞ் சூத்திரங்களா லுணர்க. இனி, பதங்களின் பொருளை அநுவயக்கிரமப்படி கூறுவது பொழிப்புரையென்றும், பதப்பொருள் முதலியவற்றை நியாயங்காட்டி விரித்துச்சொல்வது அகலவுரை யென்றும், மூலத்தின் சாரமான பொருள்களைக் கருத்துக்களோடு நுண்ணிதாகஎடுத்துரைப்பது நுட்பவுரை யென்றும், நூலிற்சொல்லப்படா தொழிந்த விஷயங்களைப் பிறநூல்மேற்கோள்கொண்டு எடுத்துச் சொல்வது எச்சவுரை யென்றும் கொள்ளுதலும் ஒன்று. இங்ஙனம்பலவகையாலும் நூற்பொருளை விவரமாக விளக்கிக்காட்டாதவர்களுடைய உரைகள் சிறப்பில்லாதன என்பது, இப்பாட்டின் கருத்து. இவ்வாறு உரைகூறத்தக்கவர்களே சபைக்குஉரியவர் என அதிகாரத்தோடு சம்பந்தங் காண்க.

புல் நீர் நிழல் முதலிய வளங்களாற் காட்டுப்பசுக்களுக்கு அக்காடுகளினுஞ் செழிப்பைத் தருதலால் அவற்றைத் தம்மிடம் வந்து சேரச்செய்கின்றன என மலைச்சிறப்பைக் கூறியபடி.

அகலம் - அகன்றிருத்தலை யுடைய உரைக்குத் தொழிலாகுபெயரும், நுட்பம் - நுண்மையையுடைய உரைக்குப் பண்பாகுபெயரும், எச்சம் - எஞ்சியதைத் தெரிவிக்கும் உரைக்குக் காரியவாகுபெயருமாம்; எஞ்சியது-மிச்சமானது; மறைந்துநின்றது. 'பொழிப்பு அகலம் நுட்பம் எச்சம்' இச்செவ்வெண், 'இந்நான்கு' என்ற தொகை பெற்று வந்தது. பழிப்புஇல் உரையென இயைப்பினும் அமையும். ஆமோ, ஓ - எதிர்மறை. (௯)

௩உ0. இற்பிறப் பில்லா ரெனைத்துநூல் கற்பினுஞ்
சொற்பிறரைக் காக்குங் கருவியரோ—விற்பிறந்த
நல்லறி வாளர் நவின்றநூ றேற்றுதார்
புல்லறிவு தாமறிவ தில்.

(இ - ள்.) இல் பிறப்பு இல்லார் - உயர்குடியிற்பிறத்த லில்லாதவர், எனைத்து நூல் கற்பினும் - எவ்வளவு சாஸ்திரங்களைப் படித்தாலும், பிறர் சொல்லை காக்கும் கருவியரோ - பிறருடைய சொற்களை (இகழாமற்)காத்தற்கு உரிய (அடக்கம் முதலிய)சாதன முடையவ ராவரோ? [ஆகார்]; இல் பிறந்த நல் அறிவாளர் - உயர்குடியிற்பிறந்த நல்ல விவேகிகளோ, நவின்ற நூல் தேற்றுதார் புல் அறிவு - (பெரியோர்கள்)சொன்னசாஸ்திரங்களை அறியாதவர்களுடைய அற்பபுத்தியை, தாம் அறிவது இல் - தாம் கவனித்து அறிவதுமில்லை [அறியாதவர்போல் உபேக்ஷயாயிருப்பர் என்றபடி]. (எ - று.)

உயர்குடிப்பிறவாதவர் எவ்வளவு படித்திருந்தாலும், சபையிற் பிறர்பேசும்போது உண்டாகுங் குற்றங்களை இகழாமல் அடக்கிவைக்கிற அடக்கமான குணத்தை யுடையவராகார்; உயர்குடிப்பிறந்தவரோ, சபையிற் பிறர் பேசும்போது அதிலுள்ள குணங்களைமாத்திரம் கிரகிப்பார்களேயொழியக் குற்றங்களிற் கருத்தைச் செலுத்தவேமாட்டார் என்பதாம்.

"இற்பிறந்தார்கண்ணல்ல தில்லை யியல்பாகச், செப்பமு நாணு மொருங்கு" என்பதுமுதலாகத் திருக்குறளிற் கூறியபடி உயர்குடிப்பிறந்தவர் இயற்கையில் நற்குணமுடையராயிருத்தலையும் அக்குடிப்பிறவாதவர் அக்குணமில்லாதவராயிருத்தலையுங் கூறுகிற இப்பாட்டு, பிறர்குற்றத்தை எடுத்து இகழாமல் அடக்கிவைக்கும் உயர்குடிப்பிறந்தவர்களே சபைக்குஉரியவர் என்ற சம்பந்தம்பற்றி, இவ்வதிகாரத்தில் வைக்கப்பட்டதென அறிக.

பஞ்சுகொண்டு இழைத்து நூற்கப்படும் நூல்போலச் சொற்கொண்டு தொடுத்து அமைக்கப்படுதலாலும், மரம்முதலியவற்றின் கோணலைத் தீர்த்துச் செப்பஞ்செய்தற்குக் காரணமாகும் எற்றுநூல்போல மனத்தின்கோணலைத்தீர்த்துச் செவ்வைசெய்யுஞ் சாதனமாதலாலும், நூல்என்பது - உவமையாகுபெயராய்வந்த காரணக்குறியாம். கற்பினும், உம் - உயர்வுசிறப்பு. 'சொல்பிறரைக்காக்கும்' என்பதில், உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. கருவியரோ, ஓ - எதிர்மறை. நவின்ற, நவில் - பகுதி. (௧0)

## ஆறுவது

# பகையியல்.

மனிதர்கட்கு உட்பகைபோல நின்று அழிக்கத்தக்க புல்லறிவாண்மை முதலிய இழிகுணங்களைப் பற்றிக் கூறும் பிரிவு என்பதாம். புல்லறிவாண்மையும், பேதைமையும், கீழ்மையும், கயமையும் தம்மையுடையவரைக் கெடுக்கும் பகைகளென்பது வெளிப்படை.

## ௩௯ - ஆம் அதிகாரம்.—புல்லறிவாண்மை.

இது, அற்பமான அறிவை ஆளுந்தன்மையென விரியும்: அஃதாவது - தான்சிற்றறிவுடையனாயிருந்தே தன்னைப் பேரறிவுடையனாக மதித்து,உயர்ந்தோர்கூறும் உறுதிச்சொற்களைக் கொள்ளாமை. புன்மை + அறிவு = புல்லறிவு; அல்வழிப்புணர்ச்சி, பண்புத்தொகை. அறிவாண்மை - இரண்டாம் வேற்றுமைத்தொகை. ஆண்மை, ஆள் - பகுதி, மை - பண்புப்பெயர்விகுதி. சபைக்குஉரியவரல்லாதவர் புல்லறிவாள ராதலாலும், சபையினியல்பையறியாமை புல்லறிவாண்மையாதலாலும்,இவ்வதிகாரம் அவையறிதலின்பின் வைக்கப்பட்டது.

௩௨௧. அருளி னறமுரைக்கு மன்புடையார் வாய்ச்சொற்
பொருளாகக் கொள்வர் புலவர்—பொருளல்லா
வேழை யதனை யிகழ்ந்துரைக்கும் பாற்கூழை
மூழை சுவையுணரா தாங்கு.

(இ - ள்.) அருளின் - (உயிர்களிடத்துக்) கருணையினால், அறம் உரைக்கும் - தருமங்களை எடுத்துச்சொல்லுகிற, அன்பு உடையார் - அன்புள்ளவர்களது, வாய் சொல் - வாயிலிருந்து வருஞ் சொல்லை, புலவர் - அறிவுடையோர், பொருள் ஆக கொள்வர்-பயன்தருவதாக ஏற்றுக்கொள்வர்; அதனை- அச்சொல்லை, பொருள் அல்லா ஏழை - ஒருபொருளாகமதிக்கப்படாத சிற்றறிவுடையவன், பால் கூழ் சுவையை மூழை உணராது ஆங்கு - பாற்சோற்றினது ருசியை அகப்பை அறியாததுபோல [பயனறியாதவனாய்], இகழ்ந்து உரைக்கும் - தூஷித்துப் பேசுவான்; (எ - று.)

அருள் அன்பு முதலிய நற்குணங்களையுடைய பெரியோர்களது சொற்களை விவேகிகள் சிறந்தபொருளாக மதிப்பார்கள்; அவிவேகிகளோ, அவற்றின்சிறப்பை யறியாமல் இகழ்வர் என்பதாம். பின்னிரண்டடி - உவமையணி. "கல்லா வொருவனைக் காரணங் காட்டினும், இல்லைமற் றென்றும் அறனுணர்தல் - நல்லாய், நறுநெய் நிறைபுழுக்க லுய்ப்பினும் மூழை, பெறுமோ சுவையுணரு மாறு" எனப் பிறர்கூறியதும் காண்க. 'அகப்பை யறியுமோ அடிசிலின் சுவை' என்பது, பழமொழி.

அருளாவது - ஒரு சம்பந்தங் காரணமாகவல்லாமல் இயல்பாக எல்லாவுயிர்களிடத்துஞ் செல்லுங் கருணை என்றும், அன்பாவது - உறவுமுறை சினேகம் முதலிய சம்பந்தமுடையோரிடத்து உண்டாகும் விருப்பம் என்றும் வேறுபாடு அறிக. "அருளென்னும் அன்பீன் குழவி" என்ற திருக்குறளால், அருளுக்கு அன்பு காரணமாதல் விளங்கும். 'வாய்' என வேண்டாது கூறினர், அவர்கள்வாய் எப்பொழுதும் பயனுள்ள சொற்களையே பயின்றுள்ள தெனத் தாம்வேண்டியதன் சிறப்பை முடித்தற்கு; இங்ஙனம் அவசியமில்லாத பதத்திற்குத் தக்க பயன்கொள்ளுதலை வடநூலார் தாத்பர்யமென்பர். ஏழை - அறிவாகிய செல்வ மில்லாதவன்; "அறிவின்மை யின்மையுளின்மை பிறிதின்மை, இன்மையா வையா துலகு", "அறிவுடையா ரெல்லாமுடையா ரறிவிலா, ரென்னுடையரேனு மிலர்" என்ற திருக்குறள்களையும், "நுண்ணுணர்வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப்பணைத்த பெருஞ்செல்வம்" என இந்நூலில் வந்ததையும் காண்க. கூழைச் சுவை உணராது - உருபு பிரித்துக் கூட்டப்பட்டது; கூழினுடைய ருசி யென உருபு மயக்கமாகவும் கொள்ளலாம். கூழ் என்பது - இங்கே, இழிவானஉணவு என்கிற பொருளை யுணர்த்தாமல், உணவென்னுமாத்திரமாய் நின்றது. ஆங்கு - உவமவுருபு. (க)

௩௨௨. அவ்விய மில்லா ரறத்தா றுரைக்குங்காற்
செவ்விய ரல்லார் செவிகொடுத்துங் கேட்கலார்
கவ்வித்தோ றின்னுங் குணுங்கர்நாய் பாற்சோற்றின்
செவ்வி கொளறேற்று தாங்கு.

(இ - ள்.) தோல் கவ்வி தின்னும் - (அசுத்தமும் சாரமற்றதுமான)தோலை (வாயாற்) கௌவித்தின்னும் இயல்புள்ள, குணுங்கர் நாய் - புலையர்களுடைய நாய்கள், பால்சோற்றின் செவ்வி கொளல் - பாலோடுகூடிய சோற்றினது நல்லருசியைக்கொள்ளுதலை, தேற்றாதுஆங்கு - அறியாதவிதம்போல, அவ்வியம் இல்லார் அறத்து ஆறு உரைக்கும் கால் - பொறாமையில்லாதவர் தருமமார்க்கத்தை எடுத்துச்சொல்லும்பொழுது, (அவற்றை), செவ்வியர் அல்லார் - நல்லறிவுடையரல்லாதவர், செவி கொடுத்தும் கேட்கலார் - காதுகொடுத்துக் கேட்கவும் மாட்டார்; (எ - று.)

கருத்து, வெளிப்படை. அணி - மேற்கூறியதே.

அவ்வியம் - மற்றைத் தீக்குணங்கட்கும் உபலக்ஷணம். இரண்டாமடியி லுள்ள 'செவ்வி' என்பது - அதிகாரத்திற்கு ஏற்ப, நல்லறிவாயிற்று. செவிகொடுத்தும், உம் - இழிவுசிறப்பு. கவ்வி, கவ் - பகுதி. செல்வமுடையவரது நாயாயின் நல்லுணவு உண்ணக்கூடும்; அப்படிப்பட்டவையல்ல என்பதை விளக்க, 'குணுங்கர்நாய்' என்றார். செவ்வி - நல்ல சுவைக்குப் பண்பாகுபெயர். தேற்றாது என்பதை, கீழ்ப்பாட்டில் 'உணராது' என்பது போலக் கொள்க. அவ்வியம், கவ்வி என்பன - ஔவியம், கௌவி என்பவற்றின் போலி யெனப்படும். (உ)

௩௨௩. இமைக்கு மளவிற்றம் மின்னுயிர்போ மார்க்க
மெனைத்தானுந் தாங்கண் டிருந்துந்—தினைத்துணையு
நன்றி புரிகல்லா நாணின் மடமாக்கள்
பொன்றிலென் பொன்றுக்கா லென்.

(இ - ள்.) இமைக்கும் அளவில்-கண்மூடித்திறக்கும் பொழுதினுள்ளே, தம் இன் உயிர் போம்-தமது இனிமையான உயிர் நீங்கிப் போகும்படியான, மார்க்கம்-வழியை, எனைத்தானும் - எல்லாவகைகளாலும், தாம் கண்டு இருந்தும் - தாம் அறிந்திருந்தும், தினை துணையும் நன்றி புரிகல்லா - தினையளவாயினும் நல்லகாரியத்தைச் செய்யாத, நாண் இல் மடம் மாக்கள் - வெட்கமில்லாத சிற்றறிவுடைய சனங்கள், பொன்றில் என் - இறந்தால் வரும் நஷ்டமென்ன? பொன்றுக்கால் என் - இறவாதிருந்தால் வரும் இலாபமென்ன?

எனைத்தானும் - பிரதியக்ஷம், அநுமாநம், ஆகமம் என்னும் பிரமாணங்களெல்லாவற்றாலும் என்றபடி. உயிர் உடம்பில் நிலைத்திராததன்மையை அறிந்திருந்தும் தமது வாழ்நாளில் நல்லகாரியஞ்செய்யாத புல்லறிவாளர்களால் உலகத்திற்குச் சிறிதும்பயனில்லை யென்பதாம்.

இமைக்கும்அளவு - ஒருமாத்திரைப்பொழுது. மார்க்கம் - வடசொல். எனைத்தானும்—உம் - முற்று. கண்டிருந்தும்-உம்-உயர்வுசிறப்பு. தினைத்துணையும்—உம் - இழிவுசிறப்பு. நன்றி - நல்லகாரியத்துக்குப் பண்பாகுபெயர். இனி, நன்றிபுரிகல்லா - (பிறர்க்கு) உதவி செய்யாத என்றுமாம். செய்யவேண்டிய சற்காரியங்களைத் தாம் சிறிதும் செய்யாதுஒழிவதற்கு மனம் கூசாததனால், 'நாணில் மடமாக்கள்' என்றது. நாண் - நாணம்; முதனிலைத்தொழிற்பெயர். நாணுவது - செய்யத்தகாதவற்றில் உள்ளமொடுங்குதல். மடம் - அறியாமை; இங்கே அதிகாரத்திற்குஏற்கப் புல்லறிவாயிற்று. மாக்கள் - பகுத்தறிவில்லாத மனிதர். மா - விலங்கு: இதன் பன்மையாய், மாக்கள் என அவிவேகிகட்கு வழங்குவதுபோலும். எவர்க்கும் உயிரினும்இனியது வேறுஇல்லையாதலால், 'இன்னுயிர்' எனப்பட்டது.

'இன்னுயிர்போமாற்றை' என்றும் பாடம் உண்டு.　　(௩)

௩௨௪. உளநாள் சிலவா வுயிர்க்கேம மின்றாற்
பலர்மன்னுந் தூற்றும் பழியாற்—பலருள்ளுங்
கண்டாரோ டெல்லா நகாஅ தெவனொருவன்
றண்டித் தனிப்பகை கோள்.

(இ - ள்.) உள நாள் - (உயிர்கள் உடம்போடுகூடி) வாழ்ந்துள்ள நாள்கள், சில - சிலவாம்; உயிர்க்கு -(அப்படிச் சிலவாழ்நாளையுடைய) உயிர்க்கு, ஏமம்-(உடம்பைவிட்டுப்போகவொட்டாமற்செய்யக்கூடிய)காவல், இன்று- இல்லை; (அந்தஅற்பஆயுள்நாளுள்), பலர் தூற்றும் பழி-பலபேர்வெளியிட்டுக் கூறும் பழிச்சொற்கள், மன்னும் - மிகுதியாம்; (இப்படியிருக்க),ஒருவன்—, பலருள்ளும்-(உலகத்திலுள்ள) பலபேர்களுள்ளும், கண்டாரோடு எல்லாம்- நேரிட்டவரெல்லாரோடும், நகாது -(இனிமையாகக் கூடிவாழ்ந்து) மகிழா

மல், தண்டி-எவரோடும்கூடாமல்விலகி,தனி-தனியாயிருந்து, பகைகோள்-(பிறரோடு) விரோதம்பாராட்டுதல், எவன் - யாதுபயன்கருதி ? (எ - று.)

அற்பஆயுளையும் அவற்றுள் பலஇடையூறுகளையும் இயல்பாக வுடைய மனிதர்கள் பலபழிக்குஇடமான உலகத்தில் தம்மை எவரும் பழிக்க வொண்ணுதபடி எல்லாரோடுங் கலந்து மகிழ்ந்து வாழாமல் தனிப்பட்டு நின்று பகைபாராட்டுவது அற்பபுத்தி என்பதாம்.

பகைபாராட்டாமலிருத்தல் என்னும் காரியத்துக்குத் தக்ககாரணங் களான அற்பஆயுள் முதலியவற்றைப் பெற்றிருந்தும் மானிடரிடத்து அக்காரியம் தோன்றுமையைக் கூறியது, காரணவாராய்ச்சியணி; இதனை வடநூலார் விசேஷோக்தி என்பர்.

உள - உள்ள : உடன்பாட்டுக் குறிப்புப்பெயரெச்சம். 'ஆல்' மூன்றும்-ஈற்றசை. ஏமம் - க்ஷேமம் என்னும் வடமொழியின் சிதைவென்பர். கண் டார்என்பது - தம்மைவந்துகண்டவர்களையும்,தம்மாற்காணப்பட்டவர்களை யும் குறிக்கும். நகாஅது - அளபெடை, செய்யுளோசைநிறைப்பது. எவன்-அஃறிணைப்பொதுக்குறிப்புமுற்று. இதில், 'அன்' விகுதி - உயர்திணையாண் பாலன்று. தனி - தனித்து ; பகுதியே வினையெச்சத்தன்மைப்பட்டது ; "வரிப்புனைபந்து" என்றவிடத்து 'வரி' என்பது போல. பகை - பகுதல் : வேறுதல். (௪)

ஈ௨டு. எய்தி யிருந்த வவைமுன்னர்ச் சென்றெள்ளி
வைதா னொருவ னொருவனை—வைய
வயப்பட்டான் வாளா விருப்பானேல் வைதான்
வியத்தக்கான் வாழு மெனின்.

(இ - ள்.) எய்தி இருந்த - (பலபேர்) கூடியிருந்த, அவை முன்னர் - சபையின் முன்னிலையிலே, ஒருவன்—, சென்று—, ஒருவனை - மற்றொரு வனை, எள்ளி - அவமதித்து, வைதான் - திட்டினுன்; வைய - (அவ்வாறு) திட்டுகையில், வயப்பட்டான் - திட்டப்பட்டவன், வாளா இருப்பானேல் - (எதிரில் திட்டாமல் பொறுத்துக்கொண்டு) சும்மாஇருப்பானுனால், (பின்பு), வைதான் வாழும் எனின் - திட்டினவன் (வாழான், அங்ஙனமாகாது) வாழ்ந்துகொண்டிருந்தால், விய தக்கான் - ஆச்சரியப்படத்தக்கவன்; (எ - று.)

அற்பஅறிவுள்ளானொருவன் ஒருசபையிற் போய்க் காரணமில்லாமல் ஒருவனைத் திட்டுகையில், அப்படித் திட்டப்பட்டவன் அதைப்பொறுத்துக் கொண்டு சும்மா இருந்தால், திட்டினவன்வாழமாட்டான்; ஒருகால்வாழ்வா னாயின், அது அதிசயிக்கத்தக்கது என்பதாம். இதனால், புல்லறிவாளர்க்குப் பிறராலன்றித் தம்மாலேயே இம்மையிலேயே பெருந்தீங்கு நேர்தல் விளக் கப்பட்டது.

முன்னர், அர் - சாரியை. வயப்பட்டான் - வையப்பட்டான் என்ப தன் முதற்போலி: இனி, வசம் என்னும் வடமொழி வயம் எனத் திரிந்ததா கக் கொண்டு, வைதற்கு வசப்பட்டவன்: அதாவது - தன்னைப் பிறன்திட்ட

உடன்பட்டவன் எனினும் அமையும். விய - முதனிலைத்தொழிற்பெயர்: விய த்தற்கு என நான்காம்வேற்றுமைத்தொகை. வாளா - தொழிலின்மையை யுணர்த்துவதோ ரிடைச்சொல். (௫)

௩௨௬. மூப்புமேல் வாராமை முன்னே யறவினையை
ஊக்கி யதன்கண் முயலாதா—னூக்கிப்
புறத்திரு போகென்னு மின்னாச்சொ லில்லுட்
டொழுத்தையாற் கூறப் படும்.

(இ - ள்.) மூப்பு-கிழத்தனம், மேல் வாராமை முன்னே -நெருங்கிவரா திருத்தற்கு முன்னமே, அறம் வினையை - தருமகாரியத்தை, ஊக்கி - செய் யத்தொடங்கி, அதன்கண் - அவ்விஷயத்தில், முயலாதான் - முயற்சிசெய் யாதவன்,—இல்லுள் - (தன்) வீட்டில், நூக்கி-தள்ளப்பட்டு, 'புறத்து இரு- வெளியிலே இரு; போகு - (இவ்விடம்விட்டுப்) போ,' என்னும் - என்கிற, இன்னா சொல் - இனிமையில்லாத [கடுஞ்] சொற்களை, தொழுத்தையால் - வேலைக்காரியாலும், கூறப்படும் - சொல்லப்படுவான் ; (எ - று.)

உடம்பைஒடுக்குகிற முதுமைப்பருவம் வருதற்கு முன்னமே,இடம்பொ ருளேவல்கள் ஸ்வாதீனமாக இருக்கும்பொழுதே, ஒருவன் மறுமைக்கு உதவியாகத்தருமங்களைச்செய்துவைத்துக்கொள்ளவேண்டும்;ஏனெனில்,— முதுமைவந்தபொழுது, இவன்சொன்னபடி எவரும்நடவாமல் வேலைக்காரி யும் அலட்சியஞ்செய்வள் என்க: அன்றியும், தருமஞ்செய்யாத புல்லறிவா ளனை ஏவலாளரும் இகழ்தல், இயல்பு.

தொழுத்தையால் என்பதில், இழிவுசிறப்புஉம்மை விகாரத்தால் தொ க்கது. தொழுத்தை - தொழும்பனென்பதன் பெண்பால். (௬)

௩௨௭. தாமேயு மின்புறார் தக்கார்க்கு நன்றாற்றா
ரேமஞ்சார் நன்னெறியுஞ் சேர்கலார்—தாமயங்கி
யாக்கத்துட் டூங்கி யவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னார்.

(இ - ள்.) புல் அறிவினார் - அற்பபுத்தியுடையவர்,—தாமேயும் இன்பு உறார் - (செல்வத்தை அநுபவித்துத்) தாமாகிலும் இன்பமடையார்; தக்கார் க்கும் நன்று ஆற்றார் - (அறிவொழுக்கங்களில்) தகுதியுடையவர்கட்குத் தா னஞ்செய்யவும் மாட்டார்; ஏமம் சார்- (உயிர்க்குப்) பாதுகாப்பாகப் பொரு ந்திய, நல் நெறியும்-நல்ல தருமவழியையும், சேர்கலார்-அடையமாட்டார்; தாம் மயங்கி - (உடம்பு செல்வம் முதலியவற்றின் நிலையில்லாமையை அறி யாமல்) தாம் மயக்கங்கொண்டு, ஆக்கத்துள் தூங்கி - செல்வத்திலேயே ஒன் றுந்தோன்றாமல் இருந்து, வாழ்நாளை -(தமது)ஆயுளை, அவத்தமே போக்கு வார் - வீணாகவே கழிப்பர் ; (எ - று.)

புத்தியீனர் செல்வத்தைத் தாமும் அநுபவியாமல் தானதருமமுஞ் செய்யாமல் தமதுகாலத்தை வீணே கழிப்பார்கள் என்பதாம்.

உம்மைகள் மூன்றும் - எச்சப்பொருளன; அவற்றில், முந்தியது - பிந்

தியவற்றை நோக்கி எதிரதுதழுவியதும், பிந்தியது - முந்தியவற்றைநோக்கி இறந்ததுதழுவியதும், இடையிலுள்ளது - இரண்டையும்நோக்கி இறந்ததும் எதிரதும் தழுவியதுமாம். நன்று - நல்லது ; ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்: தானம். ஏமம் - ரக்ஷகம். தூங்குதல் - இங்கே, தொழிலறுதல். வாழ்நாள் - முக்காலமுங் கருதும் வினைத்தொகை. தானம் பெறுதற்கு உரிய சற்பாத்திரம் யோக்கியரே யாதலால், 'தக்கார்க்கும் நன்றாற்றார்' என்றார். அவம் என்ற பெயரின்மேல் அத்து அம் என்ற சாரியைகள் சேர்ந்து அவத்தம் என நின்றதென்னலாம் ; தனியே ஒருபெயருமாம்.

௩உ௪. சிறுகாலை யேதமக்குச் செல்வுழி வல்சி
யிறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளா—ரிறுகிறுகிப்
பின்னறிவா மென்றிருக்கும் பேதையார் கைகாட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம்.

(இ - ள்.) சிறு காலையே - இளம்பிராயத்திலேயே, தமக்கு செல் உழி வல்சி - தமக்கு (இறந்தபின்பு) போகும் மறுமையிடத்துக்கு உரிய (தருமமாகிய) சோற்றை, இறுக இறுக - மிகவும் அழுத்தமாக, தோள் கோப்பு கொள்ளார் - தோளிற்கட்டியமூட்டையாகஅமைத்துக்கொள்ளாதவர்களாய்,இறுகி இறுகி -(பொருளில்) மிகவும்சிக்கெனவாகி, பின் அறிவாம் என்றுஇருக்கும்- (தருமவிஷயத்தைப்பற்றிப்) பின்புபார்த்துக்கொள்வோம்என்றிருக்கிற,பேதையார் - புல்லறிவாளர், கை காட்டும் - (மரணகாலத்திலே பேச நா எழாமையால் தம்) கையாற் குறித்துஉருவங்காட்டுகிற, பொன்னும் - பொன்னுருண்டையும், புளி விள காய் ஆம் - புளிப்புச்சுவையுள்ள விளாங்காயாகும்.

இடம்பொருளேவல்கள் தமக்கு அதீனமாக இருக்கும்பொழுதே மறுமைக்கு உதவியாகத் தருமஞ்செய்யாமல் பின்புபார்த்துக்கொள்வோமென்று விட்டுப் பணத்தைச் சேர்த்துவைக்கும் புத்தியினர், மரணகாலத்தில் தமது வாயடைத்துப்போனபொழுது தக்கவர்க்குத் தானஞ்செய்யக்கருதித் தாம் முன்புபத்திரப்படுத்திவைத்துள்ள பொன்திரளை எடுத்துக்கொண்டுவரும்படி மனைவி மக்கள் முதலியோர்க்குக் கையால் அப்பொருட்டிரளினளவைக் காட்டினால்,அவர்கள், அக்குறிப்பையறியாமையாலோ, அச்செல்வத்தைஇவர்க்காகச் செலவுசெய்ய இணங்காமையாலோ, இவர் புளிவிளங்காய்வேண்டுமென்கிறார் என்றுசொல்லி அதுகொண்டுவருவர் என்பதாம். புல்லறிவாளர் செல்வம் அவர்க்குப் பயன்படாமற்போம் ; பிறர்க்குப் பயன்படாமற்போதலும்உண்டு என இதில் விளங்கும்.

"கையாற் பொதித்துணையே காட்டக் கயற்கண்ணு ளதனைக் காட்டாள், ஐயா விளாம்பழமே யென்கின்றீ ராங்கதற்குப் பருவமன் றென், செய்கோவெனச் சிறந்தாள்போற் சிறவாக்கட்டுரையாற் குறித்தவெல்லாம், பொய்யே பொருளுரையாமுன்னே கொடுத்துண்டல் புரிமின்கண்டீர்", "வேற்றுவரில்லா நுமரூர்க்கே செல்லினும் வெகுண்டீர்போல, வாற்றுணுக்கொள்ளா தடிபுறத்துவைப்பீரே யல்லீர்போலும், கூற்றங்கொண்டோடத் தமியேகொடுநெறிக்கட் செல்லும்போழ்தின், ஆற்றுணுக்கொள்ளீ

ரழகலா தறிவொன்று மிலிரேபோலும்" என்ற சீவகசிந்தாமணிச்செய்யுள்களும், "மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை, ஆய்வின்றிச்செய்யாதார் பின்னை வழிநினைந்து, நோய்காண் பொழுதி னறஞ்செய்வார்க் காணுமை, நாய்காணிற் கற்காணு வாறு" என்ற பழமொழிச்செய்யுளும் இங்கு அறியத்தக்கவை.

இறுகிறுக - இறுகஇறுக என்பதன் தொகுத்தல். இறுகிறுகி - இறுகியிறுகி என்பதன் தொகுத்தல். அடுக்குக்கள் - மிகுதிப் பொருளன. தோட்கோப்பு - தோளிற்கோக்கப்படுவது என, வழிப்பிரயாணத்துக்கு வேண்டுவதாகிய கட்டுச்சோற்றுமூட்டைக்குத் தொழிலாகுபெயராகிய காரணக்குறி; அது, இங்கே, மறுமைவழிக்கு இன்றியமையாத நல்வினைக்குக் கொள்ளப்பட்டது; "தோட்கோப்புக் காலத்தாற் கொண்டுய்ம்மின்" எனக் கீழ் 'இளமைநிலையாமை' என்ற அதிகாரத்தில் வந்ததுங் காண்க. அறிவாம்-தனித்தன்மைப்பன்மை. பேதையார் - அறிவில்லாதவர் ; அதிகாரத்தால், புல்லறிவாளர்மேல் நின்றது. பொன்னும்—உம் - உயர்வுசிறப்பு. விள+காய் =விளங்காய்; மரப்பெயர்முன்னர் இனமெல்லெழுத்து வரப்பெற்றது. (அ)

௩௨௯. வெறுமை யிடத்தும் விழுப்பிணிப் போழ்து
மறுமை மனத்தாரே யாகி—மறுமையை
யைந்தை யனைத்தானு மாற்றிய காலத்துச்
சிந்தியார் சிற்றறிவி னூர்.

(இ - ள்.) சிறு அறிவினர் - புல்லறிவுடையவர்கள்,—வெறுமையிடத்தும் - செல்வமில்லாதகாலத்திலும், விழு பிணி போழ்தும் - மிகுந்த வியாதி வந்தகாலத்திலும், மறுமை மனத்தாரே ஆகி - மறுமைக்குஉரிய தருமத்தைச் செய்யுங் கருத்தையுடையவர்களாய்,—ஆற்றிய காலத்து-(தரித்திரத்தன்மையும் நோயும் இல்லாமல் நினைத்ததைச்) செய்யக்கூடிய காலத்தில், மறுமையை - மறுமைக்குஉரிய தருமத்தை, ஐந்தை அனைத்து ஆனும் - சிறுகடுகினளவாயினும், சிந்தியார் - நினைக்கமாட்டார்; (எ - று.)

அற்பபுத்தியுடையார், தாம் தரித்திரப்படும்பொழுதும் வியாதியநுபவிக்கும்பொழுதும் மாத்திரமே தருமசிந்தையுடையவர்களாய், அத்துன்பங்களில்லாதகாலத்தில் சிறிதும் அச்சிந்தையில்லாதவராயிருப்பர் என்பதாம்.

வெறுமையாவது - அநுபவிக்கப்படும் பொருள் எதுவு மில்லாமை. விழு - விழுமம் என்ற உரிசசொல்லின் விகாரம். விழுப்பிணி என்பதற்கு-துன்பந்தருகிற நோயென்றும் பொருள்கொள்ளலாம்; "விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்" என்பது தொல்காப்பியம். மறுமை - இறந்தபின் வரும் நிலை; இங்கே, அதற்குஉரிய நல்வினைக்கு ஆகுபெயர். ஐந்தை-கீழ்வந்த 'தினை' என்பதுபோல, சிறுமைக்கு எடுத்துக்காட்டப்படுவதோர் அளவை.

௩௩0. என்னேமற் றிவ்வுடம்பு பெற்று மறநினையார்
கொன்னே கழிப்பர்தம் வாழ்நாளை—யன்னோ
வளவிறந்த காதற்றம் மாருயி ரன்னூர்க்
கொளவிழைக்குங் கூற்றமுங் கண்டு.

(இ - ள்.) (உலகத்திற்புல்லறிவாளர்கள்), இ உடம்பு பெற்றும்- (தருமங்களைச்செய்தற்கேற்ற) இந்த மானுடதேகத்தைப் பெற்றிருந்தும்,—அளவு இறந்த காதல் - வரம்புகடந்த அன்பையுடைய, தம் ஆர் உயிர் அன்னார் - தமது அருமையான உயிரை யொத்த உறவினரை, கொள இழைக்கும் - (தான்) எடுத்துக்கொண்டுபோதற்கு (வேண்டியமுயற்சியை)ச் செய்கிற, கூற்றம் - யமனது செயலை, கண்டும் - (தாம்) பார்த்திருந்தும், அன்றோ-ஐயோ! அறம் நினையார் - தருமத்தைச்செய்யக் கருதாதவராய், தம் வாழ்நாளை கொன்னே கழிப்பர் - தமது ஆயுளை வீணாகக்கழிப்பார்கள்; என்னே - இது என்னஅநீதி! (எ - று.)—மற்று - அசை; வினைமாற்றுமாம்.

"அரிதரிது மானிடராத லரிது" என ஒளவையார் கூறியபடி கிடைத்தற்கரியதாய் நற்கதிகளை நேரிற்பெறுதற்குத்தக்கதாயுள்ள மனிதசரீரம் தமக்கு முற்பிறப்பின்நல்வினையாற் கிடைத்திருந்தும் பலர் தருமஞ்செய்யாமல் வீணே காலங்கழித்தற்கு என்ன காரணமோ? தமது மனைவி மக்கள் முதலிய மிக்கஅன்புவைத்தற்கிடமான சுற்றத்தார்க் கென்று சேர்க்கப்பட்ட செல்வத்தைச் செலவுசெய்யக்கூடாதெனக் கருதுவராயின், அவர்கள்வாழ்க்கை நிலையில்லாததென்பதை உலகத்தில் அநுபவசித்தமாகப் பிரதியக்ஷப்பிரமாணத்தாற் காணக்கூடுமே என்பதாம். யார்க்காகப் பொருள் சேர்க்கப்படுகிறதோ அவர்களும் நிலையில்லாதவ ராதலால், செல்வத்தைச் செலவுசெய்து தானப்பயனால் நற்கதியைப் பெறாமை புத்திக்குறைவு என்க.

என்னே, அன்றோ என்பன - கழிவிரக்கப்பொருளை விளக்கும். பெற்றும்—உம்-உயர்வுசிறப்பு. கொன்-பயனில்லாமையுணர்த்துவதோர் இடைச்சொல். கூற்றம் - (உடலுயிர்களைக்) கூறுபடுத்துவது; அல்லது, (ஆயுளைப்) பகுப்பது எனக் காரணப்பெயர். கொள - உயிர்கொள்ள. ஆருயிரன்னார் - உயிர்போல இன்றியமையாதவராகப் பாவிக்கப்பட்டவர். கூற்றமும் கண்டு- உம்மை மாறுக. (௧௦)

---

## ௩௪ - ஆம் அதிகாரம்.—பேதைமை.

அஃதாவது-யாதொன்றையும்அறியாமை; முழுமூடத்தனம். சிலஅறிந்து சிலஅறியாமையாகிய புல்லறிவாண்மைக்குப் பின் யாதும்அறியாமையாகிய பேதைமை வைத்தற்கு இயைபுடையதாத லறிக. இச்சம்பந்தம் தோன்ற, திருக்குறளிலே புல்லறிவாண்மையின்முன் பேதைமை வைக்கப்பட்டவாறும் காண்க. பேதைமை புல்லறிவாண்மை என்ற இரண்டையும் மயக்கத்தின் வகை யென்றார் பரிமேலழகர். பேதைமை - பண்புப்பெயர்.

௩௩௧. கொலைஞ ருலையேற்றித் தீமடுப்ப வாமை
நிலையறியா தந்நீர் படிந்தாடி யற்றே
கொலைவல் பெருங்கூற்றங் கோட்பார்ப்ப வீண்டை
வலையகத்துச் செம்மாப்பார் மாண்பு.

(இ-ள்.) கொலைவல் -கொல்லுதல்தொழிலிலே வல்ல, பெருங்கூற்றம்- பெரிய யமன், கோள் பார்ப்ப - (தம்உயிரைக்) கொண்டுபோகுஞ் சமய

த்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்க, ஈண்டைவலையகத்து - இவ்வுலகவாழ்க்கையாகிய வலையினிடத்திலே, செம்மாப்பார் - மிகக்களித்திருப்பவரது, மாண்பு - தன்மையானது,—கொலைஞர்-கொலைசெய்பவர், உலைஏற்றி-உலை நீர்ப்பாத்திரத்தை அடுப்பின்மேல் வைத்து, தீ மடுப்ப - நெருப்பை மூட்டி எரிக்கையில், ஆமை-(அப்பாத்திரத்தில் இடப்பட்ட) ஆமை, நிலை அறியாது-(தனக்கு வந்திருக்கிற அபாய)நிலைமையைச் சிறிதும் உணராமல், அ நீர் படிந்து ஆடி அற்று-அவ்வுலைநீரில் முழுகி விளையாடினாற்போலும்; (எ-று.)—மிக்க பேதைமை யென்றபடி.

ஆமையைச் சமைக்கத் தீமூட்டியவிடத்து அது அறிவில்லாமல் உலைநீரில் விளையாடுவது போல, தம்உயிரைக்கொள்ள யமன் சித்தனாயிருக்கையில் மனிதர்கள் உலகவாழ்க்கையில் மகிழ்வது அறிவில்லாமை என்பதாம். "வெறியயர் வெங்களத்து வேன்மகன் பாணி, முறியார் நறுங்கண்ணி முன்னர்த்தயங்க, மறிகுள குண்டன்ன மன்னுமகிழ்ச்சி, அறிவுடையாளர்கணில்" எனக் கீழ் இளமைநிலையாமை யென்னும் அதிகாரத்தில் வந்த செய்யுளோடு இச்செய்யுளை ஒப்பிடுக. மரணத்தையஞ்சி மறுமைநற்கதிக்குஉரிய முயற்சி செய்க வென்றவாறு. 'ஈண்டைவலை' என்ற உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்த உவமையணி.

கொலைஞர் - கொலையையுடையவர்; ஞ் - பெயரிடைநிலை. ஆடி - ஆடினால் என்னும் எச்சத்தின் திரிபு. ஈண்டை - ஐயீற்றுடைக்குற்றுகரம்; ஐ - சாரியை. தம்மை நல்வழிச்செல்லவொட்டாது பந்தப்படுத்துதலால், சம்சாரத்தை 'வலை' என்றார். செம்மாப்பார்—செம்மா - பகுதி; இது - இறுமா, அலமா, சோகா என்பன போல ஒருசொல். பெருமையென்னும் பொருள் தரும் 'மாண்பு' என்னுஞ் சொல் - இங்கே எதிர்மறையிலக்கணையாய், இழிவான தன்மைக்கு வந்தது. (க)

௩௩௨. பெருங்கட லாடிய சென்றா ரொருங்குட
னோசை யவிந்தபி னாடுது மென்றற்றா
லிற்செய் குறைவினை நீக்கி யறவினை
மற்றறிவா மென்றிருப்பார் மாண்பு.

(இ - ள்.) 'இல் செய் குறைவினை நீக்கி - குடும்பத்துக்குச் செய்யவேண்டிய காரியக்குறைகளை யெல்லாம் தீர்த்து, மற்று அறம் வினை அறிவாம் - பின் தருமகாரியஞ்செய்ய ஆலோசிப்போம்,' என்று இருப்பார்-என்றுகருதி வீணேகாலங்கழிப்பவரது,மாண்பு - தன்மையானது,—பெருங்கடல்ஆடிய சென்றார் - பெரிய சமுத்திரத்தில் நீராடுதற்குப் போனவர், ஓசை ஒருங்கு உடன் அவிந்தபின் ஆடுதும் என்று அற்று -'(இக்கடலின்) ஒலி முழுவதும் ஒருசேரஅடங்கினபின்புநீராடுவோம்'என்றுகாத்திருந்தாற்போலும்; (எ-று.)

கடலின்ஒலி ஓயாதவாறுபோல, சமுசாரத்தின் காரியமும் என்றுங் குறைதீர முடியா தாதலால், அதன்பின்பு செய்வோமென்பது பேதைமை யென்பதாம். "திரையவித்து நீராட லாகா வுரைப்பார், உரையவித் தொன்றுஞ்சொல் வில்லை—அரைசராய்ச், செய்துமா மென்னினு மாகா துள

வரையாற், செய்தவர்க்கே யாகுந் திரு'' என்ற செய்யுளோடு இதனை ஒப் பிடுக. உவமையணி.

ஒருங்கு, உடன் - ஒருபொருட்பன்மொழி ; இரண்டும், எஞ்சாமைப் பொருளுணர்த்தும் இடைச்சொற்கள். என்று - என்றால் என்னும் எச் சம் திரிந்தது. ஆல் - ஈற்றசை. மற்று - விரையாமல் என்றவாறு. அறி வில்லாதவர்களின் தன்மையை 'மாண்பு' என்றது, பிறதறிப்புவகையால், அவர்கருத்தை எடுத்துக்காட்டிப் பரிகாசஞ்செய்தபடியாம். (உ)

௩௩௩. குலந்தவங் கல்வி குடிமைமூப் பைந்தும்
விலங்காம லெய்தியக் கண்ணு—நலஞ்சான்ற
மையறு தொல்சீ ருலக மறியாமை
நெய்யிலாப் பாற்சோற்றி னேர்.

(இ - ள்.) குலம்-உயர்குடிப்பிறப்பும், தவம்-விரதவொழுக்கமும்,கல்வி-படிப்பும், குடிமை - (செல்வத்தாலாகும்) குடித்தனவளமும், மூப்பு - பிராய முதிர்ச்சியும், ஐந்தும் - (ஆகிய) இவ்வைந்தும், விலங்காமல் - தவறாமல், எய்தியக்கண்ணும் - (ஒருவனுக்கு) நேர்ந்தவிடத்தும், (அவன்), நலம் சான்ற - பெருமை மிக்க, மை அறு தொல் சீர் - குற்றமில்லாத பழமையான சிறப் பையுடைய, உலகம் - (மறுமையில் அடையத்தக்க சுவர்க்கம் மோக்ஷம் என் னும்) உலகங்களின் தகுதியை, அறியாமை - அறியாதிருப்பது,—நெய் இலா பால்சோற்றின் நேர்-நெய்யில்லாத வெண்ணிறமான சோற்றிற்குச் சமமாம்.

சோறு சுத்தமாய் வெண்ணிறம் நல்லபக்குவம் சாரமுடைமை முதலிய சிறப்புக்களோடு கூடியிருந்தாலும் நெய்யில்லாவிட்டால் அது''நெய்யில்லா வுண்டி பாழ்'' என்றபடி இகழப்படுவதுபோல, குலம்முதலியவை ஒருவனு க்கு அமைந்திருந்தாலும் மறுமையில்நல்லுலகம்பெறுதற்குஏற்றமுயற்சியை அறியாத பேதைமை இகழப்படும் என்பதாம். உவமையணி.

நேர் - உவமவுருபு. தவம் - தபஸ் என்ற வடமொழியின் திரிபு ; தவ மாவது-மனம் பொறிவழிபோகாமல்நிற்றற்பொருட்டு விரதங்களால் உணவு சுருக்குதல் முதலியன. குடிமை - பண்புப்பெயர். முதலடியில், பெயர்ச் செவ்வெண்,ஐந்துஎன்னுந்தொகைபெற்றது. தொல்சீர் - பண்புத்தொகை ; தொன்றுதொட்டு வந்த புக ழென்க. உலகமறியாமை - உலகத்தாரோடு ஒப்பவொழுகும் ஒழுக்கத்தை உணராமை எனினும் அமையும்; ''உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங், கல்லா ரறிவிலாதார்'' என்பது காண்க. 'நெய்யிலா' என்பது - சோற்றுக்கு அடைமொழி. பாற்சோறு - பால் போன்ற சோறு ; இவ்வுவமைத்தொகை, வெண்ணிறமுடைய சோறென்ற மாத்திரமாய் நின்றது. (௩)

௩௩௪. கன்னனி நல்ல கடையாய மாக்களிற்
சொன்னனி தாமுணரா வாயினு—மின்னினியே
நிற்ற லிருத்தல் கிடத்த லியங்குதலென்
றுற்றவர்க்குத் தாமுதவ லான்.

(இ - ள்.) சொல் - (பிறர்சொல்லுஞ்) சொற்களை, நனி - நன்றாக, தாம் உணரா ஆயினும் - தாம் (கேட்டு) அறிந்துகொள்ளமாட்டாவானாலும்,— உற்றவர்க்கு - (தம்மை) அடைந்தவர்கட்கு, இன்னினியே - (அவர்கள் தம்மிடம்வந்த) அந்தந்தப்பொழுதிலே, நிற்றல் - (மேலே)நிற்றலும், இருத்தல் - (மேல்) உட்காருதலும், கிடத்தல்-(மேற்) படுத்தலும், இயங்குதல் - (மேலே) நடத்தலும், என்று-என்ற காரியங்கட்கு, தாம் உதவலான் - தாம்(இடமாக) உபயோகப்படுதலாலே,—கல் - கற்கள், கடை ஆய மாக்களின் - கீழ்ப்பட்ட மனிதர்களைக்காட்டிலும், நனி நல்ல - மிகவும் நல்லவை ; (எ - று.)

பிறர்சொன்னதைத் தாம்அறியாத தன்மையில் மூடர்களும் கல்லும் சமமாயினும், வந்தவர்க்கெல்லாம்நிற்கவும்உட்காரவும்படுக்கவும்நடக்கவுமாகப் பலவாறு விரும்பியபடியெல்லாம் பயன்படுகிற கல்லினும், பிறர்க்கு எந்த விதத்திலும் உதவாத பேதையர் கீழ்ப்பட்டவர் என்பதாம்.

உபமேயத்தினும்உபமானத்திற்குச்சிறப்பைவிளக்கியதனால், வேற்றுமையணி ;ஒன்றுக்கும்உதவாமையாகிய உபமேயத்தினதுகுற்றத்தினால் உபமானமாகியகல்லுக்கு மேன்மையைக் கூறியுள்ளது, அகமலர்ச்சியணி; இவ்விரண்டணிகளும் பாலும்நீரும் கலந்தாற்போல[வேறுபாடுதோன்றாது] கலந்துவந்தது, கலவையணி. பரிகாசச்சுவை தோன்றக் கூறியவாறு.

நனி - மிகுதியுணர்த்தும் உரிச்சொல் ; இது - இரண்டாம் அடியில் முழுவதும் என்ற பொருளில் வந்தது. நல்ல - பலவின்பாற் குறிப்புமுற்று. ஆய, ய் - இறந்தகால இடைநிலை. இன்னினியே - இப்பொழுதே என்றபடி ; இனிஇனி என்ற இடைச்சொல்லடுக்கின் தொகுத்தல்: கீழ் 'யாக்கை நிலையாமை' என்ற அதிகாரத்திலும் "இன்னினியேசெய்க அறவினை—இன்னினியே" என வந்தது காண்க. மூன்றும்அடியில், நிற்றல்முதலிய பெயர்ச்செவ்வெண் தொகைபெறாது வந்தது. மாக்களின், ஐந்தாமுருபு - எல்லைப்பொருளது ; இப்படி உபமானஉபமேயசம்பந்தத்தில் வரும் எல்லைப்பொருளை 'உறழ்பொருவு' என்பர். (௪)

௩௩௫. பெறுவதொன் றின்றியும் பெற்றானே போலக்
கறுவுகொண் டேலாதார் மாட்டுங்—கறுவினாற்
கோத்தின்னா கூறி யுரையாக்காற் பேதைக்கு
நாத்தின்னு நல்ல சுனைத்து.

(இ - ள்.) பெறுவது ஒன்று இன்றியும் - (தன்னாற்) பெறப்படும் பயன் சிறிதும்இல்லாதிருந்தும், பெற்றானே போல - ஒருபயனைப்பெற்றவன்போலவே, ஏலாதார்மாட்டும் - தகாதவர்களிடத்திலும், கறுவு கொண்டு-கோபங்கொண்டு, கறுவினால் - தணியாத அக்கோபத்தினால், இன்னா - துன்பந்தருஞ்சொற்களை, கோத்து - தொடர்ச்சிப்படுத்தி, கூறி - சொல்லி, உரையாக்கால் - (அச்சொற்களின்பொருளை) விளக்குதலுஞ் செய்யாவிட்டால், பேதைக்கு - அறிவில்லாதவனுக்கு, நல்ல சுனைத்து - நல்ல தினவானது, நாதின்னும் - நாக்கை வருத்துவது(போலும்); (எ - று.)

ஒருபயனுமில்லாமலே மிக்கஊக்கத்தோடு எப்படிப்பட்டவர்மேலும் பகைமைபாராட்டி நிந்தனைச்சொற்களை நூதனமாகக் கற்பித்துச்சொல்லி விவரிக்காவிட்டால், மூடனுக்குத் திருப்தியில்லையென்பதாம்.

அறிவில்லாதவர் இயல்பாகப் பிறர்மீது பழிமொழிகளைக் கூறுதற்கு, (தற்குறிப்பேற்றவுருபு கொடாமல்) நாத்தினவுதின்னுதலைக் காரணமாகக் கற்பித்துக்கூறியது, உய்த்துணரேதுத்தற்குறிப்பேற்றவணி.

இன்றியும்—உம் - இழிவுசிறப்பு. பெற்றானே—ஏ - தேற்றம். கறவு - முதனிலைத்தொழிற்பெயர். ஏலாதார்மாட்டும் - செல்வம் அதிகாரம் பெருமை முதலியவற்றால் தம்மினும்மேம்பட்டவரிடத்தும் என்றபடி. கூறுதல் உரைத்தல் என்பவற்றை ஒருபொருட்பன்மொழியாகவுங் கொள்ளலாம். பெற்றான்போல - பெறுபவன் போல; துணிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாக வந்த காலவழுவமைதி. 'நாத்தின்னும் நல்லசுனைத்து' என்றது, பரிகாசச்சுவையை விளக்குவது. இதில், "உண்டற்குரியவல்லாப் பொருளை, யுண்டனபோலக்கூறலுமரபே" என்ற வழுவமைதியிருத்தலையுங்காண்க. (௫)

௩௩௬. தங்கண் மரபில்லார் பின்சென்று தாமவரை
யெங்கண் வணக்குது மென்பவர்—புன்கேண்மை
நற்றளிர்ப் புன்னை மலருங் கடற்சேர்ப்ப
கற்கிள்ளிக் கையிழந் தற்று.

(இ - ள்.) நல் தளிர் புன்னை - அழகிய தளிர்களையுடைய புன்னைமரங்கள், மலரும் - பூக்கப்பெற்ற, கடல் சேர்ப்ப - கடலின் துறைமுகத்தையுடைய (பாண்டிய)ராசனே!—தம்கண் மரபு இல்லார்பின் - தம்மிடத்து (அடக்கம் முதலிய) நல்லொழுக்கம் இல்லாதவர்களிடத்திலே, தாம் சென்று ——, அவரை எம்கண் வணக்குதும் - அவர்களை நம்மிடம் வணங்கியிருக்கச் செய்வோம், என்பவர் - என்றுசொல்பவர்களது, புல் கேண்மை - இழிவான சேர்க்கை, கல் கிள்ளி கை இழந்து அற்று - கல்லைக்கிள்ளிக் கையைப்போக்கிக்கொண்டதுபோலாம்; (எ - று.)

இயல்பிலே சிறிதும் நற்குணநற்செய்கைகளில்லாதவரை அடக்கிச் சுவாதீனஞ்செய்யப் பிரயத்தனப்படுவது, அசாத்தியமும் தீங்குவிளைப்பதுமாய்க் கல்லைக்கிள்ளத்தொடங்கிக் கைந்நோவையுண்டாக்கிக்கொள்ளுதலைப் போலுதலால், பேதைமை யென்பதாம். "கற்கிள்ளிக் கையுய்ந்தாரில்" என்றார் பழமொழியிலும். இனி, ஒழுக்கமில்லாத பேதையர்கள், எவராலும் தாம் நல்வழிப்படுத்தப்படாமையோடு, தம்மைநல்வழிப் படுத்த முயல்பவர்க்குமிக்க துன்பத்தையுஞ் செய்வர் என்றுங் கருத்துக்கொள்ளலாம். உவமையணி.

புன்கேண்மை யென்றது, இங்கே ஒருதலைச்சினேகத்தை. மூன்றாம் அடி - பாண்டியநாட்டின் நெய்தல்நிலச்சிறப்புக் கூறும். புன்னை - அந்நிலத்துக்குஉரிய மரம். சேர்ப்பு - நெய்தனிலத்து ஊரின் பெயர். (௬)

௩௩௭. ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாகிற்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதுங்
கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி
விடாஅ ருலகத் தவர்.

(இ - ள்.) ஆகாது எனினும் - (தமக்கு உண்ணக்கிடைத்தல்) இல்லையாயினும், அகத்து நெய் உண்டு ஆகின் - ஒருபாத்திரத்தினுள்ளே நெய்இருக்குமானால், எறும்பு - எறும்புகள், போகாது - (அப்பாத்திரத்தை விட்டு)நீங்காமல், புறம் சுற்றும் - வெளிப்பக்கத்திற் சுற்றிக்கொண்டேயிருக்கும்; (அதுபோல),—யாதும் கொடார் எனினும் - ஒருசிறிதுபொருளையும்கொடாதவர்களானாலும், உடையாரை - செல்வமுள்ளவர்களை, உலகத்தவர் - உலகத்திலுள்ள சனங்கள், பற்றி-சேர்ந்து, விடார் - விட்டுநீங்கவேமாட்டார்; (எ - று.)

உட்புகுந்து நெய்யை உண்ணக்கூடாமலிருந்தும் அப்பாத்திரத்தை எறும்புகள் ஆசையினால் விடாமற் சுற்றிக்கொண்டிருப்பதுபோல, தம் விருப்பத்தின்படி ஒருபொருளும் பெறக்கூடாமலிருந்தும் செல்வமுடையாரைப் பேதைகள் ஆசையினால் விடாமற் சுற்றிக்கொண்டிருப்பார்கள் என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி.

செல்வமுள்ளவரை 'உடையார்' என்பதும், செல்வமில்லாதவரை 'இல்லார்' என்பதும் - வழக்கு; "உடையார்முன் இல்லார்போல்" எனத் திருக்குறளிலுங் காண்க. அளபெடை யிரண்டும், செய்யுளோசைநிறைப்பன. பின்னிரண்டடியில், அளபெடை ஒன்றிவந்தது, அளபு என்னுந் தொடை.

௩௩௬. நல்லவை நாடொறு மெய்தா ரறஞ்செய்யா
ரில்லாதார்க் கியாதொன்று மீகலா—ரெல்லா
மினியார்தோள் சேரா ரிசைபட வாழார்
முனியார்கொ றாம்வாழு நாள்.

(இ - ள்.) (மூடர்கள்),—நாள்தொறும் - தினந்தோறும், நல்லவை - நற்குணநற்செய்கைகளை, எய்தார் - அடையார்கள்; அறம் செய்யார் - தருமஞ் செய்யமாட்டார்கள்; இல்லாதார்க்கு - ஏழைகட்கு, யாதுஒன்றும் ஈகலார்-எதையுங் கொடுக்கமாட்டார்கள்; எல்லாம் இனியார் தோள் சேரார்-குணஞ் செயல்களிலெல்லாம் இனியரான தம்மனைவியரது தோள்களைச் சேரமாட்டார்கள்; இசை பட வாழார் - கீர்த்தியுண்டாக வாழமாட்டார்கள்; (இப்படிப்பட்டவர்), தாம் வாழும் நாள் எல்லாம் முனியார்கொல்-தாங்கள்பிழைத்திருக்குங் காலங்களையெல்லாம் வெறுக்கமாட்டார்களா? (எ - று.)

அறம்பொருளின்பங்களைத் தாம் அடையாமலும், பிறர்க்குத் தானதருமங்கள்செய்து இம்மைக்குப் புகழும் மறுமைக்குப்புண்ணியமும் பெறாமலும் வீண்காலங்கழிக்கிற அறிவில்லாதார்க்குத் தம்வாழ்நாளில் வெறுப்பில்லாமலிருப்பது வியக்கத்தக்க தென்பது கருத்து; இதில், அவர்கள் இருத்தலும் இறத்தலும் சம மென்பதும் தொனிக்கும். 'இனியார்தோள் சேரார்' என்றதற்கு - விலைமகளிரைச் சேர்வர் என்று கருத்துக் கொள்க.

நல்லவை என்றது, கல்வி கேள்வி நீதிவழியிற்பொருள்சேர்த்தல் முதலியவற்றை. நல் அவை எனப் பிரித்து, சிறந்த சபையைச் சேரமாட்டார்கள் எனினும் அமையும். எய்தார் என்ற எதிர்மறைமுற்றில், எய்து - பகுதி;(அம்பெறிந்தாரென்றபொருளில்,எய்என்னும்பகுதியின்மேற்பிறந்தஉடன்பாட்டுமுற்றும்.) கீர்த்தி, இல்லறத்தில்வழுவாதார்க்கு இம்மைப்பயனாய் இவ்வுல

கில் நிகழ்ந்து நிலைபெறுவ தாதலால், இசைபடவாழ்தல் இறுதியிற் கூறப் பட்டது; திருக்குறளில் 'புகழ்' என்னும் அதிகாரம் இல்லறவியலின் இறுதியில் வைக்கப்பட்ட வாறுங் காண்க. கொல் - வினவகையால், இழிவை விளக்கும்.

இல்லாதார்க் கியாதொன்றும் - இங்கே குற்றியலிகரம் அலகுபெற வில்லை; 'சீரும் தளையும் சிதையின் குற்றியலிகர உகரங்களும் அளபெடையும் மெய்யெழுத்தும் அலகுபெறாது நிற்கும்.' இல்லாதார்க் என்ற தேமாங் காய்ச்சீரின்முன் யா என நேர்வருதல் பொருந்துமே யன்றி, கியா என நிரை வருதல் வெண்டளைக்கு ஒவ்வாமையை அலகிட்டுக் காண்க. (அ)

கூகூகூ. விழைந்தொருவர் தம்மை வியப்ப வொருவர்
விழைந்திலே மென்றிருக்குங் கேண்மை—தழங்குரற்
பாய்திரைசூழ் வையம் பயப்பினு மின்னாதே
யாய்நல மில்லாதார் மாட்டு.

(இ-ள்.) ஆய் நலம் இல்லாதார்மாட்டு-ஆராய்தற்குஉரிய நல்லறிவு இல்லாத மூடர்களிடத்தில், ஒருவர் விழைந்து தம்மை வியப்ப - (யாராயினும்) ஒருவர் (வந்து) விரும்பித் தம்மைக் கொண்டாட, ஒருவர் விழைந்திலேம் என்று இருக்கும் - (அங்ஙனம் கொண்டாடப்பட்ட) மற்றொருவர் (நாம்) விரும்பமாட்டோமென்று ஏற்றுக்கொள்ளாதிருக்கிற, கேண்மை-சிநேகமானது,—தழங்கு குரல் - முழங்குகின்ற ஒலியையுடைய, பாய் திரை - பாய்ந்துவருகிற அலைகளையுடைய கடல், சூழ் - சூழ்ந்த, வையம்- பூமிமுழுவதையும், பயப்பினும் - தருவதாயிருந்தாலும், இன்னாது - (சான்றோர்க்கு) இனிமையாயிராது; (எ - று.)—ஏ - தேற்றம்.

தம்மைவிரும்பி வலியவந்து சிநேகித்தவரைத் தாம்சிநேகியாத மூடர்களின் சேர்க்கை, எவ்வளவு பயன்தருவ தானாலும், திருப்திகரமானதன்று என்பதாம். தம்மைஒருவர்விரும்பாராயினும், தாமாக வலியப்போய்ச் சிநேகித்தல் பெரியோரிடத்தாயின் பின்புஇனிமைதருவதாம் என்பது தோன்ற, 'இன்னாதே ஆய்நலமில்லாதார்மாட்டு' என்றார்.

விழைந்திலேம் - தனமைப் பன்மை யெதிர்மறை யிறந்தகாலமுற்று. தழங்குகுரல், பாய்திரை, சூழ்வையம், ஆய்நலம் - வினைத்தொகைகள். பாய்திரை - அன்மொழித்தொகை யென்றாவது, அடையடுத்த சினையாகுபெயரென்றாவது கொள்ளத்தக்கது. பயப்பினும், உம் - உயர்வுசிறப்பு; இது - ஒருபயனையுந்தராமை தோன்ற நின்றது. ஆய் நலம் - சிறந்த நற்குணமுமாம். கேண்மை - இங்கு, ஒருதலைச்சிநேகம்; எதிர்மறையிலக்கணையால், போலிச்சிநேக மென்றவாறுமாம். தழங்குகுரல் என்பது - தழங்குரல் என்று விகாரப்பட்டது; "தழங்குரன் முரசிற் சாற்றி" என்றார் சீவகசிந்தாமணியாரும். (கூ)

கூசഠ. கற்றனவுங் கண்ணகன்ற சாயலு மிற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்துந் தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத
பித்தனென் றெள்ளப் படும்.

(இ - ள்.) கற்றனவும் - (ஒருவன்) கற்ற கல்விகளும், கண் அகன்ற சாயலும் - (அவனிடத்து) மிகுதியாகவுள்ள மென்மைக்குணமும், இல்பிறப்பும் - (அவனது) உயர்குடிப்பிறப்பும், (என்னும் இவையெல்லாம்), பக்கத்தார் பாராட்ட - அயலார் கொண்டாட, பாடு எய்தும் - பெருமைபெறும்; (அங்ஙனம் இல்லாமல்), தான் உரைப்பின் - (தன்கல்வி முதலிய சிறப்புக்களை ஒருவன்) தானாக எடுத்துச்சொன்னால், மைத்துனர் பல்கி - (அவனுக்குப்) பல மைத்துனர் ஏற்பட்டு, (அவர்களால்), மருந்தின் தணியாத பித்தன் என்று எள்ளப்படும்-மருந்தினால் பரிகரிக்கமுடியாத பைத்தியமுடையவனென்று (அவன்) இகழப்படுவான்; (எ - று.)

தன்சிறப்புக்களைப் பிறர்கூறினாற் பெருமையுண்டு; அங்ஙனமின்றி அறிவில்லாமையால் தற்புகழ்ச்சிசெய்பவன் பரிகாசத்துக்கே பாத்திரமாவன் என்பதாம்; "தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர், நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்" என்றார் பிறரும்.

இங்கே 'மைத்துனர்' என்றது, பரிகாசஞ்செய்பவர்களை; அவர்களே பரிகசித்தற்கு உரியவராதலால். மைத்துனன் -மனைவியின் உடன்பிறந்தவனும், அத்தைமகனுமாம். பாராட்டல் - பார் ஆட்டல் எனப் பிரித்து, பூமியில்வழங்கச்செய்தலெனக் காரணப்பொருளுரைப்பர். தணியாத என்பது-பித்துக்கு அடைமொழி. "சாயல் மென்மை" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால், சாயல் என்பது - ஐம்பொறிகளாலும் நுகரப்படும் பலவகை மென்மைகளையும் உணர்த்துவதோர் உரிச்சொல்லாதலுணர்க. (௪0)

---

## ௩௫ - ஆம் அதிகாரம்.—கீழ்மை.

அஃதாவது - கீழ்மக்களது தன்மை. இது - புல்லறிவாண்மை பேதைமைகளின் காரிய மாதலால், காரணகாரியமுறைமைபற்றி, அவற்றின்பின் வைக்கப்பட்டது.

௩௪௧. கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினுங்
குப்பை கிளைப்போவாக் கோழிபோல்—மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினுங் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும்.

(இ - ள்.) காலை-(உணவுவேண்டிய) காலத்திலே, கப்பி-தானியத்தை, கடவது ஆ - போதுமான அளவினதாக, தன் வாய் பெயினும் - தனது வாயிற் (பிறர் கொண்டுவந்து) போகட்டாலும், குப்பை கிளைப்பு ஓவா - (தன் இயல்பான) குப்பைகிளறுந்தொழிலை நீங்காத, கோழி போல்—,—மிக்க கனம் பொதிந்த - மிக்க மகிமை பொருந்தின, நூல் - சாஸ்திரங்களின் பொருளை, விரித்து காட்டினும்- (அறிவுடையார் வந்து) விவரமாகத் தெரிவித்தாலும், கீழ் - கீழ்மகன், (தன் துர்க்குணத்தை விடாமல்), தன் மனம் புரிந்த ஆறே மிகும் - தன்மனம் விரும்பினபடியே மிக்குச்செல்வான் [வரம்பு கடந்துநடப்பான்]; (எ - று.)

தன்முயற்சியில்லாமல் நல்லபொருள்கிடைத்தாலும் தீயதை விடாமை, கோழிக்குப்போலக் கீழோர்க்கு இயல்பு என்பதாம். உவமையணி.

கப்பி - நொய். காலை - காலம் என்பதன் விகாரம்; உதயகாலமுமாம். இளைப்பு - தொழிற்பெயர். ஓவா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; ஓவு - பகுதி; இது - ஒருவு என்பதன் மரூஉ எனப்படும். நூலுக்கு மிக்க கனம் - சிறந்த உறுதிப்பொருள்களைக் கூறுதல். இழிவுதோன்ற, 'கீழ்' என அஃறிணையாற் கூறினர்; இது - கீழ்மகனுக்குப் பண்பாகுபெயர். (க)

௩௪உ. காழாய கொண்டு கசடற்றார் தஞ்சாரற்
றாழாது போவா மெனவுரைப்பிற்—கீழ்தா
னுறங்குவா மென்றெழுந்து போமாமஃ தன்றி
மறங்குமா மற்றொன் றுரைத்து.

(இ - ள்.) 'காழ் ஆய கொண்டு கசடு அற்றார் தம் சாரல் - உறுதியான நூற்பொருள்களை அறிந்து குற்றம்நீங்கினவர்களான பெரியோர்கள்பக்கலில், தாழாது போவாம்-தாமதமில்லாமற் சென்று சேர்வோம்,' என உரைப்பின்-என்றுசொல்லி (த் தெரிந்தவனொருவன் கூட) அழைத்தால்,—கீழ் - கீழ் மகன்,—உறங்குவாம் என்று-'தூங்குவோம்' என்றுசொல்லி, எழுந்து போம்-(அவ்விடம்விட்டு) எழுந்திருந்து போய்விடுவான்; அஃது அன்றி - அதுவு மல்லாவிட்டால், மற்று ஒன்று உரைத்து - வேறுயாதாயினும் ஒருகாரணத் தைக் கற்பித்துக்கூறி, மறங்கும்-மறுத்துச்செல்வான்; (எ-று.)—'ஆம்' இரண் டும், 'தான்' என்பதும் - அசைகள்.

தெரிந்தவிடத்தில் நல்விஷயங்களைக்கேட்பதற்குப் போவோமென்று ஒருவன் வலியவந்து கூப்பிட்டாலும், கீழ்மகன் யாதாயினும் தடைசொல்லி மறுத்துப்போவான்என்பதாம். தன்மைநவிற்சியணி. நல்லவனது தன்மை மற்றவனையும் நல்லவனுக்குதல்போல, கெட்டவனது தன்மை மற்றவனை யுங் கெட்டவனுக்குதல் என இதில் விளங்கும்.

ஆய - இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும்பெயர். கொண்டு அற்று ரென இயையும். போவாம், உறங்குவாம் - முன்னிலையை உளப்படு த்திய தன்மைப்பன்மைகள்; நீயும் நானும் என்க; "அம் ஆம் என்பன முன் னிலையாரையும்,...தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மை" என்பது காண்க. உறங்குவாம் என்பதைத் தனித்தன்மையாகவுங் கொள்ளலாம். அஃதுஎன் பதன் ஆய்தம், இங்கே மெய்போல ஒலித்தது; உயிர்போல ஒலியாமையை அலகிட்டுக்காண்க. ஒன்று - ஒருகாரணத்துக்கு எண்ணலளவாகுபெயர். உறங்குதல் தாமசகுணத்தின் காரிய மாதலால், அதுவே இங்கு எடுத்துக் கூறப்பட்டது. (உ)

௩௪௩. பெருநடை தாம்பெறினும் பெற்றி பிழையா
தொருநடைய ராகுவர் சான்றோர்—பெருநடை
பெற்றக் கடைத்தும் பிறங்கருவி நன்னாட
வற்றா மொருநடை கீழ்.

(இ - ள்.) பிறங்கு - விளங்குகிற, அருவி - மலையருவிகளையுடைய, நல்- சிறந்த, நாட - (பாண்டிய) நாட்டையுடைய அரசனே!—சான்றோர் - பெரியோர், பெரு நடை தாம் பெறினும் - மிக்க செல்வத்தைத் தாம் பெற்றாலும், பெற்றி பிழையாது - தம்இயல்பாகிய பெருமைக்குணம் மாறாமல், ஒருநடையர் ஆகுவர் - (எப்பொழுதும்) ஒரேவகைப்பட்ட நடத்தையுடையவராவர்; கீழ் - கீழ்மகன்,—பெரு நடை பெற்றக்கடைத்தும் - மிக்க செல்வத்தை அடைந்தவிடத்து, ஒரு நடை வற்று ஆம் - (முந்தியநடைக்கு வேறுபட்ட) ஒருநடையை வல்லவனாவன்; (எ - று.)

எவ்வளவு செல்வம் வந்தாலும் மேலோரது குணம் மாறாது; கீழோர் செல்வம்வந்தமாத்திரத்தே குணம்மாறிவிடுவர் என்பதாம்.

நடை - செல்வமாகுதலை "நடை வழி யொழுக்கம் செல்வம்" என்ற நிகண்டினாலும் அறிக. பலவிடங்களிலும் நடப்பதுபற்றி, நடை யென்பது - செல்வத்திற்குக் காரணப்பெயர்போலும்; இனி, பெருநடை என்பதற்கு - பெரிய சிறப்பு என்று உரைப்பாருமுளர். பெற்றக்கடைத்து - எதிர்கால வினையெச்சம்; உம் - இசைநிறை. வற்று - வல் என்னும் பண்பினடியாப் பிறந்த குறிப்புமுற்று. ஆம் - அசை. கீழ்மகனது இழிவு தோன்ற, 'கீழ் வற்று' என அஃறிணையாற் கூறினார். (௩)

௩௪௪. தினையனைத்தே யாயினுஞ் செய்தநன் றுண்டாற்
பனையனைத்தா வுள்ளுவர் சான்றோர்—பனையனைத்
தென்றுஞ் செயினு மிலங்கருவி நன்னாட
நன்றில நன்றறியார் மாட்டு.

(இ - ள்.) இலங்கு - விளங்குகிற, அருவி - மலையருவிகளையுடைய, நல்- சிறந்த, நாட - (பாண்டிய) நாட்டையுடைய அரசனே!—தினை அனைத்து ஏ ஆயினும் - தினையென்னும் சிறியதானியத்தின் அளவேயானாலும், செய்த நன்று - (ஒருவன்) செய்த உபகாரத்தை, உண்டால் - (தாம்) அனுபவித்தால், (அதனை), சான்றோர் - பெரியோர், பனை அனைத்து ஆ - பனைமரத்தவ்வளவு பெரியதாக, உள்ளுவர் - நினைப்பார்கள்; என்றும் - எப்பொழுதும், பனை அனைத்து - பனைமரத்தவ்வளவுபெரிதான உபகாரத்தை, செயினும் - செய்தாலும், நன்றுஅறியார்மாட்டு - செய்ந்நன்றியறியாதவர்களிடத்தில், நன்று இல - (அவ்வுபகாரங்கள்) சிறப்பில்லாதனவாம்; (எ - று.)

தமக்குப்பிறர்செய்த சிறியஉபகாரத்தையும் பெரியதாகநினைப்பது, சான்றோரியல்பு; பெரியஉபகாரத்தையும் ஒருபொருளாக நினையாமலிருப்பது, கீழ்மக்கள் தன்மை என்பதாம். "தினைத்துணை நன்றி செயினும் பனைத் துணையாக், கொள்வர் பயன்றெரிவார்" என்ற திருக்குறளையும், அதன்உரையில் பரிமேலழகர் 'தினை பனை என்பன - சிறுமை பெருமைகட்குக் காட்டுவன சில அளவை' என்று கூறியதையும் அறிக. பனையென்பது - மரப்பெயராய்ப் பெருமைகுறிக்கும். (௪)

௬௪௫. பொற்கலத் தூட்டிப் புறந்தரினு நாய்பிற
ரெச்சிற் கிமையாது பார்த்திருக்கு—மச்சீர்
பெருமை யுடைத்தாக் கொளினுங்கீழ் செய்யுங்
கருமங்கள் வேறு படும்.

(இ - ள்.) பொன் கலத்து-பொன்னாற்செய்த பாத்திரத்தில் (வைத்துக் கொண்டு), ஊட்டி - (நல்லுணவை) உண்பித்து, புறந்தரினும் - (ஒருவன்) பாதுகாத்துவந்தாலும், நாய்—, பிறர் எச்சிற்கு - அயலார்(உண்டெறிந்த)எச்சிற்சோற்றுக்கு,இமையாது - கண்கொட்டாமல்,பார்த்திருக்கும் - (கிடைக்கிற சமயத்தை) எதிர்பார்த்திருக்கும்; அ சீர் - அத்தன்மையாக,—பெருமை உடைத்து ஆ கொளினும் - சிறப்புள்ளவனாக (ப் பிறர் தன்னைமதித்து) ஏற்றுக்கொண்டாலும், கீழ் செய்யும் கருமங்கள் - கீழ்மகன் செய்யுங் காரியங்கள், வேறுபடும் - (பெருமைக்கு)வேறுபட்டனவாக இருக்கும்; (எ - று.)

நல்லுணவுகளைக் கொடுத்து மேன்மைப்படுத்தினாலும் இழிவான உணவை எதிர்பார்த்திருப்பது நாய்க்கு இயல்பாதல்போல,பெருமைகொடுத்துக் கௌரவித்தாலும் இழிவான காரியங்களைச்செய்வது, கீழ்மக்களியல்பு என்பதாம். இப்பாட்டை இவ்வதிகாரத்தின் முதற்பாட்டோடு ஒப்பிடுக. இப்பாட்டில், 'சீர்' என்பது - உவமவுருபு; இவ்வுவமவுருபு வந்துவிட்டதனால், இது எடுத்துக்காட்டுவமையணியாகாது உவமையணியேயாம்.

கீழ்மகனது இழிவு தோன்ற, 'உடைத்து'என அஃறிணையாற்கூறினர். உம்மைகள் - உயர்வுசிறப்பு. ஊட்டி—உண் என்பதன் பிறவினையான ஊட்டு - பகுதி; உண்என்னும் பகுதி முதல் நீண்டு, 'டு' என்னும் விகுதி கூடியது. புறந்தரின், புறந்தா - பகுதி; இது ஒருசொல். (உண்டதுபோக) எஞ்சியது, எச்சில். (௫)

௬௪௬. சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோ
ரெக்காலுஞ் சொல்லார் மிகுதிச்சொ—லெக்காலு
முந்திரிமேற் காணி மிகுவதேற் கீழ்தன்னை
யிந்திரனா வெண்ணி விடும்.

(இ - ள்.) சக்கரம் செல்வம் - பூமண்டலம்முழுவதையும் ஆளுவதாகிய பெருஞ்சிறப்பை, பெறினும் - (தாம்) பெற்றாலும், விழுமியோர்-மேலோர், எ காலும்-எப்பொழுதும், மிகுதி சொல்-வரம்புகடந்த வார்த்தையை,சொல்லார் - சொல்லமாட்டார்கள்; எ காலும் - எப்பொழுதாயினும், முந்திரிமேல் காணி மிகுவது ஏல் - முந்திரியென்னுஞ் சிறிய அளவின்மேல் காணியென்னுஞ் சிறியஅளவுசெல்வம் மிகுவதானால், கீழ் - கீழ்மகன், தன்னை—, இந்திரன் ஆ எண்ணிவிடும் - தேவேந்திரனாக நினைத்துவிடுவான் ; (எ - று.)

மேலோர் பெருஞ்செல்வம் வந்தாலும் வரம்புகடந்து நடவார்;கீழோர் சிறிதுபொருள் மிகப்பெற்றாலும் தம்மை மிகச்சிறந்தவராகமதித்துப் பெருமைபாராட்டுவர் என்பதாம்.

மேலோரிலும் கீழோர்க்கு உள்ள வேறுபாட்டைக் கூறிய இதில், உபமானஉபமேயத்தன்மையுந்தோன்றுவதால், இச்செய்யுள் வேற்றுமையணி

யாம்; (சிறுபான்மை ப்ரஸ்துதத்தையும் [ப்ரஸ்துதம் - சொல்லவேண்டிய விஷயம்] உபமானமாகக்கூறுதலும் உண்டு :) இங்ஙனமே மேல்வருதற்கும் இவ்வணி கொள்க.

சக்ரம் - மண்டலம்: இங்கே, பூமண்டலத்துக்குக் கொள்ளப்பட்டது; இனி, ஆஜ்ஞாசக்கரத்தை உலகமுழுவதும் செலுத்தும் சக்ரவர்த்தித்தன்மை என உரைப்பினும் அமையும். சக்கரன் செல்வம் எனப் பிரித்து-இந்திரனது செல்வமென்றும், சக்ராயுதபாணியான திருமாலினது செல்வ மென்றும் பொருள்கொள்ளுதலும் ஒன்று.

உம்மைகள் மூன்றனுள், முந்தினது - உயர்வுசிறப்பு; பிந்தினது இழிவுசிறப்பு; இடையிலுள்ளது - முற்றுப்பொருளது. முந்திரியென்பது-மிகச்சிறிய அளவைக்கும், காணியென்பது - அதனின்மிக்க ஓர்சிற்றளவைக்கும் காட்டப்பட்டன. காணி - அறுபத்துநான்கில் ஒன்று. முந்திரி அதன்நாலில் ஒன்று. 'காணிமேல் முந்திரி மிகுவதேல்' எனச் சொற்களை மாற்றிப் பொருள்கொள்ளினும் அமையும். சக்ரம், இந்த்ரன்-வடசொற்கள்.

௯௭௭. மைதீர் பசும்பொன்மேன் மாண்ட மணியழுத்திச்
செய்த தெனினுஞ் செருப்புத்தன் காற்கேயா
மெய்திய செல்வத்த ராயினுங் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்.

(இ - ள்.) மை தீர்-குற்றமற்ற, பசும் பொன்மேல்-பசுநிறமான சிறந்த பொன்னின்மேல், மாண்ட மணி அழுத்தி-மாட்சிமைப்பட்ட இரத்தினங்களைப்பதித்து, செய்தது எனினும்-செய்யப்பட்டதாயினும், செருப்பு—, தன் காற்கே ஆம்-ஒருவனது காலிற்கொள்ளுதற்கே உரியதாம்;(அதுபோல),— எய்திய செல்வத்தர் ஆயினும் - பொருந்திய செல்வமுடையவர்களானாலும், கீழ்களை-கீழ்மக்களை, செய் தொழிலால் - (அவர்கள்)செய்யும் இழிதொழில்களால், காணப்படும் - (இவர்கள் கீழ்மக்களென்று) அறியக்கூடும்; (எ - று.)

மாசற்ற பசும்பொன்மேல் விலையுயர்ந்த இரத்தினமிழைத்த செருப்பேயானாலும் காலிற்கொள்ளத்தக்கதே யாவதுபோல, கீழ்மக்கள் எவ்வளவு செல்வம் பெற்றாலும் கீழ்ப்படியில் வைக்கத்தக்கவரேயன்றி மேற்படியில் வைக்கத்தக்கவரல்லர் என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி.

எய்திய செல்வத்தர் - செல்வமெய்தியவர் என விகுதிபிரித்துக்கூட்டினும் அமையும். காண என்பதைத் தொழிற்பெயராகக் கொண்டு, படும் என்ற வினைமுற்றோடு முடித்து, காணுதல்படு மென்க. இனி, காணப்படும் என்பதை ஒருசொல்லாகக் கொண்டு, தொழிற்பெயராய்த் தேற்றப்பொருள்பட்டு ஐம்பால்மூவிடத்துக்கும் பொதுவான தென்பாருமுளர். காற்கே, ஏ - பிரிநிலையோடு, இழிவுசிறப்பு. (௭)

௯௭௮. கடுக்கெனச் சொல்வற்றாங் கண்ணோட்ட மின்றா
யிடுக்கண் பிறர்மாட் டுவக்கு—மடுத்தடுத்து
வேக முடைத்தாம் விறன்மலை நன்றுடை
வேகுமா மெள்ளுமாங் கீழ்.

(இ - ள்.) விறல் - பெருமையுள்ள, மலை - மலைகளையுடைய, நல் நாட - சிறந்த (பாண்டிய) நாட்டையுடைய அரசனே!—கீழ் - கீழ்மகனது தன்மை, கடுக்கென சொல் வற்று ஆம் - கடுமையாகப் பேசவல்லதாம்; கண்ணோட்டம் இன்று ஆம் - தாக்ஷிணிய மில்லாததாம்; பிறர்மாட்டு இடுக்கண் உவக்கும் - அயலாரிடத்து உண்டான துன்பத்திற்கு மகிழும்; அடுத்து அடுத்து வேகம் உடைத்து ஆம் - அடிக்கடி கோபாவேசமுள்ளதாம்; ஏகும் ஆம் - (கண்டவிடத்தும்) செல்வதாம்; எள்ளும் ஆம் - (பிறரைத்) தூஷிக்குமாம்; (எ - று.)—இப்பாட்டில்உள்ள 'ஆம்' என்னுஞ் சொற்கள் ஐந்தும் - அசை.

கடுமையாகப் பேசுவதும்,யாரிடத்தும் தாக்ஷிணியம்பாராமையும், பிறர்க்கு நேரிடுகிற துன்பத்துக்குச் சந்தோஷிப்பதும், காரணமின்றிமேன்மேற் கோபமுடையதாதலும், பயனில்லாமற் பலவிடத்தும் திரிதலும், பிறரைத் தூஷிப்பதும் கீழ்மக்களியல்பு என்பதாம். தன்மைநவிற்சியணி.

கடுக்கென - கடுமைக்குறிப்பிடைச்சொல். சொல்என்பதை - முதனிலைத்தொழிற்பெயரென்றாவது, சொல்ல என்பதன் தொகுத்தலென்றாவது கொள்க. 'கண்ணோட்டமாவது - தன்னோடுபயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை; இஃது - அவர்மேற் கண்சென்றவழி நிகழ்வதாகலின், அப்பெயர்த்தாயிற்று' என்பது, திருக்குறள் பரிமேலழகருரை. தொல்காப்பியவுரையில் நச்சினார்க்கினியர் 'இடுக்கண் என்பது - மலர்ந்த நோக்கமின்றி மையல்நோக்கம்பட வரும் இரக்கம்' என்றதனால், இடுக்கண் என்பது - இடுங்குகண் என்பதன் விகாரமாய், கண்இடுங்குதற்குக் காரணமான துன்பத்திற்குக் காரணப்பெயரா மென அறிக. அடுத்து அடுத்து—அடுக்கு - பன்மைப்பொருளது. மலைக்கு விறல் - மழைபெய்யாமல் வறந்த காலத்திலும் தன்னைச்சேர்ந்த உயிர்கட்கு நீர்வளத்தைக் கொடுக்குங் கொடையும், அளவுசெய்யப்படாத பலவகைப்பொருளை யுடையதாதலும், நால்வகையரண்களுள் ஒன்றாக இயல்பில்அமைதலும் முதலியன.ஏகுமாம் எள்ளுமாம்-பிறரிடம் வலியச்சென்று அவரையிகழ்வா னெனினுமாம். எள்ளுமாம் ஏகுமாம் என மாற்றிக்கூட்டி, (எவரிடத்தும் நில்லாமல்) இகழ்ந்துசெல்வான் என்று உரைப்பாரு முளர். (அ)

௩௪௯. பழைய ரிவரென்று பண்ணாட்டபின் னிற்பி
னுழையினிய ராகுவர் சான்றோர்—விழையாதே
கள்ளுயிர்க்கு நெய்தற் கனைகடற் றண்சேர்ப்ப
வெள்ளுவர் கீழா யவர்.

(இ - ள்.) கள் உயிர்க்கும் - தேனை வெளிவிடுகின்ற, நெய்தல்-நெய்தற்பூக்களையுடைய,கனை கடல் தண் சேர்ப்ப-ஒலிக்கின்ற கடலினது குளிர்ந்த துறைமுகத்தையுடைய (பாண்டிய)ராசனே!—பின் நிற்பின் - (ஒருவர் தம்) பின்னே வந்துநின்றால்,—சான்றோர்-மேலோர்,—இவர் பல் நாள் பழையர் என்று - இவர்கள் பலநாள் பழகியவ ரென்று கருதி, உழை - அவர்களிடத்தில்,இனியர் ஆகுவர் - இனிமையான விருப்ப முடையவராவர்;கீழ் ஆயவர்-கீழ்மக்களோ, விழையாதே - (அப்படி தம்பின்வந்துநின்றவர்களை) விரும்பாமலே, எள்ளுவர் - அவமதிப்பர்; (எ - று.)

ஒருநாள் தம்மிடம் வந்தவரையும் மேலோர் பழையசிநேகிதராகக் கொள்வர்; கீழோர் அவ்வாறு கொள்ளார் என்பதாம். பழையர் இவர் என்று பல் நாள் பின் நிற்பின் - இவர் நமக்குப் பலநாளாகப் பழக்கமுடையவ ரென்று எண்ணிப் பின்சென்று நின்றால் என்றும் உரைக்கலாம்.

பழையர் - பழமையென்னும் பண்பினடியாப் பிறந்த பலர்பாற்பெயர்; பண்புப்பெயர் ஈறுபோய் இடைஅகரம் ஐயாயிற்று. நெய்தல் - சேர்ப்புக்கு அடைமொழி. (௯)

௯௫௦. கொய்புற் கொடுத்துக் குறைத்தென்றுந் தீற்றினும்
வையம்பூண் கல்லா சிறுகுண்டை—யையகே
ளெய்திய செல்வத்த ராயினுங் கீழ்களைச்
செய்தொழிலாற் காணப் படும்.

(இ - ள்.) ஐய - அரசனே! கேள் - கேட்பாய்: என்றும் - எந்நாளிலும், கொய் புல் குறைத்து கொடுத்து-அறுக்கத்தக்க புல்லை அறுத்து(த்தின்ன)க் கொடுத்து, தீற்றினும் - (கழுவுதல் முதலியவற்றாற்) சுத்தம்பண்ணினாலும், சிறு குண்டை - சிறிய எருதுகள், வையம் பூண்கல்லா - தேரைப் பூண்டு இழுக்கமாட்டாவாம்; (அதுபோல), எய்திய செல்வத்தர் ஆயினும் கீழ்களை செய் தொழிலால் காணப்படும்—; (எ - று.)

இப்பாட்டின் பின் இரண்டடி - இவ்வதிகாரத்தின் ஏழாம்பாட்டிலும் வந்துள்ளது; வெவ்வேறுஆசிரியர்க்கும் இவ்வாறு சிறுபான்மை பொருளோடு சொல்லும் ஒற்றுமைப்படுவது இயல்பு: இதனை, சமகாலத்தில் வேறு வேறு புலவராற் பாடப்பட்ட சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் சிலவிடத்துக் காணலாம். இவ்வடிகள்,பழமொழியாக வழங்கிவந்து சேர்த்துக்கொள்ளப்பட்டன வென்றாயினும், சமசியையாகக்கொண்டு பூர்த்திசெய்யப்பட்டன வென்றாயினும் கொள்ளவும் இடமுண்டு.

எவ்வளவு மேன்மைப்படுத்தினாலும் சிற்றெருதுகள் தேரையிழுக்கமாட்டாமை போல, கீழ்மக்களும் தக்ககாரியங்கட்கு உதவார் என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி.

கொய் புல் - வினைத்தொகை; பக்குவமான புல் என்றவாறு. தீற்றுதல் - சுத்தப்படுத்துதல். இனி, தீற்றினும் என்பதற்கு - தின்பித்தாலும் என்றும் பொருள்கொள்ளலாம்; பிறவினையில், உண் என்னும்பகுதி 'டு' என்னும்விகுதிபெற்று முதல்நீண்டு ஊட்டுஎன நிற்றல்போல,தின் என்னும்பகுதி 'று' என்னும் விகுதிபெற்று, முதல்நீண்டு தீற்று என நிற்கு மென்க; "தீற்றாதோ நாய் நட்டால் நல்ல முயல்" எனப் பழமொழியிலுங் காணலாம். வையம் - தேராதலை "வையம்பற்றிய மங்கைய ரெண்ணிலர்" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. குண்டையென்பது - பால்பகாஅஃறிணைப் பெயராதலால், பூண்கல்லா என்னும் எதிர்மறைப் பலவின்பால்முற்றைக் கொண்டது. வையம் - பெரும்பண்டியுமாம். (௧௦)

## ௩௯ - ஆம் அதிகாரம்—கயமை.

அஃதாவது - மேல் இயல்களுள் வெளிப்படையாகவுங் குறிப்பாகவுங் கூறப்பட்டுள்ள நற்குணங்கள் யாவுமிலராய மூடர்களது தன்மை; கயமை - மூடத்தனம். கீழ்மையென்னும் முன்னைய அதிகாரத்திற் கீழோரது தன்மை முற்றுங் கூறப்படாமையால், அதனையே கயமையென்று வேறு பெயரிட்டு அவ்வதிகாரத்தைச் சார வைத்தார்.

௩௫௧. ஆர்த்த வறிவின ராண்டிளைய ராயினுங்
காத்தோம்பித் தம்மை யடக்குப—மூத்தொறூஉந்
தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற்
போத்தறார் புல்லறிவி னார்.

(இ - ள்.) ஆர்த்த அறிவினர் - (கல்விகேள்விகளினால்)நிறைந்த அறிவையுடையவர்,—ஆண்டு இளையர் ஆயினும் - வயதிற் சிறியராயிருந்தாலும், காத்து ஓம்பி - (தமது ஐம்பொறிகளையும் தீயபுலன்களின்வழியே செல்லவொட்டாது) தடுத்துப் பாதுகாத்து, தம்மை—, அடக்குப - அடங்கியொழுகச் செய்வர்; புல் அறிவினார் - அற்பமாகிய அறிவையுடையவர்,—மூத்தொறும்- வயது முதிருந்தோறும், தீ தொழிலே கன்றி - தீயசெயல்களிலேயே உழன்று வருந்தி, திரிதந்து - (ஒருபயனுமின்றித்) திரிந்து, எருவை போல் - கொறுக்கையைப்போல, போத்து அறார் - உள்துளையாயிருப்பது நீங்கமாட்டார்; (எ - று.)

அறிவுள்ளவர், வயதிற்சிறியராயினும் [இளமைமுதற்கொண்டே]இந்திரியங்கட்கு வசப்பட்டுத் தீயகாரியங்களைச் செய்யாமல் செய்தற்குஉரிய நல்ல காரியங்களையே செய்து அடக்கமுடையராயிருப்பார்; அறிவில்லாதவரோ, அப்படியன்றித் தமது ஆயுள்முழுதும் தீத்தொழில்களையேசெய்து வீண்காலங்கழிப்பர் என்பது கருத்து. கொறுக்கை எவ்வளவுகாலஞ்சென்றாலும் மேல்தோற்றத்தில் தடித்திருந்தும் உள்துளைநீங்காதவாறுபோல, அறிவில்லாதாரும் எவ்வளவுவயதுசென்றாலும் மேல்தோற்றத்தில் தடித்தஉருவத்தினராய் நல்லோரைப்போலத்தோன்றினும் உள்ளே குற்றமுடையரா யிருக்குந்தன்மை நீங்கா ரென்க. அவ்வாறு இருப்பது தகுதியன்று என்பதாம். உவமையணி. இனி, எருவை என்பதற்கு - கழுகென்று பொருள்கொண்டு, அறிவில்லாதவர் கழுகென்னும் பறவைபோலக் குற்றம்நீங்கா ரென்றும் உரைக்கலாம்: கழுகு குரூரகுணமுடைய பறவையென்பது பிரசித்தம்.

தம்மைக்காத்துஓம்புதல் - மனம்போனபோக்கெல்லாம் போகாமல் நல்லறங்களையே செய்து தம்மை நரகத்துக்குஆளாக்காமல் பாதுகாத்துக் கொள்ளுதல். போத்து - பொத்து என்பது எதுகைநோக்கி நீட்டல்விகாரம் பெற்றது; பொத்து - குற்றம். இனி, 'துளையென்ற பொருள்படும் பொந்து என்னும்மொழி வலித்தலும் நீட்டலும்பெற்றுப் போத்து என்றாயிற்று' என்பாரும் உளர். மூத்தொறூஉம்—மூ - முதனிலைத்தொழிற்பெயர்; அளபெடை, குறில்நெடிலான இன்னிசையளபெடை. தீத்தொழிலேகன்றுதல்- தீயதொழில்களையே செய்து தழும்புபடுதல். திரிதந்து, தா - துணைவினை.

இச்செய்யுளின் முன்னிரண்டடி — கரிகாற்சோழன் மிக்கஇளமைப் பருவத்திலேயே முடிசூட்டப்பட்டு அரசாளத்தொடங்கிய காலத்தில் முதிய வர்கள் அவனைக்குறித்து 'இவன் அறிவுநிரம்பாத இளமையுடையான்' என இகழ்ந்துகூற, அதனையுணர்ந்த அவ்வரசன் நரைத்த மயிரைத் தன்தலை யில் முடித்துக்கொண்டு முதுமைப்பருவத்துக்கு உரிய வேஷம் பூண்டு சபைக்கு வந்து அம்முதியவர் மகிழும்படி ஒழுங்காக வியவகாரவிசாரணை செய்து நியாயமான தீர்ப்புச் சொல்லின னென்பதைக் குறிக்கும் "உரை முடிவுகாணு னிளமையோ னென்ற, நரைமுதுமக்க ளுவப்ப - நரைமுடித் துச், சொல்லான் முறைசெய்தான் சோழன்" என்னும் பழமொழிச்செய் யுளை நினைப்பூட்டுகின்றது.

'திரியுந் தெரிவைபோல்' என்பதும் பாடம். (க)

ருருஉ. செழும்பெரும் பொய்கையுள் வாழினு மென்றும்
வழும்பறுக்க கில்லாவாந் தேரை—வழும்பில்சீர்
நூல்கற்றக் கண்ணு நுணுக்கமொன் றில்லாதார்
தேர்கிற்கும் பெற்றி யரிது.

(இ - ள்.) தேரை - தவளைகள்,—என்றும் - எந்நாளும், செழும் பெரும் பொய்கையுள் வாழினும் - செழிப்பான [நீர்நிறைந்த] பெரிய குளத்தில் வா ழ்ந்தாலும், வழும்பு அறுக்ககில்லா ஆம் - (தமது உடம்பின்மேலுள்ள) வழு வழுப்பான அழுக்கை நீக்கிக்கொள்ளமாட்டாவாம்; (அதுபோல),—நுணுக் கம் ஒன்று இல்லாதார் - நுட்பபுத்தி சிறிதுமில்லாதவர், வழும்பு இல் சீர் - குற்றமில்லாத சிறப்பையுடைய, நூல் - சாஸ்திரங்களை, கற்றக்கண்ணும் - கற்றுப்பழகினாலும், தேர்கிற்கும் பெற்றி - (அந்நூல்களின் உண்மைப்பொ ருளை) ஆராய்ந்தறியுந் தன்மை, அரிது - (அவர்க்கு) இல்லையாகும்; (எ - று.)

தவளைகள் பெரியநீர்நிலையிற் பலகாலம் வாழ்ந்தாலும் தமது உடம் பின்மேலுள்ள மாசைக் கழுவிக்கொள்ளமாட்டாமைபோல, மூடர்கள் பெ ரியநூல்களிற் பலகாலம்பயின்றாலும் தமதுஅறியாமைக்குற்றம் ஒழிந்து அவ ற்றின்உண்மையானகருத்துக்களை நுட்பமாகஅறியுந்தன்மை யில்லாதவரா வர் என்பதாம். எடுத்துக்காட்டுவமையணி. உடம்பழுக்கை நீக்கிச் சுத் தப்படுத்தும் ஆற்றலுடைய நீரி லிருந்தும் அழுக்குநீங்காத தவளைபோல, பலரையும் நல்வழிப்படுத்துந் திறமுடைய நூல்களிற் பழகியும் பக்குவப் படாது கீழ்மக்களுடையமனமென்பது கருத்து.

"இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினு மென்று, மடங்காதா ரென்று மடங்கார்-தடங்கண்ணா, யுப்பொடு நெய் பால் தயிர் காயம் பெய்தடினுங், கைப்பறா பேய்ச்சுரையின் காய்" என்றது போன்றது, இச்செய்யுள்.

நூல் - உவமையாகுபெயர். நுணுக்கம்என்னும் பண்புப்பெயர், இங்கு நுட்பமானஅறிவுக்கு ஆகுபெயர். (உ)

ருருங. கணமலை நன்னுட கண்ணின் றொருவர்
குணனேயுங் கூறற் கரிதாற்—குணனழுங்கக்
குற்ற முழைநின்று கூறுஞ் சிறியவர்கட்
கெற்றா லியன்றதோ நா.

(இ - ள்.) கணம் மலை நல் நாட - கூட்டமாகிய மலைகளையுடைய நல்ல நாட்டின் அரசனே!—கண் இன்று - எதிரி லில்லாமல்[புறத்தில்] இருந்து, ஒருவர் குணன் ஏயும் - பிறரொருவரது நற்குணத்தையும், கூறற்கு அரிது - எடுத்துச்சொல்வதற்கு(நாவெழுதல்)அருமையாயிருக்கும், (அவ்வாறிருக்க), உழை நின்று - (ஒருவரது)எதிரில் நின்றுகொண்டு, குணன் அழுங்க - (அவரது)நற்குணங்கள் அழியும்படி, குற்றம் கூறும் - குற்றங்களையே எடுத்து(ப்பலர் அறிய)க்கூறுகின்ற,சிறியவர்கட்கு - அற்பபுத்தியையுடைய கீழோர்க்கு, நா - நாக்கு, எற்றால் இயன்றதோ - (தசையினாலல்லாமல்)எப்பொருளாற் செய்யப்பட்டதோ?(அறியோம்); (எ - று.)—ஆல் - ஈற்றசை.

ஒருவரதுநற்குணத்தைப் புறத்திற் கூறுவது சாதாரணமாயினும் அவர் யாதுநினைப்பரோ வென்று அஞ்சவேண்டியிருக்க, அவ்வாறன்றி ஒருவரது எதிரில்நின்றுகொண்டு அவரதுநற்குணங்களையொழித்துத் தீக்குணங்களையே கயவர் எடுத்துக்கூறுகின்றார்களே;அவரதுநாக்குத் தசையினாற்செய்யப் படாமல் ஏதோ ஒரு கொடிய பொருளாற் செய்யப்பட்டிருக்கவேண்டுமென்று கவி வியந்துகூறியவாறு.பெரியோர்க்குப்போல அவர்க்கும் நாக்குத் தசையாற்செய்யப்பட்டதாயின் அவரும் பிறரதுநற்குணங்களை எடுத்துக் கூறுவரேயன்றிக் குற்றங்களைக் கூறா ரென்பது, குறிப்பெச்சம்.

பின்னே'உழைநின்று' என வந்ததனால், முன்னே'கண்ணின்று' என்பதற்கு - எதிரிலன்றிப் புறத்தில் எனக் கூறவேண்டியதாயிற்று. இன்று - இன்றி யென்னும் எதிர்மறைக்குறிப்புவினையெச்சத்தின் திரிபு. கண் நின்று என்று பிரித்து, எதிரில் நின்றுகொண்டு எனக் கூறுவதிற் பொருட்சிறப்பின்மை யறிக. (ந)

௩௫௪. கோடேந் தகலல்குற் பெண்டிர்தம் பெண்ணீர்மை
சேடியர் போலச் செயறேற்றார்—கூடிப்
புதுப்பெருக்கம் போலத்தம் பெண்ணீர்மை காட்டி
மதித்திறப்பர் மற்றை யவர்.

(இ - ள்.) கோடு ஏந்து அகல் அல்குல் பெண்டிர் - பக்கங்கள்உயர்ந்து அகன்ற அல்குலையுடைய குலமகளிர்,தம் பெண் நீர்மை - தமது பெண்தன்மையை, சேடியர்போல - (தமக்குப்பணிவிடைசெய்யும்) பாங்கியர்போல, இருந்து, செயல் - அலங்காரஞ்செய்துகொள்ளுதலை, தேற்றார் - அறியார்; மற்றையவர் - வேசையர்களோவெனின், புது பெருக்கம் போல - புதியநீர் வெள்ளம்போல,தம் பெண்நீர்மை-தமதுபெண்தன்மையை,மதித்து காட்டி- (அலங்காரஞ்செய்துகொள்வதனால் தம்மைக்கண்டவர்) நன்குமதிக்கும்படி வெளிக்குக்காட்டி, கூடி - (ஆடவரோடு)கலந்து, இறப்பர் - நடப்பார்கள்.

குலமகளிர் அலங்காரங்களினால் தம்மைமதிக்கச்செய்து பிறரிடத்துப் பொருள்பறிப்பதில்லை; வேசையரோ அவ்வாறுசெய்யார்; அதுபோல, யோக்கியர் தமதுநற்குணங்களை வெளிக்குக்காட்டி வியக்கச்செய்யாமல் அடங்கியிருப்பார்கள் ; அயோக்கியரோ மிக்கமேன்மையுள்ளவர்போலத் தம்மைத்தாமே வெளிக்குநடித்துக்காட்டி வஞ்சித்துப் பிறரிடம் பொருள் பறித்துக்கொள்வார்கள் என்பதாம்.

உபமானத்தைக்கூறி உபமேயத்தைப்பெறவைத்ததனால், பிறிதுமொழிதலணி. இவ்வுவமையால், கீழ்மக்கள் டம்பத்தன்மையில் கருத்துள்ளவரென்றும், மேன்மக்கள் வெளியாடம்பரத்திற் கருத்துள்ளவரல்ல ரென்றும் வெளியாம்.

புதுநீர்ப்பெருக்கு, தான்வரும் ஆற்றினது பழவெள்ளத்தையும் அடித்துக்கொண்டுசெல்வதுபோல, பரத்தையர் தாம்சேர்ந்த செல்வரது செல்வம்முழுவதையும் பறித்துக்கொண்டு பிரிந்துசெல்வரென்பது பட நின்றது; ஆதலின்,புதுவெள்ளம் அவர்க்குத் தொழில்பற்றிய உவமை.பின்னே'மற்றையவர்' என வந்ததனால், முன்னே'பெண்டிர்'என்பது - குலமகளிரைக் குறித்தது. மதித்து - மதிக்கச்செய்து; தன்வினை பிறவினைப்பொருளது. (௪)

௯௫௫. தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற் செல்லா
வுளிநீரர் மாதோ கயவ—ரளிநீரார்க்
கென்னுனுஞ் செய்யா ரெனைத்தானுஞ் செய்பவே
யின்னுங்கு செய்வார்ப் பெறின்.

(இ - ள்.) கயவர் - கீழ்மக்கள்,—தளிர்மேலே நிற்பினும் - (மிகவும்மெதுவான) தளிரின்மேல் நின்றாலும், தட்டாமல் - (ஒருவர்)தட்டித்தள்ளாமல், செல்லா - இறங்கிப்போகமாட்டாத, உளி நீரர்-உளியின்தன்மையுடையவராவர்;(இன்னும் அவர்கள்), அளி நீரார்க்கு-(பிறர்துன்பத்தைக்கண்டு இரங்கும்)அருளையே இயற்கைக்குணமாகவுடைய பெரியோர்க்கு, என் ஆனும் செய்யார் -சிறியஉபகாரத்தையுஞ் செய்யமாட்டார்கள்; இன்னுங்கு செய்வார் பெறின் - (தமக்குத்)துன்பஞ்செய்பவரைப் பெற்றால்,எனைத்து ஆனும் செய்பவே - (அவர்கட்கு)எவ்வளவுபேருதவியையுஞ் செய்வார்கள்;(எ - று.)—மாது,ஓ - ஈற்றசை.

உளியானது மெதுவானபொருளிலும் தானேசெல்லாமல் ஒருவர்தட்டித்தள்ளியபின்னரே செல்வதுபோல, கீழ்மக்கள் எவ்வளவுசிறியதொழிலிலும் பிறர்ஏவாமல் பிரவேசிக்கமாட்டார்; நற்குணமுடையோர்க்கு ஒருதவியும் செய்யார்; அடித்து வருத்துங் கொடியோர்க்கு எல்லாவற்றையுங் கொடுப்பார்கள் என்பது கருத்து. முன்னிரண்டடி - உவமையணி.

"விட்டுக் கருமஞ் செயவைத்த பின்னரும், முட்டா தவரை வியங்கொளல் வேண்டுமால், தொட்டக்கான் மாழ்குந் தளிர்மேலே நிற்பினுந், தட்டாமற் செல்லா துளி" என்ற பழமொழிச்செய்யுள் இங்கு நோக்கத்தக்கது. "பெற்றார் பிறந்தார் பெருநாட்டார் பேருலகி, லுற்றா ருகந்தா ரென வேண்டார்—மற்றோ,ரிரணங்கொடுத்தா லிடுவ ரிடாரே,சரணங்கொடுத்தாலுந் தாம்"என்னும் நீதிவெண்பாவோடு இச்செய்யுளின் பின்னிரண்டடிகளை ஒப்பிடுக. "வாய்வைத்துக் கொல்லச் சுரப்பதாங் கீழ்"என்றார் கீழ்.

அளிநீரர் - அருளையே இயற்கைக்குணமாகவுடையவர்; அல்லது, பிறர் அளிக்கும்படியான [இரங்கும்படியான] இயல்புடையவர். 'இன்னுங்கு செய்வார்க்குச்செய்ப' என்றது, இலக்கணையால், அவர்பறித்துக்கொள்ள இவர் இழப்பரென்பதைக் குறிக்கும். செய்வார்ப்பெறின்—"இயல்பின் விகாரம்." (௫)

௬௫௬. மலைநல முள்ளுங் குறவன் பயந்த
விளைநில முள்ளு முழவன் சிறந்தொருவர்
செய்தநன் றுள்ளுவர் சான்றோர் கயந்தன்னை
வைததை யுள்ளி விடும்.

(இ - ள்.) குறவன்—, மலை நலம் - (தனக்குஉறைவிடமாகிய) மலையினது வளத்தை, உள்ளும் - நினைத்துக்கொண்டிருப்பான்; உழவன் - உழுது பயிர்செய்பவன், பயந்த - (தனக்குப்) பயன்கொடுக்குந்தன்மையுள்ள, விளை நிலம் - விளைகின்ற நிலத்தை, உள்ளும் - நினைத்துக்கொண்டிருப்பான்; சான்றோர் -(கல்விகேள்விகளாற்) பெரியராயினோர், ஒருவர் செய்த நன்று- (தமக்குப்)பிறரொருவர்செய்த உபகாரத்தை, சிறந்து உள்ளுவர் - சிறப்பாக நினைத்துக்கொண்டிருப்பார்; கயம்-கயவன் [கீழ்மகன்], தன்னை வைததை- (பிறனொருவன்) தன்னைத் திட்டியதையே, உள்ளிவிடும் - (மறவாமற்) கருதிக் கொண்டிருப்பான் ; (எ - று.)

குறவனுக்கு மலையிற் பழக்கமாதலால், அவன் அந்தமலையின்வளத்தையே கருதுவன் ; அவ்வாறே உழவன் தனக்குப்பயன்தரும் விளைநிலத்தின் வளத்தையே கருதுவன்;சான்றோர் தினைத்துணைநன்றியையும் பனைத்துணையாகப் பாவித்துப் பிறரைப்பெருமைப்படுத்துதலையே மேற்கொண்டவராதலால், தமக்குப்பிறர்செய்தநன்றியையே கருதியிருப்பர்; இம்மூவர்க்கும் இந்தக் குணங்கள் பழக்கமாயிருப்பதுபோல, கீழோன் "நன்றல்லதன்றே மறப்பது நன்று"என்னும் நீதிப்படியன்றி "ஒர்த்ததனை, யுள்ளத்தானுள்ளி யுரைத்துரா யூர்கேட்பத், துள்ளித் தூண்முட்டுமாங் கீழ்" என்றவாறு தன்னைப் பிறர் திட்டியதையே மறவாமற் கருதிக்கொண்டிருப்பது அவனுக்கு இயற்கையென்பதாம்.

இங்குச் சான்றோரையும் உடன்கூறியது, கீழ்மகனது இழிவு தோன்றற்கு; அவனை 'கயம்' என்று அஃறிணையாக்கூறியதும் இதுபற்றியே. குறம்-சாதிப்பெயர்; அதனையுடையவன் குறவன்: குறிஞ்சிநிலத்தில் வாழ்பவன். உழவன் - உழுதல்தொழிலுடையவன் ; மருதநிலத்தில் வாழ்பவன். சிறந்து உள்ளுவர் என இயையும். சிறந்து - சிறக்க ; எச்சத்திரிபு. குறவன் உள்ளும் - செய்யு மென்முற்று ஆண்பாலுக்குச் சென்றது. (௬)

௬௫௭. ஒருநன்றி செய்தவர்க் கொன்றி யெழுந்த
பிழைநூறுஞ் சான்றோர் பொறுப்பர்—கயவர்க்
கெழுநூறு நன்றிசெய் தொன்றுதீ தாயி
னெழுநூறுந் தீதாய் விடும்.

(இ - ள்.) சான்றோர் - பெரியோர்,—ஒரு நன்றி செய்தவர்க்கு - (தமக்கு) ஒருதவியைச் செய்தவர்திறத்தில், ஒன்றி எழுந்த - இடைவிடாது தொடர்ச்சியாகத் தோன்றிய, பிழை நூறும் - நூறுகுற்றங்களையாயினும், பொறுப்பர் -(தமக்கு முன்புஅவர்செய்த நன்றியைக் கருதிப்) பொறுத்துக் கொள்வர் : கயவர்க்கு - கீழானவர்க்கோவெனின்,—எழுநூறு நன்றி செய்து -(ஒருவர் முன்பு) எழுநூறுஉபகாரங்களைச் செய்து, ஒன்று தீது ஆயின்-

(பின்பு அவர்செய்வது) ஒருஅபகாரமாகுமானால், எழுநூறும் - (முன்செய்த) அந்தஎழுநூறுநன்றிகளும், தீதுஆய்விடும்-தீயனவாகவேதோன்றும்;(எ - று.)

பெரியோர் தமக்கு முன்னே ஒருநன்மைசெய்தவர் பின்னே பல தீமைகளைச் செய்தாலும் முன்செய்தஅந்தஒருநன்மையையே கருதிப் பல தீமைகளையும் பொறுப்பர்; அற்பரோவெனின் அவ்வாறன்றி ஒருதீமையைக் கருதிப் பலநன்மைகளையும் மறப்ப ரென்பது கருத்து. இவ்வாறிருப்பது அவரவரியற்கை யென்பதாம். 'எழுநூறும் தீதுஆய்விடும்' என்றது, அவ் வெழுநூறு நன்றிகளும் கீழ்மக்களால் மறக்கப்படு மென்பது பற்றியாம். தினையளவு உதவி பனையளவாகக் கொள்ளப்படுதலினால், அவ்வொருநன் மையே அத்தீமைகளையெல்லாங் கெடுக்கு மென்க.

"ஒன்றுதவி செய்யினு மவ்வுதவி மறவாமற், பின்றையவர் செய்பிழை பொறுத்திடுவர் பெரியோர், நன்றி பல வாக வொருநவை புரிவ ரேனுங், கன்றிடுவதன்றி முதுகயவர் நினையாரே" என்ற வில்லிபுத்தூரார் பாரத மும் இக்கருத்துடையதே. "கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த, வொன்றுநன் றுள்ளக் கெடும்" என்னுந் திருக்குறளை இங்கே முன்னிரண் டடிகளோடு ஒப்பிடுக.

'நூறு,' 'எழுநூறு' என்பன - மிகப்பல வென்பதற்குக் காட்டியவாறு. செய்தவர்க்கு - நான்கனுருபு கோடற்பொருளதாகாமல் இடப்பொருள தாய் நிற்றலால், உருபுமயக்கம். எழுநூறும் தீது - பன்மையொருமை மயக்கம்.　　(எ)

௩௫௮. ஏட்டைப் பருவத்து மிற்பிறந்தார் செய்வன
மோட்டிடத்துஞ் செய்யார் முழுமக்கள்—கோட்டை
வயிரஞ் செறிப்பினும் வாட்கண்ணாய் பன்றி
செயிர்வேழ மாகுத லின்று.

(இ - ள்.) வாள் கண்ணாய் - வாள்போன்ற கண்களையுடையவளே!— இல் பிறந்தார் - உயர்குடியிற் பிறந்தவர்கள், ஏட்டை பருவத்தும் - பொரு ளின்மையால் தளர்ச்சியுண்டானகாலத்திலும், செய்வன - செய்யும் நற்கா ரியங்களை, முழுமக்கள் - மூடர்கள், மோட்டிடத்தும் - (பொருளுடைமை யால்) உயர்ந்தநிலையில் நின்றகாலத்திலும், செய்யார் - செய்யமாட்டார் கள்; (எதுபோலவெனின்),—கோட்டை - (தனது) தந்தங்களில், வயிரம் செறிப்பினும் - பூண் கட்டினாலும், பன்றி—, செயிர் வேழம் ஆகுதல்இன்று- கோபிக்குந்தன்மை யுள்ள யானையைப்போலப் போர்செய்யவல்லதாகுதல் இல்லை; (எ - று.)

பன்றியின்பற்களுக்கு யானைத்தந்தத்திற்குக் கட்டுவதுபோலப் பூண் கட்டினாலும் அது யானையாகாததுபோல, கீழ்மக்கள் மிக்கசெல்வம்பெற்று லும் மேன்மக்கள் வறுமைக்காலத்திற் செய்யுமளவும் நற்காரியங்கள் செய்ய மாட்டார்கள் என்பதாம். பன்றியுவமை, கீழ்மக்கள் தங்கட்கு எவ்வளவு பெருமைவந்தாலும் தங்கட்கு உரிய இழிகுணம் நீங்கா ரென்பதை வற்புறுத் தும். எடுத்துக்காட்டுவமையணி.

கீழ் கசஅ, கஅச - ஆங் கவிகளோடு இச்செய்யுளை ஒப்புநோக்குக.

ஏட்டை-வறுமை. மோடு -உயர்ச்சி. பிறந்தபின்பு கல்விகற்றல் முதலிய அருந்தொழில்களால் சிறிதும் தளராதிருத்தல்பற்றி, மூடரை 'முழுமக்கள்' என்றார்;உடம்பினாற் குறைவில்லாதவ ரென்றபடி. கோடு-பல். கோட்டை-உருபுமயக்கம். (அ)

௩௯௯. இன்றாது மிந்நிலையே யாது மினிச்சிறிது
நின்றாது மென்று நினைத்திருந்—தொன்றி
யுரையின் மகிழ்ந்துதம் முள்ளம்வே றாகி
மரையிலையின் மாய்ந்தார் பலர்.

(இ - ள்.) 'இன்று ஆதும் - இன்றைக்குச் செல்வமுடையவராவோம்; இ நிலையே ஆதும்-(அன்றி)இப்பொழுதே செல்வமுடையவ ராவோம்; இனி சிறிது நின்று ஆதும் - இனிமேல் சிலகாலங்கழித்துச் செல்வமுடையவரா வோம்,' என்று நினைத்து - என்று சிந்தனை செய்துகொண்டு, இருந்து - (அறஞ்செய்யாமலே) காலங்கழித்து, ஒன்றி உரையின் மகிழ்ந்து - இவ்வாறு மேன்மேற்சொல்லுதலினாற் சந்தோஷித்து, தம் உள்ளம் வேறு ஆகி - (தாம்நினைத்தபடியெல்லாம் நேராமையால் இறுதியில்) தமதுமனம் மாறுபட்டு, மரை இலையின் - தாமரையிலை போல, பலர் - அநேகர், மாய்ந்தார் - பயனின்றியே அழிந்தார்கள்; (எ - று.)

தாம்உள்ளகாலமெல்லாம் செல்வத்தையே எதிர்பார்த்து மனோராச்சியஞ்செய்துகொண்டு சிறிதுந்தருமஞ்செய்யாமற் காலங்கழித்துத் தாம்நினைத்தபடி ஒன்றும்கிடையாமையால் மனமழிந்து இறந்தவர் பலர் என்பது கருத்து. இதனால், "எண்பதுகோடி நினைந்தெண்ணுவன" என்றபடி வீண் கற்பனையும், டம்பமாகப்பேசுதலும் கீழோர்க்கு இயற்கையென்பது பெறப்பட்டது. உவமையணி.

முதலிற் செழிப்பாயிருந்து பிறகு நாளடைவில் இருந்தவிடத்திலேயே அழிதலில் கயவர்க்குத் தாமரையிலை உவமை. மரை - தாமரை யென்பதன் முதற்குறை. இனி, மரை என்பதற்கு - மான் என்றே கொண்டு, மான்கள் மேய்ந்துதின்ற இலைபோல இருந்தவிடந்தெரியாமல் அழிந்தார் என்று நலிந்துபொருள்கூறுவாரு முளர்; தின்பதற்குமுன் செழிப்பாய்க்காணப்பட்டுப் பிறகு சொரூபமேதெரியாமல் அழிவதில் உவமை. உரையின், ஐந்தனுருபு - ஏதுப்பொருளது. ஆதும் - தன்மைப்பன்மைமுற்று.

'இன்னினியே'என்றும் பாடம். முதலடி - முற்றுமோனை. (க)

௩௫0. நீருட் பிறந்து நிறம்பசிய தாயினு
மீரங் கிடையகத் தில்லாகு—மோரு
நிறைப்பெருஞ் செல்வத்து நின்றக் கடைத்து
மறைப்பெருங்க லன்னா ருடைத்து.

(இ - ள்.) நீருள் பிறந்து - தண்ணீரில் உண்டாகி, நிறம் பசியது ஆயினும் - பசியநிறமுடையதாயிருந்தாலும், இடை - சணயாணது, அகத்து -

தனது உள்ளிடத்தில், ஈரம் இல் ஆகும் - ஈரமில்லாததாகும்; (அதுபோல),— நிறை பெரு செல்வத்து நின்றக்கடைத்தும்-நிறைந்துள்ள பெரிய செல்வத்தில் இருந்தாலும், அறை பெரு கல் அன்னார் - பாறையாகிய பெரியகல்லைப் போன்றவர்களை [மனமிளகுதலில்லாதவரை], உடைத்து - உடையதாயிருக்கின்றது, (இவ்வுலகம்); (எ - று.)

எப்பொழுதும் தண்ணீரிற் கிடந்தாலும் உள்ளீரமில்லாத சடைபோல எப்பொழுதும் செல்வத்திற்பழகினாலும் இளகுதலில்லாத கன்னெஞ்சமுடைய மூடர் இவ்வுலகத்திற் பலர் உண்டு என்பது கருத்து. எடுத்துக்காட்டுவமையணி.

மனத்தில் ஈரமாவது - இரப்பவர்க்கு ஈதல் முதலியவற்றிற்குக் காரணமான தயை தாக்ஷிணியம். ஒரும் - அசைநிலை; இனி, முன்னிலைப்பன்மை வினைமுற்றாய், நீர் அறியும் என்றுமாம். நிறைப்பெருஞ்செல்வம் - இனி வேண்டாமென்று திருப்திப்படுதற்குக் காரணமான மிக்கசெல்வம்; வினைத்தொகையில் வலி யியல்பாகவேண்டியது, எதுகைநயம் நோக்கி நிறைப்பெரு என வலிமிக்கதென்க; இனி, முதனிலைத்தொழிற்பெயராக நிறைதலையுடைய பெருஞ்செல்வ மெனினுமாம். அறை - கற்பாறை.

"வைகலு நீருட் கிடப்பினுங் கல்லிற்கு, மெல்லென்றல் சால வரிதாகு மஃதேபோல், வைகலு நல்லறங் கேட்பினுங் கீழ்கட்குக், கல்லினும் வல்லென்னு நெஞ்சு" என்ற அறநெறிச்சாரத்தோடு ஒத்த வாய்பாடுடையது, இச்செய்யுள். (௯௦)

---

ஏழாவது

# பன்னெறியியல்.

அஃதாவது - ஒன்றோடொன்று சம்பந்தமில்லாத பலவகைப்பட்ட நீதிகளைச் சொல்லும் இயல் என்று பொருள். பல + நெறி = பன்னெறி; பலஎன்பது பிறிதுவர அகரம் கெட்டது. இந்நூலை அதிகாரவடைவுசெய்த பதுமனார் பத்துச்செய்யுள்வீதம் கொண்ட அதிகாரங்களின் மேற்பட்ட செய்யுள்களை யெடுத்துத் தனியே ஓரதிகாரமாக்கிப் பொருட்பாலின் இறுதியில் வைத்தன ரென்க. இந்த ஓர்அதிகாரந்தானே ஓரியலானமை அறிக.

## ௬௭ - ஆம் அதிகாரம்.—பன்னெறி.

இதன் பொருள் முதலியன முற்கூறியவாற்றால் விளங்கும்.

௩௯௧. மழைதிளைக்கு மாடமாய் மாண்பமைந்த காப்பா
யிழைவிளக்கு நின்றிமைப்பி னென்னும்—விழைதக்க
மாண்ட மனையாளை யில்லாதா னில்லகங்
காண்டற் கரியதோர் காடு.

(இ - ள்.) மழை திளைக்கும் மாடம் ஆய் - மேகம்தவழும்படியான உபரிகையுடையதாய், மாண்பு அமைந்த காப்பு ஆய் - சிறப்புப்பொருந்திய கா

வலயுடையதாய், இழை விளக்கு நின்று இமைப்பின் - ஆபரணங்கள் விளக்குப்போல நிலைபெற்று விளங்கினாலும்,—விழைதக்க-விரும்பத்தக்க,மாண்ட மனையாளை-(நற்குணங்களால்) மாட்சிமைப்பட்ட மனைவியை, இல்லாதான்-பெற்றில்லாதவனது, இல்லகம்-வீடானது,—என் ஆம்-என்னபயனுடையதாம்? (அது), காண்டற்கு அரியது ஓர் காடு - கண்களாற் காண்பதற்குங் கூடாத [மிகக்கொடிய] ஒருகாடுபோலும்; (எ - று.)

எவ்வளவு செல்வச்சிறப்புடையதாயினும் நல்லமனையாளில்லாத வீடு சிறிதும்பயன்படாது என்பதாம்.

மழைதிளைக்குமாடம்—மேகத்திற்கும் மாடத்திற்கும் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தங்கற்பித்துக்கூறியது, தொடர்புயர்வுநவிற்சியணி; இதனை வடநூலார் ஸம்பந்தாதிசயோக்தி யென்பர். இது, மாடத்தின் உயர்வை விளக்கும்.

இங்கு'மாடம்' என்றது,மேல்நிலை[உபரிகை]யைக் குறிக்கும். மாண்பமைந்த காப்பு - கள்ளர்முதலியோர் உட்புகமுடியாதபடி உறுதியாகக் காவல் செய்யப்படுதல். இழைவிளக்குநின்றுஇமைத்தல் - செல்வச்சிறப்பைக் குறிக்கும். இழை - இரத்தினங்களிழைத்துச்செய்யப்படுவதென ஆபரணத்திற்குக் காரணக்குறி. இனி, இழைவிளக்கு நின்றுஇமைப்பின் என்பதற்கு - நூல்திரிகளினாலாகிய விளக்குக்கள் எப்பொழுதும் பிரகாசித்தாலும் என்று பொருள்கூறுவதிற் சிறப்பின்மை யறிக. விளக்குக்கள் பிரகாசிப்பது, வீட்டிற்கு மங்களக்குறி யென்பர். மனையாள் நற்குணநற்செய்கையில்லாதவளாயின் உறவினர் விருந்ினர் முதலியோர் வந்துசேர்தற்கு இடமில்லையாதலால், அவ்வீடு, மிகக்கொடிய காடுபோன்றதாகு மென்க.

"மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை, யெனைமாட்சித் தாயினு மில்", "இல்லதெ னில்லவண் மாண்பானா லுள்ளதெ, னில்லவண் மாணாக்கடை", "இல்லா ளகத்திருக்க வில்லாத தொன் றில்லை, யில்லாளு மில்லாளே யாமாயி - னில்லாள், வலிகிடந்த மாற்ற முரைக்குமே லவ்வில், புலிகிடந்த தூறாய் விடும்" என்னுஞ் செய்யுள்கள், இங்கு ஒப்பு நோக்கத் தக்கன. (க)

௩௬௨. வழுக்கெனைத்து மில்லாத வாள்வாய்க் கிடந்து
மிழுக்கினைத் தாம்பெறா ராயி—னிழுக்கெனைத்துஞ்
செய்குறாப் பாணி சிறிதேயச் சின்மொழியார்
கையுறாப் பாணி பெரிது.

(இ - ள்.) (மகளிர்),—வழுக்கு எனைத்தும் இல்லாத வாள்வாய் கிடந்தும் - குற்றம்சிறிதுமில்லாத வாளின்காவலி விருந்தும், இழுக்கினை தாம் பெறார் ஆயின் (உம்) - (கற்பொழுக்கத்தினின்று) தவறுதலைத் தாம்பெறாதவரானாலும்,—அ சில் மொழியார் - இனிமையாகப்பேசுஞ் சொற்களையுடைய அம்மகளிர், இழுக்கு எனைத்தும்-சிறுகுற்றத்தையாயினும், செய்குறா-செய்யாமல் தம்மைப்பாதுகாத்த, பாணி - காலம், சிறிதே - சிறியதேயாம்; கை உறா பாணி - நல்லொழுக்கத்தைக் கைக்கொள்ளாத [கற்பழிந்த]காலமோ, பெரிது - மிகப்பெரியதேயாம்; (எ - று.)

இது, பெரும்பான்மையாக மகளிரியற்கை கூறியபடி. இயற்கையிற் கற்பொழுக்கமில்லாத மகளிரைக் கடுங்காவலில்வைத்தாலும் அவர்கள் பெரும்பாலும் இழிவானகாரியங்களையே செய்வர் என்பதாம்; "சிறைகாக்குங் காப்பெவன்செய்யும் மகளிர், நிறைகாக்குங் காப்பே தலை" என்றார் திருக்குறளிலும்.

வாட்காவலாவது - வாளாயுதத்தைக் கையிலேந்தியவர்களாற் காக்கப் படுதல்; வாள்போன்ற கொடிய காவ லெனினுமாம். உம் - உயர்வுசிறப்பு; இரண்டாமடியில் அவ்வும்மையைக் கூட்டிக்கொள்க. அவ்வும்மை - மகளிர் காவல்காக்கப்பட்டுச் சிறிதுகுற்றஞ்செய்தற்கும் இடமில்லையாயினும் அவர் மனம் தீவழியிற்செல்லுதலே பெரும்பான்மையென்பதை விளக்கிநின்றது. 'இழுக்கினைத் தாம் பெறுவராயின்' என்று பாடமோதுவாருமுளர். அப்பொழுது, மகளிர் கடுங்காவலிற் கிடந்தும் சிறிதுகுற்றஞ்செய்வராயின், கற்பில்தவறிய காலம் பெரியதாகவும், அவ்வாறுதவறாத காலம் சிறியதாகவும் ஆய்விடு மென்று கருத்துக்கொள்க. 'இழுக்கு' என்றது, கற்பினின்று தவறுதலை. பாணி -பொழுது; "வேலையே யமயஞ் செவ்வி யெல்வையே பொழுது பாணி, காலை கொன் பதமே போழ்து காலப்பெயரீரைந்தாகும்" என்பது, நிகண்டு. (உ)

௩௯௩. எறியென் றெதிர்நிற்பாள் கூற்றஞ் சிறுகாலை
யட்டில் புகாதா ளரும்பிணி—யட்டதனை
யுண்டி யுதவாதா ளில்வாழ்பே யிம்மூவர்
கொண்டானைக் கொல்லும் படை.

(இ - ள்.) எறி என்று எதிர் நிற்பாள் - (தனதுகணவன் சினங்கொண்டபோது 'என்னை) அடி' என்று சொல்லி எதிர்த்துநிற்பவள், கூற்றம் - (அவனுக்கு இறுதியைத்தரும்) யமன்போல்வாள்; சிறு காலை - உதயகாலத்தில், அட்டில் புகாதாள் - மடைப்பள்ளியில் (சமையல்செய்ய) நுழையாதவள், அரும் பிணி -(மருந்தினால்தணித்தற்கு) முடியாத நோய்போல்வாள்; அட்டதனை உண்டி உதவாதாள் - தான்சமைத்த பொருள்களை உணவாக (க்கணவனுக்கு) இடாமல் தானேஉண்பவள், இல் வாழ் பேய் - வீட்டில் வசிக்கின்ற பேய் போல்வாள்; இ மூவர் - இந்த மூவரும், கொண்டானை கொல்லும் படை - (தம்மைக்) கொண்ட கணவரை உயிர்வாங்கும் ஆயுதம் போன்றவராவர்; (எ - று.)

கணவன் கோபித்து ஏதாகிலும் சொன்னால் எதிர்த்துநிற்பதும், உணவிற்குஉரிய காலத்தில் சமைக்கத்தொடங்காமையும், கணவன்விரும்பிய போது உணவிடாமையும், அக்கணவனைக்கொல்வதற்கு ஒப்பாகு மென்பது கருத்து.

"கூற்றமே, யில்லிருந்து தீங்கொழுகுவாள்" என்றவாறு தனது தீக்குணத்தினால் கணவன் ஒடுங்கி உயிரொழிதற்குக் காரணமாதல்பற்றி அப்படிப்பட்ட மனைவியை 'கூற்றம்' என்றும், காலமறிந்து உணவிடாமையால் அவனுக்கு வியாதிநேர்தற்குக் காரணமாதல்பற்றி அவளை 'அரும்

பிணி' என்றும், கணவன்பசியை நோக்காமல் தானே உண்பதுபற்றி அவளை 'பேய்'என்றும் உருவகப்படுத்திக்கூறினர். அத்தகைய மனைவியைப் பேயாக உருவகஞ்செய்தது, "பேஎய்ப்பிறப்பிற் பெரும்பசியும்" என்றவாறு பிறர்பசிநோக்காமல் தன்பசியையே தீர்க்குந் தன்மையளென்று குறித்தற்கு. காட்டில்திரியும் பேயினும் வேறுபாடுதோன்ற'இல்வாழ்பேய்' என்றார். இத்தகைய மூவராலும் கணவரதுஉயிர் வருந்து மாதலால், அவரை 'கொண்டானைக்கொல்லும்படை' என்றே கூறினர். சிறுகாலை - உதயகாலம்; "சிற்றஞ் சிறுகாலே" என்றார் பெரியாரும். மூன்றுமடியின் ஈற்றில் முற்றும்மை கூட்டுக. அட்டில் - அட்டவில் என்பதன் தொகுத்தல். அட்ட இல் - சமையல்செய்யுமிடம். அட்டதனை உண்டி உதவாதாள் என்பதற்கு-தான்சமைத்ததை நீ உண்என்று இடாதவள் என்று பொருளுரைப்பினுமாம்; உண்டி - உண்ணுதி ; முன்னிலையொருமைமுற்று. (௩)

௩௬௪. கடியெனக் கேட்டுங் கடியான் வெடிபட
வார்ப்பது கேட்டு மதுதெளியான்—பேர்த்துமோ
ரிற்கொண் டினிதிரூஉ மேமுறுத லென்பவே
கற்கொண் டெறியுந் தவறு.

(இ - ள்.) (ஒருவன்),—கடி என கேட்டும் - ('இல்வாழ்க்கையை) நீக்கிவிடு' என்று (பெரியோர்) சொல்லக் கேட்டும், கடியான்-நீக்காதவனாய்,—வெடிபட - (தலை) வெடித்துப்போம்படி, ஆர்ப்பது - (சாப்பறை டொண்டொண் என்று) ஒலிப்பதை, கேட்டும் - கேட்டபிறகும், அது தெளியான்-இல்வாழ்க்கை இத்தன்மையதெனத் தெரிந்துகொள்ளாதவனாய்,—பேர்த்தும் ஓர் இல் கொண்டு - மறுபடியும் ஒரு மனையாளைக் கட்டிக்கொண்டு, இனிது இரூஉம் - சந்தோஷமாயிருக்கின்ற, ஏமுறுதல் - மயக்கமானது,—கல் கொண்டு எறியும் தவறு - கல்லையெடுத்துத் தன்மேல் தானே எறிந்து கொள்ளும் குற்றம் போல்வதாகும், என்ப - என்று கூறுவர், (அறிவுடையோர்) ; (எ - று.)

நற்குணங்களும் புத்திரபாக்கியமு மில்லாதிருந்தாலும் மனைவியை விடக்கூடாததாலும் மணஞ்செய்தபின் இல்வாழ்க்கையிற் பலதுன்பங்களுண்டாதலாலும், இளமையிலே அவ்வில்வாழ்க்கையை விட்டுத் துறவறம் பூண்பா யென்று பெரியோர் நற்புத்திசொல்லவும் விடாமல், ஒருமனைவி இறந்துபோனபிறகு யாக்கைநிலையாமையையும் இல்வாழ்க்கையிற் சிறிதும் இன்பமில்லாமையையும் பிரதியக்ஷமாகக்கண்டும் மனந்தெளியாதவனாய் ஒருவன் மற்றொருத்தியை மணஞ்செய்துகொண்டு மகிழ்ந்திருப்பது, தன்னைத்தானே கல்லாலெறிந்துகொள்வது போன்ற பெருங்குற்றமாகுமென்பதாம். உவமையால், தவறாமல் தனக்குத்தானே நாசத்தைவிளைவித்துக் கொள்வ னென்பது பெறப்படும்.

கடி—கீழ் - துறவு - ௯ ஆஞ் செய்யுளிற் கூறியதைக் காண்க. வெடிபட-அச்சமுண்டாக எனினுமாம். ஆர்ப்பது - இங்குச் சாப்பறையின் ஓசை. இரூஉம் - இருவும் என்னும் பெயரெச்சம் விகாரப்பட்ட சொல்லிசையளபெடை. ஏமுறுதல்=ஏமமுறுதல்; இன்பமில்லாததை இன்பமுள்ளதுபோலக் கருதி மயங்குதல். (௪)

௩௬௫. தலையே தவமுயன்று வாழ்த லொருவர்க்
கிடையே யினியார்கட் டங்கல்—கடையே
புணராதென் றெண்ணிப் பொருணசையாற் றம்மை
யுணரார்பின் சென்று நிலை.

(இ - ள்.) ஒருவர்க்கு—,—தவம் முயன்று வாழ்தல் - தவத்திற்குஉரிய ஒழுக்கங்களில் முயற்சிசெய்து உயிர்வாழ்வது, தலையே - முதன்மையான செய்கையே[உத்தமமாகும்]; இனியார்கண் தங்கல் - நற்குணநற்செய்கைகளையுடைய மனைவியருடன் கூடிவாழ்தல் [இல்லறவாழ்க்கையிற் பொருந்துதல்], இடையே - நடுத்தரமானது [மத்தியமமாகும்] ; புணராது என்று எண்ணி - கிடையாதென்று நினைத்தும், பொருள் நசையால் - செல்வத்தினிடத்து ஆசையினால், தம்மை உணரார்பின் - தமது குடிப்பிறப்பு முதலியவற்றை அறியாதவர்களின் பின்னே, சென்று நிலை-போய் நிற்பது,கடையே· கடைப்பட்டதே [அதமமாகும்] ; (எ - று.)

மனிதர் துறவறம்பூண்டு தவஞ்செய்து வாழ்வது முக்கியமானது; இல்லையாயின் கற்புடைமனைவியோடு இல்லறத்தில் வாழ்வாவது வேண்டும்; இவ்விரண்டுமில்லாமல் பொருளாசையினால் லோபிகளைப் பின்தொடர்ந்து யாசிப்பது மிகவும் இழிவு என்பது, கருத்து.

இனியார்கண்தங்கல் இடையே என்பதற்கு - நற்குணமுடையாரோடு கூடி வாழ்த லென்று உரைப்பாரு முளர். "புல்லா, அகம்புகுமி னுண்ணுமி னென்பவர்மாட் டல்லான், முகம்புகுத லாற்றுமோ மேல்," "அருத்தஞ் செறிக்கு மறிவிலார்பின் சென், றெருத்திறைஞ்சி நில்லா தாம் மேல்"என்று கீழ்க்கூறியுள்ளதனால், உதாரகுணமுடையோரிடத்து இரப்பது நல்லதென்றும், லோபிகளிடத்து இரப்பது தீயதென்றும் அறிக. (௫)

௩௬௬. கல்லாக் கழிப்பர் தலையாயார் நல்லவை
துவ்வாக் கழிப்ப ரிடைகள்கடைக
ளினிதுண்ணே மாரப் பெறேம்யா மென்னு
முனிவினாற் கண்பா டிலர்.

(இ - ள்.) தலையாயார் - தலைமையான அறிவையுடையோர் [உத்தமர்], கல்லா - (ஞானநூல்களைக்) கற்று, கழிப்பர் - காலங்கழிப்பர்; இடைகள்- நடுவாயினோர் [மத்தியமர்], நல்லவை - தருமவழியாற்கிடைத்த பொருள்களை, துவ்வா - அனுபவித்துக்கொண்டு, கழிப்பர் - காலங்கழிப்பர்; கடைகள் - கீழாயினோர் [அதமர்], 'யாம் - நாம், இனிது உண்ணேம் - இனிமையான உணவுகளை உண்ணப்பெற்றிலோம் : ஆர பெறேம் - (செல்வத்தை) நிரம்பப்பெற்றிலோம்;' என்னும் - என்றுகருதுகின்ற, முனிவினால் - வெறுப்பினால், கண்பாடு இலர் - (இரவிலும்) தூக்கமில்லாமல் வருந்துவர்; (எ - று.)

தத்துவஞானத்திற்குஉரிய நூல்களைக் கற்றுப் பொழுது போக்குவது உத்தமர்தொழில்; ஊழ்வினையாற் கிடைத்தமட்டில் திருப்தியாய்ச் சுகத்தை யனுபவிப்பது மத்தியமர் தொழில்; எவ்வளவு கிடைத்தாலும் திருப்தியில்

லாமல் செல்வத்திற்காக ஏக்கங்கொண்டு அலைவது அதமர் தொழில் என்பதாம்.

கல்லா, துவ்வா - செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்த கால வினையெச்சம். 'உண்ணேம், ஆரப்பெறேம்' என்பன - வெறுப்புக் குறிப்பன. கண்பாடு - கண்படு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர்; கண்படுதல் - கண்ணுறங்குதல். (௬)

௩௬௭. செந்நெல்லா லாய செழுமுளை மற்றமச்
செந்நெல்லே யாகி விளைதலா—லந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர
மகனறிவு தந்தை யறிவு.

(இ - ள்.) செந்நெல்லால் ஆய செழு முளை - செந்நெற்களாலுண்டாகிய செழிப்பான முளைகள், மற்றும் - பின்னும், அ செந்நெல்லே ஆகி விளைதலால் - அந்தச்செந்நெற்பயிராகவே ஆய் மேன்மேல்விளைதலினால்,—அ நெல் - அப்படிப்பட்ட செந்நெற்பயிர்கள், வயல் நிறைய காய்க்கும் - கழனிகள்நிறையும்படி விளைகின்ற, வளம் - செழிப்பையுடைய, வயல் - வயல்களாற் [மருதநிலத்தாற்] சூழப்பட்ட, ஊர - ஊர்களையுடைய பாண்டியராசனே!—தந்தை அறிவு - தகப்பனது அறிவே, மகன் அறிவு - மகனது அறிவாகும்; (எ - று.)

செந்நெல்லின் முளையினால் அந்தநெல்லே விளைவதுபோல, ஒருகுலத்தில் தந்தை நற்புத்தியுடையனாயிருந்தால் அவன்மகனுக்கும் அவ்வாறே நற்புத்தி யுண்டாகு மென்பதாம். தந்தையறிவே மகனதுஅறிவென்று அநுமானித்து அறியப்படு மென்க. மகனதுஅறிவு இத்தகையதென்று தந்தையினறிவைக்கொண்டு உய்த்துணரப்படுதலால், இது - ஏதுவணி.

"தந்தையே மைந்தனாகப் பிறக்கிறான்", "மகனுரைக்குந் தந்தைநலத்தை" என்பன இங்கு நோக்கத்தக்கன. "நோக்கியறிகல்லாத் தம்முறுப்புக் கண்ணாடி, நோக்கி யறிப வதுவேபோ - னோக்கி, முகனறிவார் முன்னமறிப வதுவே, மகனறிவு தந்தை யறிவு" என்ற பழமொழிச்செய்யுளிலும் இச்செய்யுளின் ஈற்றடி பயின்றுள்ளது.

செந்நெல் - சாலியென்னுஞ் சிறந்தவொரு சாதி நெல். முளை-தொழிலாகுபெயர். விளைதலால் என்பதி லுள்ள 'ஆல்' உருபு - ஞாபகவேதுப் பொருளில் வந்தது. (எ)

௩௬௮. உடைப்பெருஞ் செல்வருஞ் சான்றோருங் கெட்டுப்
புடைப்பெண்டிர் மக்களுங் கீழும் பெருகிக்
கடைக்கா றலைக்கண்ண தாகிக் குடைக்கால்போற்
கீழ்மேலாய் நிற்கு முலகு.

(இ - ள்.) உடை பெருஞ் செல்வரும் - தொன்றுதொட்டுவந்த பெருஞ்செல்வமுடையவர்களும், சான்றோரும் - (கல்வியறிவு நிறைந்த) பெரியவர்களும், கெட்டு-(தங்கள்தங்களதுநிலைமை) மாறிப்போய், புடை பெண்

டிர் மக்களும் - (இழிகுணமுடைய) வைப்பாட்டிகளின் பிள்ளைகளும், கீழும் - (குலம் அறிவு குணம் முதலியவற்றிற் குறைந்த) கீழ்மக்களும், பெருகி - (செல்வத்தினால்) விருத்தியடைந்து,—கடைக்கால் தலைக்கண்ணது ஆகி - காற்புறத்திலிருக்கவேண்டியது தலைப்புறத்தி லிருப்பதாகி, (இவ்வாறு ஆதலினால்),—குடை கால் போல் - குடையினது காம்புபோல, உலகு - உலகமானது, கீழ் மேல் ஆய் நிற்கும் - கீழ்மையடைதற்கு உரியது மேன்மையுடையதாக நிற்குந் தன்மையுடையதாகும்; (எ - று.)

பரம்பரையாகப் பெருஞ்செல்வமுடையவர்களும் இயற்கை நற்குணமுடைய பெரியவர்களும் தமதுபெருமை கெட்டுப்போதலாலும், குலத்தினாலும் குணத்தினாலும் மிகத்தாழ்ந்தவர்கள் பெருஞ்செல்வம்பெற்றுப் பெருமையுடன் வாழ்தலாலும், இப்படியும் மாறிவிடுகின்றதே என உலகவியற்கை நோக்கிப் பிறந்த அநுதாபத்தால் எடுத்துக்கூறியவாறு. "புணர்கடல்சூழ் வையத்துப் புண்ணியமோ வேறே, யுணர்வதுடையா ரிருப்ப - வுணர்விலா, வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வரே, பட்டுந் துகிலு முடுத்து" என்று கீழ் நன்றியில்செல்வத்து வந்துள்ள செய்யுளோடு இதனை ஒப்பிடுக. குடைக்காம்பு கவிழ்த்துப்பிடிக்கப்படுவது முற்காலத்து வழக்கம் போலும்.

கெட்டு, பெருகி, ஆகி இவை - காரணப்பொருளனவாய் வந்த செயவெனெச்சங்களின் திரிபுகள். உலகம்கீழ்மேலாவதற்கு இவையே காரணம். புடைப்பெண்டிர் - பொருள்கொடுப்பார்பக்கல் சாரும் பெண்களெனக் காரணப்பொருளது. கடைக்கால் - அங்கு இருத்தற்குஉரிய பொருளுக்கு இடவாகுபெயர். (அ)

௩௬௯. இனியார்தந் நெஞ்சத்து நோயுரைப்ப வந்நோய்
தணியாத வுள்ள முடையார்—மணிவரன்றி
வீழு மருவி விறன்மலை நன்னாட
வாழ்வின் வரைபாய்த னன்று.

(இ - ள்.) மணி வரன்றி - இரத்தினங்களை வாரிக்கொண்டு, வீழும் - விழுகின்ற, அருவி - நீரோடைகளையுடைய, விறல் மலை - வெற்றிபெற்ற [மிகச்சிறந்த] மலைகளையுடைய, நல் நாட - நல்லபாண்டியநாட்டரசனே!—இனியார் - நல்லசிநேகிதர், தம் நெஞ்சத்து நோய் உரைப்ப - தமதுமனத்திலுள்ள வருத்தத்தை எடுத்துக்கூறியபிறகும், அ நோய் தணியாத - அந்த வருத்தத்தை நீக்கமாட்டாத, உள்ளம் உடையார் - (வலிய) மனமுடையவர்கள், வாழ்வின் - உயிர்வாழ்வதைக்காட்டிலும், வரை பாய்தல் - மலையின்மீது ஏறிவிழுந்து உயிர்விடுதல், நன்று - நல்லதாம்; (எ - று.)

நல்லசிநேகிதரது மனத்துன்பத்தை அவர்கூறுமுன்னமே குறிப்பறிந்து "உடுக்கையிழந்தவன்கைபோல வாங்கே, யிடுக்கண்களைவதாம் நட்பு" என்றபடி நீக்கி உதவவேண்டியிருக்க அவர்எடுத்துக்கூறியபிறகும் நீக்கமாட்டாத வலியமனமுடையவர் உயிர்வாழாது வலுவில் உயிர்விடுதலே நல்லது என்பது கருத்து. நண்பரதுதுன்பங்களைத் தணியாமல் உயிர்வாழ்தலிற் பழிபாவங்கள் பெருகுதலால், அதனினும் உயிர்துறத்தலே நல்லதாயிற்று.

தம்மால் அத்துன்பத்தை நீக்கக்கூடினும் கூடாவிடினும் அதில்மனஞ்செல்லாத பாவிக ளென்றற்கு, 'தணியாதவுள்ளமுடையார்' என்றார். 'இனியார் தந்நெஞ்சத்துநோயுரைப்ப'என்றதனால், "தோழனோடுமேழைமைபேசேல்" என்ற நிலை கடந்த பெருந்துன்பத்தைக் குறித்தவாறு. (௯)

௩௭௦. புதுப்புனலும் பூங்குழையார் நட்பு மிரண்டும்
விதுப்பற நாடின் வேறல்ல—புதுப்புனலும்
மாரி யறவே யறுமே யவரன்பும்
வாரி யறவே யறும்.

(இ - ள்.) புது புனலும் - புதியநீர்வெள்ளமும், பூ குழையார் நட்பும்- அழகிய காதணியையுடைய வேசையர்களது சிநேகமும், இரண்டும்- இரண்டையும், விதுப்பு அற நாடின் - விரைவில்லாமல் [நிதானமாக] ஆராய்ந்து பார்த்தால், வேறு அல்ல - வேறுபடுவெனவல்ல [இரண்டும் ஒருதன்மையுடையனவே]; (எவ்வாறெனின்,—) புது புனல் - புதிய நீர் வெள்ளம், மாரி அற - மழை நீங்கினால், அறும் - ஒழியும்; அவர் அன்பும் - அவ்வேசையரது சிநேகமும், வாரி அற - பொருளின்வருவாய் நீங்கினால், அறும் - ஒழிந்துபோம்; (எ - று.)

மழை அதிகமாகப்பொழியும்போது மிக்குப்பெருகி அதுநின்றமாத்திரத்தில் ஒழியும் புதுநீர்ப்பெருக்குப்போல, பொருள் அதிகமாகக் கொடுக்கும்போது அன்புகாட்டி அதுகுறைந்தமாத்திரத்தில் அன்புகுறையுந் தன்மையுடையவர் வேசைய ராதலால், அப்படிப்பட்ட வஞ்சனைக்குணமுடையவரோடு கூடிப்பழகுதல் வேண்டாவென்பது கருத்து. எடுத்துக்காட்டுவமையணி. அடுத்த அதிகாரத்தின் முதற்செய்யுளும் இக்கருத்துடையதே.

இனி, விதுப்பறநாடின் என்பதற்கு - விருப்பமில்லாமல் ஆராய்ந்துபார்த்தால் என்றும் பொருள்கொள்ளலாம்; ஒருபொருளை ஆராயும்போது அதனிடத்து விருப்பு வெறுப்பின்றி ஆராய்ந்தால்தான் உண்மைவிளங்குமென்பது, நூல்துணிபு; "காய்த லுவத்த லகற்றி யொருபொருட்க,ணாய்தலறிவுடையார் கண்ணதே-காய்வதன்க, ணுற்றகுணந் தோன்றாதாகு முவப்பதன்கண், குற்றமுந் தோன்றாக் கெடும்," "வாரம்பட்டுழித் தீயவுநல்லவாந், தீரக்காய்ந்துழி நல்லவுந்தீயவா, மோரும் வையத்தியற்கை" என்பன காண்க.

பொதுமகளிரது தன்மையைக் கூறும் இச்செய்யுளை இங்குவைத்தது, இனிவரும்அதிகாரம் இன்னதெனத்தோற்றுவாய்செய்தற்குப்போலும்.(௧௦)

## பொருட்பால் முற்றுப்பெற்றது.

மூன்றாவது

# காமத்துப்பால்.

அஃதாவது - பொருளைத் துணைக்காரணமாகவுடையதாய் இம்மையை மாத்திரமே தருந் தன்மையையுடைய காமத்தைக் கூறும் பாகம்; காமமென்பது, ஒருகாலத்திலே ஒருபொருளால் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமென்னும் ஐம்புலன்களையும் அனுபவித்தற்சிறப்புடைய காமவின்பத்தினை. பலவகைச்சுவைகளுள் இன்பச்சுவையொன்றனைமாத்திரமே இப்பாலில் மூன்றுஅதிகாரங்களாலும் மிகுத்துக்கூறுகின்றார்.

இந்தக் காமத்துப்பால் - ௩௮ - ஆம் அதிகாரம் இன்பதுன்பவியலென்றும், இறுதி இரண்டு அதிகாரங்கள் இன்பவியலென்றும் இரண்டு உட்பிரிவுகளை யுடையதாய் அமைக்கப்பட்டது; "கடையின்ப வகைதான் கருதினிருவகை, யின்பதுன்ப வதிகார மொன்றே, யேனை யின்ப வதிகார மிரண்டே" என்ற பழைய உரைச்சூத்திரத்தை உணர்க.

இது, பதுமனாரால் வகுக்கப்பட்ட பாகுபாடு. சில உரையாசிரியர்கள், இந்நூலின் நாற்பது அதிகாரங்களுள் முதற் பதின்மூன்று அதிகாரங்களை அறத்துப்பாலாகவும், அடுத்த இருபத்தாறுஅதிகாரங்களைப் பொருட்பாலாகவும், இறுதியதிகார மொன்றை மாத்திரம் காமத்துப்பாலாகவும் வகுத்துக் கூறியுள்ளார். அகப்பொருட்கிளவித்துறை முதலிரண்டுஅதிகாரங்களில் இல்லாமையும், இறுதியதிகாரத்துமாத்திரமே உள்ளமையும் அவர் அவ்வாறு கொண்டதற்குக் காரண மென்பர்.

முதலாவது

## இன்பதுன்பவியல்.

அஃதாவது - ஒருசார் இன்பத்தையும் ஒருசார் துன்பத்தையும் தருவதாகிய தன்மையைக் கூறும் பிரிவு என்பதாம். இது பொதுமகளிரின்சேர்க்கை யாதலால் அவ்விரண்டுதன்மையையுந் தருவதென்பது வெளிப்படை. ('இன்பத்துன்பவியல்' என்றும் வழங்குவது உண்டு.) இங்கு ஓர் அதிகாரம் தானே ஓரியலாமை அறிக.

---

### ௩௮ - ஆம் அதிகாரம்.—பொதுமகளிர்.

அஃதாவது - தமதுநலத்தைப் பொருள்கொடுப்பார்யாவர்க்கும் விற்பதல்லாமல் அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரையறையில்லாத மகளிரது இயல்பு; அவர் ஒருவர்க்கே வாழ்க்கைப்படாமல் பொருள்கொடுப்பவர்க்கெல்லாம் வாழ்க்கைப்படுதலால், 'பொதுமகளிர்' எனப்பட்டனர். இவரதுதன்மையை முன்னையஅதிகாரத்தின் ஈற்றுச்செய்யுளில் எடுத்துக்கூறித் தோற்றுவாய் செய்தவதனால், அதிகாரமுறைமையை அறிக.

௩௭௧. விளக்கொளியும் வேசையர் நட்பு மிரண்டுந்
துளக்கற நாடின் வேறல்ல—விளக்கொளியு
நெய்யற்ற கண்ணே யறுமே யவரன்புங்
கையற்ற கண்ணே யறும்.

(இ - ள்.) விளக்கு ஒளியும் - விளக்கினது பிரகாசமும், வேசையர் நட்பும் - பொதுமகளிரது அன்பும், இரண்டும் - ஆகிய இரண்டையும், துளக்கு அற நாடின் - சஞ்சலமில்லாமல் ஆராய்ந்துபார்த்தால், வேறு அல்ல - வேறுவகைப்பட்டனவல்ல[இரண்டும் ஒருதன்மையனவே]; (எவ்வாறெனின்,—)விளக்கு ஒளியும் - விளக்கினது பிரகாசமும், நெய் அற்ற கண்ணே - நெய் வற்றிய அப்பொழுதே, அறும் - நீங்கும்; அவர் அன்பும் - அந்தப் பொதுமகளிரது அன்பும், கை அற்ற கண்ணே - கையிற் பொருள் கொடுத்தல் குறைந்தபொழுதே, அறும் - நீங்கிவிடும்; (எ - று.)

விளக்கின்பிரகாசம் அதில்விடப்படும் நெய் வற்றியபொழுது நீங்குதல் போலவே, வேசையர்நட்பும் பொருள்வருவாய் அற்றபொழுதே அற்றுப்போமென்பதாம்; இதுவும் மேலைச்செய்யுள் போன்றதே. இதனால், உள்ளூர அன்புபாராட்டாத பொதுமகளிரின் போகம் இனியதன்று என்பது, கூறப்பட்டது. 'வேறல்ல' என்பது - காரணம்உள்ளவளவே காரியம்நிகழுமென்றபடி.

வேசையர் - வேஶ்யா என்பதன் திரிபான வேசையென்பதன் பன்மை. துளக்கு - துளங்கு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர்; துளங்குதல்-சலித்தல். கை என்பது - கைப்பொருளுக்கு ஆகுபெயர். (௪)

௩௭௨. அங்கோட் டகலல்கு லாயிழையா ணம்மொடு
செங்கோடு பாய்துமே யென்றாண்மன்—செங்கோட்டின்
மேற்காண மின்மையான் மேவா தொழிந்தாளே
காற்கானோய் காட்டிக் கலுழ்ந்து.

(இ - ள்.) அம் கோடு அகல் அல்குல் ஆய் இழையாள் - அழகிய பக்கங்களுயர்ந்து அகன்ற அல்குலையுடையவளும் ஆராய்ந்தணிந்த ஆபரணங்களையுடையவளுமான பொதுமகள்,—நம்மொடு-நம்மோடுகூட, செம் கோடு பாய்தும்-செம்மையான மலையுச்சியில் ஏறி அதனினின்றும்(நாம்இருவரும் ஒருசேர) விழுவோம், என்றாள் மன் - என்று (எம்மிடத்திற் பொருள்பெறும்போது அன்புகாட்டி) உறுதியாகக் கூறினாள்; காணம் இன்மையால் - (எம்மிடத்திற்) பொருளில்லாமையால், (இப்போது), செம் கோட்டின்மேல் மேவாது-செம்மையான மலையுச்சியின்மேல்ஏறிவீழ்தற்கு (நம்முடன்) கூட வாராமல், கால் கால் நோய் காட்டி -'எனதுகாலில் வாதநோய்வந்துள்ளது (அதனால் உடன்வரமுடியவில்லை' என்று பொய்க்காரணஞ்சொல்லிக்) காண்பித்து, கலுழ்ந்து-(பொய்யாகவே) அழுது, ஒழிந்தாள்-(எம்முடன்வராது) நீங்கினாள்; (எ - று.)

'நீ மலைமேல்ஏறி வீழ்ந்தாலும் நானும் உன்னுடன் விழுவேனேயன்றி உன்னைவிட்டு ஒருகணமும் உயிர்பிழைத்திரேன்'என்று என்னிடம் பொருள் பெறும்போது அன்புகாட்டி உறுதி கூறிய பொதுமகள், இப்போது எனக்கு நேர்ந்த பெரியதொரு ஆபத்தினால் யான் மலைமேலேறி விழும்படி நேரிட, அப்போதும் அவளைப்பிரிய மனமில்லாமல் அவளை உடன்வரும்படி நான் அழைத்தபோது, பொருளில்லாமையால், தனதுகாலில் நோய்வந்ததுகார

ணமாக உடன்வரக்கூடவில்லை யென்று பொய்க்காரணஞ்சொல்லி அழுது என்னைவிட்டு நீங்கிப்போயினள் என்பதாம். இதனால், பொதுமகளிர் ஆடவர்மீது உள்ளூர அன்புபாராட்டாமல் உழுவலன்புடையவர்போல வெளிக்கு நடித்துப் பொருளையே பிரதானமாகக்கொண்டு வஞ்சித்து அதனைப் பறிப்பரென்பது கூறப்பட்டது. "அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார், ரின்சொ லிழுக்குத் தரும்" என்னுந் திருக்குறள் இங்கு நோக்கத்தக்கது. "நாவார வேண்டும் விதஞ் சொல்லுவா ருனை நான் பிரிந்தாற், சாவேனென்றே யிருந் தொக்கவுண்பார்கள் கைதான் வறண்டாற், போய் வாருமென்று நடுத்தலைக்கே குட்டும் பூவையர்" என்பதும் காண்க.

செல்வம்பெற்றபோது அவ்வாறுகூறியவள் செல்வமில்லாதபோது தவறிவிட்டாளென்பதைக் காட்டினமையின், 'மன்' என்னும் இடைச்சொல் - ஒழியிசைப்பொருளது; அசையுமாம். பாய்தும், முன்னிலையை உளப்படுத்திய தன்மைப்பன்மைமுற்று; நீயும் நானும் என்க: இதில், தும் - காலங்காட்டும் விகுதி. இனி, மூன்றுமடிக்கு - மலையின்மீது பொருள்கிடையாமையால் உடன்வாராமல் உபேக்ஷித்தாளேயன்றி அங்கும் பொருள்கிடைக்குமாயின் உபேக்ஷியாது உடன்வருவளென்று கூறுதலு மொன்று. 'கால் நோய்' என்றதில், கால் என்றது - தனது பரியாயநாமமாகிய வாயுவென்னுஞ் சொல்லைக் குறிப்பிட, அது - தனது பொருள்களில் ஒன்றான வாதமென்னும் நோயை உணர்த்திற்று; இது - லக்ஷிதலக்ஷணை; (கம்பராமாயணத்தில் கேகயராஜவம்சத்தை "மயின்முறைக்குலம்" என்றதும், சீவகசிந்தாமணியில் புத்திசேனனை "திங்கள்விரவியபெயரினன்" என்றதும் இத்தன்மையனவே.) (உ)

௯எ௩. அங்கண் விசும்பி னமரர் தொழப்படுஞ்
செங்கண்மா லாயினு மாகமன்—றங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னார்
விடுப்பர்தங் கையாற் றொழுது.

(இ - ள்.) அம் கண் விசும்பின் - அழகிய இடமகன்ற வானுலகத்திலுள்ள, அமரர் - தேவர்களால், தொழப்படும் - வணங்கப்படுகின்ற, செம் கண் மால் ஆயினும் ஆக - சிவந்தகண்களையுடைய திருமாலேயானாலும் ஆகட்டும், தம் கை கொடுப்பது ஒன்று இல்லாரை - தமது கையிற் கொடுக்கும்படியான பொருள் சிறிதுமில்லாதவரை, கொய் தளிர் அன்னார் - கொய்யத்தக்க தளிர்போன்ற உடம்பின்நிறத்தையுடைய பொதுமகளிர், தம் கையால் தொழுது - தமதுகைகளாற் கும்பிட்டுவணங்கி, விடுப்பர் - அனுப்பிவிடுவார்கள்; (எ - று.)

மிக்கபெருமை அழகு முதலிய குணங்கள் வாய்ந்தவராயினும் பொருளில்லாதவரைப் பொதுமகளிர் 'நீங்கள் வருதற்கு இது சமயமன்று' என்று போக்குச்சொல்லி அனுப்பிவிடுவார்களே யன்றி அவரைச் சேரா ரென்பது கருத்து. இதனால், கொடுப்பாரை விரும்பாமல் பொருளையே விரும்பும் பொதுமகளிரது இரசமறியாத்தன்மையை எடுத்துக்காட்டினர்.

'அமரர்தொழப்படும்' 'செங்கண்' என்ற அடைமொழிகள் கொடுத்துக் கூறியவதனால், திருமாலுக்கு மேன்மையும் அழகுமிகுதியும் கூறியவாறாம். இனி, மால் என்பதற்கு - இந்திரனென்று பொருள்கூறுவாருமுளர். அமரர் - அமிருதமுண்டதனால் மரணமில்லாதவரெனத் தேவர்க்குக் காரணக் குறி. மன் - அசை. தம்கைக்கொடுப்பது என்பதற்கு - தமதுகையாற் கொடுக்கும் பொருளென்று கூறினும் பொருந்தும். (௩)

௩௭௪. ஆணமி னெஞ்சத் தணிநீலக் கண்ணார்க்குக்
காணமில் லாதார் கடுவனையர்—காணவே
செக்கூர்ந்து கொண்டாருஞ் செய்த பொருளுடையா
ரக்கார மன்னா ரவர்க்கு.

(இ - ள்.) காண - ஆலோசித்துப்பார்க்குமிடத்து,—ஆணம் இல் நெஞ்சத்து - அன்பில்லாத மனத்தையுடைய, அணி நீலம் கண்ணார்க்கு - அழகிய கருங்குவளைமலர்போன்ற கண்களையுடைய பொதுமகளிர்க்கு, காணம் இல்லாதார் - பொருளில்லாதவர், (அழகுமுதலியவற்றாற் சிறந்தோராயினும்), கடு அனையர் - விஷம்போலப் பிரியமில்லாதவராவர்; செக்கு ஊர்ந்து கொண்டாரும் - செக்கு ஆடுதலாகிய இழிதொழிலுடையவரானாலும், செய்த பொருள் உடையார் - தேடிய செல்வமுடையவரே, அவர்க்கு - அப்பொது மகளிர்க்கு, அக்காரம் அன்னார் - சர்க்கரைபோலப் பிரியமுடையவராவர்.

பொருளொன்றனையே முக்கியமாகக்கொள்ளுந் தன்மையராதல்பற்றிப் பொதுமகளிர் பொருளில்லாதாரை விஷத்துக்கொப்பாகவும், பொருளுள்ளவரைச் சர்க்கரைக்கொப்பாகவும் பார்ப்பராதலால், அவரது போகம் வெறுக்கத்தக்கது என்பதாம்.

"இழிபவருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியாநோயாற், கழிபவர் யாவரேனுங் கண்வலைப்பட்டு நெஞ்ச, மழிபவர் பொருள்கொண் டெள்ளுக் கெண்ணெய்போ லளந்துகாட்டிப், பழிபடுபோகம் விற்பார்" எனப் பிறர் கூறியது இங்குப் பின்னிரண்டடிக்கு ஒப்புநோக்கத்தக்கது.

'காண' என்பதை முன்னும் பின்னும் கூட்டிக்கொள்க; இடைநிலைத் தீவகம். இனி, காண என்பதை 'செக்கூர்ந்துகொண்டாரும்' என்பதனோடு இயைத்து, உலகத்தார்யாவரும் காணும்படி செக்கு ஆடுந் தொழில் செய்தவராயினும் என்று பொருள் கூறினும் பொருந்தும். 'செக்கூர்ந்து கொண்டானுஞ் செய்த பொருளுடையார்' என்ற பாடத்திற்கு-செக்கு ஆடியாவது தேடிய பொருளை யுடையவரென்க. நீலம்-பண்பாகுபெயர். ஆனும் = ஆயினும்; மரூஉ. (௪)

௩௭௫. பாம்பிற் கொருதலை காட்டி யொருதலை
தேம்படு தெண்கயத்து மீன்காட்டு—மாங்கு
மலங்கன்ன செய்கை மகளிர்தோள் சேர்வார்
விலங்கன்ன வெள்ளறி வினர்.

(இ - ள்.) பாம்பிற்கு ஒரு தலை காட்டி-(தன்னைப் பிடிக்கவரும்) பாம்புக்கு ஒருபுறத்தைக் காண்பித்து, ஒரு தலை - மற்றொருபுறத்தை, தேம் படு

தெள் கயத்து மீன் காட்டும் - இனிமைபொருந்திய தெளிந்தநீரையுடைய தடாகத்தி லுள்ள மீனுக்குக் காண்பிக்குந் தன்மையையுடைய, மலங்கு அன்ன - விலாங்குமீனைப் போன்ற, செய்கை - (பலரிடத்தும் அன்புகாட் டுந்) தொழிலை யுடைய, மகளிர் - பொதுமகளிரது, தோள் - தோள்களை, விலங்கு அன்ன வெள் அறிவினர் - மிருகத்தை யொத்த பகுத்தறிவில்லாத மூடர்கள், சேர்வார் - சேர்வார்கள் ; (எ - று.)

தன்னைப்பிடிக்கவரும் பாம்புக்கும் மீனுக்கும் பிடிபடக்கூடு மென்னும் ஆசையைக் காட்டி ஒன்றுக்கும் அகப்படாமல் தப்பித்துக்கொண்டு செல் லுகிற விலாங்குமீனைப் போலப் பலர்க்கும் ஆசைகாட்டி மயக்கும் பொது மகளிரை அறிவில்லாதவர் சேர்வரேயன்றி அறிவுடையார் சேரமாட்டா ரென்பதாம். பொதுமகளிர்க்கு மலங்குமீன் தொழில்பற்றிய உவமம்.

'மலங்கன்ன செய்கை' என்பது - அவரவர்க்கு வேற்றுமைகாட்டாமல் இனமாகச்சேர்ந்து நின்று அன்பு காட்டுதல். அவர்கள் செய்யும் வஞ்சனை தெரிந்தால் அவரது இன்பம் வெறுக்கப்படுமென்பது, குறிப்பு. அவ்வஞ்ச னையை அறியமாட்டாமல் அவர்கள்தோள் சேர்பவரை 'வெள்ளறிவினர் ' என்றார். வெள்அறிவு - சாரமற்ற அறிவு. வெண்மையென்பது சாரமின்மை யென்னும் பொருளதாய், அறிவுமுதிராமைமேல் நிற்பதை, "வெண்மையெ னப்படுவதி யாதெனி னொண்மை,யுடையம்யா மென்னுஞ் செருக்கு"எனத் திருக்குறளிலும், "வெண்மையுடையார் விழுச்செல்வ மெய்தியக்கால்"என இந்நூலிலும், "வெண்மையில்லை பல்கேள்வி மேவலால்", "வெள்ளியையா தல் விளம்பினை" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. 'வெள்ளறிவு' என்றல் வழக்கு.

மீன்காட்டும் - நான்காம்வேற்றுமைத்தொகை. ஆங்கு - அசை. (௫)

௩௭௬. பொத்தநூற் கல்லும் புணர்பிரியா வன்றிலும்போ
னித்தலு நம்மைப் பிரியல மென்றுரைத்த
பொற்றொடியும் போர்த்தகர்க்கோ டாயினா ணன்னெஞ்சே
நிற்றியோ போதியோ நீ.

(இ - ள்.) நல் நெஞ்சே - (எனது) நல்ல மனமே!—பொத்த நூல் கல் லும் - துளைக்கப்பட்ட [உட்டுளையுடைய] நூலிற் கோத்த இரத்தினத்தை யும், புணர் பிரியா அன்றிலும் - கூடியிருத்தல் பிரியாத அன்றிற்பறவை களையும், போல் - போல, நித்தலும் - எப்பொழுதும், நம்மை பிரியலம் - நம்மைவிட்டுப்பிரியமாட்டோம், என்று உரைத்த - என்று (முன்பெல்லாம்) உறுதிகூறியிருந்த, பொன் தொடியும் - பொன்னினாலாகிய வளையல்களை யுடைய பொதுமகளும், (இப்போது), போர் தகர் கோடு ஆயினள் - போர் செய்யுந்தன்மையுள்ள ஆட்டுக்கடாவின் கொம்புபோல [மாறுபாடாகிய] குணமுடையவளாயினள் ; (அவள் அவ்வாறான பிறகும்), நீ—, நிற்றியோ - (அவளிடத்தில்) நிற்பாயோ ? (அல்லது), போதியோ - (என்னுடன்) வருவா யோ? (சொல்); (எ - று.)

நூலும் மணியும் போலவும், இரட்டையாகிய அன்றிற்பறவைகள்போல வும் எப்பொழுதும் இணைபிரியாமலிருப்பேனேயல்லது சற்றும் உன்னைவிட் டுப்பிரியே னென்று செல்வமுள்ளகாலத்தில் நம்பிக்கைகூறியிருந்த பொது மகள் செல்வம்வறண்ட இப்பொழுது சண்டைசெய்யும் ஆட்டுக்கடாவின் கொம்பு பிற்பட்டு முறுக்குடன் வளைந்திருப்பதுபோல முன்சொன்னதற்கு விரோதமாகக் குணம்மாறிவிட்டாள்; அவள் குணம் திரிந்தபிறகும் அவளு டன் இணங்கிநடப்பது நல்லதன்றென்று ஒருவர் தமதுமனத்திற்கு நல்ல றிவுகூறிய வாய்பாடுடையதாக இச்செய்யுள் செய்யப்பட்டதென அறிக. வேசையர்வழிச்செல்லாமல் மனத்தை வசப்படுத்தவேண்டுமென்பது, கரு த்து. நூலும் மணியும், இரட்டையன்றிற்பறவைகளும் - இணைபிரியாமல் உடனுறைதற்கு உவமம்.

அன்றிலென்பது - ஒருபறவை. அது, எப்பொழுதும் ஆணும் பெண் ணும் இணைபிரியாது நிற்கும். கணப்பொழுது ஒன்றை ஒன்று விட்டுப்பிரிந் தாலும் அத்துயரத்தைப்பொறாமல் ஒன்றையொன்று இரண்டுமூன்றுதரம் கத்திக்கூவி அதன்பின்பும் தன்துணையைக் கூடாவிடின் உடனே இறந்து படும். இதனை, வடநூலார் க்ரௌஞ்சம் என்பர். தகர்க்கோடாதல்-பின்பு திருகி நிற்றல். இனி, பொத்தநூற்கல் என்பதற்கு - கடையும் சாணைக்கல் என்று பொருள்கொண்டு, அக்கல்லில் இரத்தினங்களைத் தேய்க்கும்போது மணலும் கூடத்தேய்வதுபோல அவன் கெட்டபொழுது தானும் உடன் கெடவும், அவன்வாழ்ந்தபொழுது தானும் உடன்வாழவும் இவ்வாறு வஞ் சனையாகக்கொண்டுள்ள பொதுமகளிரது மனத்திண்மைக்கு உவமைப்படு த்திக் கூறுவாரு முளர். பொத்துதல் - துளைப்படுதல். பிரியலம் - தன் மைப்பன்மை யெதிர்மறைமுற்று. பொன்தொடி - வேற்றுமைத்தொகை யன்மொழி. (௬)

௩௭௭. ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோற் குப்புறூஉஞ் சில்லைக்க ணன்பினை
யேமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரா னகை.

(இ - ள்.) ஆமா போல் - காட்டுப்பசுவைப்போல, நக்கி- (முதலில் இன்பமுண்டாகப்) பரிசித்து, அவர் கை பொருள் கொண்டு - தம்மிடம் கூடியவர்களது கையிலுள்ள செல்வத்தைக் கவர்ந்துகொண்டு, (பிறகு), சே மா போல் - எருதைப்போல, குப்புறும் -கவிழ்ந்துபடுத்துக்கொள்ளுகின்ற, சில்லைக்கண்-தாழ்ந்தநடத்தையுடைய பொதுமகளினிடத்தில், அன்பினை- ஆசையை, ஏமாந்து - மயங்கி, எமது என்று இருந்தார் - எமக்கே உரியது என்று (மோகத்தினால் நம்பி) இருந்தவர், பலரால் - பலராலும், நகை பெறுப - அவமதிப்பைப் பெறுவர், (எ - று.)—தாம், ஆம் - அசைகள்.

காட்டுப்பசு உடம்பைநக்கினால் அப்பொழுது சுகமாயிருந்து பின்பு விஷம்போல மரணத்தை விளைக்குமென்பர்; அன்றியும், காட்டுப்பசு பிறர் க்கு இன்பமுண்டாம்படி முதலில் நாவினால் அவருடலை நக்கி அவர்க்குத்

தம்பக்கல் நம்பிக்கையையுண்டாக்கிப் பிறகு அவர் அஜாக்கிரதையாயிருக்கின்ற சமயம் பார்த்து முட்டிக் கொல்வது போல, பொதுமகளிரும் தம்மிடம் வந்த ஆடவரை இன்பமுற ஆலிங்கனம் முதலியவற்றைச் செய்து நம்பிக்கைகாட்டி அவர்கைப்பொருள் பறித்துக்கொண்டு அவர் ஏமாந்தசமயத்தில் உழவுக்கு உதவாமல் படுத்துக்கொள்ளும் எருதைப்போலக் கவிழ்ந்து மோசஞ்செய்துவிடுவோர்க ளாதலால், அவர்கள் நடித்துக் காட்டும் பொய்யன்பை நம்புகின்றவர்கள் பலராலும் பழிக்கப்படுவார்க ளென்பதாம். அவ் வேசையரது அன்பு தற்காலத்தில் மகிழ்ச்சியைச் செய்தாலும் பின்பு பழிப்புக்கிடமான பல தீமைகளைத் தருமென்பது, கருத்து. உவமையணி.

சேமா - எருதாகிய விலங்கு என இருபெயரொட்டு. சில்லை-தூர்த்தை [தீயொழுக்கமுடையாள்.]; இனி, சில்லைக்கண் என்பதற்கு - சிள்வண்டு போன்ற கண்களை யுடையாள் என அன்மொழித்தொகையாகப் பொருள்கொண்டு, வண்டு தேனுள்ளவிடத்திற் சென்று அதனைக் கவர்ந்துநீங்குதல் போல, செல்வமுடையாரிடத்துச் சென்று அவர்செல்வத்தைப் பறித்துக்கொண்டு செல்லுந் தன்மையுடையா ளென்று கூறுவாரு முளர். கண்என்றது, அப்போது உள்நாட்டத்தை. குப்புறுதல் - குதித்தோடுதலுமாம்.　　(எ)

௯௨௮. ஏமாந்த போழ்தி னினியார்போ னின்றாய்த்
　　தாமார்ந்த போதே தகர்க்கோடா—மானோக்கிற்
　　றந்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
　　செந்நெறிச் சேர்து மென்பார்.

(இ - ள்.) செம் நெறி சேர்தும் என்பார்-செவ்வியவழியை [நல்லமுத்திமார்க்கத்தை]ச் சேர்வோ மென்று கருதுவோர், — ஏமாந்த போழ்தின் - (ஆடவர் அவரதுமோகவலையிற் சிக்கி) மயங்கியபோது, இனியார் போன்று-அன்புள்ளவர்களைப்போல விருந்து, தாம் ஆர்ந்த போது - (வறுமையடைந்து) தாமே இச்சித்துச் சென்றகாலத்தில், இன்னார் ஆய் - அன்பில்லாதவராய், தகர் கோடு ஆம் - ஆட்டுக்கடாவின்கொம்பைப்போ லாகும்படியான, மான் நோக்கின் - மான்போன்ற பார்வையையுடைய, தம் நெறி பெண்டிர் - தமக்குஉரிய களவுவழியில் தவறுதுநடக்கும் பொதுமகளிருடைய, தட முலை - பெரிய தனங்களை, சேரார் - அடையமாட்டார்கள் ; (எ - று.)

காமுகர் தமதுமோகவலையிற் சிக்கி மயங்கிய போது அவர்பொருளைப் பறிப்பதற்கு அன்புடையார்போன்றிருந்து, அதுமுடிந்தவுடன், அவர் பொருள்வறண்டு தாமாக விரும்பிவந்தபோது உடன்படாது மாறுபடுகின்ற பொதுமகளிரது இன்பத்தைப் பெரியோர் விரும்பிச் சேரமாட்டா ரென்பது, கருத்து. தாம்விரும்பிப் பற்றும் செந்நெறிக்கு அவரது இன்பம் மறுதலையாதலின் சேரா ரென்பதாம். "பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு,ளாயு மறிவினவர்", "பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின், மாண்ட வறிவினவர்" என்றார் திருக்குறளிலும்.

ஆர்தல் - விரும்புதல். தம்நெறிப்பெண்டிர் - ஒருவர்க்கும் வசப்படாமல் தமதுமனப்போக்கின்படியே செல்கின்றவர் என்றுமாம். செந்நெறி-செவ்வையாகிய வீட்டுநெறி.　　(அ)

௩எ௯. ஊறுசெய் நெஞ்சந்தம் முள்ளடக்கி யொண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
யெமரென்று கொள்வாருங் கொள்பவே யார்க்குந்
தமரல்லர் தம்முடம்பி ளுர்.

(இ - ள்.) ஒள் நுதலார் - பிரகாசமான நெற்றியையுடைய பொது மகளிர், ஊறு செய் நெஞ்சம் -(பிறர்க்குத்) துன்பஞ்செய்யும்படியான தமது எண்ணத்தை, தம் உள் அடக்கி - (பிறர்அறியவொட்டாமல்) தமக்குள்ளே மறைத்து வைத்துக்கொண்டு, தேற - (கேட்டு) நிச்சயமென்று நம்பும்படி, மொழிந்த-சொல்லிய, மொழி-பசப்புவார்த்தைகளை, கேட்டு—, தேறி - நம்பிக்கைகொண்டு, எமர் என்று கொள்வாரும்-(அந்தப்பொதுமகளிரை)இவர் எம்மைச்சேர்ந்தவரென்று நினைப்பவர்களும், கொள்ப-அவ்வாறே நினைக்கட்டும்: (அந்தப் பொதுமகளிர்), யார்க்கும் - எப்படிப்பட்டவர்க்கும், தமர் அல்லர் - உரியவராகார் ; தம் உடம்பினர் - (பிறர்க்குஉரிமையன்றித்) தமக்கேஉரிய உடம்பையுடையவராவர் ; (எ - று.)

தமதுவஞ்சனையை வெளிக்காட்டாமல் நல்லவர்களைப்போல நம்பும்படி பேசவல்ல வேசையரை நற்குணமுடையவ ரென்று நினைப்பவர்கள் நினைக்கட்டும், அவர்கள் வாய்ப்பேச்சினுல்மாத்திரம் அவ்வாறுவரேயன்றித் தமதுஉடம்பைப் பிறர்க்கு வசப்படுத்தாமல் தமக்கேவசமாக்கி வைத்துள்ளவ ரென்று கருதத்தக்கவ ரென்பதாம். (௯)

௩அ0. உள்ள மொருவ னுழையதா வொண்ணுதலார்
கள்ளத்தாற் செய்யுங் கருத்தெல்லாந்—தெள்ளி
யறிந்த விடத்து மறியாராம் பாவஞ்
செறிந்த வுடம்பி னவர்.

(இ - ள்.) உள்ளம் ஒருவன் உழையது ஆ - (தமது) மனம் ஒருவனிடத்தி லிருக்க,ஒள் நுதலார் - விளக்கமான நெற்றியையுடைய பொதுமகளிர், கள்ளத்தால் செய்யும் - கபடமாக(அன்புடையார்போன்று)செய்கின்ற, கருத்து எல்லாம் - நினைவுமுழுவதையும், தெள்ளி அறிந்த இடத்தும் - தெளிவாக ஆராய்ந்தறிந்தபோதும், பாவம் செறிந்த உடம்பினவர் - தீவினைமிகுதியையுடைய உடம்பை யுடையவர் [பாவிகள்], அறியார் - உண்மையறிய மாட்டார்கள் ; (எ - று.)

தமதுமனம் ஒருவர்மேல் நிற்க மற்றொருவர்மேல் அன்புற்றவர்போல நடிக்கும் பொதுமகளிரது வஞ்சனைக்கருத்தை நன்றாகஅறிந்தாலும் பாவிகட்கு அவர்கள்மீதே அன்புசெல்லுமென்பது, கருத்து. இதனால்,பொதுமகளிர் இருமனப்பெண்டிரென்றும், உருவுசொல்செயல்களால் வஞ்சிப்பது அவர்க்குச் சாதிதரும மென்றும் பெறப்பட்டது. இங்குப் பாவம் என்றது, முற்பிறப்புக்களிற் செய்த தீவினைகளால் மனம் தெளிவடையா திருத்தலை. "இருமனப்பெண்டிருங் கள்ளுங் கவறுந், திருநீக்கப்பட்டார் தொடர்பு" என்ற திருக்குறளிற் கூறியவாறு பிளவுபட்ட மனமுடைய பொதுமகளிரிடம் பற்றுச்செல்லுதலினாலேயே அவர் தீவினையுடையாரென்று அறியப் படுமென்க. ஆம்-அசை. (௧0)

## இரண்டாவது

# இன்பவியல்.

*அதாவது* - முழுவதும் மனத்திற்கு இன்பத்தையே கொடுக்கும்பிரிவு என்று பொருள். இது கற்புடைமகளிரின் சேர்க்கை யாதலின், இன்பமே தருவதென்பது வெளிப்படை. இவ்வதிகாரமும், அடுத்த அதிகாரமும் இவ்வியலிற் சேர்ந்தவை.

*அக்காமவின்பந்தான்* - புணர்ச்சி பிரிவு என இருவகைப்படும்; மற்றை இருத்தல் இரங்கல் ஊடல் என்பனவோ வென்றால், இந்நூலாசிரியர் பொருட்பாகுபாட்டினை அறம் பொருள் இன்பமென வடநூல்வழக்குப்பற்றிக் கூறுதலால், அவ்வாறே அவற்றைப் பிரிவினிடத்து அடக்கினா ரென்று அறிக. இனி, அவற்றையே தமிழ்நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியை 'களவு' என்றும், பிரிவை 'கற்பு' என்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவற்றைச் சுவைமிகுதி பயக்குமாறு உலகநடையோடு ஒத்தலும் ஒவ்வாமையு முடையனவாக்கிச் சொல்லுகின்றார். அவ்வொழுக்க மிரண்டனுள், களவாவது - பிணி மூப்பு இறப்புக்க ளில்லாமல் எந்நாளும் ஒரு தன்மையராய் உரு திரு பருவம் குலம் குணம் அன்பு முதலியவற்றாலே தம்முள் ஒப்புமையுடையராகிய தலைமகனும் தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவும் இல்லாமல் ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. கற்பாவது-கணவனைத் தெய்வமென்று உணர்வதோர் மேற்கோள்; பதிவிரதாதருமம். கொண்டானிற் சிறந்த தெய்வ மில்லை யென்றும், அவனுக்கு இன்னவாறு நீ குற்றேவல் செய்தொழுகு என்றும் தாய்தந்தையராலும் பிறராலும் கற்பிக்கப்பட்டு இவ்வொழுக்கம் உண்டாகி நிலைபெறுதலால், கற்பு எனப் பெயர்பெற்றது.

உண்மையறிவை யுண்டாக்கும் நீதிநூல்களில் அகப்பொருட்களவித் துறைகளை இடையிடையே கூறுதல் கவிசமயமாதலை இலக்கியங்கள் கொண்டு உணர்க. சிருங்கார ரசப்பிரதானமான அகப்பொருட்களவித் துறைகளை ஞானமுண்டாதற்குக்காரணமாகிய நீதிநூல்களிற் கூறுதற்குக் காரணம், கடுத்தின்னாதானைக் கட்டிபூசிக் கடுத்தின்பிப்பார்போலச் சிற்றின்பங்கூறும் வகையாற் பேரின்பத்தைக் காட்டி நாட்டுதல் என்பர்.

### ருசுஎ - ஆம் அதிகாரம்.—கற்புடைமகளிர்.

*அஃதாவது*-பதிவிரதைகளின் தன்மை. நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் மகளிருக்குணம் நான்கனோடும் பாதிவிரதியத்தையு முடையவர், கற்புடைமகளிர். பொதுமகளிரது இன்பம் வெறுக்கத்தக்கது என்றதனால், குலமகளிரது இன்பம் அறத்திற்குப்பொருந்தியகாரணமாக விரும்பத்தக்கதென்பதை அறிவித்தற்கு, இது பொதுமகளிரின்பின் வைக்கப்பட்டது.

ருஅகூ. அரும்பெறற் கற்பி னயிராணி யன்ன
பெரும்பெயர்ப் பெண்டி ரெனினும்—விரும்பிப்
பெறுநசையாற் பின்னிற்பா ரின்மையே பேணு
நறுநுதலா ளன்மைத் துணை.

(இ - ள்.) அரும் பெறல் கற்பின் - பெறுதற்கரிய பதிவிரதாதருமத்தை யுடைய, அயிராணி அன்ன - இந்திராணியைப்போன்ற, பெரும் பெயர் - பெரிய கீர்த்தியையுடைய, பெண்டிர் எனினும் - பெண்களாயினும், பெறும் நசையால் - (தன்னைப்) பெற்று அனுபவிக்கவேண்டுமென்னும் ஆசையால், விரும்பி - விருப்பங்கொண்டு, பின் நிற்பார் இன்மையே - தனது பின்னே நிற்கும் ஆடவ ரில்லாமையாகிய நற்குணத்தையே, பேணும் - விரதமாகக் கொண்டொழுகுந் தன்மையுள்ள, நறு நுதலாள் - அழகிய நெற்றியையுடைய பெண்ணே, நன்மை துணை - (தனது கணவனுக்கு) நன்மை பொருந்திய துணையாவாள் ; (எ - று.)

மிகச்சிறந்தவளாயினும், தன்னைச் சேரவேண்டுமென்று விருப்பங்கொள்ளும் பரபுருஷர்க்குச் சிறிதும் இடங்கொடாது ஒழுகுபவளே தனது கணவனுக்கு உற்ற துணையாவ ளென்பதாம். பெண்ணின் குறிப்பை நோக்காமல் எவனும் ஒருத்தியின்பின்னே நிற்கமாட்டா னாகையால், 'பின்னிற்பார்' என்றார். அயிராணி-தேவேந்திரன் மனைவி. இவளை இங்கே உவமை கூறியதற்குக் காரணம், நகுஷன் புதிதாக இந்திரபதவிபெற்றுத் தன்னை விரும்பி யணுகியபோதும் தனது பழைய கணவனாகிய இந்திரனையே யன்றி அவனை விரும்பாது கற்புநெறியில் நின்று ளாதலின். 'பெரும்பெயர்' என்பது, பெரும்புகழ் ; அதாவது - தான்வாழும் ஊரார் கற்புடைமையால் தன்னைப் புகழ்ந்து கூறுவது. கற்புடையமனைவி தான் பிறந்த குலத்தார்க்கும் புகுந்த குலத்தார்க்கும் நற்கதியுண்டாக்குதலால், அத்தகைய பெண்ணைப் பொதுவாக 'நறு நுதலாள் நன்மைத்துணை' என்று ரெனினுமாம் ; இத்தன்மையை, "கற்புமேய கனங்குழை மாதரைப், பெற்றுளோர்த மரபும் பெருந்தவக், கற்பினுட்கொண்ட காதலனுருயிர்ச், சுற்றம் யாவுந் துறக்கத்தினெய்துமால்" என்னுஞ் செய்யுளால் அறிக. (க)

௩௮௨. குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடனீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சி யாள்.

(இ - ள்.) குடம் நீர் அட்டு உண்ணும் இடுக்கண் பொழுதும் - ஒரு குடத்து நீரைக் காய்ச்சி உண்ணும்படியான [நீரையேயன்றி உண்பதற்கு உரிய பொருளொன்றும் அகப்படாத] வறுமைத்துன்பம் வந்தகாலத்தும், கடல் நீர் அற உண்ணும் கேளிர் வரினும் - கடலின் நீரை வற்றும்படி உண்ணத்தக்க [மிகப் பெருங்கூட்டமான] சுற்றத்தார் வந்தாலும், கடன் நீர்மை - தனது கடமையாகிய குணங்களையே, கைஆறு ஆ கொள்ளும் - ஒழுக்க நெறியாகக் கொள்ளுகின்ற, மட மொழி மாதர் - இரசமான இன்சொற்களையுடைய பெண்ணே, மனை மாட்சியாள் - இல்லறவாழ்க்கைக்குத் தக்க பெருமையுடையவளாவாள் ; (எ - று.)

சுற்றத்தவர் பலர் வந்தாலும் தனது கணவன் வறுமைப்பட்டாலும் மனஞ்சோராது தனது கடமைகளைத் தவறாது நடத்துபவளே இல்வாழ்க்

கைக்குரிய மனைவியாவ ளென்பதாம். அவட்குக் கடமையாவன - துறந்தவரை உபசரித்தலும், விருந்தோம்பலும், சுற்றந்தழுவுதலும், வறியவரிடத்து அருளுடைமையும், வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களைத் தேர்ந்து காப்பாற்றி வைத்தலும், உண்டி சமைத்தல் வல்லமையும், உபகாரஞ்செய்தலும் முதலியவையாம். இடுக்கண் என்பது, அதற்குக் காரணமான வறுமையைக் குறித்தது; உபசாரவழக்கு. முதலடி - வறுமை மிகுதியையும், இரண்டாமடி - உறவினர் மிகுதியையும் குறிப்பன. (௨)

௬௩௩. நாலாறு மாறாய் நனிசிறிதா யெப்புறனு
மேலாறு மேலுறை சோரினு—மேலாய
வல்லாளாய் வாழுமூர் தற்புகழு மாண்கற்பி
னில்லா ளமர்ந்ததே யில்.

(இ - ள்.) நால் ஆறும் ஆறு ஆய் - நான்கு பக்கங்களிலும் வழியையுடையதாகியும்,—நனி சிறிது ஆய் - மிகச்சிறியதாகியும்,—எ புறனும் - எல்லாப்பக்கங்களிலும், மேல் ஆறு - மேல் வழியினின்று, மேல் - தன்மேல், உறை சோரினும் - மழைநீர் பெருகி வழிந்தாலும், மேல் ஆய - சிறந்த தருமங்களை, வல்லாள் ஆய் - (செய்ய) வல்லவளாய், வாழும் ஊர் - தான் வாழுகின்ற ஊரிலுள்ளார், தன் புகழும் - தன்னைப் புகழும்படியான, மாண் கற்பின் - மாட்சிமைப்பட்ட பதிவிரதாதருமத்தையுடைய, இல்லாள் - மனைவி, அமர்ந்ததே - பொருந்தப்பெற்றதே, இல் - வீடாகும்; (எ - று.)

நான்கு பக்கங்களிலும் வழியையுடையதாதலும், மிகச்சிறியதாதலும், மிக்க வறுமைக்காலத்திலும் தனது நல்லொழுக்கத்திற் சிறிதுங் குறையாத புகழ்பெற்ற கற்பினையுடைய மனைவி பொருந்தப்பெற்றதாதலுமே, ஒருவீட்டிற்கு நல்லிலக்கண மென்பதாம்.

நனிசிறிதாய்—"இடம்படவீடிடேல்", 'சிறுக்கக்கட்டிப் பெருக்கவாழ்' என்பன காண்க. எப்புறனும் மேலாறு மேலுறை சோர்தல் - வீட்டின்கட்டுக்கோப்புக் குலைந்து மழைநீர் ஒழுகப்பெறுதல்: இவ்வாறு கூறியது, வறுமை மிகுதியைக் குறித்தற்கு. வாழும் ஊர் தற்புகழ்தல்—"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்னுந் திருக்குறளின் பரிமேலழகருரையில் 'தன்மாட்டுப் புகழாவது - வாழும் ஊர் கற்பால் தன்னைப் புகழ்வது' என்றது காண்க. இதனால், எவ்வளவு வறுமைக்காலத்திலும் தனக்கு உரிய நல்லொழுக்கத்திற் குறையாது கற்புநெறியில் நிற்பவளே சிறந்த பெண் என்றதாயிற்று. (௩)

௬௩௪. கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா
ளுட்குடையா ளூர்நா ணியல்பினா—ளுட்கி
யிடனறிந் தூடி யினிதி னுணரு
மடமொழி மாதராள் பெண்.

(இ - ள்.) கட்கு இனியாள் - கண்ணுக்கு இனிய உருவமுடையவளாகியும்;—காதலன் காதல் வகை புனைவாள் - (தனது) கணவனது ஆசை

யின்படி தன்னை அலங்கரித்துக்கொள்பவளாகியும்,—உட்கு உடையாள் - அச்சமுடையவளாகியும், ஊர் நாண் இயல்பினாள் - ஊரிலுள்ளார்க்கு [பிற ரிடத்தில்] நாணங்கொள்ளுந் தன்மையுடையவளாகியும்,—உட்கி - (தனது கணவனிடத்து) அஞ்சி, இடன் அறிந்து - சமயமறிந்து, ஊடி - (அவனோடு) பிணங்கி, இனிதின் உணரும் - இன்பமுண்டாம்படி உடனே அறிந்து ஊடல்தீர்கின்ற, மட மொழி மாதராள் - கபடமில்லாத இன்சொற்களை யுடையவளாகியு மிருப்பவளே, பெண் - மனைவியாவாள் ; (எ - று.)

முகக்கோட்டம் கடுகடுப்பு முதலிய துர்க்குணங்க ளில்லாமல் பார்ப் பதற்கு இனிய தோற்றமும்,தனது கணவ னிஷ்டப்படி தன்னை யலங்கரித் துக்கொள்ளுதலும், செய்யத்தகாத காரியங்களில் அஞ்சி விலகுதலும், பர புருடரிடத்தில் நாணங்கொள்ளுதலும், ஊடலையும் கூடலையும் உரிய சம யங்களிற் கொள்ளுதலும் - கற்புடைய மனைவியின் குணங்க ளென்பதாம்.

ஊர்நாணியல்பினாள் என்பதற்கு - தான் வாழும் ஊரி லுள்ளார் தன் னைக் கண்டு வெட்கமடையும்படியான சிறந்த நல்லொழுக்கமுடையா ளெ னினுமாம். உவப்பிற்கு ஏதுவாதலால் 'இடனறிந்து ஊடி' என்றும், அவ் வூடலைத் தணித்துக்கொள்ளாமல் நீட்டித்தால் வெறுப்பைத்தரு மாதலின் 'இனிதினுணரும்' என்றுங் கூறினார். ஊடலாவது - இன்பநிலையில் அவ் வின்பத்தை மிகுவிக்குமாறு ஆடவர்மீது மகளிர் கோபித்தல். இங்ஙனம் விளையாட்டுவகையாற் கலவியிற் கொள்ளும் பிணக்கு, புலவி யெனவும் படும். ப்ரணயகலஹமென்பது, இதற்கு ஏற்ற வடமொழி. இதன் முதிர் ந்தநிலைமை, துனி யெனப்படும்.

"ஊடலுணர்தல் புணர்த லிவை காமங், கூடியார் பெற்ற பயன்", "ஊடிப்பெறுகுவங்கொல்லோ நுதல்வெயர்ப்பக், கூடலிற் றோன்றியவுப்பு" என்னுந் திருக்குறள்கள் இங்குக் கவனிக்கத்தக்கன. (௪)

௩௮௫. எஞ்ஞான்று மெங்கணவ ரெந்தோண்மேற் சேர்ந்தெழினு
மஞ்ஞான்று கண்டேம்போ னாணுதுமா—லெஞ்ஞான்று
மென்னை கெழீஇயினர் கொல்லோ பொருணசையாற்
பன்மார்பு சேர்ந்தொழுகு வார்.

(இ - ள்.) எ ஞான்றும் - எந்தநாளும், எம் கணவர் - எமது தலைவர், எம் தோள்மேல் சேர்ந்து எழினும் - எம்முடைய தோள்களில் அணைந்து எழுந்தாலும் [தினந்தோறும் கூடி இன்பமனுபவித்தாலும்],—அ ஞான்று - (புதிதாக மணஞ்செய்துகொண்ட)அக்காலத்தில், கண்டேம் போல் - (யாம்) கண்டதுபோல, நாணுதும் - (அவரிடம் இப்பொழுதும்) நாணமடைகின் றோம்; (இவ்வாறிருக்க),—எ ஞான்றும் - எந்நாளும், பொருள் நசை யால் - பொருளாசையால், பல் மார்பு சேர்ந்து ஒழுகுவார் - பலரது மார்பு களை (ஒருகால்) சேர்ந்துநடக்கின்ற பொதுமகளிர், கெழீஇயினர் - (அந் தப்பலரிடத்தும்) உரியராயிருக்கின்றனர்; என்னைகொல் ஓ - இது என்ன தன்மையோ! (எ - று.)

நாம் எமது கணவரிடத்தில் எப்பொழுதும் கூடிப்பழகினாலும் அவரை முதலிற் கண்டபோது எவ்வாறு நாணினோமோ அவ்வாறே இப்பொழுதும் நாணவேண்டியிருக்கின்றது; இப்படியிருக்க, பொதுமகளிர் பொருளாசையாற் பலபுருடரை ஒவ்வொருகால் சேர்ந்தாலும் அப்பொழுது சிறிதும் நாணமில்லாமல் அவ்வாடவரைச் சொந்தமாகக் கையாளுகின்றார்களே! இதென்ன! என்று ஒருகுலமகள் பொதுமகளிரின் நாணமின்மையை நோக்கி வியந்து கூறியவாறு. பொதுமகளிரைப்போல நாணமில்லாமல் குலமகளிர் நடவா ரென்பதாம்.

கெழீஇயினர் - கெழுவினர் ; சொல்லிசையளபெடை. ஆல், கொல், அசைகள். (௫)

௩௫௬. உள்ளத் துணர்வுடையா னோதிய நூலற்றால்
வள்ளன்மை பூண்டான்க ணொண்பொருள்—டெள்ளிய
வாண்மகன் கையி லயில்வா ளனைத்தரோ
நாணுடையாள் பெற்ற நலம்.

(இ - ள்.) வள்ளன்மை பூண்டான்கண் - ஈகைத்தன்மையை மேற்கொண்டவனிடத்தி லுள்ள, ஒள் பொருள் - மிக்க செல்வமானது, உள்ளத்து உணர்வு உடையான் - மனத்தில் நல்லறிவுடையவன், ஓதிய - கற்றறிந்த, நூல் அற்று - நூலைப்போலும்; நாண் உடையாள் - நாணமுடைய குலமகள், பெற்ற - அடைந்துள்ள, நலம் - அழகானது, தெள்ளிய ஆண்மகன் - தேர்ந்தெடுக்கப்பட்ட [மிகச்சிறந்த] வீரபுருஷனது, கையில் - கையிலுள்ள, அயில் வாள் அனைத்து - கூரிய வாளாயுதத்தைப் போலும் ; (எ - று.)—ஆல், அரோ - ஈற்றசைகள்.

இயற்கையிற் கொடைத்தொழிலுடையானுக்குக் கையிற் பொருள் இருந்தால் அது விவேகமுள்ளவன் கற்றறிந்த நூல்போலப் பயன்படும் ; இயற்கையில் நாணமுடையவளுக்கு அழகு இருந்தால் அது சுத்தவீரன்கையிலுள்ள ஆயுதம்போலப் பயன்படுமென்பதாம். இவ்வாறு கூறினாராயினும், கற்புடைமகளிர் அதிகாரப்பட்டு நிற்றலால், முதல் மூன்று பொருள்கள் உபமானமும், ஈற்றது உபமேயமு மெனக் கொள்ளுதல் தகுதி. இதற்கு இணங்க, முதலடியிலுள்ள 'அற்று' என்பதை இரண்டாமடியிலும் 'ஒண்பொருளற்று' என்று கூட்டிப் பொருள்காண்க. கற்புடைய குலமகளுக்கு நேர்ந்த அழகானது-தெளிந்தஅறிவுடையான் கற்ற நூல் போலவும், கொடையாளிக்குக்கிடைத்த செல்வம் போலவும், சுத்தவீரன் கையிற்பிடித்த ஆயுதம் போலவும் பெருமையடையு மென்பது, கருத்து. நாண் என்பது - மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் மற்றை மகடூஉக்குணங்கட்கும் உபலக்ஷணம்.

இவை ஆறு செய்யுள்களாலும், கற்புடை மகளிர்க்கு உரிய இயற்கை நற்குணங்கள் பொதுவாக எடுத்துக்கூறப்பட்டன. (௬)

[உலாப்போய்வந்த தலைமகன்பள்ளியிடத்தானாகத் தலைமகள்சொல்லியது.]

௩௫௭. கருங்கொள்ளுஞ் செங்கொள்ளுந் தூணிப் பதக்கென்
றொருங்கொப்பக் கொண்டானு மூர—னொருங்கொவ்வா
நன்னுதலார்த் தோய்ந்த வரைமார்ப னீராடா
தென்னையுந் தோய வரும்.

(இ - ள்.) ஊரன் - சிற்றூரிலுள்ளானொருவன், கருங் கொள்ளும் - கறுத்த கொள்ளையும், செம் கொள்ளும் - சிவந்த கொள்ளையும், ஒருங்கு ஒப்ப - (இவ்விரண்டற்குமுள்ள வேற்றுமையைக் கருதாது) ஒருநிகராக, தூணி பதக்கு என்று-(ஒன்றற்குச் சிறப்புக்கொடாமல்)தூணிப் பதக்கு என்னும் ஒரே அளவாக, கொண்டான் ஆம் - வாங்கிக்கொண்டானும்; (அதுபோலவே),— ஒருங்கு ஒவ்வா - முழுவதும் ஒத்திராத, நல் நுதலார் - அழகிய நெற்றியை யுடைய பொதுமகளிரை, தோய்ந்த - அனுபவித்த, வரை மார்பன் - மலை போன்ற மார்பையுடைய (எனது) கணவன், நீர் ஆடாது - ஸ்நாநஞ் செய் யாமல், என்னையும் தோய வரும் - (குலமகளாகிய) என்னையும் அனுபவிக்க வருகின்றான்; (இது என்ன அநீதி!) (எ - று.)

தலைவனும் தலைவியும் ஒருபடுக்கையிலே கூடியிருந்தவிடத்து அவனிடத்துப் பிணங்குதற்குக் காரணமில்லாதிருக்கவும் காதல் கைம்மிகுதலால் நுட்பமாகிய ஒருகாரண மிருக்கிறதாக உட்கொண்டு அதனை அவன்மேலே ஏற்றி அவள் பிணங்குதல் என்பது, இத்துறையின் போக்கு.

பகுத்தறிவில்லாத நாட்டுப்புறத்தானொருவன் கருங்கொள் செங்கொள் என்னு மிரண்டனது வேறுபாடு கருதாமல் இரண்டையும் ஒரே விலைக்கு ஒரேயளவாக வாங்கிக்கொண்டாற்போல, பொதுமகளையும் குலமகளையும் வேற்றுமை கருதாது எனதுதலைவன் பொதுமகளைப் புணர்ந்தபடியே என்னையும் அனுபவிக்கவருவது தகுதியன்றென்று பிணங்கிக் கூறினளென் பதாம். பொதுமகளிர் உன்னையனுபவித்ததனால், அவர்மிச்சிலாகிய நினது மார்பினைப் பொருந்தே னென்பது, குறிப்பு. ''பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பார், நண்ணேன் பரத்த நின்மார்பு'' என்ற திருக்குறள் இங்கு நோக்கததக்கது.

இதனால், தனது கணவன் செய்த அக்கிரமத்தையும் கற்புடை மகளிர் பொறுத்துக்கொள்வ ரென்பதும், நீராடியாவது வந்தால் சேரலா மென்று தமது தூய்மையுடைமையும் கூறியவாறும்.

உபமானத்தில் கருங்கொள்ளையும் செங்கொள்ளையும் ஒருநிகராகக் கருதியமை கூறியதனால், உபமேயத்தில் பொதுமகளிர்க்கு உரிய தாழ்வையும், குலமகளிர்க்குஉரிய உயர்வையும் கருதாமை வெளிப்படும். 'ஒருங்கொவ்வா நன்னுதலார்' என்றது, கற்பு நாண் முதலாகிய நற்குணங்களில்லாமையால், பொதுமகளிர்க்கு உள்ளது பெண்ணுயிருக்குந்தன்மைமாத்திரமே யென்னுங் கருத்தால். தூணி, பதக்கு-முகத்தலளவைப்பெயர்கள். தூணி-நான்குமரக்கால்; பதக்கு-இரண்டுமரக்கால். 'ஆம்' என்பது-இங்கு அலட்சியந்தோன்ற நின்றது; ''கைத்தோடுஞ் சிறைகற்போயை, வைத்தோனின்னுயிர்வாழ்வானும், பொய்த்தோர்வில்லிகள்போவாராம்,இத்தோடொப்பதியாதுண்டே'' எனக் கம்பராமாயணத்திலும், ''அன்னையாணவரு மிருவராம் முதலளித்த தந்தையர்களவராம்'' என்பது முதலாக வில்லிபுத்தூரார் பாரதத்திலும் வருவன காண்க. 'வரைமார்பின்' என்றும் பாடம். நன்னுதலார்த் தோய்ந்த - ''இயல்பின் விகாரம்.'' வரைமார்பு - உத்தமவிலக்கணமாகிய கோடுகளையுடைய மார்பு எனினுமாம். (எ)

[தலைவனதுபிரிவுணர்த்திய பாணனை நோக்கித் தலைவிமறுத்துக்கூறியது.]

௩௮௮. கொடியவை கூறாதி பாணநீ கூறி
னடிபைய விட்டொதுங்கிச் சென்று—துடியி
னிடக்கண் ணனையம்யா மூரற்கதனால்
வலக்கண் ணனையார்க் குரை.

(இ - ள்.) பாண - பாணனே!—கொடியவை கூறாதி-கொடுமையான சொற்களை (எம்மிடம்) சொல்லாதே; (ஏனெனில்,—)யாம்—, ஊரற்கு-தலைமகனுக்கு, துடியின் இடக்கண் அனையம்-உடுக்கையினது இடப்பக்கத்தைப் போலப் பயன்படாதிருக்கின்றோம்; அதனால்—, நீ கூறின் - (அப்படிப் பட்டசொற்களை) நீ சொல்வதாயிருந்தால், பைய அடி விட்டு ஒதுங்கி சென்று - (நீ) மெதுவாக இவ்விடம்விட்டு அப்புறம்போய், வலக்கண் அனையார்க்கு - (அந்த உடுக்கையின்) வலப்பக்கத்தைப்போலப் பயன்படும மகளிர்க்கு, உரை - சொல்வாயாக; (எ - று.)

ஒருத்தி, தனது தலைவன் பிரிந்து பரத்தையரிடஞ்செல்வதைப் பாணன் தன்னிடம் வந்துகூற, அதுகேட்கப்பொறாமல் 'பயன்படாத என்னிடம் நீ இதனைச் சொல்லவேண்டாம், பயன்படும் பரத்தையரிடம் சொல்' என்று வருந்திக்கூறினளென்று துறையின்போக்குக் காண்க. தனக்கும் தலைமகளுக்கும் வேற்றுமைகருதாது பாணனைநோக்கித தோழிகூறியதுமாம். 'கொடியவை' என்றது, தலைவன்பிரிந்துசெல்லுஞ் செய்தியை. தலைவன் என்னைப்பிரியாமை யுண்டாயின் அதனை எனக்குச் சொல் எனபது, குறிப்பு. மணஞ்செய்துகொண்டபின்பு தலைவன் அறம்பொருளின்பங்களின்பொருட்டுத் தலைவியைப்பிரிந்து தூரத்திலும் அவ்விடததிலும் செல்வதுண் டென்பதை அறிக.

பாணன் - பாட்டுப்பாடுகின்ற ஓர் இழிகுலத்தான்; இவன், தலைவன் தலைவிகளுக்குத் தூதுசெல்வது உண்டு. 'பாணன் - நெஞ்சிலன்றிக்கேயிருக்கப் பண்ணுந் தோத்திரமொழியுடையான்'என்பர். உடுக்கைக்கு வலப்பக்கம் அடிபடுதலும், இடப்பக்கம் அடிபடாமையும் கருதி இவ்வுவமை கூறப்பட்டது. கண் - அடிக்குமிடம். கூறாதி - ஏவலொருமையெதிர்மறைமுற்று. இவ்வதிகாரத்து ஈற்றுச்செய்யுள் இங்கு நோக்கத்தக்கது. (அ)

['பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகனோடு நீ புலவாமைக்குக் காரணம் யாது?' என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.]

௩௮௯. சாய்ப்பறிக்க நீர்திகழுந் தண்வய லூரன்மீ
தீப்பறக்க நொந்தேனும் யானேமற்—றீப்பறக்கத்
தாக்கி முலைபொருத தண்சாந் தணியகல
நோக்கி யிருந்தேனும் யான்.

(இ - ள்.) சாய் பறிக்க - கோரையைப் பிடுங்கியெடுத்தமாத்திரத்தில், நீர் திகழும் - தண்ணீர் நிறைந்து விளங்கப்பெற்ற, தண் வயல் - குளிர்ச்சியான கழனிகள் சூழ்ந்த, ஊரன்மீது-ஊர்களையுடையவனான (எனது) தலை

வன்மேல், (கூடியிருந்தகாலத்தில்,) ஈ பறக்க-ஈயானது பறக்கும்போதும், நொந்தேனும் - பொறாமல் மனம்வருந்தியவளும், யானே—; (அத்தலைவன் என்னைப்பிரிந்துசென்ற காலத்தில்), தீ பறக்க - நெருப்புப்பொறி பறக்கும் படி, முலை தாக்கி பொருத-(பொதுமகளிர் தமது) தனங்களினால் தாக்கிப் போர்செய்த[தழுவி இன்பமனுபவித்த],தண் சாந்து அணி அகலம்-குளிர்ச்சி யான கலவைச்சந்தனத்தை யணிந்த (அத்தலைவனது) மார்பை, நோக்கி இருந்தேனும் - பார்த்துப் பொறுத்திருந்தவளும், யான் - யானே; (எ - று.)

கூடியிருக்கையில் எனதுதலைவன்மேல் ஈயானது பறந்தாலும் சகியா மல் அன்புகொண்டிருந்தவளும் நான், பிரிந்தகாலத்து வேசையர் தமது முலை நெருங்கப்புல்லி யின்பமனுபவித்த அத்தலைவனது மார்பைக் கண்டு நொந்து நிற்பவளும் நானே யென்று ஒருதலைவி வருந்திக்கூறின ளென்ப தாம். இதனால், குலமகளிர் தமதுதலைவர் பொதுமகளிரைக்கூடியவழி யும் அவரை அலட்சியஞ்செய்யாதிருக்கவேண்டு மென்று கூறியவாறு.

சாய் - ஒருவகைக்கோரை. 'சாய்ப்பறிக்க நீர்திகழுந் தண்வயல்' என் றது, நீர்வளமிகுதியைக் குறிக்கும். மன் - அசை. நொந்தேன், இருந்தேன்- வினையாலணையும்பெயர்கள். (க)

[தலைவி பாணனொடு வெகுளல்.]

௩௯௦. அரும்பவிழ் தாரினா னெம்மருளு மென்று
பெரும்பொய் யுரையாதி பாண—கரும்பின்
கடைக்கண் ணனையநா மூரற் கதனா
லிடைக்கண் ணனையார்க் குரை.

(இ - ள்.) பாண - பாணனே!—'அரும்பு அவிழ் தாரினான் - பூவரும்பு கள் மலரப்பெற்ற மாலையை யணிந்த தலைவன், எம் அருளும் - எமக்கு அருள்செய்வான்,' என்று—, பெரும் பொய் உரையாதி - பெரிய பொய்வா ர்த்தைகளைச் சொல்லாதே; (ஏனெனின்,—) நாம்—, ஊர்க்கு - தலைவனு க்கு, கரும்பின் கடைக்கண் அனையம் - கரும்பினது கடைசியிலுள்ள கணுக் களை யொத்திருக்கின்றோம்; அதனால்—,(இப்பேச்சை), இடைக்கண் அனை யார்க்கு உரை - (அக்கரும்பினது) இடையிலுள்ள கணுக்களையொத்த பர த்தையர்க்குச் சொல்வாயாக; (எ - று.)

தலைமகளைப்பிரிந்துசென்று பரத்தையைக்கூடிநின்ற தலைமகன் மீண்டு தலைமகளிடம் வருமளவில், அவன்செய்தியை அறிந்து சினங்கொண்ட அவள் அவன்வரவை ஏற்றுக்கொள்ளாது மறுக்க, அதனால் வருத்தமுற்ற தலைமகன் அவட்குச் சமாதானங்கூறி அவளைக் கோபந்தணித்தற்பொருட்டு ஒருபாணனை அவள்பக்கல் அனுப்ப, அவன் அங்ஙனமே வந்து தலைவியை நோக்கி 'நீ மறுத்தலால் நினதுதலைவர் நின்மனைக்கு வரக் கூசிநின்றார்; அவர் நின்மீது மிக்ககாதலையுடையர்' என்பன போன்ற சிலநயப்புரைகளை எடுத்துக்கூற, அதுகேட்ட தலைவி அவனைப் பரிகசித்து வெகுண்டுகூறியது இதுவென அறிக.

கரும்பின் கடைசிக்கணுக்களைப்போன்ற அவனுக்கு உருசிகுறைந்துள்ள எம்மிடத்தில் தலைவன் அன்புடையனாயுள்ளானென்று பொய்சொல்லாதே ; கரும்பின்இடையிலுள்ள கணுக்களைப் போன்ற அவனுக்குஉருசிமிகுந்துள்ள பரத்தையரிடம் இப்பேச்சைச் சொல்வா யென்று பாணனை நோக்கித் தலைவி கூறியது, இது கரும்பின் கடைக்கணுக்களில் இனிப்பின்மையும், இடைக்கணுக்களில் இனிப்புண்மையும் வெளிப்படை. (௯௦)

---

## ௱௩0 - ஆம் அதிகாரம்.—காமநுதலியல்.

அஃதாவது - காமவின்பத்தின் பகுதிகளைக் குறித்துச் சொல்லுகின்ற பிரிவு என்பதாம் நுதலுதல் - குறித்துக்கூறுதல். இழிகுணமுடைய பரத்தைய ரன்றிக் குலமகளிரது இன்பம் சிறத்தலால், அதனை இவ்வதிகாரத்திற் சிறப்பித்துக் கூறுகின்றன ரென்று அறிக. அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும். இனி, இயல் என்பதற்கு - இலக்கண மென்று கொண்டு, இன்ப முறைமையைக் கூறும் இலக்கண மென்றும் பொருள்கூறுவர்.

[தலைமகற்கு வாயில்நேர்ந்த தோழி தலைமகள்புலவி நீங்கச் சொல்லியது.]

௯௧௧. முயங்காக்காற் பாயும் பசலைமற் றாடி
யுயங்காக்கா லுப்பின்றாங் காமம்—வயங்கோத
நில்லாத் திரையலைக்கு நீளகழித் தண்சேர்ப்ப
புல்லாப் புலப்பதோ ராறு.

(இ - ள்.) வயங்கு - விளங்குகின்ற, ஓதம் - கடலானது, நில்லா - நிலையாயிராமல், திரை அலைக்கும் - அலைகளால் மோதுகின்ற, நீள் கழி - நீண்ட கழிகளினது, தண் - குளிர்ந்த, சேர்ப்ப - கரையையுடைய அரசனே!— முயங்காக்கால் - கூடாவிட்டால, பசலை பாயும- (பிரிவுத்துன்பமிகுதியால்) நிறவேறுபாடு (உடம்பில) மிக்குப்பரவும ; ஊடி உயங்காக்கால் - ஊடல் கொண்டு வருந்தாவிட்டால், காமம் உப்பு இன்று ஆம் - காமநுகர்ச்சி இன்பமுடையதாகாது ; (ஆதலால்), புல்லா புலப்பது - முதலிற்கூடிப் பிறகு ஊடுவது,ஓர் ஆறு-(காமநுகர்சசியில் ருசியுண்டாதற்கு)ஒருவழியாம்; (எ - று.)

தலைவனும் தலைவியும் கூடாவிட்டால் உடம்பிற் பசலை யுண்டாகின்றது ; ஊடல்கொள்ளாமல் எப்பொழுதும் சேர்ந்தேயிருந்தால் காமத்தில் ருசியுண்டாதலில்லை ; ஆதலால், கூடுவதும் ஊடுவதும் காமநுகர்ச்சிக்கு அழகு என்பதாம். "உப்பமைந்தற்றாற் புலவி", "துனியும் புலவியு மில்லாயிற் காமங், கனியுங் கருக்காயு மற்று", "ஊட லுணர்தல் புணர்த லிவை காமங், கூடியார் பெற்ற பயன்" என்னுந் திருக்குறள்கள் நோக்கத் தக்கன.

வாயில்நேர்தல் - வழியெடுத்துக்கூறுதல். புலவி - புலத்தல்; ஊடுதல். பசலை-தலைவனைப்பிரிந்த துன்பத்தினால் தலைமகளது உடம்பி லுண்டாகும் நிறவேறுபாடு. உப்பு என்பது - இங்கு இனிமையென்னும் பொருளில்

வந்தது. வடநூலார், கூடலை 'ஸம்போகம்' என்றும், ஊடலை 'விப்ரளம்பம்' என்றும், விப்ரளம்பத்தை 'மதுரதரம்' [மிக்கஇனிமை] என்றுங்கூறுவர். இங்கு'பசலை' என்பது - துயிலின்மை, உடம்புமெலிதல், எல்லாவற்றிலும் வெறுப்பு முதலியவற்றிற்கும் உபலக்ஷணம். மற்று - அசை. (க)

[பருவங்கண்டு ஆற்றளாகிய தலைவி தோழிக்குச் சொல்லியது.]

கூகூஉ. தம்மமர் காதலர் தார்சூ ழணியகலம்
விம்ம முயங்குந் துணையில்லார்க்—கிம்மெனப்
பெய்ய வெழிலி முழங்குந் திசையெல்லா
நெய்த லறைந்தன்ன நீர்த்து.

(இ - ள்.) தம் அமர் காதலர் - தம்மிடத்து விருப்பமுடைய தலைவரது, தார் சூழ் அணி அகலம் - மாலையையணிந்த அழகிய மார்பை, விம்ம முயங்கும்-(மகிழ்ச்சியினால்) பூரிக்கும்படி தழுவுதற்குஉரிய, துணை-தலைவரை, இல்லார்க்கு - இல்லாத [தலைவரைப்பிரிந்த] மகளிர்க்கு,—இம்மென-இம்மென்னும் ஓசையோடு, பெய்ய - மழைபொழியும்படி, எழிலி முழங்கும் - மேகங்கள் கர்ச்சிக்கின்ற, திசை எல்லாம் - திக்குக்களிலெல்லாம், (அம்முழக்கம் அவர்க்கு), நெய்தல் அறைந்து அன்ன நீர்தது - சாப்பறையடித்தாற்போன்ற தன்மையுடையதாம்; (எ - று.)

மிகுதியும் வருத்தந்தரு மென்பதாம். கார்காலத்திலே மீண்டுவருவேனென்று காலங்குறித்துப் பிரிந்துசென்ற தலைமகன் அக்காலம் வந்தும் வாராததனால், காலத்தைநோக்கித் தலைமகள் ஆற்றாது வருந்திக் கூறியது இது. சேர்தற்குஉரிய காலத்தில் தனதுதலைவனைச் சேரப்பெறாது வருந்தும் ஆற்றாமையும், எவ்வகைத் தாபத்தையுந் தணிக்கவல்ல நீர்கொண்ட மேகம் தனதுநிலைமைமாறி இப்பொழுது தன்னை வருத்துகின்ற கொடுமையும் தலைவி இரங்குதற்குக் காரணமாயின வென்க. கார்காலத்து மேக முழக்கம் - காமோத்தீபகப்பொருள்களில் ஒன்று. இம்மெனல் - ஒலிக் குறிப்பு. நெய்தல் - சாப்பறை. (உ)

[தலைமகள் செலவுடன்படாமையைத் தலைமகற்குத் தோழி சொல்லியது.]

கூகூகூ. கம்மஞ்செய் மாக்கள் கருவி யொடுக்கிய
மம்மர்கொண் மாலை மலராய்ந்து பூத்தொடுப்பாள்
கைம்மாலை யிட்டுக் கலுழ்ந்தா டுணையில்லார்க்
கிம்மாலை யென்செய்வ தென்று.

(இ - ள்.) கம்மம் செய் மாக்கள் - கம்மியத்தொழிலைச்செய்கின்ற மனிதர் [கம்மாளர்], கருவி - (தமது) ஆயுதங்களை, ஒடுக்கிய - (வேலையில்லாமல்) அடங்கச்செய்த, மம்மர் கொள் மாலை - மயக்கத்தைக்கொண்ட மாலைப்பொழுதில், மலர் ஆய்ந்து பூ தொடுப்பாள் - மலர்களை ஆராய்ந்தெடுத்து அவற்றைக்கொண்டு மாலைதொடுப்பவளாகிய தலைமகள்,—'துணை இல்லார்க்கு - தலைமகனைப்பிரிந்த மகளிர்க்கு, இ மாலை என் செய்வது - இந்த

மலர்மாலை யாது பயன்படும்?' என்று—, கை மாலை இட்டு - தனது கையி லுள்ள மலர்மாலையைப் போகட்டு, கலுழ்ந்தாள் - மனங்கலங்கி யழுதாள்.

தலைமகள் மாலைப்பொழுதில் நல்லமலர்களை மாலையாகத்தொடுக்கும் போது தலைமகன் பிரிந்துசெல்வதைத் தோழியால் அறிந்து அவளைநோக்கி ' எனதுநாயகனுக்கென்று அன்போடுகட்டும் இம்மலர்மாலை அவரில்லாத போது எதற்கும்பயன்படாதே!'என்று மனங்கலங்கியழுதனளெனத்தோழி தலைமகற்குக் கூறியது இது. "காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலைமலரு மிந்நோய்" என்றபடி சேர்க்கைக்கு உரிய காலமாகிய இரவின்தொ டக்கமான மாலைப்பொழுது,பிரிந்தார்க்கு அத்துயரைமிகுவிக்கு மென்க. இதுபற்றியே,'மம்மர்கொள் மாலை' என்றார். மம்மர் - காமக்களிப்பு.

கம்மாளர் பகல்முழுதும் வேலைசெய்து மாலைப்பொழுது வந்தவுடன் வேலையொழிவ ராதலின், மாலைப்பொழுதுக்கு 'கம்மஞ்செய்மாக்கள்கருவி யொடுக்கிய' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது; " ஓலைக்கணக்க ரொலியடங்கு புன்செக்கர் மாலைப்பொழுது " என்று பின்வருவதும் இது போன்றதே இது, பகலெல்லாம் வருந்தி வேலைசெய்யுங் கம்மியரும் வேலையைநிறுத்தித் தம்தம்நாயகியரிடம் செல்லுங் கால மென்பதைக் குறிக்கும். (௩)

[வினைமுற்றி மீண்ட தலைமகன் பாகன்கேட்பச் சொல்லியது.]

௩௬௪. செல்சுடர் நோக்கிச் சிதரரிக்கண் கொண்டநீர்
மெல்விர லூழ்தெறியா விம்மித்தன்—மெல்விரலி
னாள்வைத்து நங்குற்ற மெண்ணுங்கொ லந்தோதன்
றோள்வைத் தணைமேற் கிடந்து.

(இ - ள்.) (எனது தலைமகள்),—செல் சுடர் நோக்கி - (மேல்கடலைநோ க்கிச்) செல்லுகின்ற சூரியனைப் பார்த்து, சிதர் அரி கண் கொண்ட நீர்-சித றிய செவ்வரிகளையுடைய (தனது) கண்களில் நிறைந்த நீரை, மெல் விரல் - (தனது) மெல்லிய கைவிரல்களால், ஊழ் தெறியா - முறைமையாக [அடிக் கடி] எடுத்தெறிந்து, விம்மி - அழுது, தன் மெல் விரலின் - தனது மெல் லிய விரல்களினால்,நாள் வைத்து - (நாம் பிரிந்து சென்ற) நாள்களைக் கணக் கிட்டுக்கொண்டு, அணைமேல்-படுக்கையில், தன் தோள் வைத்து கிடந்து - தனதுதோளையே தலையணையாகக்கொண்டு படுத்து, நம் குற்றம் எண்ணும் கொல் - நமதுகுற்றங்களை நினைத்து வருந்துவளோ! அந்தோ - ஐயோ!

ஒருதலைமகன் தனதுதலைவியைப் பிரிந்துசென்று வினைமுற்றி மீண்டு வருகையில்,'எனதுகாதலி மாலைப்பொழுதில் நான்பிரிந்துசென்று இத்தனை நாளாயின வென்றும், விரைவில் வருவே னென்றும், இன்னின்னவாறு செய்வே னென்றும் சொல்லிக்கொண்டு எனதுகுற்றங்களைச் சிந்தித்து வரு ந்துவளே!' என்று இரங்கிப் பாகனொடு கூறியது இது.

பிரிந்த தலைவன் மீண்டுவருவது மாலைக்கால மாதலின்'செல்சுடர்நோ க்கி' என்றும், தலைமகன் தான்குறித்தபடி மீண்டுவாராது நீட்டித்தலாற்

பிரிந்துசென்றநாள்களைத் தன்விரல்களால் தலைமகள் எண்ணுவ ளாதலின் 'மெல்விரலின்நாள் வைத்து .....எண்ணுமகொல்' என்றும கருதிக் கூறின னென்க. விரையச்சென்று சேராவிடின் ஆற்றாமை கைவிஞ்சுதலால் அவள் இறந்துபடுவ ளாதலால் நமக்குப் பழிநேர்ந்திடு மாதலின், அதற்குமுன்பே தேர்செலுத்தவேண்டு மென்ற குறிப்பு. சொரிக்கண்கொண்டநீர் - உரிய காலத்தில் தலைமகனைக் கூடப்பெறாது வருத்தமிகுதல்பற்றி உண்டாவது; இனி, இரேகைகள் படர்ந்த கண்களின் அழகை மறைத்துக்கொண்டு ததும்புகின்ற நீர் என்றும் பொருள்கூறலாம்: இது, அவளது கண்ணழகை நினைந்து வருந்தியதைக் குறிக்கும். கண்களிற் செவ்வரிபரத்தல் உத் தமவிலக்கணம். அந்தோ - இரக்கக்குறிப்பிடைசசொல். செல் சுடர் என்பதை, அஸ்தமிக்குந்தருணத்திலிருக்கிற சூரியனையுடைய மாலைப்பொ ழுதென அன்மொழித்தொகையாகவும் கொள்ளலாம் தன்தோள்வைத்து அணைமேறகிடத்தல் - வருத்தமிகுதியால் படுக்கைகொள்ளாமல் முடக்கிய தனதுகையின்மேல் தலையைவைத்துக் கிடப்பது. 'மெல்விரல்' என்றது, "வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற, நாளொற்றித் தேய்ந்த விரல" என்றபடி பிரிந்துசென்ற நாளகள் சுவரின்கண் இழைத்தவற்றைத்தொட்டு எண்ணுதலால் கைவிரல்கள் தேய்ந்தன வென்ற குறிப்பு. (௪)

[தலைமகன் தானுற்றதைப் பாங்கற்குச் சொல்லியது.]

௩௯௫. கண்கய லென்னுங் கருத்தினாற் காதலி
பின்சென்ற தம்ம சிறுசிரல—பின்சென்று
மூக்கி யெழுந்து மெறிகல்லா வொண்புருவங்
கோட்டிய வில்வாக் கறிந்து.

(இ - ள்.) சிறு சிரல் - சிறிய சிச்சிலிக்குருவியானது,—கண் - (எனது காதலியின்) கண்களை, கயல் என்னும் கருததினால் - கயல்மீனென்கிற எண் ணததினால், காதலி பின் சென்றது - (அவற்றைக் குத்தித்தின்னக் கருதி) அவள்பினனே தொடர்ந்துபோயிறறு; பின சென்றும - (அவ்வாறு) பின் தொடர்ந்துபோயும், ஊக்கி எழுந்தும் - முயறசிசெய்தும், ஒள் புருவம கோ ட்டிய வில் வாக்கு அறிநது - (அவளது) ஒள்ளியபுருவம் வளைக்கப்பட்ட வில் லின்வளைவுபோலிருந்ததை அறிந்து, எறிகலலா(து)-(அஞ்சி அக்கண்களைக்) குத்தித தின்னமாட்டாதிருந்தது; (எ - று.)

தனதுகாதலியின்கண்களைக் கயல்மீனென்று கருதிச் சிச்சிலிக்குருவி பின்சென்று பிடிக்க முயன்றும் அக்கண்களுக்குமேலுள்ளபுருவத்தை வளை ந்தவில்லென்று நினைத்து அஞ்சிப் பிடியாமலே நின்றுவிட்ட தென்று அவ ளதுகண்ணழகி லீடுபட்ட தலைவன் அதனை வியந்து தோழனொடு சொல் லிய துறை இது.

சிசசிலிக்குருவி தலைமகளது கண்களைக் கயலென்றும், புருவங்களை வளைததவில்லென்றும் மாறுபடக் கருதியதாகக் கூறியது, மயக்கவணி.

சிரல் - மீன்குத்திப்பறவை. அம்ம-வியப்பிடைச்சொல்; இனி, "அம்ம கேட்பிக்கும்" என்றதனால், பாங்கனே? நீ கேள் என்றுமாம். வாக்கு-வாங்கு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். (௫)

[நற்றாய் தன்மகள்சென்ற சுரத்தருமை கூறி இரங்கியது.]

௩௯௫. அரக்காம்ப னாறும்வா யம்மருங்கிற் கன்னோ
பரற்கான மாற்றின கொல்லோ—வரக்கார்ந்த
பஞ்சிகொண் டூட்டினும் பையெனப் பையெனவென்
றஞ்சிப் பின்வாங்கு மடி.

(இ - ள்.) அரக்கு ஆம்பல் நாறும் வாய் அம் மருங்கிற்கு - சிவந்த ஆம்பல்மலரைப்போன்ற வாயையும் அழகிய இடையையுமுடைய (எனது) மகளுக்கு,—அரக்கு ஆர்ந்த பஞ்சிகொண்டு ஊட்டினும் - (முன்னே)செந்நிறம் பொருந்திய பஞ்சைக்கொண்டு (செம்பஞ்சுக்குழம்பைத்) தடவினாலும், பையென பையென என்று - மெல்ல மெல்ல வென்று, அஞ்சி - (அதனையும் ஆற்றமாட்டாமல்) அச்சங்கொண்டு, பின்வாங்கும் - இளைத்துப் பின்வாங்கிய, அடி - (அவளது) பாதங்கள், (இப்பொழுது), அன்னோ - ஐயோ! பரல் கானம் ஆற்றின கொல் ஓ-பருக்கைக்கற்களையுடைய காட்டைப் பொறுத்தனவோ! (எ - று.)

இயற்கைப்புணர்ச்சி, பாங்கற்கூட்டம், பாங்கியிற்கூட்டம் என்பவற்றாற் களவுநெறியில் தலைமகளைக் கூடிய தலைமகன் பழிபரவுதலின் தோழியால் விலக்கப்பட்டு அதன்பின்பு உடனே அவளை வெளிப்படையாக மணஞ்செய்துகொள்ளுதல் இயல்பு: அங்ஙனஞ் செய்யானாயின், அப்பழியடங்குமாறு சிலநாள் தலைமகளை ஒருவழிப்பிரிந்து உறைதலும், தலைமகளை உடன்கொண்டு தன்னூர்க்குச்செல்லுதலும், தோழியால் வரைவுமுடுக்கப்பட்டு அரியஅணிகலஞ்செலுத்தி வரைந்துகொள்ளுதலும் என்னும்இம்மூன்றனுள் ஒன்று முறைமையாய் நிகழும்; அவற்றுள், தலைவன் தலைவியை இடைச்சுரநெறியாக உடன்கொண்டு போனமையைத் தோழியாலறிந்த செவிலித்தாய் அதனை நற்றாய்க்கு உணர்த்த, அவள் அப்பாலைநிலத்தின் கொடுமையையும் தனதுமகளது மிக்கமென்மையையும் கருதிக் கவன்று இங்ஙனங் கூறினளென்க.

செம்பஞ்சுக்குழம்பைக் கால்களிற் பஞ்சினால் தடவினாலும் பொறுக்கமாட்டாது வருந்திய எனதுமகள் இப்பொழுது தனதுதலைவன்பின்னே காட்டிற்குச் செல்லுகையில் அவளதுபாதங்கள் பருக்கைக்கற்களின்மீது எவ்வாறு நடந்துசென்றனவோ வென்று தாய் இரங்கிக்கூறியது இது.

அரக்காம்பல் நாறும் வாய் - செவ்வாம்பல்மலர்போல மணம்வீசும் வா யெனினுமாம். மருங்குல் - அதனையுடையாட்கு ஆகுபெயர். அன்னோ - இரக்கக்குறிப்பிடைச்சொல். பஞ்சு எனினும், பஞ்சி எனினும் ஒக்கும். செம்பஞ்சுக்குழம்பூட்டுதல், மகளிரது பாதங்கட்குச் செம்மையும் மென்மையும் உண்டாதற்பொருட்டு. பையென - பையவென என்பதன் தொகுத்தல். அடுக்கு - அச்சப்பொருளது. அடி - பால்பகாவஃறிணைப்பெயர்; இங்குப் பன்மை. (௫)

[தலைவனதுபிரிவையாற்றாத தலைவியின் நிலைமையைத் தோழிகூறியது.]

௩௯௭. ஓலைக் கணக்க ரொலியடங்கு புன்செக்கர்
மாலைப் பொழுதின் மணந்தார் பிரிவுள்ளி
மாலை பரிந்திட் டழுதாள் வனமுலைமேற்
கோலஞ்செய் சாந்தந் திமிர்ந்து.

(இ - ள்.) ஓலை கணக்கர் - ஓலையிலெழுதுங் கணக்கர்களுடைய, ஒலி- ஓசை, அடங்கு - ஒழிந்துபோம்படியான, புல் செக்கர் - அற்பமாகிய செவ் வானத்தையுடைய, மாலை பொழுதில் - மாலைக்காலத்தில்,—(தலைமகள்),— மணந்தார் பிரிவு உள்ளி - (தனது) தலைவன் பிரிந்து செல்வதை நினைத்து, மாலை பரிந்து இட்டு - (தான்சூடியிருந்த) மலர்மாலையைக் கழற்றியெறிந்து, வனம் முலைமேல் கோலம் செய் சாந்தம் திமிர்ந்து-(தனது) அழகிய தனங் களின்மீது அலங்காரஞ்செய்திருந்த கலவைச்சந்தனத்தையும் உதிர்த்து ஒழித்து, அழுதாள்—; (எ - று.)

தலைவி மாலைப்பொழுதில் தனதுதலைவன் பிரிந்துசெல்வதை யெண் ணி அதனைப் பொறாது தான்அணிந்திருந்த மலர்மாலையையும் சந்தனத் தையும் வெறுத்து ஒழித்து வருந்தினாளென்று தோழி தலைவனுக்குக்கூறி யது இது. இதனை,மூன்றாஞ்செய்யுள்போலத் தலைமகள் பிரிவுடன்படாமை யைத் தோழி தலைமகற்குக் கூறிய துறையாகவுங் கொள்வர் சிலர்.

முதலடி-இவ்வதிகாரத்து ௩ - ஆஞ்செய்யுளில் "கம்மஞ்செய் மாக்கள் கருவியொடுக்கிய" என்றது போன்ற மாலைப்பொழுதிற்குஉரிய குறிப்பு. 'மணந்தார்' என்றது, தன்னைக் களவுவழியாற் கூடியவரை. (எ)

[உடன்போக்குப்பொருந்திய தலைமகள் தோழிக்குக் கூறியது.]

௩௯௮. கடக்கருங் கானத்துக் காளைபின் னாளை
நடக்கவும் வல்லையோ வென்றி—சுடர்த்தொடீஇ
பெற்றா னொருவன் பெருங்குதிரை யந்நிலையே
கற்றா னஃதூரு மாறு.

(இ - ள்.)சுடர் தொடீஇ-பிரகாசிக்கின்ற வளையல்களையுடையவளே!— 'கடக்க அருங் கானத்து - கடந்துசெல்வதற்கு அருமையாகிய காட்டில், காளைபின் - இளவெருதுபோன்ற (உனது) தலைவன்பின்னே, நாளை-நாளை த்தினம், நடக்கவும் வல்லையோ-நடந்துசெல்லவும் மாட்டுவாயோ?' என்றி- என்று (என்னைநோக்கிக்) கூறினாய்; பெருங் குதிரை - பெரியதொரு குதி ரையை, பெற்றான் ஒருவன் - கிடைக்கப்பெற்றவனாகிய ஒருத்தன், அ நிலை யே - பெற்ற அப்பொழுதே, அஃது ஊரும் ஆறு - அதனை ஏறிநடத்தும் முறைமையையும், கற்றான் - கற்றறிந்தவனேயாவனன்றோ? (எ - று.)

'நீ உனதுதலைவன்பின்னே உடன்செல்ல உடன்பட்டாயே; நாளைக்கு அவன்பின்னே நடந்துசெல்ல வல்லையோ?' என்று நீ என்னை வினவினாய்; அதற்குக் கூறுவேன் கேள்: ஒருவன் குதிரையொன்றை வாங்கினால் அதை யேறிநடத்துந்திறத்தையும் அவன் கற்றிருப்பானல்லனோ? அதுபோலவே, ஒருகணவனுக்கு வாழ்க்கைப்பட்ட யான் அவன்பின்செல்லவும் வல்லே னென்று தலைமகள் தனதுதோழியை நோக்கிக் கூறிய துறை இது.

பின்னிரண்டடி - பிறிதுமொழிதலணி; உபமானத்தைக்கூறி அதன் உபமேயத்தைப் பெறவைத்தது காண்க.

கணவன்பின்செல்வது அரிதன்று என்பது, குறிப்பு.

காளை - உவமையாகுபெயர். ஆண்மகனுக்கு இளவெருது - நடை வலிமை காம்பீரியங்களிலே உவமை. வல்லை, என்றி - முன்னிலையொருமை முற்றுக்கள்; முறையே ஐ, இ - விகுதிகள். சுடர்த்தொடீஇ - அளபெடை, விளியுருபு. இங்கு ஆய்தம் உயிர்போல் ஒலித்தது. (அ)

[மகளைப்போக்கிய நற்றாய் கவன்று கூறியது.]

௩௯௯. முலைக்கண்ணு முத்து முழுமெய்யும் புல்லு
மிலக்கணம் யாது மறியேன்—கலைக்கணம்
வேங்கை வெரூஉ நெறிசெலிய போலுமென்
பூம்பாவை செய்த குறி.

(இ - ள்.) (நேற்று எனதுமகள்), முலை கண்ணும் - (தனது)முலைக்கண்களையும், முத்தும் - முத்துமாலையையும், (நன்றாக அழுந்துமாறு), முழு மெய்யும் புல்லும் - (எனது)உடம்புமுழுவதையுந் தழுவிய, இலக்கணம் - அடையாளத்தை, யாதும் அறியேன் - (அப்பொழுது)சிறிதும் அறிந்திலேன்; என் பூ பாவை செய்த குறி - எனது அழகிய சித்திரப்பதுமைபோன்ற மகள்(அப்பொழுது)செய்த அந்தஅடையாளம்,—கலை கணம் - மான்கூட்டம், வேங்கை வெரூஉம் - வேங்கைப்புலிக்கு அஞ்சித்திரிகின்ற, நெறி - காட்டுவழியில், செலிய போலும் - செல்லுதற்குப் போலும்; (எ - று.)

நேற்று என்மகள் தனது முலைக்கண்ணும் முத்துமாலையும் எனதுஉடம்பில் அழுந்தும்படி என்னைத்தழுவிக்கொண்ட சின்னத்தை அப்பொழுது இன்னதென்று சிறிதும்அறிந்திலேன்; மான்கள் புலிக்கு அஞ்சியோடும்படியான காட்டுவழியில் தனதுகணவன்பின்னே தான் செல்லுதற்கு அடையாளமாகச் செய்தாளென்று அதனை இப்பொழுது அறிந்தேனென்று தாய் தன்மகளைக்குறித்து இரங்கிக்கூறியது இது. 'என்பூம்பாவை' என்றது, நற்றாய்கூற்று என்பதைக் குறிக்கும்.

'கலைக்கணம் வேங்கைவெரூஉம்நெறி' என்றது, காட்டின் கொடுமையைக் காட்டும். வேங்கை வெரூஉம்-வேங்கையினின்று வெருவும் என ஐந்தனுருபுத்தொகையாகவாவது, வேங்கையை வெருவும் என இரண்டனுருபுத்தொகையாகவாவது கொள்க; "அச்சக்கிளவிக்கு ஐந்து மிரண்டும், எச்சமிலவே பொருள்வயினான" என்பது தொல்காப்பியம். வேங்கைக்கு வெருவும் என நான்கனுருபுத்தொகையாகக் கொள்வது உலகவழக்கு. வெரூஉம்= வெருவும்; சொல்லிசையளபெடை. செலிய - செய்யியவென்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; இதன்முன் வலி இயல்பாம். 'போலும்' என்பது - ஒப்பில்போலி; இங்குத் தற்குறிப்பேற்றவுருபாய் நின்றது. பூம்பாவை என்பதற்கு - தாமரைமலரில் வாழ்கின்ற இலக்குமிபோன்ற மகளெனினுமாம். (௯)

[தலைமகள் பிரிவாற்றாமையைத் தோழிக்குச் சொல்லியது.]

௪00. *கண்மூன் றுடையானுங் காக்கையும் பையரவு*
*மென்னீன்ற யாயும் பிழைத்ததென்—பொன்னீன்ற*
*கோங்கரும் பன்ன முலையாய் பொருள்வயிற்*
*பாங்கனார் சென்ற நெறி.*

(இ - ள்.) பொன் ஈன்ற-பொன்போன்ற தேமல்பொருந்திய, கோங்கு அரும்பு அன்ன - கோங்கமலரை யொத்த, முலையாய் - தனங்களையுடைய தோழியே!—கண் மூன்று உடையானும் - மூன்றுகண்களையுடைய சிவபிரானும், காக்கையும்—, பை அரவும் - படத்தையுடைய (இராகுவென்னும்) சர்ப்பமும், என் ஈன்ற யாயும் - என்னைப்பெற்ற தாயும், பிழைத்தது - (எனக்குப்) பிழைசெய்தது, என் - யாது?[ஒன்றுமில்லை]; பொருள்வயின் - பொருளினிடத்து ஆசையால், பாங்கனார் - (எனது) தலைவர், சென்ற - போன, நெறி - மார்க்கமே, (எனக்குப் பிழைசெய்தது); (எ-று.)

பயனிலை வருவித்து முடிக்கப்பட்டது. அந்நெறிஇல்லையாயின் எனது தலைவர் பிரிந்து செல்லார்; அப்பொழுது யாவும் நமக்கு நல்லனவேயாம். எனதுதலைவர் பொருள்விருப்பத்தாற் பிரிந்துசென்ற நெறியை நாம் வெறுத்துப் பழித்துப் பேசவேண்டுமேயன்றி வேறன்று. எனதுதலைவர் பிரியாது உடனிருந்தால் மன்மதனும் குயிலும் சந்திரனும் என்னை வருத்தக் காரணமில்லை யாதலின் சிவபிரான் முதலியோர்மீது பழிகூற வழியில்லை யாதலால், அவர் சென்ற நெறியே நமக்குப் பிழைசெய்ததென்று கூறவேண்டியதாயிற்றெனத் தலைமகள் தோழிக்குத் தனதுபிரிவாற்றாமையைக் கூறியது இது.

மன்மதனை உருவழித்துப் பின்னும் அவனை உளனாக்கிய சிவபிரானும், தன்கூட்டிற் பொரித்த குயிலின் குஞ்சைக் குத்திக்கொல்லாது விட்ட காக்கையும், சந்திரனை விழுங்கிப் பின்பு உமிழ்ந்திட்ட இராகுவும், என்னைப் பெற்றபோதே கொல்லாமல்விட்டு வளர்த்த தாயுமே பிழைசெய்தனரென்று கருதுதற்குக் காரணம், கணவனைப்பிரிந்தகாலத்து மன்மதனும் குயிலும் சந்திரனும் வருத்துவதனாலும், தாய் பிறந்தஅப்பொழுதே கொன்றிருந்தால் தான் இப்படிப்பட்ட துன்பங்களை அனுபவிக்கக் காரணமில்லை யாதலாலும்.

'இறைவனுக்குக் கண்மூன்றும் முச்சுடர்' ஆதலால், சிவபிரானுக்கு 'கண்மூன்றுடையான்' என்று ஒருபெயர்கூறினர். குயில் முட்டையிட்டவுடனே அதனைப் பொரித்துப் பாதுகாவாமல் காக்கையின்கூட்டில் அதற்குத்தெரியாமலே இட்டுச் செல்ல, அது அம்முட்டையைத் தனதென்றே கருதி அடைகாத்துக் குஞ்சுபொரித்துச் சிலநாள் சென்றவுடனே அது கூவென்று கத்தத்தொடங்குகையில் காக்கை கோபங்கொண்டு அதனைக் குத்தித் துரத்திவிடுமென்பது வழக்கு. 'பொன்' என்றது - அதுபோன்ற நிறமுடையதேமலுக்கு ஆகுபெயர். (௧0)

## காமத்துப்பால் முற்றுப்பெற்றது.

---

## நாலடியார் முற்றிற்று.

